# வரவு செலவுத் திட்டம்

## (BUDGET)

(அரசாங்க ஆண்டு நிதிநிலை விவரம்)

ஆர். ரங்காச்சாரி, எம்.ஏ.,
முன்னாள் துணைச் செயலாளர்,
தமிழ்நாட்டு அரசாங்க நிதித்துறை.



தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு-அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண் – 96

# வரவு செலவுத் திட்டம்

## (BUDGET)

(அரசாங்க ஆண்டு நிதிநிலை விவரம்)



ஆர். ரங்காச்சாரி, எம்.ஏ.,
முன்னாள் துணைச் செயலாளர்,
தமிழ்நாட்டு அரசாங்க நிதித்துறை.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு–அரசாங்கம்

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழ்நாடு அரசாங்கம், சில ஆண்டுகளுக்கு முன்னர்க் கல்லூரித் தமிழ்க் குழுவொன்றை நிறுவி அதன்மூலம் கல்லூரி மாணவர்கட்குத் தேவையான பல தமிழ் நூல்களை வெளியிட்டு வந்தது. தமிழை ஆட்சி மொழியாக அரசாங்கம் ஏற்றுக்கொண்ட பிறகு, தமிழ் மொழிக்கு ஆக்கம் தேடுகின்ற முறையில், இன்னும் மகத்தான அளவில் தமிழில் நூல்கள் வெளிவரவேண்டும் என்ற கருத்தில் தமிழ் வெளியீட்டுக் கழகம் 1962-ல் நிறுவப்பெற்றது.

உலகின் பிற பகுதிகளிலுள்ள மக்களின் அறிவு வளர்ச்சிக்குக் குறையாமல் தமிழ் மக்களும் அறிவு வளர்ச்சி பெறவேண்டுமானால், பிற மொழியிலுள்ள நூல்களைப் படிக்க முடியாதவர்கள் தமிழின்மூலமே எல்லாவற்றையும் கற்கக்கூடிய சூழ்நிலை ஏற்படவேண்டும். இந்த எண்ணத்தின் அடிப்படையிலேயே தமிழ் வெளியீட்டுக் கழகம் கல்லூரி மாணவர்களுக்குரிய நூல்களை வெளியிடுவதுடன், பொதுமக்களுக்கும் பயன்படுகின்ற முறையில் வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், விஞ்ஞானக் கலைகள் ஆகிய பல துறைகளிலும் பல்வேறு நூல்களை வெளியிட முனைந்துள்ளது.

அத்தகைய முயற்சிகளுள் ஒன்றாக 'வரவு செலவுத் திட்டம்' என்ற இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 96ஆவது வெளியீடாக வருகிறது.

கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து, இதுவரை 131 நூல்கள் தமிழ் வெளியீட்டுக் கழகத்தால் வெளியிடப்பெற்றுள்ளன. இந் நூல்களை வாங்கிப் படிப்பதன்மூலம் தமிழ் மக்கள் மேலும் வளர்ச்சி பெறுவார்கள் என்று நம்புகிறேன்.

எம். பக்தவத்ஸலம்

# முன்னுரை

இது பொருளியல் நூல் அன்று; அரசாங்க நிதி (பொது நிதி) இயல் நூலும் அன்று. 'பட்ஜெட்' என்னும் அரசாங்க ஆண்டு வரவுசெலவுத் திட்ட விவரணங்களையும் அறிக்கைகளையும் ஏற்கெனவே அறியாது, புதிதாய் நன்கு தெரிந்துகொள்ளவேண்டும் என்ற அக்கறை யுடைய மாணவர்களுக்கும், மற்றப் பொதுமக்களுக்கும் உதவும் வகையில் எழுதப்பட்ட நூல்தான் இது. அரசாங்க வெளியீடுகளில்—சிறப்பாகத் தமிழ்நாட்டு அரசாங்க வெளியீடுகளில்—அடங்கிய விதிகளையும், முறைகளையும், விளக்கங்களையும் தொகுத்து வகைப்படுத்தி இது எழுதப்பட்டுள்ளது. ஆகவே, தனிக் கருத்துகள் இதில் இடம் பெறவில்லை. அரசாங்க நூல் சம்பந்தமான ஆங்கிலத்திலுள்ள சிறப்புச் சொற்றொடர்களுக்குத் தமிழ்நாட்டு அரசாங்க வெளியீடுகளில் கையாளப் பட்ட தமிழ் மாற்றங்களே இந்நூலில் பெரும்பாலும் உபயோகப்படுத்தப் பட்டுள்ளன. இச் சொற்றொடர்கள் சிற்சில இடங்களில் இந்திய அரசியல் அமைப்பின் தமிழ் ஆக்கத்தினின்று வேறுபடுகின்றன; இந்நூலில் அரசியல் அமைப்பின் விதிகளை அப்படியே பெயர்த்துக் கூறுமிடத்து, இருவிதமான சொற்றொடர்களும் காட்டப்பட்டுள்ளன. மற்ற இடங்களில், பெரும்பாலும் தமிழ்நாட்டு பட்ஜெட் வெளியீடுகளில் உள்ள அடைமொழிகளே பின்பற்றப்பட்டுள்ளன. (நூலின் இறுதியி லுள்ள ஆங்கிலத் தமிழ் ஆக்கப் பட்டியலைக் காண்க.)

மத்திய அரசாங்க பட்ஜெட் இந்நாட்டு மக்கள் எல்லோருடைய வாழ்க்கையோடும் தொடர்புள்ளது. மாநில அரசாங்க பட்ஜெட்டுகளோ, சாதாரணமாக அந்தந்த மாநிலத்திலுள்ள மக்களின் வாழ்க்கையோடு மட்டும் பொருந்தியவை. இந்நூலில், எல்லா பட்ஜெட்டுகளுக்கும் பொதுவான கருத்துகளைச் சுருக்கியும், மத்திய அரசாங்கத்திற்குரிய முறைகளைச் சற்று விரித்தும், தமிழ்நாட்டு அரசாங்க பட்ஜெட் முறை களைச் சிறப்பாக விளக்கியும் தரப்பட்டுள்ளது. வரவுசெலவும் புள்ளிகளும்

தொகுப்பாய்ச் சேர்க்கப்பட்டுள்ளன. ஒவ்வோர் அரசாங்கமும் ஆண்டு தோறும் அதன் பட்ஜெட்டை அதற்குரிய சட்டசபையில் சமர்ப்பிக்கும் போது, பலவிதமான துணை வெளியீடுகளும் வரும். அவைகளை எல்லாம் நன்கு ஆய்ந்து பார்த்தால்தான், அரசாங்க நிதி நிலைமை தெளிவாகப் புலனாகும். ஆகவே, இந்நூலை அத்தகைய விரிவான ஆய்வுக்கு ஒரு முதல் துணையாகவே கொள்ளவேண்டும்.

கடைசியாக, ஒரு வார்த்தை. இந்த நூலில் விளக்கம் தர எடுத்துக் கொள்ளப்பட்ட விஷயம், 'நுட்பம்' என்ற வகையில் சேருமாதலால், ஓரளவு 'முயல்பவர்களுக்கே நல்ல பயனுடையதாகும். தமிழ் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் எல்லோரும் இந்த நூலை மோலோட்டமாக வாசித்துப் புரிந்துகொள்ளலாம் என்று எண்ணமுடியாது. ஆயினும், கூடியவரையில், எல்லோரும் எளிதாகப் படிக்கும்படி அமையவேண்டும் என்ற நோக்கம் உண்டு; நடைமுறையில், இது ஓரளவுக்கே சாத்திய மாகி இருக்கின்றது. இதனை ஒரு முதல் முயற்சியாகக்கொண்டு, என்னென்ன மாறுபாடுகள் செய்தால் பயன் அதிகமாகும் .என்று இந் நூலைப் பயன்படுத்துவோர்களும் அறிஞர்களும் தெரிவித்தால், இந் நூலின் இரண்டாம் பதிப்புச் சிறந்த வகையில் அமைய உதவும்.

சென்னை,
20-6-1965

ஆர். ரங்காச்சாரி

# பொருள் அடக்கம்

## பகுதி 1 – பொது விளக்கம்



## பகுதி 2 – தனி விளக்கம்



## பகுதி 3 – சிறப்பியல்

## பகுதி 4 – இணைப்புகள்

## பகுதி 1
# பொது விளக்கம்

## 1. ஆண்டு விழா

பாரத சமுதாயம் வாழ்கவே – வாழ்க வாழ்க
பாரத சமுதாயம் வாழ்கவே – ஜய ஜய —(பாரதியார்)

உலகம் எங்கும் ஓர் ஆண்டு என்பது முக்கியமான கால அளவாகக் கொள்ளப்படுகின்றது. பெரும்பாலும் ஜனவரி மாதத்தில் தொடங்கி டிசம்பர் மாதத்தில் முடியும் ஆண்டு வழக்கத்தில் உள்ளது. ரோமானிய—லத்தீன் தெய்வம் ஜேனஸ் (Janus); அப்பெயரோடு தொடர்புடையது ஜனவரி மாதம். இத் தெய்வத்திற்கு முன்னும் பின்னு மாக இருதலைகள் உண்டு. அதாவது அது சென்றதையும் வருவதையும் ஒருங்கே நோக்கும் தன்மையுடையது. இதற்கு ஏற்ப, ஓர் ஆண்டு கழித்து, மறு ஆண்டு தொடங்கும் ஜனவரி முதலில் தனி மனிதரும் அரசாங்கங்களும் சென்ற ஆண்டில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை ஒருசேர நோக்குவதும், வரும் ஆண்டின் விளைவுகள் எப்படி மாறும் அல்லது மாறவேண்டும் என்று ஆராய்வதும் வழக்கம். இது தவிர, வேறு பல விதத்திலும் ஜனவரி மாதம் இத்தகைய ஆராய்ச்சிக்குத் தூண்டு கோலாக உள்ளது. இம்மாத நடுவில்தான், பாரதநாடு எங்கும் உத்தராயணம் என்றும், பொங்கல் என்றும், ஒரு முக்கிய ஆண்டுத் திருப்பம் கொண்டாடப்படுகின்றது. நம் நாடு தனிக் குடியரசாக அமைந்த நாள் கொண்டாட்டமும் இந்த மாதத்தில்தான் வருகிறது (ஜனவரி 26). நம் சுதந்தரத்திற்கு வித்திட்ட காந்தியடிகள் அமரரான தினத்தின் அடியாக, சர்வோதய விழா வருவதும் இந்த மாதத்திலேயே (ஜனவரி 30).

இச் சமயத்தில், மத்திய அரசாங்கமும் மாநில அரசாங்கங்களும் வருகிற ஆண்டு வரவுசெலவுத் திட்டத்தை இறுதியாகத் தயாரிக்

கின்றன. மக்களும் இதை ஆவலுடன் எதிர்பார்த்து இருப்பர். பிப்ரவரி மாதம் நடுவிலிருந்து மார்ச்சு முதல் வாரம் வரையில் அரசாங்க ஆண்டு நிதிநிலை அறிக்கைகள், அவைகளுக்குரிய சட்டசபைகளில் சமர்ப்பிக்கப்படுகின்றன. மத்திய அரசாங்க அறிக்கை வழக்கமாக பிப்ரவரி மாதத்தின் இறுதியில் வெளிவருகின்றது. ரெயில்வே துறை விவரண அறிக்கைமட்டும் சற்று முன்னதாக வெளியிடப்படும். வரவு செலவுத் திட்டத்திற்கு உரிய ஆண்டு, ஏப்ரல் மாதம் முதல் தேதியிலிருந்து அடுத்த மார்ச்சு மாதம் 31ஆம் தேதிவரையில் உள்ளதாகக் கொள்ளப்படுகிறது. அதுவே அரசாங்கத்தின் பல காரியங்களுக்கும் ஒத்த ஆண்டாகக் கருதப்படுகிறது. ஆயினும், சிற்சில துறைகளில் ஆண்டுகளின் வரையறை வேறுவிதமாக இருக்கிறது—ரெவின்யூ நிர்வாகம், கூட்டுறவுத் துறை, இவைகளுக்குரிய ஆண்டு ஜூலை முதலிலிருந்து ஜூன் 30 வரையுள்ள பசலி எனப்படுவது. நம் நாட்டின் சில பகுதிகளில் விக்கிரம 'சகம்' என்னும் ஆண்டுவரிசை அக்டோபர்—நவம்பர் மாதத்தில், தீபாவளியை ஒட்டித் தொடங்குகிறது. தமிழ் நாட்டில் ஆண்டுத் தொடக்கமான சித்திரை மாதம், ஏப்ரல்மாத நடுவில் வரும். யுகாதி என்னும் ஆண்டுத் தொடக்கமும் தேசீய ஆண்டுத் தொடக்கமும் இதற்குச் சற்றுமுன் வரும். ஆகவே, பொதுவாகக் கூறுமிடத்து, நம் அரசாங்க நிதி ஆண்டு மக்களின் ஆண்டு அளவோடு ஒக்கும். சட்டசபை அங்கத்தினர்களின் சௌகரியத்தைக் கருதி, அரசாங்க நிதி ஆண்டை, அக்டோபர் மாதம் முதலிலிருந்து தொடங்கலாமா என்ற யோசனை அவ்வப்போது கருதப்பட்டு, அம் மாற்றம் வேண்டா என்று இதுவரை முடிவு செய்யப்பட்டுள்ளது.

# 2. அரசாங்க நிதி முறை

பொருளின்றி அமையாது எத்திட்டமும்—(அர்த்த சாஸ்திரம்)
இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு —(குறள்)

பாரத மக்கள், தாங்களே தங்களுக்கு என்று வழங்கிக்கொண்டது இந்திய அரசியல் அமைப்பு (சாஸனம்) (Constitution of India). இதன் முக்கிய நோக்கம், மக்கள் யாவரும் இன்புற்று ஒற்றுமையாக வாழ வகைசெய்யவேண்டுமென்பது; (இதுவே, 'சர்வோதயம்' என்பதன் திரண்ட கருத்தும் ஆகும்). இந்த சேமநலனுக்கு, எந்தெந்த வகையில் படிப்படியாகத் திட்டமிட்டு, கொள்கைகளை உருவாக்க வேண்டும் என்பதையும் அரசியல் அமைப்பு விவரிக்கின்றது (Directive Principles of State Policy). மத்திய, மாநில அரசாங்க ஆண்டு வரவுசெலவுத் திட்டங்களில் அடங்கிய யோசனைகள், மேற்கண்ட முக்கியமான இலட்சியங்களை அடைவதில், மேலும் மேலும் உயர அழைத்துச் செல்லும் வகையில் அமையவேண்டும். இந்த உரை கல்லைக் கொண்டுதான், பொதுமக்கள் ஒவ்வோர் அரசாங்க நிதிநிலைத் திட்டத்தையும் மதிப்பிடுவார்கள். அப்பொழுது, நம் நாட்டின் பகுதிகளிலுள்ள பொருளாதாரத்தின் இன்றைய நலன்களையும், தொலை நோக்குடன் நெடுங்கால நலன்களையும் பேணிவளர்க்கும் வகையைத் தான் முக்கியமாகக் கருதுவர். இதுதவிர, தனிப்பட்ட முறையில், குடிகள் தங்களுடைய பொருளாதார நலனையொட்டி, தங்கள் அரசாங்க நிதித் திட்டத்தால் என்ன மாற்றம் விளையும் என்பதை முக்கியமாக எண்ணுவதும் இயற்கையே. ஏற்கெனவே, தாங்கள் கொடுக்க வேண்டிய வரிகளின் சுமை அதிகமாக இருப்பதாக எண்ணுபவர்களும் நிறுவனங்களும், அப் பளுக் குறைய அரசாங்கம் ஏதாவது வழிசெய்து உள்ளதா (அல்லது பளு அதிகமாகாமலாவது இருக்கிறதா) என்பதைத் தான் முதலில் கவனிப்பர். அரசாங்க ஊழியர் போன்றவர்கள் தங்களுடைய ஊதியம் எவ்வகையிலாவது உயருவதற்கு அரசாங்கம் தீர்மானித்து உள்ளதா—மற்றும் வேறு நலன்களுக்கு வழி வகுக்

கின்றதா—என்பதைத்தான் பெரிதாக எண்ணுவர். பொதுவாக, அரசியல் கொள்கைகளில் ஏதாவது மாற்றம் ஏற்படுவதை, மத்திய அரசாங்க வரவுசெலவுத் திட்டமும் அதனைச் சார்ந்த உரையும் வெளிப் படுத்துகின்றனவா என்று, இந் நாட்டினரும் அயல்நாட்டினரும் நோக்குவர். இப்படி எல்லாவகையிலும் ஆராய வாய்ப்பு அளிப்பது மத்திய, மாநில அரசாங்க ஆண்டு நிதிநிலை அறிக்கைகள். இந்த அறிக்கைகளையும் அவைகளைச் சார்ந்த மதிப்பீட்டு விவரணங்களையும் நன்கு ஆராய்ந்து தெரிந்துகொள்ளுவதற்கு, சில அடிப்படையான கருத்துகளும், விதிகளும், முறைகளும் முதலில் தெளிவாகவேண்டும்.

சாதாரணமாக, ஒரு தனிமனிதன், தன் குடும்பச் செலவுகளைத் திட்டமிட்டுப் பார்ப்பதற்கும், அரசாங்கத்தின் விதிமுறைக்கும் அடிப் படையில் ஒரு வேற்றுமை உள்ளதாகச் சொல்லுவது வழக்கம். ஒரு தனிமனிதனோ, அல்லது நிறுவனமோ, மேற்கொள்ள இருக்கும் செலவு கள் அனைத்தும், கிடைக்கக்கூடிய வருமானத்திற்குள் அடங்கி இருக்க வேண்டும் என்பது முறை. அதாவது, எந்தச் செலவையும் செய்யு முன், அதற்கு வேண்டிய பணத்திற்கு வகை செய்துகொள்ள வேண்டும். இதற்கு மாருக, அரசாங்கம் முதலில் தான் செய்யவேண்டிய செலவுகளை முன்திட்டப்படியோ, அல்லது 'அதனை விரிவாக்கியோ நிச்சயிக்கும்; அதாவது, தன்னுடைய பொறுப்புகள் எல்லாவற்றை யும், கடமைகளையும் நிறைவேற்றத் தேவையான செலவினங்களையும், அளவுகளையும் நிர்ணயம் செய்துகொள்ளும்; பிறகுதான், இதற்கு வேண்டிய பணத்தை, எந்தெந்த வகையில் திரட்டலாம் என்று ஆராயத் தொடங்கும். மேலும், ஒரு தனி மனிதனின் காரியங்களில் தன் னுடைய மகிழ்ச்சி, இலாபம், இவைகள்தான் முக்கிய இலட்சியமாக இருக்கும். ஆனால், அரசாங்கத்தின் நிதி நடவடிக்கைகள் எல்லாம், மக்களின் நலனைக் கருதியே இருக்கும்—அல்லது இருக்கவேண்டும். தவிர, தனிப்பட்டவர்களைக்காட்டிலும் அரசாங்கத்திற்கு வருங்கால நலனைப்பற்றிய நீண்ட நோக்கம் அதிகம் வேண்டும்.

## 3. கணக்கு முறைகளின் அமைப்பு

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு —(குறள்)

நம் நாட்டு அரசாங்கக் கணக்குகள் சாதாரண சிட்டைப் பதிவேடு (Cash Book) முறையில் வைக்கப்படுகின்றன. நடைமுறை ஆண்டில், எந்தெந்தப் பணம் வந்தனவோ அவை அந்த ஆண்டுக் கணக்கில், உரிய தலைப்பின்கீழ் பதிவு செய்யப்படுகின்றன. அந்தப் பணம் நடை முறை ஆண்டில் வரவேண்டிய தொகையா அல்லது முந்திய ஆண்டின் பாக்கியா, அல்லது அடுத்த ஆண்டிற்குரிய முன்பணமா என்று வகுக்கப்படாமல், வரவு வைக்கப்படுகிறது. உதாரணமாக, தமிழ் நாட்டு அரசாங்கத்தை எடுத்துக்கொள்வோம். 1962–63 கணக்கில், நிலவரி என்ற தலைப்பின்கீழ் ரூ. 713 லட்சம் அந்த அரசாங்கக் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளது. 1962–63-ல் மாநிலத்தின் எல்லாப் பட்டாதாரர்களிடமிருந்தும் வரவேண்டிய தொகையை இது குறிப்பதாக ஆகாது. இது இந்த ஆண்டில் இந்தத் தலைப்பில் வசூலான தொகையின் கணக்கு. முந்தின ஆண்டின் பாக்கிகளும் இதில் அடங்கும். ஆண்டில் ஒவ்வொரு பட்டாதாரர்களிடமிருந்தும் வரவேண்டிய வரி, அவர்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட தொகை யின் அளவு, வசூலிக்கப்படவேண்டிய பாக்கி ஆகிய ஆரம்பக் கணக்கு விவரங்கள் அரசாங்கத்திடமோ, சென்னையிலுள்ள தலை மைக் கணக்கு அதிகாரியிடமோ (அக்கவுன்டன்ட்-ஜெனரலிடமோ) இல்லை. கிராமக் கணக்குப்பிள்ளைகள்தாம் இந் நிலவரிக் கணக்குகளைப் பதிந்து வருகின்றார்கள் என்பது வெளிப்படை. இதேபோல, செலவுப் பிரிவில் அந்த ஆண்டில் ஒவ்வொரு தலைப்பின் கீழும் அரசாங்கம் கொடுத்த தொகைதான் கணக்கில் காண்பிக்கப்படுகிறது. இந்தத் தொகை அந்தக் குறிப்பிட்ட ஆண்டுக்குத் தரப்படவேண்டியதுதானா, அல்லது முந்தின ஆண்டுகளுக்குத் தரப்படவேண்டியதா அல்லது இனிமேல் செய்யப்படும் பணிகளுக்காக முன்பணமாகத் தரப்பட்டதா என்பதுபற்றி அதில் குறிப்பு இல்லை. இதற்கு விளக்கமாக ஒரு செலவினத்தைப் பார்ப்போம். 1962–63 கணக்கில் மோட்டார்

வண்டிகள் வாங்கின செலவு ரூ. 88 லட்சம் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. இதனுல், எல்லா வண்டிகளும் அந்த ஆண்டில் வாங்கப் பட்டன என்று அர்த்தமில்லே. சில வண்டிகள் 1961–62-லேயே பெறப் பட்டிருந்தாலும், மத்திய அரசாங்கத்தின் வழங்கு துறைக்கோ, அல்லது தனிக் கம்பெனிக்கோ 1962–63-ல்தான் பணம் கொடுக்கப்பட்டிருக்க லாம். இதுபோல், 1962–63-ல் பெறப்பட்டு, அவைகளுக்கான தொகை யில் ஒருபகுதி அடுத்த ஆண்டில் கொடுபடுவதாகவும் இருக்கலாம்.

நம் நாட்டில், அரசாங்கக் கணக்குகளே இந்த மாதிரி பொதுப் படையாக வைப்பதில் சில நோக்கங்கள் உண்டு. முன்னர்க் குறிப் பிட்ட கொள்கைகள் தவிர, வரவு செலவுத் திட்டத்தில் வேறு நோக்கங் களாவன :—(1) வரப்போகும் ஆண்டில் பலவிதத்தில் கிடைக்கக்கூடிய வருமானத்தை மதிப்பிடுதல், (2) இந்தப் பணத்தையும் முந்தின ஆண்டின் கையிருப்பையும் ஒருங்கு சேர்த்தால், எதிர்பார்க்கப்படும் எல்லாச் செலவுகளுக்கும் ஈடுகட்டுமா என்பதை மதிப்பிடுதல், (3) வர வையும் செலவையும் சமன்படுத்த வேண்டுமானுல், வரிவிதிப்பை எந்த அளவுக்கு உயர்த்துவது அல்லது குறைப்பது என்பதை நிச்சயித்தல் ஆகியனவாகும். உதாரணமாக, தமிழ் நாட்டின் 1965–66ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்திற்காக, இராமநாதபுரம் மாவட்டத்தின் பட்டா தாரர்களிடமிருந்து நிலவரியாகவும், முந்திய ஆண்டுகளில் தவணேக் கடன் பாக்கியாகவும் ஏராளமான பணம் வரவேண்டியிருக்கிறது என் பதைத் தெரிந்துகொள்வது பெரிய ஆறுதலாகாது. ஏனெனில், அந்தப் பாக்கிகள் 1965–66-ல் பூரணமாக வசூலாகாமல் போகலாம். பருவநிலே, விளேச்சல் நிலேமை முதலியவைகளேக் கருத்தில்கொண்டு நிலவரி மூலம் எவ்வளவு எதிர்பார்க்க முடியும் என்பதுதான் முக்கியம். வரவு செல வினங்களின் மதிப்பீடுகளேப் பல்வேறு துறைகளின் தலேவர்கள், கிடைக்கக்கூடிய தகவல்களேக் கொண்டும், தங்கள் கருத்திற்கிணங்கவும் முடிவு கட்டுகிருர்கள். இந்த மதிப்பீடுகள், நிதித் துறையினுல் தணிக்கை செய்யப்படுகின்றன. தனது முந்திய அனுபவங்களேக் கொண்டும், முந்தின ஆண்டுகளின் கணக்குகளே அடிப்படையாகக் கொண்டும் சில திருத்தங்களே அது செய்கிறது. சில மண் தோண்டும் இயந்திரங்களே வாங்கத் தமிழ்நாட்டுத் தலேமைப் பொறியர் (Chief Engineer) அரசாங்க அனுமதி பெற்றிருக்கலாம் ; 1965–66-ல் அதற்கு நிதி ஒதுக்கும்படி கேட்டுமிருக்கலாம் ; இந்த இயந்திரங்களேப் பெறுவ தென்பது சுலபமன்று என்பதும், அயல்நாட்டு நாணய வசதிச் சங்கடங்கள் உள்ளன என்பதும், இயந்திரங்களே அனுப்பித் தருவதில் அயல்நாட்டுக் கம்பெனிகளுக்குக் காலம் நிறைய வேண்டும் என்பதும் நிதித் துறைக்குத் தெரியும் ; எனவே, 1965–66-ல் இந்த இயந்திரங் களுக்காக நிதித்துறை, நிதி எதுவும் ஒதுக்காமல் இருப்பது பொருத்த மாக இருக்கலாம். 1965–66 கடைசியில் இயந்திரங்கள் வந்து சேர்ந்து

விட்டாலுங்கூட, துவக்கத்தில் லண்டனிலுள்ள இந்திய ஹைகமிஷனர், தம் வசமுள்ள நிதியைக்கொண்டு அதற்கான பணத்தைக் கொடுத்து விடுவார். பிறகு, அந்த ஹைகமிஷனர், தமிழ்நாட்டு அரசாங்கத்திடம் உரிய தொகையைக் கேட்கும்போது, அந்த நிதி ஆண்டு முடிந்து போயிருக்கலாம். எனவே, இந்தச் செலவினத்தை 1966–67-க்கு ஒத்திப் போடுவதால், தலைமைப் பொறியருக்கோ, அயல்நாட்டுக் கம்பெனிக்கோ அசௌகரியம் எதுவும் ஏற்படாது.

முன்னாளில், மத்திய, மாநில அரசாங்க அலுவல்கள், வழக்கமான நிர்வாகமுறை வரம்புக்குள்ளாக நிறுத்தப்பட்டிருந்தபோது, வரவு செலவுத் திட்ட மதிப்பீடுகளைக் கூடுமானவரையில் திட்டவட்டமாக அமைப்பது சாத்தியமாக இருந்தது. எதிர்பாராததாக எதுவும் வருவதில்லை. பஞ்சம் முதலியன ஏற்பட்டபோதும்கூட, பொது வரவு செலவுத் திட்டத்தில் பெரு மாறுதல் செய்ய நேரிடவில்லை. ஏனெனில், இப்போது செய்யப்படுவதுபோல, மிகவும் விரிவான உதவி ஏற்பாடு அப்போது மேற்கொள்ளப்படுவது கிடையாது. தற்கால நிலைமையிலோ, வரவு செலவுத் திட்டத்தை அமைப்பது முன்னைவிடச் சிக்கல் நிறைந்ததாகிவிட்டது. பல புதிய பொதுநலப் பணித் துறைகளை அரசாங்கம் மேற்கொண்டிருப்பதும், பழைய துறைகளில் வேலைகளின் செயல்வேகம் அதிகரிக்கப்பட்டிருப்பதும் இதற்குக் காரணமாகும். ஒரு நீர்த்தேக்கத் திட்டத்தை ஓர் ஆண்டில் நிறைவேற்றிவிட முடியாது; இந்தத் திட்டத்தை நிறைவேற்ற, மூன்று கோடி ரூபாய் செலவாகுமென்று முதலில் உத்தேசமாக மதிப்பிடப்பட்டிருக்கலாம். ஆனால், திட்டம் நிறைவேறும்போது, ஒவ்வோர் ஆண்டிலும் எவ்வளவு செலவாகும் என்பதை அத்துறையில் உள்ள பொறியர்கள்கூடச் சரியாகச் சொல்ல முடியாது. வேலை ஆரம்பித்து நடந்துகொண்டு வரும்போது, அந்த ஆண்டில் வரவு செலவுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்ட தொகை தீர்ந்துவிட்டது என்பதற்காக, வேலையை நிறுத்தவும் முடியாது. இதையெண்ணி, மிதமீறிய முன் ஜாக்கிரதையுடன், ஆண்டுத் துவக்கத்தில் அனாவசியமாக மிகப் பெரிய தொகை இதற்கு ஒதுக்கும்படி வற்புறுத்தப்படுமானால், இதே காலத்தில் நடைபெற்று வரும் வேறு பல வேலைகளுக்கு நிதி இல்லாமல் போகலாம். எல்லாவற்றையும் ஆய்ந்து, வரவு செலவுத் திட்ட மதிப்பீடு செய்யவேண்டியிருக்கிறது. சில துறைகளில், இம் மதிப்பீடுகள் அவ்வளவு சரியாக இல்லாமல் போவது தவிர்க்க முடியாததாகக் கருதப்படவேண்டும். எனினும், ஒவ்வொரு நடைமுறை ஆண்டிலும் பொதுநலப் பணிகளுக்காக, வரி கொடுப்போரிடமிருந்து எவ்வளவு குறைந்த தொகையை ஓர் அரசாங்கம் எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதைக் குத்து மதிப்பாகவாவது சொல்லுவது எல்லா அரசாங்க வரவுசெலவுத் திட்டத்தின் முக்கிய அம்சமாக இருந்து வருகிறது.

# 4. அரசாங்க நிதிப் பிரிவுகள்

(1) இறைஒருங்கு நேர்வது நாடு
(2) உறுபொருளும் *உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள் —(குறள்)

இந்திய அரசியல் அமைப்பின்படி மத்திய, மாநில அரசாங்க நிதிகள் மூன்று வகையாகப் பிரிக்கப்படும் :—(i) தொகு நிதி (Consolidated Fund), (ii) எதிர்பாராச் செலவு நிதி (Contingency Fund), (iii) பொதுக் கணக்கு (Public Account).

(i) தொகு நிதி: ஓர் அரசாங்கம் பெறும் எல்லாவித வருவாயும், கருவூல உண்டியல்கள் (Treasury Bills) மூலம் பெறுவது போன்ற தாற்காலிகக் கடன்களும், குறுகிய காலத் தவணையிலோ, அல்லது நீண்டகாலத் தவணையிலோ திருப்பிக் கொடுப்பதாக, இன்னொரு அரசாங்கத்தினிடமிருந்தோ, அல்லது பொது மக்களிடமிருந்தோ பெறும் ('நிலையான') கடன்களும், அந்த அரசாங்கம் பிறருக்கு முன் உதவிய கடன்களை அவர்களிடமிருந்து திருப்பிப் பெறும் வகையில் கிடைக்கும் பணமும், அந்த அரசாங்கத்துக்குரிய தொகு நிதியில் சேரும் (இந்திய அரசியல் அமைப்பு பிரிவு 266). ஓர் அரசாங்கத் தொகு நிதியில் அடங்கும் வரவு செலவுகளை மூன்று பிரிவாகப் பதிவு செய்யவேண்டும். (அ) ரெவின்யூ கணக்கு (Revenue Account), (ஆ) மூலதனக் கணக்கு (Capital Account), (இ) கடன் கணக்கு (Loan Account).

(அ) ரெவின்யூ கணக்கு: ஒவ்வோர் அரசாங்கத்தின் அன்றாட வருவாயும் செலவும் இதில் அடங்கும். இங்குக் கூறப்படும் வருவாய், அரசு விதிக்கும் நேர்முக, மறைமுக வரிகளிலிருந்தும் அரசாங்கத் திற்குச் சொந்தமான சொத்துகள் அல்லது நிறுவனங்கள் மூலம் கிடைக்கும் வருமானத்திலிருந்தும், அரசாங்கம் செய்யும் சில உதவி

* உல்குபொருள் – சுங்கம், தீர்வை முதலியவற்றால் வரும் பணம்.

களுக்கு மாருகப் பெறும் ஊதியத்திலிருந்தும் இன்னும் பலவகை களிலும் பெறப்படும்.

(ஆ) **மூலதனக் கணக்கு :** ஆண்டுதோறும் வருமானம் தரக் கூடியதாகவோ அல்லது ஆண்டுதோறும் ஏற்கவேண்டிய நடை முறைச் செலவுகளைத் தவிர்க்கக் கூடியதாகவோ உள்ள ஒரு நிலையான சொத்தை அடைவதற்கான செலவு, பொதுப்படையாக, மூலதனச் செலவாகப் பாகுபடுத்தப்படலாம். இதற்கு விளக்கம் தரும் வகையில், சில மாநில அரசாங்கச் செலவுகளை—சிறப்பாகத் தமிழ்நாட்டுக்கு உரியவைகளைக் கவனிக்கலாம். நீர்ப்பாசனத் திட்டங்கள் நிலையான ஆஸ்திகள் என்பதும் அரசாங்கத்துக்கு அவை வருமானம் தரும் இனங்களாக இருக்கின்றன என்பதும் வெளிப்படை. அரசாங்கத்துக்கு நடைமுதல் வாடகைச் செலவு இல்லாதபடி செய்யும் ஒரு கட்டடமும் மூலதன ஆஸ்தியாகும். ஜமீன்தார்களுக்கு அவர்களின் நிலங்களை எடுத்துக்கொண்டு நஷ்டஈடு கொடுப்பதும் மூலதனச் செலவாகக் கருதப்படும்; ஏனெனில், அரசாங்கத்துக்கு அந்தப் பண்ணைகள்மூலம் புதிய வருமானம் கிடைக்கும். இத்தகைய மூலதனச் செலவுகளை, அரசாங்கத்தின் சாதாரண வருமானத்திலிருந்து ஏற்கலாம்; அல்லது பொதுமக்களிடமிருந்தோ, மத்திய அரசாங்கத்திடமிருந்தோ, வேறு வகையிலோ பெறும் கடன் தொகை மூலமும் ஏற்கலாம். ஒரு சொத்து நிரந்தரமானதாக இருந்து, மூலதனத்தின் தொகைக்குச் சரியாக வட்டி வரக்கூடிய வகையில் நிகரவருமானம் வரும் என்று எதிர்பார்க்கப் பட்டால், நிலையான கடன் என்ற அடிப்படையில் அதற்குப் பணம் முத லாகப் போடலாம். ஆனல், ஆஸ்தியானது ஒருசில ஆண்டுகள் மட்டுமே நிலைக்கக்கூடியதாக இருக்குமானல், பெற்ற கடனையும் உரிய வட்டியையும், அந்த ஆஸ்தியின் உத்தேச ஆயுள் காலத்திற்குள் வருஷாந்தரத் தவணைகளில் செலுத்திவர வகை செய்யவேண்டும். இனி வரும் தலைமுறையினருக்குப் பயன்தருகின்ற ஓர் ஆஸ்தி அமைப்பை ஏற்படுத்தும்போது, அதன் முழுப் பளுவையும் இப்போதுள்ள தலை முறையினர்மீதே சுமத்திவிடக்கூடாது என்பதே, இந்த முதலீட்டு முறையின் கொள்கையாகும். தமிழ்நாட்டு அரசாங்கத்தில், கீழ்க்கண்ட முறை பின்பற்றப்படுகின்றது. 1956–57ஆம் ஆண்டுமுதல், எந்தத் தனிப்பட்ட வேலையின் செலவு ரூ. 20,000-க்குமேல் ஆகிறதோ, அல்லது பல வேலைகள் சேர்ந்த ஒரே திட்டத்தின் செலவு ஓர் இலட்ச ரூபாய்க்குமேல் ஆகிறதோ அவை ‘மூலதனச் செலவு’ என்னும் இனத் தில் சேர்க்கப்படுகின்றன. சாலைகள் சம்பந்தமாக வாங்கப்படும் இயந்திரப் பொறிகள், தளவாடங்கள் இவைகளுக்கு ஆகும் செலவும், மூலதன வேலைக்காகக் கொடுக்கப்படும் உதவித் தொகைகளும், மேற் கூறிய வரம்பிற்கு அதிகமானல், மூலதனச் செலவு என்ற இனத்தில் சேரும். சில மூலதன வேலைகளுக்காகச் செலவு முழுவதையும் தமிழ்

நாட்டு அரசாங்கம், மத்திய அரசினரிடமிருந்தோ, மற்றவர்களிட மிருந்தோ, மானியமாகப் பெறலாம். இந்த மானியங்கள் ரெவின்யூ பிரிவில் வரவு வைக்கப்படுகின்றன. உதவி மானியத்திலிருந்தே செய்யும் செலவும் ரெவின்யூ கணக்கில் காட்டப்படுகிறது. செலவின் ஒரு பகுதிக்குமட்டும் உதவிப் பணம் பெறப்பட்டால், முழுச் செலவும் முதற்கண் மூலதனக் கணக்கில் எழுதப்பட்டு ஆண்டு முடிவில் உதவி மானியத்துக்கு இணையான தொகை மூலதனக் கணக்கிலிருந்து ரெவின்யூ கணக்குக்கு மாற்றப்படுகிறது.

(இ) **கடன் கணக்கு**:—இந்தக் கணக்கில், குடிகளிடமிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் பெற்ற கடன் விவரமும், அவைகளுக்காக முதல், வட்டி, என்ற வகையில் திருப்பிக் கொடுக்கும் விவரமும், அரசாங்கத்தால் தனி நிறுவனங்களுக்கும், விவசாயிகளுக்கும், மற்றவர் களுக்கும் கொடுக்கப்படும் கடன்களின் விவரமும், அவைகள் திருப்பிக் கொடுக்கப்படும் விவரமும் அடங்கும்.

(ii) எதிர்பாராச் செலவு நிதி:—இந்திய அரசியல் அமைப்பு, 267ஆவது பிரிவில், பின்வருமாறு சொல்லப்பட்டு உள்ளது:—

"(1) இந்தியாவின் எதிர்பாராச் செலவு நிதி என்று கூறப்படும் வசக்கட்டுத் தன்மைவாய்ந்த (in the nature of an imprest) நிதி ஒன்றைப் பார்லிமென்டு தன் சட்டத்தினுல் ஏற்படுத்தலாம்; அச் சட்டத் தினுல் நிர்ணயிக்கப்படும் தொகைகள் அந் நிதியில் அவ்வப்போது சேர்க்கப்படவேண்டும்; அத்தகைய எதிர்பாராச் செலவுக்காக 115ஆவது பிரிவின் கீழோ, 116ஆவது பிரிவின் கீழோ பார்லிமென்டு சட்டத்தினுல் அனுமதி அளிக்கும்வரை, அச் செலவு செய்வதற்கு அந் நிதியிலிருந்து முன் பணத் தொகைகள் கொடுப்பதற்காக ராஷ்டிரபதியிடம் அந் நிதி விட்டு வைக்கப்பட வேண்டும்.

(2) இராச்சியத்தின் (மாநில) எதிர்பாராச் செலவு நிதி என்னும் பெயருள்ள வசக்கட்டுத் தன்மைவாய்ந்த (in the nature of an imprest) நிதி ஒன்றை ஓர் இராச்சியத்தின் (மாநிலத்தின்) சட்டசபை தன் சட்டத்தினுல் ஏற்படுத்தலாம்; அச் சட்டத்தினுல் நிர்ணயிக்கப் படும் தொகைகள் அந் நிதியில் அவ்வப்போது சேர்க்கப்பட வேண்டும்; அத்தகைய எதிர்பாராச் செலவுக்காக, 205ஆவது பிரிவின் கீழோ, 206ஆவது பிரிவின் கீழோ, அந்த இராச்சியத்தின் (மாநிலத்தின்) சட்ட சபை தன் சட்டத்தினுல் அனுமதி அளிக்கும்வரை, அச் செலவு செய்வ தற்கு அந் நிதியிலிருந்து முன் பணத் தொகைகள் கொடுப்பதற்காக, இராச்சியபாலரிடம் (கவர்னரிடம்) அந் நிதி விட்டுவைக்கப்பட வேண்டும்."

மத்திய அரசாங்கத்தின் 'இந்திய எதிர்பாராச் செலவு நிதி'யில் 1964–65 ஆண்டில் 15 கோடி ரூபாய் இருந்தது. மாநில எதிர்பாராச்

செலவு நிதிகளின் தொகைகள் அந்தந்த அரசாங்கத்தின் தேவைப்படி மாறுபட்டிருந்தன. தமிழ்நாட்டு அரசாங்க நிதியின் தொகை 1959ஆம் ஆண்டில் ரூ. 150 இலட்சமாக நிர்ணயிக்கப்பட்டது. 1964ஆம் ஆண்டில், தாற்காலிகமாக உணவுப் பொருள்களை வாங்க வசதி செய்வ தற்காக, இது ரூ. 500 இலட்சத்திற்கு உயர்த்தப்பட்டது.

ஒவ்வோர் எதிர்பாராச் செலவு நிதியிலிருந்தும் அவ்வப்போது முன் பணமாகப் பெறும் தொகை, பின்னர், அதற்குரிய சட்டசபையின் அனுமதியுடன் தொகு நிதியிலிருந்து திருப்பிக் கொடுக்கப்படும்.

(iii) **பொதுக் கணக்கு** :—இது இந்திய அரசியல் அமைப்பு 266 (2) பிரிவுக்குட்பட்டது. வணிகரும் பிறரும் ஒரு பாங்கியில் போட்டு வைப்பதுபோல் கஜானாவில் வைக்கும் பணமும், வழக்குத் தொடர்ந்தவர்களால் நீதிமன்றத்தில் ஒப்படைக்கப்பட்ட பணமும், குறிப்பிட்ட அரசாங்கத்துக்குச் சொந்தமானவை அல்ல. ஆனாலும், அரசாங்கப் பணத்துக்குப் போலவே அவைகளுக்கும் கணக்கு வைத்தாக வேண்டும். ஏனென்றால், இந்தப் பணம் நஷ்டமானால், அரசாங்கத்தின் மீதே வழக்குப் போடலாம். சில்லறைக் கொடுக்கல் வாங்கல்களும், ‘பொதுக்கணக்கு’ என்பதன்கீழ்ச் சேர்க்கப்படுகின்றன. இந்த இனப் பணத்தைத் திருப்பித்தர, சட்டசபையின் அனுமதியைப் பெறவேண்டிய அவசியமில்லை. ஏனெனில், இவை சாதாரண பாங்கி அலுவல் போன் றவை. இவைகளின் விவரணம் பின்னர்க் கூறப்படும். சமீப காலம் வரை, பெரும்பாலும் ஒவ்வோர் அரசாங்கத்துக்கும், இந்தக் கணக்கில் வந்துசேரும் தொகை அதிகமாகவும், எடுக்கப்படும் தொகை அந்த அளவுக்கு இல்லாமலும் இருந்தது. (தமிழ்நாட்டு அரசாங்கத்துக்கு ஆண்டு ஒன்றுக்கு ஒரு கோடி ரூபாய்வரை இந்தக் கணக்கில் நிதி குவிந்தது.) ஒவ்வோர் ஆண்டில், இந்தப் பிரிவில் கிடைக்கும் வரவு, மூலதனப் பணிகளில் முதலீடு செய்வதற்குப் பயன்படுகிறது. முந்தின ஆண்டுகள் எல்லாவற்றிலுமாகக் குவிந்திருக்கும் நிகரத் தொகை, பொதுவாகக் கூறுமிடத்து அந்தந்த அரசாங்கக் கடன் சுமையில் ஒரு பகுதியேயாகும்.

# 5. கணக்குத் தலைப்புகள்

எண்பொருளவாகச் செலச்சொல்லி...... (குறள்)

ஒவ்வொரு நிதியைச் சார்ந்த கணக்குகளை எளிதாகப் பார்க்கவும், தணிக்கை செய்யவும் வசதியாக, மத்திய, மாநில அரசாங்கங்களின் வரவுகளும் செலவுகளும், குறிப்பிட்ட பல கணக்குத் தலைப்புகளின் கீழ்ப் பிரிக்கப்பட்டுள்ளன. இந்தப் பிரிவினையில் ஒரு சிறப்பு என்னவென்றால், ஒரு குறிப்பிட்ட துறையின் கொடுக்கல் வாங்கல்கள்—அந்தக் கொடுக்கல் வாங்கல் ஒரே காரணத்துக்கானவையா, வேறுவேறு காரணங்களுக்கானவையா என்பது பொருட்படுத்தப்படாமல்—தனித் தலைப்பில் வைக்கப்படுகின்றன. உதாரணமாக, விவசாயக் கல்லூரிச் செலவு, 'வேளாண்மை' என்ற தலைப்பின்கீழும், மருத்துவக் கல்லூரிச் செலவு, 'மருத்துவம்' என்ற தலைப்பின்கீழும் வருகின்றன. இவை இரண்டும், 'கல்வி' என்ற தலைப்பின்கீழ் வருவதுதான் பொருத்தம். எனினும், அது கவனிக்கப்படுவதில்லை. இந்தத் தனி நடைமுறைக்கு ஒரே காரணம், இந்த நிறுவனங்கள் முறையே வேளாண்மைத்துறை நெறியாளரின்கீழும், மருத்துவத்துறை நெறியாளரின்கீழும் இருக்கின்றன என்பதும், கல்வித்துறை நெறியாளரின்கீழ் இவை இருக்கவில்லை என்பதுமாகும். அரசாங்கத்தின் எல்லாத் துறைகளுக்கும் பயன்படும் பெரிய கட்டடங்களுக்கு ஆகும் செலவு, 'பொதுப் பணிகள்' என்னும் தலைப்பில் காட்டப்படும். மராமத்துத்துறைப் பொறியர்தாம் எல்லாக் கட்டடங்களையும் கட்டுகிறார் என்பதும், மராமத்துத்துறைக் கணக்கு 'பொதுப் பணிகள்' என்ற தலைப்பில் வைக்கப்பட்டிருப்பதுமே இதற்குக் காரணம். விசித்திரமாகத் தோன்றும் இப் பாகுபாட்டு முறையில், ஓர் அனுகூலம் உள்ளது. அதாவது, ஒவ்வொரு துறைத் தலைமையும் (Head of the Department) சாதாரணமாக ஒரு தனித் தலைப்பில் கணக்கு வைத்துக் கொள்ளவேண்டும் என்பது, 'பொதுப் பணிகள்' என்ற பிரிவில் ஏதாவது ஒழுங்கீனங்கள் இருந்தால், சம்பந்

தப்பட்ட கட்டடம் ஒரு மருத்துவ மனையாகவோ அல்லது கல்லூரியாகவோ இருந்தாலுங்கூட, தலைமைப் பொறியர் (Chief Engineer) அதற்குப் பதில் சொல்லவேண்டும். இந்த முறையில் இயல்பாக ஒரு குறைபாடு உள்ளது. ஒரு துறையின் மொத்தச் செலவை—உதாரணமாகக் கல்வித்துறையின் மொத்தச் செலவை—ஒருவர் அறிந்துகொள்ள விரும்பினால், அதன் செலவுப் பகுதிகளை—கல்வி, வேளாண்மை, விலங்கின வளர்ப்பு, மருத்துவம், பொதுப்பணிகள்—மராமத்துத்துறை—ஆகிய பிரிவுகளில் பார்க்கவேண்டும். இந்த முறை, வெகுகாலத்துக்கு முன் ஆடிட்டர்-ஜெனரல் என்னும் இந் நாட்டுத் தலைமைக் கணக்கு-தணிக்கை அதிகாரியால் நிர்ணயிக்கப்பட்டது. மத்திய அரசாங்கத்துக்கும் எல்லா மாநிலங்களுக்கும் இந்த முறை பொதுவானது. ஒரு மாநிலத்துக்குமட்டும் தனியாக இதை மாற்றுவதுபற்றி ஆராய்வதற்கில்லை. தவிரவும், கணக்குத் தலைப்புகளின் பாகுபாட்டில், பெரு மாறுதல் ஏற்படுத்தினால், குழப்பம் ஏற்படக்கூடும். முந்தின ஆண்டுக் கணக்குகளைப் பார்க்கவேண்டியிருக்கும்போதும், முந்தின ஆண்டுகளில் தொடர்ந்த தவறுகளைச் சரியாக்கும்போதும் குழப்பம் நேரக்கூடும். ஆகவே, தலைப்பு மாற்றங்கள் அரியனவாகவே அனுமதிக்கப்படும். இக் காலமுறைகளுக்குப் பொருந்துமாறு 1961ஆம் ஆண்டுக்குப் பின் சில முக்கிய மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன.

ஒவ்வொரு கணக்குத் தலைப்பின்கீழும், வரவுகளையும் செலவுகளையும் சரியாகப் பதிவு செய்வது அவசியம். தமிழ்நாட்டில் மாவட்டங்களிலும் உப-கஜானாக்களிலும் பணியாற்றும் நூற்றுக்கணக்கான கணக்கர்கள் (Accountants) கணக்கைத் தொகுக்கிறார்கள். (வேறு மாநிலங்கள் சிலவற்றில், இப் பொறுப்பு முறை கொஞ்சம் மாறுபடுகின்றது.) தவறுதலாக, ஒரு வரவு இனம், செலவுப் பக்கத்திலே பதிவு செய்யப்படுமானால், அல்லது ஒரு செலவினம், வரவுப் பக்கத்திலே பதிவு செய்யப்படுமானால், தவறுதலைக் கண்டுபிடித்துச் சரிப்படுத்த எவ்வளவோ இடர்ப்படவேண்டியிருக்கும். அத்தகைய தவறுகள் அடிக்கடி இல்லாமலும் இல்லை. இதை ஓரளவு தவிர்க்க, ரெவின்யூ கணக்கு, மூலதனக் கணக்கு இவைகளில் சேரும் வருவாய்க்குரிய தலைப்புகளுக்கு ரோமன் எண்களும், செலவைக் காட்டும் தலைப்புகளுக்கு, சர்வதேச எண்கள் என்னும் இந்திய எண்களும் குறிப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

இவைகளுக்குப் பெருந்தலைப்புகள் (Major Heads) என்று பெயர். இவைகளின் முழுப்பட்டியலை (1964ஆம் ஆண்டில் இருந்தபடி) இந்த அத்தியாயத்தின் அனுபந்தத்தில் காணலாம். சில உதாரணங்கள் மட்டும் கீழே தரப்படுகின்றன.

## தொகு நிதி—ரெவின்யூ கணக்கு

### வருவாய்ப் பெருந் தலைப்புகள்

| மத்திய அரசாங்கக் கணக்கு | மாநில அரசாங்கக் கணக்கு (தமிழ்நாடு) |
|---|---|
| I. சுங்க வருவாய் | —— |
| II. யூனியன் ஆயத் தீர்வைகள் | —— |
| III. கார்ப்பொரேஷன் வரி | —— |
| IV. கார்ப்பொரேஷன் வரி நீங்கலாக மற்ற வருமான வரிகள் | IV. கார்ப்பொரேஷன் வரி நீங்கலாக மற்ற வருமான வரிகள் |
| V. சொத்து வரி | V. சொத்து வரி |
| VI. செல்வ வரி | —— |
| VII. செலவு வரி | —— |
| VIII. கொடை வரி | —— |
| IX. நில வரி | IX. நில வரி |
| X. மாநில ஆயத் தீர்வைகள் | X. மாநில ஆயத் தீர்வைகள் |
| ...... | ...... |
| XVII. நீதி நிர்வாகம் | XVII. நீதி நிர்வாகம் |
| ...... | ...... |
| XXX. ஒலிபரப்பு | —— |
| ...... | ...... |
| XL. வாணிகக் கப்பல் துறை | —— |
| ...... | ...... |
| XLII. ஆகாய விமானத் துறை | —— |

### செலவினப் பெருந் தலைப்புகள்

| | |
|---|---|
| 1. சுங்க வருவாய் (வசூல்) | —— |
| ...... | ...... |
| 10. மாநில ஆயத் தீர்வைகள் (வசூல்) | 10. மாநில ஆயத் தீர்வைகள் (வசூல்) |
| ...... | ...... |
| 19. பொது நிர்வாகம் | 19. பொது நிர்வாகம் |
| 20. தணிக்கை | —— |
| 21. நீதி நிர்வாகம் | 21. நீதி நிர்வாகம் |
| ...... | ...... |
| 36. ஒலிபரப்பு | —— |
| ...... | ...... |
| 56. ஆகாய விமானத் துறை | —— |

குறிப்பு :—(அ) இந்திய அரசியல் அமைப்புப்படி சில வருவாய்களும் பணிகளும் மத்திய அரசாங்கத்துக்கே உரியவை. அவைகளைச் சார்ந்த தலைப்புகளை மாநிலக் கணக்கில் காணமுடியாது.

(ஆ) ரோமன் எண்கள், இந்திய எண்கள் என்ற வேற்றுமை தவிர, ஒரு துறையின் வருவாய் எண்ணும், அந்தத்துறைச் செலவின எண்ணும், சிலவிடங்களில் வெவ்வேருக இருப்பதைக் கவனிக்கவும்.

### தலைப்புக் கூறுகள்

ஒவ்வொரு பெருந் தலைப்பில் அடங்கும் வருவாயினங்களுக்கும் செலவினங்களுக்கும், முழு விவரம் தெரிவிப்பதற்காக அவைகளைப் பல கூறுகளாக்கி, துணைப்பெருந் தலைப்புகளிலும், சிறு தலைப்புகளிலும், உட்பிரிவுகளிலும் காட்டவும் விதிகள் உள்ளன. இதை விளக்கச் சில உதாரணங்கள் கீழே தரப்படுகின்றன. (துணைப்பெருந் தலைப்புகள் சிலவிடங்களில்மட்டும் காணப்படும். ஒவ்வொரு சிறு தலைப்பின் உட்பிரிவுகள் சமயோசிதமாக மாற்றப்படலாம்.)

### வருவாய்

உதாரணம் :—

பெருந் தலைப்பு (Major Head)

**XIII. இதர வரிகளும் தீர்வைகளும்**

| துணைப்பெருந் தலைப்பு (Sub-Major Head) | சிறு தலைப்புகள் (Minor Heads) |
|---|---|
| XIII – A. கேளிக்கை, குதிரைப் பந்தயம், சூதாட்டங்கள் உள்ளிட்ட ஆடம்பரங்களின் மேல் வரிகள். | a. கேளிக்கை வரி |
| | b. குதிரைப் பந்தய வரி—பந்தயக் கணக்கு யந்திரம் |
| | c. குதிரைப் பந்தய வரி—பந்தயம் பிடிப்போர் |
| | d. கழிக்கவும்—திருப்பிக் கொடுத்த தொகைகள் |
| மொத்தம் — | XIII – A |
| XIII – B. மின்சாரத் தீர்வைகள் | a. இந்திய மின்சார விதிகளின்படி ஆன கட்டணங்கள்; சினிமா யந்திர ஏற்பாடுகளைப் பார்வையிடுவதற்கான கட்டணங்கள் |
| | b. இதர வருவாய் |
| | c. கழிக்கவும்—திருப்பிக் கொடுத்த தொகைகள் |
| மொத்தம் — | XIII – B |

| துணைப்பெருந் தலைப்பு (Sub-Major Head) | சிறு தலைப்புகள் (Minor Heads) |
|---|---|
| XIII – C. புகையிலைத் தீர்வைகள் | a. புகையிலை விற்பனைக் கட்டணங்கள் |
| | b. லைசென்ஸ் (உரிமங்களுக்குரிய) கட்டணங்கள் |
| | c. பலவகை |
| | d. கழிக்கவும்—திருப்பிக் கொடுப்பவை |
| மொத்தம் — | XIII – C |
| XIII – D. இதர இனங்கள் | a. அதிகமாகக் கொடுத்த தொகைகளை வசூலித்தல் |
| | b. பரிசுப் போட்டி |
| | c. தமிழ்நாடு நகர நிலவரி |
| | d. கழிக்கவும்—திருப்பிக் கொடுப்பவை |
| மொத்தம் — | XIII – D |
| பெரு மொத்தம் — | XIII |

## செலவினங்கள்

### பெருந் தலைப்பு (Major Head)

### 19. பொது நிர்வாகம்

| துணைப்பெருந் தலைப்பு | சிறு தலைப்புகள் |
|---|---|
| 19 – A. மாநிலத் தலைவரும் அமைச்சர்களும் | a. மாநிலத் தலைவரின் சம்பளமும் படிகளும் |
| | b. மாநிலத் தலைவரின் அலுவலகப் பணியாளர் |
| | c. மாநிலத் தலைவரின் பணியாளரும் இல்லத் தொகுதியும் |
| | d. கேளிக்கை, உபசரிப்புச் செலவுகள் |
| | e. ஒப்பந்தப்படிச் செலவு. |
| | f. சுற்றுப்பயணச் செலவு |
| | g. மாநிலத் தலைவருக்கு உதவித்தொகை |
| | h. அமைச்சர்கள் |
| மொத்தம் — | 19 – A. |

* * * *

| துணைப்பெருந் தலைப்பு (Sub-Major Head) | சிறு தலைப்புகள் (Minor Heads) |
|---|---|
| 19 – C. செயலக அலுவலகங்களும் தொடர்பான அலுவலகங்களும் | **j.** சிவில் செயலகம் |
| | **k.** அரசாங்க அலுவலர் தேர்வுக் கழகம் (Madras Public Service Commission) |
| | **l.** ரெவின்யூ போர்டு, நிதிக் கமிஷனர் பணியாளர்கள் |
| | **m.** நாட்டாண்மை நிதித் தணிக்கைப் பணியாளர் (Examiner of Local Fund Accounts) |
| | ...... |
| | ...... |
| மொத்தம் — | 19 – C |

*  *  *  *

| | |
|---|---|
| 19 – E. மாவட்ட நிர்வாகம் | **o.** பொதுப் பணியாளர்கள் |
| | **p.** சப்-டிவிஷன் பணியாளர்கள் |
| | **q.** இதர பணியாளர்கள் |
| | **r.** முன்னாள் ஜமீன்தாரி நில உடைமைகள் சம்பந்தமான செலவு |
| | ...... |
| மொத்தம் — | 19 – E |

*  *  *  *

பெரு மொத்தம் — 19—பொது நிர்வாகம்

**சிறு தலைப்புகளின் உட்பிரிவுகளுக்கு உதாரணம் :—**

**19 – E. மாவட்ட நிர்வாகம்—o. பொதுப் பணியாளர்கள்**

**உட்பிரிவு** (Sub-Head)

A. கலெக்டர்களும் மாஜிஸ்திரேட்டுகளும்

B. அபிவிருத்திப் பணியாளர்கள்

.........

**நிதி ஒதுக்குச் சிறு கூறுகள்**

(மேற்கண்ட A. கலெக்டர்களும் மாஜிஸ்திரேட்டுகளும் என்ற உட்பிரிவின் கூறுகள்)

1. அதிகாரிகளின் சம்பளம்
2. பணியாளரின் சம்பளம்
3. படிகளும் கௌரவக் கொடைகளும்

.........

6. இதர அலுவலகச் செலவுகள்

சில சிறு கூறுகளுக்கு வேறு விவரணங்களும் கொடுக்கப்படும்.

உதாரணம் : 'படிகள்' என்னும் கூறுக்கு விவரணங்கள் :

1. கிராக்கிப்படி
2. பிரயாணப்படி
3. இதர படிகள்
4. மருத்துவச் செலவுகள்
5. சிறப்புப் படிகள்.

மேற்கண்ட உதாரணத்தில், நிதி ஒதுக்குச் சிறு கூறுகள் என்றும் அவைகளுக்கு விவரணங்கள் என்றும் காட்டப்பட்ட பிரிவுகள், ஒவ்வொரு பெருந் தலைப்பு, சிறு தலைப்புகள், இவைகளுக்குக் கீழ் அரசாங்கக் கணக்கிலும் பட்ஜெட்டிலும் திருப்பித் திருப்பி வரக் காணலாம். இதற்குக் காரணம், நிர்வாகத்தில், எல்லாத் துறைகளுக்கும் பொதுவான சம்பளம், படி போன்ற செலவு வகைகளைக் குறிக்கவே இவை பயன் படுவதுதான். எல்லாப் பெருந் தலைப்புகளின்கீழ்க் காட்டப் பட்டிருக்கும், சம்பளம், படி போன்ற பல தொகைகளைச் சேர்த்துக் கூட்டிப் பார்த்தால்தான், அரசாங்க அதிகாரிகள், பணியாளர்கள் என்ற முறையில் ஓர் அரசாங்கம் ஏற்கும் மொத்தச் செலவு புலனாகும். சில பட்ஜெட் வெளியீடுகளில், இத்தகைய மொத்தச் செலவைக் காட்டும் ஓர் அனுபந்தமும் சேர்க்கப்படுவதுண்டு.

சிறப்பியல்புகள் :—கணக்கு முறையில், சில பெரும் தலைப்பு களுக்குள் சேர்க்கப்படும் வருவாய் செலவினங்களைப்பற்றிய தனி அம்சங்கள் உண்டு. அவை பின்னர் விவரிக்கப்படும்.

## அத்தியாயம் - 5 - அனுபந்தம்
## பெருந் தலைப்புகள் பட்டியல்

பொதுக் குறிப்பு :—கீழே கண்ட தலைப்புகளிலிருந்து ஒவ்வோர் அரசாங்கமும் தனக்குத் தேவையானவைகளைமட்டும் அவ்வப்போது தன் கணக்கிலும் பட்ஜெட்டிலும் சேர்த்துக்கொள்ளும்.

## தொகு நிதியில் அடங்கும் வருவாய்-செலவு இனங்களுக்கு உரிய பெருந் தலைப்பு (1964ஆம் ஆண்டில் இருந்தபடி)

### (அ) ரெவின்யூ கணக்கு – வருவாய் – பெருந் தலைப்புகள்

### A. வரிகள், தீர்வைகள், வரி வருவாயின் இதர முக்கியத் தலைப்புகள்

I. சுங்க வருவாய்.
II. யூனியன் (மத்திய) ஆயத் தீர்வைகள்.
III. கார்ப்பொரேஷன் வரி.

IV. கார்ப்பொரேஷன் வரி நீங்கலாக இதர வருமான வரிகள்.
V. சொத்து வரி.
VI. செல்வ வரி.
VII. செலவு வரி.
VIII. கொடை வரி.
IX. நிலவரி.
X. மாநில ஆயத் தீர்வைகள்.
XI. வண்டி வரி.
XII. விற்பனை வரி.
XIII. இதர வரிகளும் தீர்வைகளும்.
XIV. முத்திரைத் தாள்கள்.
XV. பத்திரப் பதிவு (கட்டணங்கள்).

**B. கடனுக்குரிய வட்டி முதலிய வரவுகள்**

XVI. வட்டி.

**C. நிர்வாகப் பணிகள்**

XVII. நீதி நிர்வாகம்.
XVIII. சிறைச்சாலைகள்.
XIX. போலீஸ்
XX. வழங்கு - கழிப்புத்துறை (Supplies and Disposals).
XXI. பலவகைத் துறைகள்.

**D. சமூக அபிவிருத்திப் பணிகள்**

XXII. கல்வி.
XXIII. மருத்துவம்.
XXIV. பொதுச் சுகாதாரம்.
XXV. வேளாண்மை.
XXVI. கிராம அபிவிருத்தி.
XXVII. விலங்கின வளர்ப்பு.
XXVIII. கூட்டுறவு.
XXIX. தொழில்கள்.
XXX. ஒலிபரப்பு.
XXXI. சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள், தேசீய வளர்ச்சிப் பணித் திட்டம், ஸ்தல அபிவிருத்தி வேலைகள்.
XXXII. பலவகைச் சமூக அபிவிருத்தி ஸ்தாபனங்கள்.

**E. பலநோக்க, நதித் திட்டங்கள், பாசன, மின்சக்தித் திட்டங்கள்**

XXXIII. பலநோக்க நதித் திட்டங்கள்.
XXXIV. பாசன, கப்பற்கலை (நீர்வழிப் போக்கு வரத்து), கரை உயர்த்து, வடிகால் வேலைகள் (வாணிக சம்பந்த மானவை).

XXXV. பாசன, கப்பற்கலே (நீர்வழிப் போக்கு வரத்து), கரை உயர்த்து, வடிகால் வேலைகள் (வாணிக சம்பந்த மில்லாதவை).

XXXVI. மின்சக்தித் திட்டங்கள்.

**F. பொதுப் பணிகள் (சாலைகள் உட்பட) பல்வேறு பொது அபிவிருத்தித் திட்டங்கள்**

XXXVII. பொதுப் பணிகள்.

**G. போக்குவரத்து (சாலைகள் நீங்கலாக)**

XXXIX. துறைமுகங்களும் கட்டணங்களும்.

XL. வாணிகக் கப்பல் துறை.

XLI. கலங்கரை விளக்குகளும் அவைகளைச் சார்ந்த கப்பல்களும்

XLII. ஆகாய விமானத் துறை.

XLIII. மோட்டார் – நீர்வழிப் போக்குவரத்துத் திட்டங்கள்.

XLIV. கடல் கடந்த தொடர்புத் துறைகள்.

**H. செலாவணியும் நாணயச் சாலையும்**

XLV. செலாவணியும் நாணயமும்.

XLVI. நாணயச்சாலை.

A. கோலார் தங்கச் சுரங்கம்.

**I. பலவகை**

XLVIII. ஒய்வு உதவி (உபகார)த் தொகைகள், இதர பதவி ஓய்வுச் சலுகைகளுக்காக (அனுகூலங்களுக்காக) உதவித் தொகைகள், வசூல்கள்.

XLIX. எழுதுபொருள் – அச்சுத்துறை.

L. அபினி.

LI. காட்டுவளம்.

LII. பலவகை.

**J. உதவித் தொகைகளும் பல்வேறு சரிக்கட்டல்களும்**

LIII. ரெயில்வேயிலிருந்து பெறும் உதவித் தொகை.

LIV. தபால் – தந்தித் துறையில் இருந்து பெறும் உதவித் தொகை.

LV. மத்திய ஆயத் தீர்வைகளில் மாநிலப் பங்கு.

LVI. மத்திய அரசினர் (யூனியன்) உதவி மானியங்கள்.

LVII. மத்திய, மாநில, யூனியன் ஆட்சிப்பகுதி அரசாங்கங்களுக் கிடையே பலவகைச் சரிக்கட்டல்கள்.

LVIII. வாணிக (வர்த்தக), இதர, நிறுவனங்களிடமிருந்து பங்கு வீதங்கள் முதலியன.

LIX. இதர பலவகை ஈடுகளும் ஒதுக்கிவைப்புகளும்.

### K. சிறப்பினங்கள்

LX. சிறப்பு வருவாய்.
LXI. A. தேசீய நெருக்கடி சம்பந்தமான வருவாய்.

### L. நாட்டுக் காப்புத் துறை

LXII. காப்புத் துறை—போர்ப் பொறுப்புடையது.
LXIII. காப்புத் துறை—போர்ப் பொறுப்பில்லாதது.

### M. தபாலும் தந்தியும்

LXIX. தபாலும் தந்தியும்

**சேர்க்கவும்–ரெயில்வேக்கள் :**—ரெயில்வே கணக்கில் உள்ளபடி வருவாய். (ரெயில்வேத் தனித்தலைப்புகள் இங்குக் குறிக்கப்படவில்லை.)

குறிப்பு :—தலைப்புகளில் கொடுக்கப்பட்ட ரோமன் எண்களில் சில விடுபட்டு இருப்பதற்குக் காரணம், அவை முன்னர் கையாளப் பட்டு, பிறகு வழக்கொழிந்து போனமையே.

## (ஆ) ரெவின்யூ கணக்கு – செலவு – பெருந் தலைப்புகள்

### A. வரிகள், தீர்வைகள், இதர முக்கிய வருவாய்கள் வசூல்

1. சுங்க வருவாய்.
2. யூனியன் ஆயத் தீர்வைகள்.
3. கார்ப்பொரேஷன் வரி.
4. கார்ப்பொரேஷன் வரி நீங்கலாக இதர வருமான வரிகள்.
5. சொத்து வரி.
6. செல்வ வரி.
7. செலவு வரி.
8. கொடை வரி.
9. நிலவரி.
10. மாநில ஆயத் தீர்வைகள்.
11. வண்டி வரிகள்.
12. விற்பனை வரி.
13. இதர வரிகளும் தீர்வைகளும்.
14. முத்திரைத் தாள்.
15. பத்திரப் பதிவு.

### B. கடனுக்குரிய வட்டி முதலிய செலவுகள்

16. கடன்கள், இதர பொறுப்புகள்—இவைமீது வட்டி.
17. கடன் குறைப்பு அல்லது தவிர்ப்புத் தொகை ஒதுக்கம்.

### C. நிர்வாகப் பணிகள்

18. பாராளுமன்றமும் மாநில, யூனியன் ஆட்சிப்பகுதி சட்டப் பேரவைகளும்.
    (a) * * *
    (b) மாநில, யூனியன் ஆட்சிப்பகுதி சட்டப் பேரவைகள்
    (c) தேர்தல்கள்.
19. பொது நிர்வாகம்.
20. தணிக்கை.
21. நீதி நிர்வாகம்.
22. சிறைச்சாலைகள்.
23. போலீஸ்.
24. வெளிநாட்டுத் துறை.
25. வழங்கு – கழிப்புத்துறை.
26. பலவகைத் துறைகள்.

### D. சமூக, அபிவிருத்திப் பணிகள்

27. விஞ்ஞானத் துறைகள்.
28. கல்வி.
29. மருத்துவம்.
30. பொதுச் சுகாதாரம்.
31. வேளாண்மை – விவசாயம், மீன்வளம்.
32. கிராம அபிவிருத்தி.
33. விலங்கின வளர்ப்பு.
34. கூட்டுறவு.
35. தொழில்கள்.
36. ஒலிபரப்பு.
37. சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள் – தேசீய வளர்ச்சிப் பணித் திட்டங்கள், ஸ்தல அபிவிருத்தி வேலைகள்.
38. தொழிலாளரும் வேலை வாய்ப்பும்.
39. பலவகை – சமூக அபிவிருத்தி ஸ்தாபனங்கள் முதலியன.
40. தொழில் வளர்ச்சிக்கான மூலதனச் செலவு – ரெவின்யூ கணக்கிலிருந்து ஏற்றது.

### E. பலநோக்க நதித் திட்டங்கள், பாசன, மின்சாரத் திட்டங்கள்

42. பலநோக்க நதித் திட்டங்கள்.
43. பாசனம், கப்பற்கலை (நீர்வழிப் போக்குவரத்து), கரை உயர்த்து, வடிகால் வேலைகள் (வாணிக சம்பந்தமானவை).
44. பாசனம், கப்பற்கலை (நீர்வழிப் போக்குவரத்து), கரை உயர்த்து, வடிகால் வேலைகள் (வாணிக சம்பந்தமில்லாதவை.)
45. மின்சக்தித் திட்டங்கள்.

### F. பொதுப் பணிகள் (சாலைகள் உட்பட) பலவகைப் பொது அபிவிருத்தித் திட்டங்கள்

50. பொதுப் பணிகள்.

### G. போக்குவரத்து (சாலைகள் நீங்கலாக)

53. துறைமுகங்களும் கட்டணங்களும்.
54. வாணிகக் கப்பல் துறை.
55. கலங்கரை விளக்கங்களும், அவைகளைச் சார்ந்த கப்பல்களும்.
56. ஆகாய விமானத் துறை.
57. மோட்டார், நீர்வழிப் போக்குவரத்துத் திட்டங்கள்.
58. கடல் கடந்த தொடர்புத் துறைகள்.

### H. செலாவணியும் நாணயச் சாலையும்

62. செலாவணியும் நாணயமும்.
63. நாணயச் சாலை.
63 A. கோலார் தங்கச் சுரங்கம்.

### I. பலவகை

64. பஞ்ச நிவாரணம்.
65. ஓய்வு உதவித் (உபகார) தொகையும், இதர பதவி ஓய்வுச் சலுகைகளும் (அனுகூலங்களும்).
66. பிரதேச, அரசியல் காரண ஓய்வு உதவித் தொகைகள்.
67. இந்திய சமஸ்தான மன்னர்களுக்கு உபகாரத் தொகைகளும் (ஓய்வுச் சம்பளமும்) படிகளும்.
68. எழுதுபொருள்—அச்சுத்துறை.
69. அபினி.
70. காட்டுவளம்.
71. பலவகை.

## II. ரெவின்யூ கணக்கில் உள்ள பலவகை மூலதனக் கணக்கு

72. ஓய்வு உதவி (உபகார)த் தொகையை மொத்தத் தொகையாக மாற்றுதல்.

### J. உதவித் தொகைகளும் பலவகைச் சரிக்கட்டல்களும்

73. மத்திய ஆயத் தீர்வைகளில் மாநிலங்களின் பங்கைக் கொடுத்தல்.
74. மாநில, யூனியன் பிரதேச அரசாங்கங்களுக்குக் கொடுக்கும் உதவி மானியங்கள்.

75. மத்திய, மாநில, யூனியன் பிரதேச அரசாங்கங்களுக்கிடையே பலவகைச் சரிக்கட்டல்கள்.
76. இதர பலவகை ஈடுகளும் ஒதுக்கி வைப்புகளும்.

### K. சிறப்பினங்கள்

77. சிறப்புச் செலவுகள்.
78. நாட்டின் பிரிவினைக்கு முந்திய காலத்துக்குரிய செலவுகள்.
78A. தேசீய நெருக்கடி சம்பந்தமான செலவு.

### L. நாட்டுக் காப்புத்துறை

79. காப்புத்துறை — போர்ப் பொறுப்புடையது — தரைப்படை (இராணுவம்)
80. காப்புத்துறை—போர்ப் பொறுப்புடையது—கடற்படை.
81. காப்புத்துறை—போர்ப் பொறுப்புடையது—விமானப்படை.
82. காப்புத்துறை—போர்ப் பொறுப்பில்லாதது.

### M. தபாலும் தந்தியும்

90. தபாலும் தந்தியும்.

**நிர்வாகச் செலவுகள் :**—பொது நிதிக்கு மாற்றப்படும் தொகை தபால் – தந்தி.உபரித் தொகையிலிருந்து அபிவிருத்திச் செலவுக்காக எடுத்துக்கொண்ட பகுதி.

### ரெயில்வேக்கள்

**சேர்க்கவும் :**—ரெயில்வேக்கள்—தனி ரெயில்வே கணக்கில் உள்ள படி செலவு. (ரெயில்வே தலைப்புகள் இங்குக் குறிக்கப்படவில்லை.)

**குறிப்பு :**—வருவாய்த் தலைப்புகளைப் போல், செலவினத் தலைப்பு களில் இப்பொழுது வழக்கு ஒழிந்த தலைப்புகளும், அவைகளுக்குரிய எண்களும் விடுபட்டுள்ளன.

### (இ) ரெவின்யூ கணக்குக்குப் புறம்பாயுள்ள மூலதனக் கணக்கு. வருவாய்—பெருந் தலைப்புகள்

LXX. அமெரிக்க உதவி—குத்தகை – கடன்முறை உபரித் தொகைகள்.

### செலவினங்கள்—பெருந் தலைப்புகள்

92. ஜமீந்தாரி முறை ஒழிப்பினால் நிலக்கிழார் (சொந்தக்காரர்) முதலியோருக்கு நஷ்ட ஈடு கொடுத்தல்.
93. ஸெக்யூரிடி அச்சகத்துக்கான மூலதனச் செலவு.
94. பொதுச் சுகாதார அபிவிருத்திக்கான மூலதனச் செலவு.

95. வேளாண்மை வளர்ச்சிக்காகவும், ஆராய்ச்சிக்காகவும் உரிய திட்டங்களின் மூலதனச் செலவு.

95A. பயன் கொள்வோர் (Consumers) கூட்டுறவுச் சங்கங்களுக்கான மூலதனச் செலவு.

96. தொழில் வளர்ச்சிக்கான மூலதனச் செலவு.

97. ஒலிபரப்புக்கான மூலதனச் செலவு.

98. பலநோக்க நதித் திட்டங்களுக்கான மூலதனச் செலவு.

99. பாசன, கப்பற்கலை (நீர்வழிப் போக்குவரத்து), கரை உயர்த்து, வடிகால் (வாணிக சம்பந்தமான) வேலைகளுக்கான மூலதனச் செலவு.

100. பாசன, கப்பற்கலை (நீர்வழிப் போக்குவரத்து), கரை உயர்த்து, வடிகால் (வாணிக சம்பந்தமில்லாத) வேலைகளுக்கான மூலதனச் செலவு.

101. மின்சாரத் திட்டங்களுக்கான மூலதனச் செலவு.

......... .........

103. பொதுப் பணிகளின் மூலதனக் கணக்கு.

104. தில்லி (Delhi) மூலதனச் செலவு.

......... .........

108. தண்டகாரண்ய அபிவிருத்தித் திட்டங்களுக்கான மூலதனச் செலவு.

108A. காண்ட்லாவில் கட்டுப்பாடில்லாத வாணிக மண்டலத்துக்கான மூலதனச் செலவு.

109. இதர பணிகளின் மூலதனக் கணக்கு.

110. துறைமுகங்களுக்கான மூலதனச் செலவு.

111. கலங்கரை விளக்கத்துக்கும் அவைகளைச் சார்ந்த கப்பல்களுக்கும் ஆன மூலதனச் செலவு.

112. ஆகாய விமானத் துறைக்கான மூலதனச் செலவு.

......... .........

114. மோட்டார், நீர்வழிப் போக்குவரத்துத் திட்டங்களுக்கான மூலதனச் செலவு.

115. கடல் கடந்த தொடர்புத் துறையின் மூலதனச் செலவு.

116. கப்பல்கள், டாங்கர்கள் (Tankers) முதலியவைக்கான மூலதனச் செலவு.

117. செலாவணி நோட்டுகள், நாணயங்களுக்கான மூலதனச் செலவு.

118. நாணயச் சாலைகளுக்கான மூலதனச் செலவு.

118-A. கோலார் தங்கச் சுரங்கத்துக்கான மூலதனச் செலவு.

119. காட்டுவளத்திற்கான மூலதனச் செலவு.

120. ஓய்வு உபகார (உதவி)த் தொகையை மொத்தத் தொகையாக மாற்றிக்கொண்ட வகையில் செலவு.

121. ஸ்டெர்லிங்கு விகிதத்தில் கொடுக்கவேண்டிய ஓய்வு உபகார (உதவி)த் தொகைக்கான மூலதனச் செலவு.

......... .........

124. அரசாங்க வாணிகத் திட்டங்களுக்கான மூலதனச் செலவு.

125. எதிர்பாராச் செலவு நிதிக்கு நிதி ஒதுக்கம்.

126. மாநில அரசாங்கங்களுக்கும் யூனியன் பிரதேச அரசாங்கங்களுக்கும் அபிவிருத்திக்காக உதவும் வகையிலான மூலதனச் செலவு.

127. குடிபெயர்க்கப்பட்டவர்களுக்கு மறுவாழ்வு அமைக்கும் வகையில் கொடுக்கும் நஷ்ட ஈட்டுக்கும் மானியங்களுக்குமான மூலதனச் செலவு.

128. அமெரிக்க ஐக்கிய நாட்டு அரசாங்கம் (U.S.A.) அபிவிருத்திக்காக உதவிய தொகையில் மாற்றக் கணக்கு.

129. சிந்துநதி நீர் உபயோக உடன்படிக்கையின்படிக் கொடுக்கும் தொகைகள்.

130. நாட்டுக் காப்புக்கான மூலதனச் செலவு.

......... .........

134. தபால் தந்தித் துறையின் மூலதனச் செலவு.

**சேர்க்கவும் :**—ரெயில்வேக்களுக்கான மூலதனச் செலவு—ரெயில்வே கணக்கின்படி (இங்கு விவரம் குறிக்கப்படவில்லை).

## 6. வரவுசெலவுத் திட்டமும் சட்டசபைகளும்

எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு
கொள்ளாத கொள்ளாது உலகு.

செய்தக்க அல்ல செயக்கெடும், செய்தக்க
செய்யாமை யானும் கெடும்.

ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார். —(குறள்)

### நிதிநிலை அறிக்கைச் சமர்ப்பணம்

ஓர் அரசாங்கம் செய்யும் செலவுகள் அனைத்தும் அதற்குரிய சட்ட சபையின் திட்டமான அங்கீகாரத்தைப் பெற்றிருக்கவேண்டும் என்பது 'பார்லிமென்டரி' முறையின் தலையாய அம்சமாகும். அதாவது, பணம் சம்பந்தப்பட்டவரை, சட்டசபையின் விருப்பங்களை நிறை வேற்றும் ஓர் ஏஜென்டே அரசாங்கம் எனலாம். சட்டசபைகளின் கூட்டம் எல்லாச் சமயங்களிலும் நடந்துகொண்டிருப்பது என்பது சாத்தியமில்லை. சட்டசபை உறுப்பினர் ஒவ்வொருவரும் அன்றாடம் பல்வேறு துறைகளின் திட்டக் கணக்குகளில் ஏற்படக்கூடிய வரவு செலவை ஆராய்ந்துகொண்டிருப்பதும் நடைமுறையில் நடக்கக் கூடியது அன்று. நிர்வாகத்தினர் வரப்போகும் ஆண்டுக்கான நிதிநிலை அறிக்கையைத் தயாரித்து, சட்டசபையில் சமர்ப்பித்து, அதை விவாதத்துக்கு உரியதாக ஆக்கும்போதுதான், அங்கத்தினர் அரசாங்கச் செயல்களை ஓரளவுக்கு விரிவாக ஆய முடியும். இந்திய அரசியல் அமைப்பில், இதற்குரிய பிரிவுகள் வருமாறு :—

### மத்திய அரசாங்கம்

"112 (1) ராஷ்டிரபதி ஒவ்வொரு நிதி வருஷத்திற்கும் அவ் வருஷத்தில் இந்திய சர்க்காரின் உத்தேச வரவுகளையும் செலவுகளையும் பற்றிய விவரணம் ஒன்றைப் பார்லிமென்டின் இரு சபைகளின் முன்னிலையிலும் வைக்கும்படி செய்யவேண்டும் ; அது 'வருஷாந்தர நிதி விவரணம்' என்று இப் பாகத்தில் குறிப்பிடப்படும்."

“112 (2) வருஷாந்தர நிதி விவரணத்தில் அடங்கிய செலவுகளின் உத்தேச மதிப்புகள்

(அ) இந்தியாவின் சஞ்சித நிதியின் பேரில் சாட்டப்பட்ட செலவுகள் (Charged Expenditure) என்று இந்த அரசியல் அமைப்பில் விவரிக்கப்பட்ட செலவுகளைச் செய்வதற்கு வேண்டிய தொகைகளையும்,

(ஆ) இந்தியாவின் சஞ்சித நிதியிலிருந்து செய்யக் கருதிய மற்றைய செலவுகளைச் செய்வதற்கு வேண்டிய தொகைகளையும்,

தனித்தனியாகக் காட்டவேண்டும்; அன்றியும், வருமான (ரெவின்யூ)க் கணக்கிலிருந்து செய்யப்படும் செலவுகளை மற்றைய செலவுகளினின்றும் வேறுபடுத்திக் காட்டவேண்டும்.”

“113 (1) அந்த உத்தேச மதிப்புகளில், இந்தியாவின் சஞ்சித நிதியின்பேரில் சாட்டப்பட்ட செலவு சம்பந்தமாயுள்ள பகுதியை, பார்லிமென்டின் வோட்டுக்கு உட்படுத்தலாகாது; ஆனால், பார்லிமென்டுச் சபை எதிலும், அந்த உத்தேச மதிப்புகளில் எதைப்பற்றியும் சர்ச்சை செய்வதை இப் பகுதியில் உள்ளது எதுவும் தடுப்பதாக அர்த்த விளக்கம் செய்யலாகாது.

(2) மேற்சொன்ன உத்தேச மதிப்புகளில் மற்றைய செலவுகள் சம்பந்தமாயுள்ள பகுதி மக்கட் சபைக்கு கிரான்டுக் கோரிக்கை முறையில் சமர்ப்பிக்கப்படவேண்டும்; கோரிக்கை எதற்கும் சம்மதி அளிக்கவோ, அல்லது சம்மதி மறுக்கவோ, அல்லது கோரிக்கையில் குறித்த தொகையைக் குறைத்து அதற்குச் சம்மதி அளிக்கவோ, மக்கட் சபைக்கு சக்தி உண்டு.

(3) ராஷ்டிரபதியின் சிபாரிசின்பேரிலன்றி, கிரான்டுக் கோரிக்கை எதுவும் செய்யப்படலாகாது.”

## மாநில அரசாங்கங்கள்

“202 (1) இராச்சியபாலர் (கவர்னர்) ஒவ்வொரு நிதி வருஷத்திற்கும் அவ் வருஷத்தில் அந்த இராச்சியத்தின் (மாநிலத்தின்) உத்தேச வரவுகளையும் செலவுகளையும்பற்றிய விவரணம் ஒன்றை அந்த இராச்சியத்தின் (மாநிலத்தின்) சட்டசபை அல்லது சபைகளின் முன்னிலையில் வைக்கும்படி செய்யவேண்டும்; அது ‘வருஷாந்தர (ஆண்டு) நிதி (நிலை) விவரணம்’ என்று இப் பாகத்தில் குறிப்பிடப்படும்.”

“202 (2) வருஷாந்தர (ஆண்டு) நிதி (நிலை) விவரணத்தில் அடங்கிய செலவுகளின் உத்தேச மதிப்புகள்

(அ) அந்த இராச்சியத்தின் (மாநிலச்) சஞ்சித நிதியின் (தொகு நிதியின்)பேரில் சாட்டப்பட்ட செலவுகள் (Charged Expenditure) என்று இந்த அரசியலமைப்பில் விவரிக்கப் பட்ட செலவுகளைச் செய்வதற்கு வேண்டிய தொகைகளையும்,

(ஆ) அந்த இராச்சியத்தின் (மாநிலச்) சஞ்சித நிதியிலிருந்து (தொகு நிதியிலிருந்து) செய்யக் கருதிய மற்றைய செலவு களைச் செய்வதற்கு வேண்டிய தொகைகளையும், தனித்தனி யாகக் காட்டவேண்டும்; அன்றியும், வருமான (ரெவின்யூ)க் கணக்கிலிருந்து செய்யப்படும் செலவுகளை மற்றைய செலவு களினின்றும் வேறுபடுத்திக் காட்டவேண்டும்."

"203 (1) அந்த உத்தேச மதிப்புகளில் இராச்சியத்தின் (மாநிலத் தின்) சஞ்சித நிதியின் (தொகு நிதியின்)பேரில் சாட்டப்பட்ட செலவு சம்பந்தமாயுள்ள பகுதியைச் சட்டசபையின் வோட்டுக்கு உட்படுத்த லாகாது. ஆனால், சட்டசபையில் அந்த உத்தேச மதிப்புகளில் எதைப்பற்றியும் சர்ச்சை செய்வதை இப் பகுதியில் உள்ளது எதுவும் தடுப்பதாக அர்த்த விளக்கம் செய்யலாகாது.

(2) மேற்சொன்ன உத்தேச மதிப்புக்களில் மற்றைய செலவுகள் சம்பந்தமாயுள்ள பகுதி சட்டசபைக்கு கிரான்டுக் கோரிக்கை (மானியக் கோரிக்கை) முறையில் சமர்ப்பிக்கப்படவேண்டும்; கோரிக்கை எதற்கும் சம்மதி அளிக்கவோ, அல்லது சம்மதி மறுக்கவோ, அல்லது கோரிக்கை யில் குறித்த தொகையைக் குறைத்து அதற்குச் சம்மதி அளிக்கவோ சட்டசபைக்குச் சக்தி உண்டு.

(3) இராச்சியபாலரின் (கவர்னரின்) சிபாரிசின்பேரிலன்றி, கிரான்டுக் கோரிக்கை (மானியக் கோரிக்கை) எதுவும் செய்யப்பட லாகாது."

குறிப்பு:—இந்திய அரசியலமைப்பில், எந்த இடத்திலும், 'பட்ஜெட்' என்ற சொல் உபயோகிக்கப்படவில்லை. முன்பு, பிரிட்டிஷ் நிதி அமைச்சர் அந்தந்த ஆண்டுக்கான நிதிநிலை அறிக்கைகளை ஒரு தோல் பெட்டியில் வைத்து எடுத்துக்கொண்டு 'காமன்ஸ்' சபைக்குப் போவார். அந்த தோல் பெட்டிக்குத்தான் 'பட்ஜெட்' என்று பெயர். நாளடைவில், அந்தப் பெட்டியின் பெயர், அதன் உள்ளே இருந்த பத்திரங்களுக்கு ஆகிவிட்டது; உலகெங்கும் இச் சொல்லே இப்போது பழக்கத்தில் வந்துவிட்டது. இந்திய அரசியலமைப்பில், மேற்கண்டபடி 'வருடாந்தர நிதி விவரணம்' (ஆண்டு நிதிநிலை விவரணம்) என்ற சொற்களே பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

அரசாங்கக் கணக்கு முறை, முன்னர் விவரிக்கப்பட்டது. அதற்கு இணங்க, ஆண்டு நிதிநிலை விவரணத்தில், எதிர்பார்க்கப்படும் எல்லா

வரவினங்களும் செலவினங்களும் முக்கியத் தலைப்புகளின்கீழ்க் குறிக்கப்பட்டிருக்கும். முதலில் கூறியபடி, இந்த விவரணம் அதற்குரிய சட்ட சபைகளில் பிப்ரவரி மாதம் நடுவிலிருந்து மார்ச்சு முதல் வாரத்திற்குள் வழக்கமாக சமர்ப்பிக்கப்பட்டு விவாதிக்கப்படும். மத்திய அரசாங்கத்தினுடையதோ அல்லது ஒரு மாநில அரசாங்கத்தினுடையதோ ஆன ஆண்டு வருமானங்களை அறுதியிடுவதில், வரவுசெலவுத் திட்ட விவாதத்தின்போது சட்டசபையின் பங்கு அதிகமில்லை. சட்டசபை அவ்வப்போது இயற்றிய பல்வேறு நிதிச் சட்டங்கள் மூலமாக வருமானங்கள் வருகின்றன. குறிப்பிட்ட ஆண்டுக்கான அதிகாரம் எதுவுமின்றி அந்தச் சட்டங்கள், வரி வசூலிப்புக்கு வசதியாக, அமலில் இருந்தபடி உள்ளன. வரவுசெலவுத் திட்டத்தில் புதிய வரிவிதிப்பு ஏற்பாடுகள் ஏதாவது கொண்டுவரப்படுமானால், தனி நிதி மசோதா ஒன்று கொண்டு வந்தாகவேண்டும். அத்தகைய மசோதாமீது தொடரப்படும் விவாதங்கள் வரவுசெலவுத் திட்ட நடவடிக்கைகளினின்று தனித்தும் இருக்கலாம். ஆனால், ஒவ்வொரு செலவினமும் சட்டசபையால் குறிப்பாக அனுமதிக்கப்பட்டாகவேண்டும். இதற்காகவே மானியக் கோரிக்கைகள் என்ற முறை இந்திய அரசியல் அமைப்பில் வகுக்கப்பட்டுள்ளது.

### சாட்டப்பட்ட செலவுகள்

சில செலவினங்களைச் 'சாட்டப்பட்ட செலவுகள்,' என ஒதுக்கி, 'அவைகளுக்குச் சட்டசபைகளின் அனுமதிபெறவேண்டுவதில்லை; ஆனால், அவைகளைப்பற்றி அங்கத்தினர் சர்ச்சை செய்யலாம்' என்று அரசியல் அமைப்பில் இருப்பதை மேலே கண்டோம். இத்தகைய செலவுகள் யாவை என்பதை அரசியல் அமைப்புப் பின்வருமாறு விளக்குகிறது:

| மத்திய அரசாங்கம் | மாநில அரசாங்கம் |
|---|---|
| **பிரிவு 112 (3)** | **பிரிவு 202 (3)** |
| கீழ்க்கண்ட செலவுகள் இந்தியாவின் சஞ்சித நிதியின்பேரில் சாட்டப்பட்ட செலவுகள் ஆகும்:— | கீழ்க்கண்ட செலவுகள் ஒவ்வோர் இராச்சியத்தின் (மாநிலத்தின்) சஞ்சித நிதியின் (தொகு நிதியின்) பேரிலும் சாட்டப்பட்ட செலவுகளாகும்:— |
| (அ) ராஷ்டிரபதியின் ஊதியங்களும், படிகளும், அவருடைய பதவி சம்பந்தமான மற்றைய செலவுகளும்; | (அ) இராச்சியபாலரின் (கவர்னரின்) ஊதியங்களும், படிகளும், அவருடைய பதவி சம்பந்தமான மற்றைய செலவுகளும்; |

| மத்திய அரசாங்கம் | மாநில அரசாங்கம் |
|---|---|
| **பிரிவு 112 (3)** | **பிரிவு 202 (3)** |
| (ஆ) இராச்சிய பரிஷத்தின் (Council of States) தலைவர், துணைத் தலைவர், மக்கட் சபையின் சபாநாயகர், துணைச் சபாநாயகர் இவர்களின் சம்பளங்களும் படிகளும் ; | (ஆ) சட்டசபையின் சபாநாயகர், துணைச் சபாநாயகர், சட்டப் பரிஷத்து (Legislative Council–(மேல்சபை) உள்ள இராச்சியத்தின் (மாநிலத்தின்) விஷயத்தில் சட்டப் பரிஷத்தின் (மேல் சபையின்) தலைவர், துணைத் தலைவர் இவர்களின் சம்பளங்களும் படிகளும் ; |
| (இ) வட்டியும், நிக்ஷேப நிதிச் செலவுகளும், விமோசனச் செலவுகளும் உட்பட, இந்திய சர்க்கார் பொறுப்பாளியாக உள்ள கடன் செலவுகளும், கடனுகைப் பணங்கள் திரட்டல், கடனுக்குப் பணம் செலுத்துதல், கடன் விமோசனம் இவற்றைப்பற்றிய மற்றைய செலவுகளும் ; | (இ) வட்டியும் நிக்ஷேப (கடன் கரைப்பு) நிதிச் செலவுகளும், விமோசன (கடன் அடைத்தல்) செலவுகளும் உட்பட, அந்த இராச்சியம் (மாநிலம்) பொறுப்பாளியாக உள்ள கடன் செலவுகளும், கடனுகைப் பணங்கள் திரட்டல், கடனுக்குப் பணம் செலுத்துதல், கடன் விமோசனம் (கடன் அடைத்தல்) இவற்றைப் பற்றிய மற்றைய செலவுகளும் ; |
| (ஈ) (i) உச்ச நீதிமன்றத்தின் நீதிபதிகளுக்கோ அவர்களின் பொருட்டோ கொடுக்கவேண்டிய சம்பளங்களும், படிகளும், பென்ஷன்களும் ;<br>(ii) ஃபெடரல் நீதிமன்றத்தின் நீதிபதிகளுக்கோ அவர்களின் பொருட்டோ கொடுக்கவேண்டிய பென்ஷன்கள் ; | (ஈ) உயர்நீதிமன்றத்து நீதிபதிகளின் சம்பளங்கள், படிகள், இவைபற்றிய செலவு ; |

மத்திய அரசாங்கம்

பிரிவு 112 (3)

(iii) இந்தியாவின் ஆட்சிப் பரப்பிற்குள் அடங்கிய எந்தப் பிரதேசம் சம்பந்தமாகவேனும் அதிகாரம் செலுத்தும் (அல்லது இந்திய டொமினியனின் ஒரு இராச்சியபாலர் (கவர்னர்) மாகாணத்தில் அடங்கிய எந்தப் பிரதேசம் சம்பந்தமாகவேனும், இந்த அரசியல் அமைப்பின் தொடக்கத்திற்கு முன் எப்போதாகிலும் அதிகாரம் செலுத்திய) ஓர் உயர்நீதி மன்றத்தின் நீதிபதிகளுக்காவது, அவர்கள் பொருட்டாவது கொடுக்க வேண்டிய பென்ஷன்கள் ;

(உ) இந்தியாவின் மாபெரும் கணக்கர்-பரிசோதகருக்காவது, அவர் பொருட்டாவது, கொடுக்கவேண்டிய சம்பளங்களும், படிகளும், உதவிச் சம்பளமும் ;

(ஊ) ஒரு நீதிமன்றத்தின் அல்லது மத்தியஸ்த மன்றத்தின் தீர்ப்பு அல்லது டிக்கிரி அல்லது தீர்மானத்தின்படி செலுத்துவதற்கு வேண்டிய தொகைகள் ;

(எ) இந்த அரசியல் அமைப்பினுல், அல்லது பார்லிமென்டால் இயற்றப்பட்ட சட்டத்தினுல், அப்படிச் சாட்டப்பட்டது என்று அறிவிக்கப்பட்ட மற்றைய செலவுகள்.

மாநில அரசாங்கம்

பிரிவு 202 (3)

(உ) ஒரு நீதிமன்றத்தின் அல்லது மத்தியஸ்த மன்றத்தின் தீர்ப்பு அல்லது டிக்கிரி அல்லது தீர்மானத்தின்படி செலுத்துவதற்கு வேண்டும் தொகைகள் ;

(ஊ) இந்த அரசியல் அமைப்பினுல், அல்லது இராச்சிய (மாநில) சட்டசபையால் இயற்றப்பட்ட சட்டத்தினுல், அப்படிச்சாட்டப்பட்டது என்று அறிவிக்கப்பட்ட மற்றைய செலவுகள்.

மேற்கண்ட பிரிவுகளன்றி, வேறு பிரிவுகளில், அரசியல் அமைப்பில் சாட்டப்பட்ட செலவு என்று அறிவிக்கப்பட்டு இருப்பதற்கு உதாரணங்கள் கீழே காட்டப்படுகின்றன :—

229 (3). ஓர் உயர்நீதிமன்றத்தின் உத்தியோகஸ்தர்களுக்கோ சேவையாளர்களுக்கோ அல்லது அவர்களின் பொருட்டோ கொடுக்க வேண்டிய சகல சம்பளங்களும், படிகளும், பென்ஷன்களும் உட்பட, அந் நீதிமன்றத்தின் நிர்வாகச் செலவுகள் இராச்சியத்தின் சஞ்சித நிதியின் (தொகு நிதியின்) பேரில் சாட்டப்படவேண்டும்; மேலும், அம் மன்றம் பெற்றுக்கொள்ளும் கட்டணங்களும் வேறு பணங்களும் அந் நிதியில் ஒரு பாகமாகச் சேரும்.

322. யூனியனின் அல்லது ஓர் இராச்சிய (மாநில) பப்ளிக் செர்விஸ் கமிஷனின் அங்கத்தினர்களுக்கோ அல்லது அக் கமிஷனின் சிப்பந்திக்கோ அவர்கள் சம்பந்தமாகவோ கொடுக்கப்படவேண்டிய சம்பளங்கள், படிகள், உதவிச் சம்பளங்கள் உட்பட அக் கமிஷனுக்கு ஆகும் செலவுகள், சந்தர்ப்பத்திற்கு ஏற்ப, இந்தியாவின் சஞ்சித நிதியின் (தொகு நிதியின்)பேரில் அல்லது அந்த இராச்சியத்தின் (மாநிலத்தின்) சஞ்சித நிதியின் (தொகு நிதியின்)பேரில் சாட்டப்பட வேண்டும்.

அரசியல் அமைப்பில் தனியே குறிப்பிடப்படாத சில செலவினங்களும் சாட்டப்பட்ட செலவாகக் கருதப்படவேண்டுமென்று தனி மசோதாக்கள்மூலம் நிர்ணயிக்கப்பட்டு உள்ளது. உதாரணமாக, தமிழ்நாட்டு அரசாங்கத்தில் 1950ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட ஒரு மசோதாவின்படி, பின்கண்ட செலவினங்கள் சாட்டப்பட்ட செலவுகள் ஆகும் :—

(அ) பஞ்ச நிவாரண நிதிக்கு ஒதுக்கப்படும் தொகை.

(ஆ) மோட்டார் வண்டி வரிகள் மூலம் கிடைக்கும் நிகர வருவாயில் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு நஷ்ட ஈடாக வழங்க வேண்டிய தொகை.

இப்படிச் சாட்டப்பட்ட செலவு இனங்களின் குறிப்புகள் எல்லாவற்றையும் (வகை, தலைப்பு, தொகை முதலியவை) காட்ட முக்கியமான பட்ஜெட் வெளியீடுகளில் பெரும்பாலும் சாய்ந்த எழுத்துகளும் எண்களும் (Italics) உபயோகப்படுத்தப்படும்.

## பட்ஜெட் வெளியீடுகள்

**முக்கிய வெளியீடுகள்**

இந்திய அரசியல் அமைப்பின்படிச் சமர்ப்பிக்கப்படவேண்டிய 'ஆண்டு நிதிநிலை விவரணம் (பட்ஜெட்' என்பது, உண்மையில்

சுமார் 30 பக்கங்கள் கொண்ட ஒரு சிறு பத்திரமேயாகும். அதில் பின்வரும் விவரங்கள் (அறிக்கைகள்) இருக்கும் :—

I. அரசாங்கத்தின் ரெவின்யூ கணக்கில் வரவு-செலவின் பொது அறிக்கை.

II. அரசாங்கத்தின் எல்லா வரவினங்கள்-செலவினங்கள் (பற்று வரவு)—இவைபற்றிய பொது அறிக்கை.

இந்த இரண்டு முக்கிய அறிக்கைகளுக்கு விவரம் தரும் வகையில் மூன்று அல்லது நான்கு வேறு அறிக்கைகளும் இணைக்கப் பட்டிருக்கும் :—

(A) அரசாங்கத்தின் வருவாய் அறிக்கை.

(B) அரசாங்கத்தின் ரெவின்யூ கணக்கைச் சார்ந்த செலவின அறிக்கை.

(C) அரசாங்கத்தின் மூலதனச் செலவுகள்.

(D) அரசாங்கத்தின் மற்றெல்லாக் கணக்குகளின் பற்று வரவுகள்.

குறிப்பு :—(A) என்ற அரசாங்க வருவாய் அறிக்கைக்கு மேலும் விவரம் காட்ட ஒரு தனி வெளியீடும் உண்டு. இதுபோல (B) என்ற பல கணக்குகளின் வரவு செலவினங்களின் முழுவிவரம் தரும் ஒரு தனி வெளியீடும் இருக்கும். மத்திய அரசாங்க அறிக்கைகளில் மேலே கூறப்பட்ட (C), (D) என்னும் கடைசி இரண்டு அறிக்கைகளும் ஒரே அறிக்கையாகச் சேர்ந்து இருக்கும்.

மேலே குறிப்பிட்ட அரசாங்க பட்ஜெட்டோடு, ஒவ்வொரு சட்ட சபையும் அரசாங்கச் செலவினங்களை விவாதித்து, மானியம் அனுமதிப் பதற்கு வசதியாக மானியக் கோரிக்கைகளை எல்லாம் சேர்த்து, அவை ஒரு தனி வெளியீடாக சமர்ப்பிக்கப்படும். இந்த வெளியீடு மிகவும் பெரிதாக இருக்கும். ஆதலால், அதன் அளவைச் சற்றுக் குறைக்க வேண்டி, சில கோரிக்கைகளைச் சுருக்கமாக இந்த வெளியீட்டில் சேர்த்து விட்டு, மற்ற விவரங்களைத் தனி அனுபந்தங்களாக வெளியிடுவதும் உண்டு. உதாரணமாக, தமிழ்நாட்டு அரசாங்கம் பின்கண்ட கோரிக்கைகளின் விவரங்களைத் தனியாகக் கொடுக்கிறது :—

(i) பாசனப் பணிகள்

(ii) பொதுப் பணி

(iii) தொழில்கள்

(iv) வேளாண்மை-விவசாயம், மீன்வளம், விலங்கின வளர்ப்பு, காட்டுவளம்.

(இந்தத் தனி வெளியீடுகளில், குறிப்பிட்ட துறை சம்பந்தமான எல்லா விவரணங்களும் அடங்கியிருக்கும்).

வேறு அனுபந்தங்களும் (உடன் சேர்க்கைகளும்) இருக்கலாம். உதாரணமாக, தமிழ்நாட்டில் வரும் இத்தகைய வெளியீடுகள் பின் வருமாறு :—

(1) அரசாங்க அதிகாரிகள், பணியாளர்கள்—இவர்களின் வகையும் எண்ணிக்கையும், ஊதியப் பட்டியலும்.

(2) அரசாங்க வாணிகத் திட்டங்களின் நிலை விவரம்.

(3) நடைமுறை ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ், சென்ற ஆண்டுகளின் சாதனைகளும் வருகிற பட்ஜெட் ஆண்டுத் திட்ட வேலையும்.

(4) பட்ஜெட் ஆண்டின் வேலைத் திட்ட விவரம்.

**துணை வெளியிடுகள்**

சட்டசபை அங்கத்தினர்களும் பொதுமக்களும் மேற்கண்ட முக்கிய வெளியீடுகளை நன்கு ஆராய்வதற்கும், அரசாங்கத்தின் எல்லாத் துறைகளின் நிலையைத் தெரிந்துகொள்வதற்கும் உதவும்படி பல துணை வெளியீடுகளும் வழங்கப்படும். மத்திய அரசாங்கம் ஒவ்வோர் ஆண்டிலும் சமர்ப்பிக்கும் பட்ஜெட்டுடனே அல்லது அதற்குச் சில நாள் முன்னரோ, அரசாங்கத்தின் நடைமுறை ஆண்டின் பொருளாதார நிலையைப் பரிசீலனை செய்து, அதன் முடிவுகளைத் தெளிவாக்கும் வகையில் ஒரு வெளியீட்டை (Economic Survey) வழங்குவதும் சமீபகால முறை. இதுபோல, பட்ஜெட்டில் ஒவ்வொரு துறையாகப் பகுத்துக் கொடுக்கப்பட்டுள்ள விவரங்களைச் சேர்த்து, அவைகளைப் பொருளாதாரக் கண்ணோட்டத்தோடு ஆய்ந்து, நிலையைக் காட்டும் ஒரு துணை நூலும் (Economic Classification of the Budget) வெளியிடப் படுவதுண்டு. எல்லா விஷயங்களையும் ஒருசேரவும், தனித்தனி வருவாய் செலவினங்களின் தலைப்புகளின் கீழும், மானியக் கோரிக்கையின் வகையையும் நன்கு விளக்கி, மற்றும் அரசாங்க சம்பந்தமாகப் பொது மக்களுக்கு அக்கறை இருக்கக்கூடிய, பல்வேறு விவரங்களையும் காட்டும் வகையில், ஒரு தனிக்குறிப்பும் ஒவ்வோர் அரசாங்க நிதித்துறையால் பட்ஜெட்டோடு வழங்கப்படும். இந்த நிதிநிலைக் குறிப்பு (Explanatory Memorandum on the Budget or Budget Memorandum) மிகவும் உபயோகமான வெளியீடாகும்.

**புள்ளிகள் வகை**

சாதாரணமாக, கணக்கு விவரம் அடங்கிய எல்லா அறிக்கைகளிலும் (வெளியீடுகளிலும்) கீழ்க்கண்டவாறு, நான்கு வகைப் புள்ளிகள் தரப்படுவது வழக்கம் :—

(1) முந்தின ஆண்டின் கணக்குகள், (2) சட்டசபையில் சமர்ப் பிக்கப்பட்டபடி நடைமுறை ஆண்டு வரவுசெலவுத் திட்ட மதிப்பீடுகள், (3) நடைமுறை ஆண்டுக்குத் திருத்தப்பட்ட மதிப்பீடு, (4) வரும் ஆண்டுக்குத் திட்ட மதிப்பீடு.

திட்ட மதிப்பீடு ஆண்டுக்கு முந்திய ஆண்டின் புள்ளி விவரங்கள் ஒப்பிட்டுப் பார்ப்பதற்காகமட்டும் தரப்படுகின்றன. முந்திய ஆண்டு களின் புள்ளி விவரங்களைக் குறித்து விவாதமோ, வாக்கெடுப்போ நடப்பதில்லை. நடைமுறை ஆண்டின் கொடுக்கல் வாங்கல், அசல் திட்ட மதிப்பீட்டில் இருந்ததைவிட எந்த அளவுக்கு மாறியுள்ளது என்பதை நடைமுறை ஆண்டின் திருத்தப்பட்ட மதிப்பீடு காட்டுகிறது. திருத்தப்பட்ட மதிப்பீடு, நடைமுறை ஆண்டில் தெளிவாகிய வருமானப் போக்கையும், செலவின் போக்கையும் கவனித்துத் தயாரிக்கப்படும். எனவே, இது அசல் திட்ட மதிப்பீட்டைவிட உண்மை நிலைக்கு அதிகம் பொருந்தும். திட்ட மதிப்பீட்டுக்கும், திருத்தப்பட்ட மதிப்பீட்டுக்கும் இடையே உள்ள வித்தியாசம், துணைமானியக் கோரிக்கைகள்மூலம் சரிக் கட்டப்படும். திட்ட மதிப்பீட்டின்மீது பொது விவாதம் முடிந்த பின்னர் துணைமானியக் கோரிக்கைகள்மீது விவாதமும் வாக்கெடுப்பும் தனியாக நடைபெறும். துணைமானியக் கோரிக்கைகளின் முறை இந் நூலில் பின்னர் விளக்கப்படுகின்றது.

**வெளியீடுகளின் இயல்பு :**—இதை இப்பொழுது உதாரணங்களுடன் ஆய்வோம்.

## அரசாங்கத்தின் வரவினங்கள், செலவினங்கள்பற்றிய பொது அறிக்கை

இந்த அறிக்கை கீழ்க்கண்டவாறு இருக்கும் :—

### தமிழ்நாடு

**அறிக்கை I—ரெவின்யூ கணக்கைச் சார்ந்த வரவு இனங்களும் செலவு இனங்களும்**

| வரவினங்கள் (1) | விவரத்துக்குக் கீழ்க்கண்ட அறிக்கையைப் பார்க்கவும் (2) | 1962–63 கணக்குகள் (3) | 1963–64 திட்ட மதிப்பீடு (4) | 1963–64 திருத்த மதிப்பீடு (5) | 1964–65 திட்ட மதிப்பீடு (6) |
|---|---|---|---|---|---|
| **I. தமிழ்நாட்டின் தொகு நிதி வருவாய்** | | (ரூபாய் ஆயிரக் கணக்கில்) | | | |
| A. வரிகள், தீர்வைகள், வரி வருவாயின் இதர முக்கியத் தலைப்புகள். | A | ... | ... | ... | 72,38,38 |
| B. கடனுக்குரிய வட்டி முதலிய வரவுகள் ... ... ... | A | ... | ... | ... | 13,78,75 |
| C. நிர்வாகப் பணிகள் ... ... | A | ... | ... | ... | 2,03,57 |
| ......... | ... | ... | ... | ... | ... |
| ......... | ... | ... | ... | ... | ... |
| K. சிறப்பினங்கள் ... ... | A | ... | ... | ... | 72 |
| மொத்தம்–வருவாய் ... | | ... | ... | ... | 138,47,57 |
| வருவாய்க்கு மேற்பட்ட செலவு அல்லது பற்றுக் குறை ... | A | ... | ... | ... | 2,34,09 |
| **பெரு மொத்தம்** ... | | ... | ... | ... | **140,81,66** |

| செலவினங்கள் (1) | விவரத்துக்குக் கீழ்க்கண்ட அறிக்கையைப் பார்க்கவும் (2) | 1962–63 கணக்குகள் (3) | 1963–64 திட்ட மதிப்பீடு (4) | 1963–64 திருத்த மதிப்பீடு (6) | 1964–65 திட்ட மதிப்பீடு (6) |
|---|---|---|---|---|---|
| | | (ரூபாய் ஆயிரக் கணக்கில்) | | | |
| I. தமிழ்நாட்டின் தொகு நிதி (ரெவின்யூ கணக்கில் செலவு) | | | | | |
| A. வரிகள், தீர்வைகள், மற்ற முக்கிய வருவாய்கள் வசூல் ... | B | ... | ... | ... | 2,53,04 |
| B. கடனுக்குரிய வட்டி முதலிய செலவுகள் ... ... | B | ... | ... | ... | 14,61,19 |
| C. நிர்வாகப் பணிகள் ... | B | ... | ... | ... | 18,57,41 |
| ......... | ... | ... | ... | ... | ... |
| ......... | ... | ... | ... | ... | ... |
| K. சிறப்பு இனங்கள் ... ... | B | ... | ... | ... | 11,30 |
| மொத்தம்—ரெவின்யூ கணக்கில் செலவு ... | | ... | ... | ... | 140,81,66 |
| செலவுக்கு அதிகமாயுள்ள வருவாய் அல்லது உபரித்தொகை... | B | ... | ... | ... | ... |
| பெரு மொத்தம் ... | | ... | ... | ... | 140,81,66 |

## அறிக்கை II—இதர கணக்குகளில் வருவாய் இனங்களும் செலவு இனங்களும் (பற்றும் வரவும்)

### வரவு

| வரவினங்கள் (1) | விவரத்துக்குக் கீழ்க்கண்ட அறிக்கையைப் பார்க்கவும் (2) | 1962–63 கணக்குகள் (3) | 1963–64 திட்ட மதிப்பீடு (4) | 1963–64 திருத்த மதிப்பீடு (5) | 1964–65 திட்ட மதிப்பீடு (6) |
|---|---|---|---|---|---|
| | | (ரூபாய் ஆயிரக் கணக்கில்) | | | |
| I. தமிழ்நாட்டின் தொகு நிதி——தொடர்ச்சி (வருவாய்) | | | | | |
| செலவுக்கு அதிகமாயுள்ள வருவாய் அல்லது உபரித்தொகை ... | | ... | ... | ... | ... |
| O. பொதுக் கடன் ... | D | ... | ... | ... | 103,66,00 |
| Q. மாநில அரசினர் வசூலிக்கும் கடன்கள், முன்பணங்கள் (வசூல்கள்) ... ... | D | ... | ... | ... | 8,98,69 |
| R. மாநிலங்களுக்கிடையே ஏற்பாடுகள் ... ... | D | ... | ... | ... | 2,57,20 |
| மொத்தம்–I. தமிழ்நாட்டின் தொகு நிதி ... ... | | ... | ... | ... | 115,21,89 |
| II. தமிழ்நாட்டின் எதிர்பாராச் செலவு நிதி ... ... | D | ... | ... | ... | ... |
| III. பொதுக் கணக்கு ... | D | ... | ... | ... | 271,51,23 |
| மொத்தம்–வரவுகள் ... | | ... | ... | ... | 386,73,12 |
| ஆரம்ப ரொக்கக் கையிருப்பு ... | | ... | ... | ... | 40,25 |
| பெரு மொத்தம் ... | | ... | ... | ... | 387,13,37 |

அறிக்கை II—தொடர்ச்சி

செலவு (பற்று)

| செலவினங்கள் (1) | விவரத்துக்குக் கீழ்க்கண்ட அறிக்கையைப் பார்க்கவும். (2) | 1962–63 கணக்குகள் (3) | 1963–64 திட்ட மதிப்பீடு (4) | 1963–64 திருத்த மதிப்பீடு (5) | 1964–65 திட்ட மதிப்பீடு (6) |
|---|---|---|---|---|---|
| | | (ரூபாய் ஆயிரக் கணக்கில்) | | | |
| **I. தமிழ்நாட்டின் தொகு நிதி——தொடர்ச்சி** | | | | | |
| **(ரெவின்யூ கணக்கில் செலவு)** | | | | | |
| வருவாய்க்கு மேற்பட்ட செலவு அல்லது பற்ருக்குறை ... | I | ... | ... | ... | 2,34,09 |
| ரெவின்யூ கணக்குக்குப் புறம்பாயுள்ள மூலதனச் செலவு ... | C | ... | ... | ... | 24,04,09 |
| O. பொதுக் கடன் ... ... | D | ... | ... | ... | 63,97,00 |
| Q. மாநில அரசினர் வழங்கிய கடன்கள், முன்பணங்கள் ... | D | ... | ... | ... | 28,80,56 |
| R. மாநிலங்களுக்கிடையே ஏற்பாடுகள் ... ... | D | ... | ... | ... | ... |
| மொத்தம்–I. தமிழ்நாட்டின் தொகு நிதி ... ... ... | | ... | ... | ... | 119,15,74 |

| செலவினங்கள் (1) | விவரத்துக்குக் கீழ்க்கண்ட அறிக்கையைப் பார்க்கவும். (2) | 1962–63 கணக்குகள் (3) | 1963–64 திட்ட மதிப்பீடு (4) | 1963–64 திருத்த மதிப்பீடு (5) | 1964–65 திட்ட மதிப்பீடு (6) |
|---|---|---|---|---|---|
| | | (ரூபாய் ஆயிரக் கணக்கில்) | | | |
| II. தமிழ்நாட்டின் எதிர்பாராச் செலவு நிதி ... | D | ... | ... | ... | ... |
| III. பொதுக் கணக்கு ... | D | ... | ... | ... | 267,57,26 |
| மொத்தம்—செலவினங்கள் ... | | ... | ... | ... | 386,73,00 |
| இறுதி ரொக்கக் கையிருப்பு ... | | ... | ... | ... | 40,37 |
| பெரு மொத்தம் ... | | ... | ... | ... | 387,13,37 |

**குறிப்புகள் :**—மேலே காட்டியுள்ள தமிழ்நாட்டு பட்ஜெட் முறை மற்றைய மாநில அரசாங்கங்களுக்கும், மத்திய அரசாங்கத்துக்கும் பொதுவாகப் பொருந்தும்.

மேற்கண்ட உதாரணத்தில் மதிப்பீடுகளின் தொகை இந்திய பட்ஜெட் முறைப்படி ரூபாய் ஆயிரக் கணக்கில் கொடுக்கப்பட்டுள்ளது. தமிழ்நாட்டு அரசாங்க அறிக்கையில் தொகை முழுதும் (சுருக்கப்படாமல்) காட்டப்பட்டிருக்கும். மத்திய அரசாங்க அறிக்கை I-ல் 'A. வரிகள், தீர்வைகள், வரி வருவாயின் இதர முக்கியத் தலைப்புகள்' என்பதன் கீழ், விவரங்கள் தனித் தலைப்புகள்கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கும். தமிழ்நாட்டு அறிக்கையில் இவ் விவரங்கள் பின் சேர்க்கப்பட்ட அறிக்கையில்மட்டும் காட்டப்பட்டிருக்கும்.

மேற்கண்ட அறிக்கைகள் I, II-க்கு, மேலும் விவரம் தரும்வகையில் வேறு அறிக்கைகள் பின்வருமாறு இருக்கும் :—

A–வருவாய் அறிக்கை

| பெருந் தலைப்பு எண் (1) | பெருந் தலைப்பு (2) | 1962–63 கணக்குகள் (3) | 1963–64 திருத்த மதிப்பீடு (4) | 1963–64 திட்ட மதிப்பீட்டோடு ஒப்பிட்டபடி அதிகம் (+) அல்லது குறைவு (–) (5) | 1964–65 திட்ட மதிப்பீடு (6) | 1963–64 திருத்த மதிப்பீட்டோடு ஒப்பிட்டபடி அதிகம் (+) அல்லது குறைவு (–) (7) |
|---|---|---|---|---|---|---|
| | | | (ரூபாய் ஆயிரக் கணக்கில்) | | | |
| | A. வரிகள், தீர்வைகள் வரி வருவாயின் இதர முக்கியத் தலைப்புகள் | | | | | |
| IV. | கார்ப்பொரேஷன் வரி நீங்கலாக மற்ற வருமான வரிகள் ... | ... | ... | ... | 9,96,00 | ... |
| V. | சொத்து வரி ... | ... | ... | ... | 37,00 | ... |
| IX. | நிலவரி (பாசனத்துக்குரிய பகுதி நீங்கலாக) ... | ... | ... | ... | 4,70,51 | ... |
| | ........ | ... | ... | ... | ... | ... |
| | ........ | ... | ... | ... | ... | ... |
| | மொத்தம்–A ... | ... | ... | ... | 72,38,38 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | B. கடனுக்குரிய வட்டி முதலிய வரவுகள் | | | | | |
| XVI. | வட்டி ... | ... | ... | ... | 13,78,75 | ... |
| | மொத்தம்–B ... | ... | ... | ... | 13,78,75 | ... |
| | C. நிர்வாகப் பணிகள் | | | | | |
| | ......... | ... | ... | ... | ... | ... |
| XVIII. | சிறைச்சாலைகள் ... | ... | ... | ... | 85,46 | ... |
| | ......... | ... | ... | ... | ... | ... |
| | ......... | ... | ... | ... | ... | ... |
| | மொத்தம்–C ... | ... | ... | ... | 2,03,57 | ... |
| | **** | ** | ** | ** | ** | ** |
| | **** | ** | ** | ** | ** | ** |
| | K. சிறப்பு இனங்கள் | | | | | |
| LX. | சிறப்பு வரவினங்கள் ... | ... | ... | ... | 72 | ... |
| | மொத்தம்–K ... | ... | ... | ... | 72 | ... |
| | **** | ** | ** | ** | ** | ** |
| | மொத்த வருவாய் ... | ... | ... | ... | 138,47,57 | ... |
| | வருவாய்க்கு மேற்பட்ட செலவு அல்லது பற்றுக்குறை ... | ... | ... | ... | 2,34,09 | ... |
| | பெரு மொத்தம் ... | ... | ... | ... | 140,81,66 | ... |

B. ரெவின்யூ கணக்கிலான

| பெருந் தலைப்பு எண் | பெருந் தலைப்பு | 1962—63 கணக்குகள் | | | 1963—64 திருத்த மதிப்பீடு | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | சாட்டி யது | அனு மதித்தது | மொத்தம் | சாட்டி யது | அனுமதித் தது | மொத்தம் |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) |
| | A. வரிகள், தீர்வைகள், இதர முக்கிய வருவாய்கள் வசூல் | | | | (ரூபாய் ஆயிரக் கணக்கில்) | | |
| | …… | … | … | … | … | … | … |
| 12. | விற்பனை வரி (வசூல்) | … | … | … | 8 | 78,78 | 78,86 |
| 13. | இதர வரி களும் தீர்வை களும் | … | … | … | … | 5,94 | 5,94 |
| | …… | … | … | … | … | … | … |
| | …… | … | … | … | … | … | … |
| | பெரு மொத்தம் | … | … | … | 13,84,90 | 1,201,51,71 | 34,00,07 |

குறிப்பு : மத்திய அரசாங்க அறிக்கைகள் (A), (B) என்பவை, மேலே காட்டப்பட்ட உதாரணத்தைவிடச் சற்றுச் சுருக்கமாகப் பின்கண்ட தலைப்புகளுடன் இருக்கும்.

1. $\frac{\text{வருவாய்}}{\text{செலவின}}$த் தலைப்புகள்
2. 1962–63 கணக்குகள்
3. 1963–64 திட்ட மதிப்பீடு
4. 1963–64 திருத்த மதிப்பீடு

செலவைப் பற்றிய அறிக்கை

| 1963—64 திட்ட மதிப் பீட்டோடு ஒப்பிட்டபடி அதிகம் (+) அல்லது குறைவு (−) | 1964—65 திட்ட மதிப்பீடு | | | 1963—64 திருத்த மதிப் பீட்டோடு ஒப்பிட்டபடி அதிகம் (+) அல்லது குறைவு (−) | கோரிக்கை எண் |
|---|---|---|---|---|---|
| | சாட்டியது | அனு மதித்தது | மொத்தம் | | |
| (9) | (10) | (11) | (12) | (13) | (14) |
| | | | — | | |
| ...... | ... | ... | ... | ... | ... |
| +9,54 | 8 | 71,47 | 71,55 | (−)7,31 | III |
| + 12 | ... | 6,68 | 6,68 | (+) 74 | |
| ...... | ... | ... | ... | ... | ... |
| ...... | ... | ... | ... | ... | ... |
| +6,80,72 | 15,87,56 | 124,94,10 | 140,81,66 | (+) 6,81,59 | ... |

5. 1963–64 திட்ட மதிப்பீட்டோடு ஒப்பிட்டால் அதிகம் (+) அல்லது குறைவு (−)
6. 1964–65 திட்ட மதிப்பீடு
7. 1963–64 திருத்த மதிப்பீட்டோடு ஒப்பிட்டால் அதிகம் (+) அல்லது குறைவு (−)

சாட்டிய செலவும், மற்றைய செலவுகளிலிருந்து பிரித்துக் காட்டப் பட்டிருக்காது ; மானியக் கோரிக்கைகளில்தான் அவைகளைத் தனித்துக் காணலாம்.

## C – ரெவின்யூ கணக்கிற்குட் புறம்பான மூலதனச் செலவு

| பெருந் தலைப்பு | கணக்குகள் 1962–63 | | | 1963–64 திருத்த மதிப்பீடு | | | 1964–65 திட்ட மதிப்பீடு | | | கோரிக்கை எண் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | சாட்டியது | அனுமதித்தது | மொத்தம் | சாட்டியது | அனுமதித்தது | மொத்தம் | சாட்டியது | அனுமதித்தது | மொத்தம் | |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) | (11) |
| | | | | | | | | (ரூபாய் ஆயிரக் கணக்கில்) | | |
| I. தமிழ்நாட்டின் தொகு நிதி | | | | | | | | | | |
| ......... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 94. பொதுச் சுகாதார அபிவிருத்திக்கான மூலதனச் செலவு... | ... | ... | ... | ... | ... | ... | ... | 13,47 | 13,47 | XXXVIII |
| ......... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 96. தொழில் வளர்ச்சிக்கான மூலதனச் செலவு ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 88,57 | 88,57 | XL |
| ......... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| மொத்தம்–மூலதனச் செலவு... | ... | ... | ... | ... | ... | ... | ... | 24,04,09 | 24,04,09 | ... |

**D–அரசாங்கத்தின் எல்லா வரவு-செலவினங்கள் (பற்று, வரவு) பற்றிய அறிக்கை—பொதுக்கடன், மாநில அரசினர் கொடுக்கும் கடன்கள், முன்பணங்கள் முதலியன**

| பெருந் தலைப்புகளும் சிறு தலைப்புகளும் (1) | 1962–63 கணக்குகள் (2) | 1963–64 திருத்த மதிப்பீடு (3) | 1964–65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| **I. தமிழ்நாட்டின் தொகு நிதி வரவு** | (ரூபாய் | ஆயிரக் | கணக்கில்) |
| செலவுக்குமேல் அதிக வருவாய் (B–அறிக்கையிலிருந்து) ... | ... | ... | ... |
| O. பொதுக் கடன் வாங்கியது | | | |
| I தாற்காலிகக் கடன்–கஜானா பில்கள் (கருவூல உண்டியல்கள்) (Treasury Bills) இதர தாற்காலிகக் கடன்கள் | ... | ... | 38,26,00 |
| II நிரந்தரக் (நிலையான) கடன்கள் ... | ... | ... | 13,00,00 |
| III மத்திய அரசினரிடமிருந்து பெற்ற கடன்கள் ... | ... | ... | 50,68,00 |
| IV இதர கடன்கள் ... | ... | ... | 1,72,00 |
| மொத்தம்–O... | ... | ... | 103,66,00 |
| Q. மாநில அரசினர் கொடுக்கும் கடன்களும் முன் பணங்களும்—நாட்டாண்மை (ஸ்தல ஸ்தாபன) நிதிக்கும், தனிப்பட்டவர்களுக்கும் மற்றவர்களுக்கும் கொடுத்த கடன்கள் ... | ... | ... | 8,82,47 |
| அரசாங்க ஊழியர்களுக்குக் கொடுத்த கடன்கள் ... | ... | ... | 16,22 |
| மொத்தம்–Q... | ... | ... | 8,98,69 |
| R. மாநிலங்களுக்கிடையே ஏற்பாடுகள் ... | ... | ... | 2,57,20 |
| மொத்தம்–I. தமிழ்நாட்டின் தொகு நிதி–வரவு ... | ... | ... | 115,21,89 |

D–அறிக்கை—தொடர்ச்சி

| பெருந் தலைப்புகளும் சிறு தலைப்புகளும் (1) | 1962–63 கணக்கு சுள் (2) | 1963–64 திருத்த மதிப்பீடு (3) | 1964–65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| வரவு—தொடர்ச்சி | (ரூபாய் ஆயிரக் கணக்கில்) | | |
| **II. தமிழ்நாட்டின் எதிர்பாராச் செலவு நிதி** | | | |
| தொகு நிதியிலிருந்து ஒதுக்கிய தொகை ... | ... | ... | ... |
| மொத்தம்–II. தமிழ்நாட்டின் எதிர் பாராச் செலவு நிதி ... | ... | ... | ... |
| **III. பொதுக் கணக்கு** | | | |
| **S.** நிதியிடப்படாக் கடன் (Unfunded Debt) | | | |
| மாநில அரசாங்கக் காப்பு நிதிகள் (Provident Funds) ... | ... | ... | 3,66,09 |
| சேமிப்பு (Savings) பாங்கு வைப்புத் தொகைகள் ... | ... | ... | 5,77 |
| மொத்தம்–S... | ... | ... | 3,71,86 |
| **T.** வைப்புத் தொகைகளும் முன் பணங்களும் (Deposits and Advances) | | | |
| I வட்டி பெறும் வைப்புத் தொகைகள்— | | | |
| அரசாங்க வாணிக நிறுவனங்களின் தேய்மான சேமிநிதி (Depreciation Reserves) வைப்புத் தொகைகளும், இதர வைப்புத் தொகைகளும் ... | ... | ... | 1,44,47 |
| மாநில மின்சார போர்டு வைப்புத் தொகைகள் ... | ... | ... | 53,00,00 |
| ........ | ... | ... | ... |

D–அறிக்கை—தொடர்ச்சி

| பெருந் தலைப்புகளும் சிறு தலைப்புகளும் (1) | 1962–63 கணக்குகள் (2) | 1963–64 திருத்த மதிப்பீடு (3) | 1964–65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| வரவு—தொடர்ச்சி | (ரூபாய் ஆயிரக் கணக்கில்) | | |
| II வட்டியில்லா வைப்புத் தொகைகள்— | | | |
| கடன் குறைப்பு அல்லது தவிர்ப்புத் தொகை ஒதுக்கமும், கடன் கரைப்பு நிதி முதலீட்டுக் கணக்கும் (Appropriation for Reduction or Avoidance of Debt and Sinking Fund Investment Account) ... | ... | ... | 1,87,23 |
| பஞ்ச நிவாரண நிதி ... | ... | ... | 50,73 |
| ......... | ... | ... | ... |
| சிவில் வைப்புத் தொகைகள் ... | ... | ... | 25,70,37 |
| ......... | ... | ... | ... |
| III வட்டியற்ற முன் பணங்கள்— | | | |
| துறைவாரியான முன்பணங்கள் ... | ... | ... | 3,03,15 |
| ......... | ... | ... | ... |
| ......... | ... | ... | ... |
| IV அனுமத்து (Suspense) | | | ... |
| ......... | ... | ... | |
| செக்குகளும் பில்களும் ... | ... | ... | 24,68,00 |
| ......... | ... | ... | ... |
| V பலவகை | ... | ... | 1,51,38 |
| மொத்தம்–T... | ... | ... | 184,34,11 |
| U. செலுத்திய தொகைகள் (Remittances) | | | |
| ரொக்கமாகச் செலுத்தியவை... | ... | ... | 83,45,26 |
| ......... | ... | ... | ... |
| ......... | ... | ... | ... |
| மொத்தம்–U... | ... | ... | 83,45,26 |
| மொத்தம்–III. பொதுக் கணக்கு–வரவு ... | ... | ... | 271,51,23 |
| மொத்தம்–(I+II+III)... | ... | ... | 386,73,12 |
| X ஆரம்ப ரொக்கக் கையிருப்பு .. | ... | ... | 40,25 |
| பெரு மொத்தம்... | ... | ... | 387,13,37 |

**D. அரசாங்கத்தின் எல்லா வரவு—செலவினங்கள் (பற்று வரவு) பற்றிய அறிக்கை—பொதுக் கடன்—மாநில அரசினர் கொடுக்கும் கடன்கள் முன்பணங்கள் முதலியன—தொடர்ச்சி**

| பெருந் தலைப்புகளும் சிறு தலைப்புகளும் (1) | 1962–63 கணக்குகள் (2) | 1963–64 திருத்த மதிப்பீடு (3) | 1964–65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| **I. தமிழ்நாட்டின் தொகு நிதி செலவு (பற்று)** | (ரூபாய் ஆயிரக் கணக்கில்) | | |
| வருவாய்க்குமேல் அதிகச் செலவு ('A' அறிக்கைப்படி) ... | ... | ... | 2,34,09 |
| மூலதனச் செலவு ('C' அறிக்கைப் படி) ... | ... | ... | 24,04,09 |
| O. பொதுக் கடன் தீர்த்தவகையில்— | | | |
| I. தாற்காலிகக் கடன் - | | | |
| கஜானா பில்கள் (கருவூல உண்டியல்கள்) (Treasury Bills) இதர தாற்காலிகக் கடன்கள் ... | ... | ... | 38,26,00 |
| II. நிரந்தர (நிலையான) கடன்கள் ... | ... | ... | 5,24,81 |
| III. மத்திய அரசினரிடமிருந்து பெற்ற கடன்கள் ... | ... | ... | 20,00,00 |
| IV. இதர கடன்கள் ... | ... | ... | 46,19 |
| மொத்தம்-O ... | ... | ... | 63,97,00 |
| Q. மாநில அரசினர் கொடுக்கும் கடன்களும் பணங்களும்— | | | |
| நாட்டாண்மை (ஸ்தல ஸ்தாபன) நிதிக்கும் தனிப்பட்டவர்களுக்கும் மற்றவர்களுக்கும் கொடுத்த கடன்கள் ... | ... | ... | 28,49,06 |
| அரசாங்க ஊழியர்களுக்குக் கொடுத்த கடன்கள் ... | ... | ... | 31,50 |
| மொத்தம்-Q ... | ... | ... | 28,80,56 |
| R. மாநிலங்களுக்கிடையே ஏற்பாடுகள் ... | ... | ... | ... |
| மொத்தம்-I. தமிழ்நாட்டின் தொகு நிதி—செலவினங்கள் ... | ... | ... | 119,15,74 |

D. அறிக்கை—தொடர்ச்சி

| பெருந் தலைப்புகளும் சிறு தலைப்புகளும் (1) | 1962–63 கணக்கு கள் (2) | 1963–64 திருத்த மதிப்பீடு (3) | 1964–65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| செலவு (பற்று)—தொடர்ச்சி | (ரூபாய் ஆயிரக் கணக்கில்) | | |
| **II. தமிழ்நாட்டின் எதிர்பாராச் செலவு நிதி** | | | |
| எதிர்பாராச் செலவு நிதி— | | | |
| முன் பணங்கள் ... | ... | ... | ... |
| திருப்பிக் கொடுத்தவை ... | ... | ... | ... |
| மொத்தம்–II. தமிழ்நாட்டின் எதிர் பாராச் செலவு நிதி— செலவினங்கள் ... | ... | ... | ... |
| **III. பொதுக் கணக்கு** | | | |
| S. நிதியிடப்படாக் கடன் (Unfunded Debt) | | | |
| மாநில அரசாங்கக் காப்பு நிதிகள் (Provident Funds) ... | ... | ... | 1,48,97 |
| சேமிப்பு (Savings) பாங்கு வைப் புத் தொகைகள் ... | ... | ... | 6,49 |
| மொத்தம் S. ... | ... | ... | 1,55,46 |
| T. சேமிப்புத் தொகைகளும் முன் பணங்களும் (Deposits and Advances) | | | |
| I. வட்டி பெறும் வைப்புத் தொகைகள்— | | | |
| அரசாங்க வாணிக நிறுவனங் களின் தேய்மான சேமநிதி (Depreciation Reserves) வைப்புத் தொகைகளும், இதர வைப்புத் தொகைகளும் ... | ... | ... | 1,15,69 |
| மாநில மின்சார போர்டு வைப்புத் தொகைகள் ... | ... | ... | 53,00,00 |

D அறிக்கை—தொடர்ச்சி

| பெருந் தலைப்புகளும் சிறு தலைப்புகளும் (1) | 1962–63 கணக்குகள் (2) | 1963–64 திருத்த மதிப்பீடு (3) | 1964–65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| செலவு (பற்று)— தொடர்ச்சி | (ரூபாய் ஆயிரக் கணக்கில்) | | |
| II. வட்டியில்லா வைப்புத் தொகைகள்—கடன் குறைப்பு அல்லது தவிர்ப்புத் தொகை ஒதுக்கமும், கடன் கரைப்பு நிதி முதலீட்டுக் கணக்கும் (Appropriation for Reduction or Avoidance of Debt and Sinking Fund Investment Account) ... | ... | ... | 1,58,16 |
| பஞ்ச நிவாரண நிதி ... | ... | ... | ... |
| ......... | ... | ... | ... |
| சிவில் வைப்புத் தொகைகள் ... | ... | ... | 23,68,05 |
| ......... | ... | ... | ... |
| III. வட்டியற்ற முன்பணங்கள்— | | | |
| துறைவாரியான முன் பணங்கள் ... | ... | ... | 3,08,75 |
| | ... | ... | ... |
| ......... | ... | ... | ... |
| ......... | ... | ... | ... |
| IV. அனுமத்து (Suspense) | | | |
| ......... | | | |
| செக்குகளும் பில்களும் ... | ... | ... | 24,96,00 |
| ......... | ... | ... | ... |
| V. பலவகை ... | ... | ... | 23,00 |
| மொத்தம்-T ... | ... | ... | 182,06,54 |
| U. செலுத்திய தொகைகள் (Remittances) | | | |
| ரொக்கமாகச் செலுத்தியவை ... | ... | ... | 83,95,26 |
| ......... | ... | ... | ... |
| ......... | ... | ... | ... |
| மொத்தம்-U ... | ... | ... | 83,95,26 |
| மொத்தம் III. பொதுக்கணக்கு—செலவினங்கள் (பற்று) ... | ... | ... | 267,57,26 |
| மொத்தம் (I+II+III) ... | ... | ... | 386,73,00 |
| X. இறுதி ரொக்கக் கையிருப்பு ... | ... | ... | 40,37 |
| பெரு மொத்தம் ... | ... | ... | 387,13,37 |

மேற்கண்ட உதாரணங்களிலிருந்து, நிதிநிலை பின்வருமாறு காட்டப்படுவது புலனாகும்.

## ரெவின்யூ திட்ட மதிப்பீடு

பொது அறிக்கை I-ம் அதன் விவரணமான (A), (B) என்னும் அறிக்கைகளும் சேர்ந்து 'ரெவின்யூ திட்ட மதிப்பீடு' (Revenue Budget) ஆகிறது.

(A) என்னும் அறிக்கையில் காட்டப்படுவது, தற்போதைய வரிகள் மூலம் கிடைக்கக்கூடிய வருமான மதிப்பீடு, அரசாங்கத்தின் வர்த்தக நிறுவனங்களிலிருந்து கிடைக்கும் இலாபம், அரசாங்க முதலீடு களுக்குக் கிடைத்துள்ள வட்டி, இந்திய அரசாங்கத்திடமிருந்து கிடைத்த மானியம் ஆகிய எல்லாம் சேர்ந்து அரசாங்கத்தின் ஆண்டு வருமானம் ஆகிறது. இதேபோல (B) என்னும் அறிக்கையில், அரசாங்கத்தின் பல்வேறு துறைகளை நடத்த ஆகும் செலவு மதிப்பீடு, அரசாங்கம் வாங்கிய கடன்களுக்கு வட்டிகொடுக்க, கடன்களை அடைக்க, பஞ்ச நிவாரணத்துக்கு உதவ, ஜமீன்ஒழிப்பு நஷ்டஈடு கொடுக்க,—இவை போன்ற வேறு பொறுப்புகளை ஏற்கவும் வசதி செய்யுமாறு நிறுவப்பட்ட தனி நிதிகளுக்கு, அரசாங்கம் ஒதுக்கும் தொகை முதலியன தரப்பட்டுள்ளன.

(A), (B) என்னும் இரு அறிக்கைகளின் சாரமே பொது அறிக்கை I ஆகும். (B) என்னும் அறிக்கையில் கூறப்பட்டுள்ள செலவு, (A) என்னும் அறிக்கையில் குறிப்பிடப்பட்ட வருமானத்திலிருந்து கழிக்கப் பட்டபின் எஞ்சியிருப்பது ஆண்டுக்கான உபரித்தொகை (Surplus) ஆகும். கழிக்க இடமில்லாமல், செலவு அதிகமாக இருக்குமானால், அவ்வதிகச் செலவுத் தொகை **'பற்றுக்குறை'** (Deficit) எனப்படும்.

## வழிவகைத் திட்ட மதிப்பீடு

பொது அறிக்கை II என்பது [(C), (D) என்னும் அதன் இரு துணை அறிக்கைகளுடன்]—ரெவின்யூ திட்ட மதிப்பீட்டிற்குப் புறம்பான அரசாங்க வரவுசெலவுகளைக் காட்டுகின்றது. அதாவது, மேலே விவரிக்கப்படாத, இதர வரவுசெலவுகளைக் குறிப்பிடுகிறது. இதை வழிவகைத் திட்ட மதிப்பீடு (Ways and Means Budget) என்பர். ரெவின்யூ திட்ட மதிப்பீட்டில் அடங்கும் சாதாரண நிர்வாகம் தவிர, நிதி சம்பந்தமான வேறு அலுவல்களையும், ஓர் அரசாங்கம் நிறைவேற்ற வேண்டி இருக்கிறது. உதாரணமாக, ஒரு மாநில அரசாங்கம் நீர்ப் பாசன, மின்சாரத் திட்டங்களுக்காகவும், அரசாங்கத் தொழில் வர்த்தக நடவடிக்கைகளை அபிவிருத்தி செய்யவும், பெரும்தொகைகள் முதலீடு

செய்யவேண்டும்—இதை (C) என்னும் அறிக்கை காட்டுகிறது. விவசாயிகளுக்கும், தொழிலதிபர்களுக்கும், ஊர் ஆட்சி மன்றங்களுக்கும், கூட்டுறவு அமைப்புகளுக்கும் கடன் கொடுப்பதற்காகவும் பணம் தேடியாக வேண்டும்; பல காரியங்களுக்காக ஏற்கெனவே வாங்கியுள்ள கடன்களை, உரிய நாளில் திருப்பிக் கொடுத்தாகவும் வேண்டும்.

ரெவின்யூ உபரித்தொகை (Surplus), இந்தத் தேவைகளுக்கெல்லாம் போதுமானதாக இருந்தால், அல்லது எடுத்துக் கொள்ளக் கூடிய வைப்புநிதி (Reserves) இருக்குமானால், நிலைமையை எளிதில் சமாளித்துவிடலாம். ஆனால், பொதுவாக இப்படி இருப்பதில்லை. எனவே, ஒவ்வோர் அரசாங்கமும், பொதுமக்களிடம் வெளிப்படையாகக் கடன் வாங்குகிறது. மாநில அரசாங்கங்கள் இந்திய அரசாங்கம் தர இசைந்தால், அதனிடமிருந்தும் கடன் வாங்குகின்றன. இம்முறையிலன்றி, வேறுவழிகளிலும் அரசாங்கம் எடுத்துப் புழங்கக்கூடிய வகையில் பணம்வரும்; அரசாங்கத்தால் மக்களுக்கும், பொது நிறுவனங்களுக்கும் ஏற்கெனவே தரப்பட்ட கடன்கள், குறித்த தேதிகளில், தவணைமூலம் வசூலிக்கப்படுகின்றன; அரசாங்கப் பணியாளர்களின் சேமிப்புநிதிப் பணமும், குறித்த இறுதிக்காலம் வரை, அரசாங்கத்திடம் கொடுத்த கடன்போல், அரசாங்கத்திடமே இருக்கிறது; ஊர் ஆட்சி மன்றங்களின் உபரிநிதிகளும் ஒரு பாங்கியில் போடப்படுவது போல், அரசாங்கக் கஜானக்களில் போடப்படுகின்றன; வழக்காடுபவர்கள், சிவில் கோர்ட்டுகளில் ஒப்படைத்த பணமும், வர்த்தகர்கள் சிவில் சப்ளை துறையில் ஒப்படைத்த பணமும், அரசாங்கக் கணக்கில் வைக்கப்பட்டு, அரசாங்கத்தின் தாற்காலிக உபயோகத்துக்குக் கிடைக்கிறது.

இவைகளுக்குரிய கொடுக்கல் வாங்கல்களையும் அரசாங்கத்தின் எதிர்பாராச் செலவுநிதி, பஞ்ச நிவாரணநிதி, இவைபோன்ற தனி நிதிகளுக்கான பற்றுவரவுத் தொகைகளையும் வேறு பல தலைப்புகளின் கீழ் எதிர்பார்க்கப்படும் வரவினங்களையும் அதே ஆண்டில் பட்டுவாடா செய்யவேண்டிய தொகை அளவுகளையும், (D) என்னும் அறிக்கை காட்டுகிறது.

(C), (D) என்னும் இரு அறிக்கைகளின் சுருக்கம், பொது அறிக்கை II-ல் அடங்கியுள்ளது. இதுபோல் அறிக்கை I-ன் முடிவில் காணப்படும் ரெவின்யூ உபரி அல்லது பற்றுக்குறைத் தொகையும், பொது அறிக்கை II-ல் முதலிலேயே சேர்க்கப்பட்டிருப்பதைக் காணலாம். ஆகவே, பொது அறிக்கை II-ல் எல்லாவகைப் பற்றுவரவுகளும் ஒருங்கே சேர்க்கப்பட்டு, அரசாங்கத்தின் நிகரநிதி நிலை தெளிவாக்கப்படுகிறது. இதனால், வழிவகைப் பட்ஜெட்டின் (Ways and Means Budget) முக்கியத்துவம் விளங்கும்.

## வரவையும் செலவையும் சமன்படுத்தல்

சமீபகாலம் வரையில், ஒவ்வோர் அரசாங்கமும் வெளியிடும் புதிய பட்ஜெட்டில் வரவும் செலவும் சரிக்கட்டப்பட்டு இருக்கவேண்டும் (Balanced)—வரவு செலவைவிட கொஞ்சமாவது அதிகமாக இருக்க வேண்டும்—என்ற கொள்கை உலகெங்கும் நிலவியது. இந்தக் கொள்கையில் இருந்த உறுதி காரணமாக, சில சமயங்களில் அவசிய மான செலவுகளைக் குறைப்பதும் அல்லது அதிகமான வரிகளை விதிப்பதுமான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இது ரெவின்யூ கணக்கைப் பற்றிய விஷயமே. நாளடைவில், இன்னொரு யோசனை எழலாயிற்று. ஒரு நிதியாண்டில், பல காரணங்களால், ரெவின்யூ கணக்கில் வரவையும் செலவையும் சரிக்கட்ட முடியாமல் இருக்கலாம்; ஆனால், இந்நிலை அடுத்த இரண்டு மூன்று ஆண்டுகளில் சரிப்படலாம். ஆகவே, இந்த சமன்செய்யும் கொள்கையை, சில ஆண்டுகளுக்குப் பொதுவாகத்தான் கடைப்பிடிப்பது நல்லது என்று சொல்லப்பட்டது. ரெவின்யூ கணக்கு எப்படியாயினும் சரி, எல்லாக் கணக்குகளையும் ஒன்றுசேரப் பார்க்கும்போது, போதிய நிதி வசதி இருந்தாகவேண்டும்; அதாவது, வழிவகைப் பட்ஜெட் (Ways and Means Budget) சமன் படுத்தப்பட்டு இருக்கவேண்டும் என்பதே முறை. நம் நாட்டிலும், அரசாங்கக் குறிக்கோள் மக்களின் சேமநலம் (Welfare State) என விரிவு அடையாதவரையில், ரெவின்யூ கணக்கில் வரவையும் செலவை யும் சரிக்கட்டும் முறை பின்பற்றப்பட்டது. இது காரணமாக, ஒரு பட் ஜெட் வெளியிடப்படும்போது, செலவுக்கு அதிகமாக வருவாய் மதிப் பிடப்பட்டு, உபரித்தொகை காட்டப்பட்டிருந்தால், அந்த பட்ஜெட் போற்றப்படும்; இதற்கு மாறாக, வருவாய்க்கு அதிகமாகச் செலவு மதிப் பிடப்பட்டு, பற்றாக்குறைத் தொகை காட்டியிருக்கப்பட்டால், அந்த பட்ஜெட் குறை கூறப்பட்டு வருவது வழக்கமாக ஆயிற்று. சேமநலக் கொள்கை மேற்கொள்ளப்பட்டு, பல முன்னேற்றத் திட்டங்கள் அமலுக்குவர ஆரம்பித்ததிலிருந்து, இந்த ரெவின்யூ பட்ஜெட்டைச் சரிக்கட்டும் இலக்கு அவ்வளவாகக் கருதப்படுவதில்லை; ஆயினும், இது அறவே வேண்டாம் என்று கைவிடப்படுவதுமில்லை. திட்டங்களின் காரணமாக, பணவீக்கம் ஏற்பட்டால், உபரித் தொகை பட்ஜெட் அதற்குப் பரிகாரமாகும் என்றும், இதற்கு மாறான நிலையில், பற்றாக் குறை பட்ஜெட் பயனுடையதாய் இருக்கும் என்றும் எண்ணப்படு கிறது. இப்பொழுது ஓர் அரசாங்க பட்ஜெட், வெறும் வரவுசெலவுத் திட்டமாக எண்ணப்படுவதில்லை; அது சில இலட்சியங்களை அடை வதற்கு, சாதனமாகவே கொள்ளப்படுகிறது. மக்களுக்கு வேலைவாய்ப்பு அதிகரிப்பு, முதலீட்டு உயர்வு, பணவீக்கமோ அல்லது குறையோ இல்லாமல் காப்பது, விளைபொருள்களும் பணமும் ஒரு சாராரிடம் தேங்காமல் மக்களிடம் பரவலாக இருக்கும்படிச் செய்வது—இவை

போன்றவைக்குத் திட்டமிடுதல் ஒரு நல்ல அரசாங்கத்தின் இலக்குகள் எனச் சொல்லலாம். சுருங்கச் சொன்னல், சமூகத்தில், பொருளாதார நிலை ஒருவித நியாயமுறைக்கு உகந்ததாகச் செய்ய பட்ஜெட் வழி செய்யவேண்டும் என்ற அடிப்படையில் அரசாங்கங்கள் யோசனைகளை உருவாக்குகின்றன.

**மானியக் கோரிக்கைகள்**

"மானியக் கோரிக்கைள்" என்னும் வெளியீட்டில் ஒவ்வொரு கோரிக்கையில் அடங்கும் அரசாங்கச் செலவினங்களின் முழு விவரமும், உரிய கணக்குத் தலைப்புகளின் கீழ்க் காட்டப்பட்டிருக்கும். கோரிக்கைகள் அமைக்கப்பட்டிருக்கும் முறைகளும், இந்த வெளியீட்டிலும் (வேறு குறிப்புகளிலும்) முதலிலேயே விளக்கப்பட்டிருக்கும். கோரிக்கைகளின் தனிப்பட்டியலும் இருக்கும். முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியவை பின்வருமாறு :—

(a) சாதாரணமாக, ஒவ்வொரு கணக்குப் பெருந் தலைப்பைச் சார்ந்த செலவு மதிப்பீடுகளுக்கு, ஒரு தனிக்கோரிக்கை இருக்கும். உதாரணம் :—

| மத்திய அரசாங்கம் (1964-65) | | மாநில அரசாங்கம் (தமிழ்நாடு) (1964-65) | |
|---|---|---|---|
| பெருந் தலைப்பு | மானியக் கோரிக்கை எண்ணும், பெயரும் | பெருந் தலைப்பு | மானியக் கோரிக்கை எண்ணும், பெயரும் |
| 1. சுங்க வரி (வசூல்) | 20. சுங்க வரி (வசூல்) | 11. வாகன வரி (வசூல்) | II. மோட்டார் வண்டி வரிச் சட்டங்கள்—நிர்வாகம் |
| 2. யூனியன் ஆயத்தீர்வைகள் (வசூல்) | 21. யூனியன் ஆயத் தீர்வைகள் (வசூல்) | 14. முத்திரைத் தாள்கள் | IV. முத்திரைத் தாள்—நிர்வாகம் |

குறிப்பு :—மத்திய அரசாங்க மானியக் கோரிக்கைகளுக்கு இந்திய எண்கள் கொடுக்கப்படுகின்றன. இவ்வெண்கள் செலவுக் கணக்குப் பெருந்தலைப்புகளின் எண்களிலிருந்து பெரும்பாலும் மாறுபடும்; இதைக் கவனிக்காது போனல், குழப்பம் வரும். மாநில அரசாங்கக் கோரிக்கைகளுக்குச் சிறப்பாகத் தமிழ்நாட்டில்—ரோமன் எண் கொடுக்கப்படுகின்றது; இம்முறையை மனத்தில் கொண்டால், செலவுக் கணக்குப் பெருந்தலைப்புகளோடு குழப்பம் உண்டாகாது. ஆனல், வருவாய்த் தலைப்புகளுக்கும் ரோமன் எண்கள் இருப்பதைக் கவனிக்க வேண்டும்.

(b) ஒரு பெருந் தலைப்பில் அடங்கும் விவரங்கள் பலதுறைகளைச் சார்ந்ததாக, அல்லது பல திறப்பட்டதாக இருந்தால், மதிப்பீடுகளைப் பகுத்து ஒன்றுக்கு மேற்பட்ட கோரிக்கைகளில் சேர்த்துச் சமர்ப்பிக்கலாம். உதாரணம் :—

| மத்திய அரசாங்கம் | | மாநில அரசாங்கம் (தமிழ்நாடு) | |
|---|---|---|---|
| பெருந் தலைப்பு (1) | மானியக் கோரிக்கை எண்ணும், பெயரும் (2) | பெருந் தலைப்பு (3) | மானியக் கோரிக்கை எண்ணும், பெயரும் (4) |
| 19. பொது நிர்வாகம் | 1. சமூக அபிவிருத்தி, கூட்டுறவு-அமைச்சுத் துறை<br>3. நாட்டுக்காப்பு—அமைச்சுத்துறை<br>8. கல்வி—அமைச்சுத் துறை<br>...<br>...<br>19. நிதி—அமைச்சுத் துறை<br>...<br>...<br>53. தில்லி<br>54. அந்தமான், நிகோபார் தீவுகள்<br>...<br>... | 19. பொது நிர்வாகம் | VIII. மாநில ஆட்சித் தலைவர், அமைச்சர்கள், தலைமையிடப் பணியாளர்கள்<br>IX. மாவட்ட நிர்வாகமும் பலவகையும் |
| 26. பலவகைத் துறைகள் | 14. கல்வி அமைச்சுத் துறை-ரெவின்யூ செலவு<br>31. நிதி அமைச்சுத் துறை-ரெவின்யூ செலவு<br>...<br>53. தில்லி<br>54. அந்தமான் நிகோபார் தீவுகள்<br>...<br>60. தொழில் அமைச்சுத்துறை—ரெவின்யூ செலவு | 26. பலவகைத் துறைகள் | V. பத்திரப் பதிவுத் துறை<br>IX. மாவட்ட நிர்வாகமும் பலவகையும்<br>XII. போலீஸ்<br>XIII. கல்வி |

| மத்திய அரசாங்கம் | | மாநில அரசாங்கம் (தமிழ்நாடு) | |
|---|---|---|---|
| பெருந் தலைப்பு (1) | மானியக் கோரிக்கை எண்ணும், பெயரும் (2) | பெருந் தலைப்பு (3) | மானியக் கோரிக்கை எண்ணும், பெயரும் (4) |
| 35. தொழில்கள் | 53. தில்லி<br>54. அந்தமான் நிகோபார் தீவுகள்<br>...<br>58. தொழில்கள்<br>59. உப்பு<br>...<br>81. எஃகு, சுரங்கம் முதலிய அமைச்சுத் துறை<br>...<br>89. போக்குவரத்து அமைச்சுத்துறையின் ரெவின்யூ செலவு | 35. தொழில்கள் | XX. தொழில்கள்<br>XXI. சின்கோனு<br>XXII. கதர் |

குறிப்பு:—(i) மத்திய அரசாங்கத்தில், ஒரே பெருந் தலைப்பைச் சார்ந்த அமைச்சுத்துறைச் செலவுகள் விஷயத்தில், ஒவ்வொரு துறைக்கும் தனித்தனியாக பல கோரிக்கைகள் இருப்பதையும், ஓர் அமைச்சுத் துறையின் நேரடிச் செலவும், அதன் நிர்வாகத்தில் உள்ள தனி நிறுவனம், பிரதேசம் போன்றவைகளின் செலவும் பிரிக்கப்பட்டு, வெவ்வேறு கோரிக்கையில் அடக்கப்படுவதையும் கவனிக்கவும்.

(ii) 'தில்லி'ப் பிரதேசத்தைச் சேர்ந்த எல்லாத் தலைப்புச் செலவுகளும் '53' எண்ணுள்ள கோரிக்கையில் சேர்க்கப்பட்டிருப்பதையும், இதுபோல், 'அந்தமான், நிகோபார்' தீவுகளின் செலவினங்கள் '54' எண்ணுள்ள மானியக் கோரிக்கையில் சேர்க்கப்பட்டிருப்பதும் கவனிக்கப்படவேண்டும். இதுபோல், பல பெருந் தலைப்புகள் ஒரே கோரிக்கையில் அடங்குவதற்கு வேறு உதாரணங்கள் :—

| மத்திய அரசாங்கம் | | மாநில அரசாங்கம் (தமிழ்நாடு) | |
|---|---|---|---|
| பெருந் தலைப்பு | மானியக் கோரிக்கை எண்ணும், பெயரும் | பெருந் தலைப்பு | மானியக் கோரிக்கை எண்ணும், பெயரும் |
| 3. கார்ப்பொரேஷன் வரி (வசூல்)<br>4. கார்ப்பொரேஷன் வரி நீங்கலான இதர வருமான வரிகள் (வசூல்)<br>5. சொத்து வரி<br>6. செல்வ வரி<br>7. செலவு வரி<br>8. கொடை வரி | 22. வருமான வரிகள்—முதலியன | 26. பலதுறைகள் தேர்வுகள்<br>27. விஞ்ஞானத் துறைகள்<br>28. கல்வி<br>39. பலவகைச் சமூக அபிவிருத்தி ஸ்தாபனங்கள் | XIII. கல்வி |

(c) பல அமைச்சுத் துறைகள் பொறுப்பேற்பதற்கும் ஒரேவகையான செலவுகள் எல்லாம் தொகுக்கப்பட்டு, ஒரே கோரிக்கையாக நிதி அமைச்சுத் துறையின்பேரில் சமர்ப்பிப்பதும் உண்டு. உதாரணமாக, மத்திய அரசாங்கத்தில் பல அமைச்சுத் துறைகளால், மாநிலங்களுக்கும் மற்றவைகளுக்கும் கொடுக்கப்படும் மானியம், கடன் முதலியவைகளுக்கு இம்முறை பின்பற்றப்படுகின்றது.

(d) அரசியல் அமைப்பு விதிக்கிணங்க ஒரே துறையின் மூலதனச் செலவுகளுக்கும், ரெவின்யூ கணக்குச் செலவுகளுக்கும் தனித்தனி மானியக் கோரிக்கைகள் இருக்கும். இவைகளுக்குத் தனிக் கணக்குப் பெருந்தலைப்புகளும் உண்டு.

உதாரணமாக, 1964–65ஆம் ஆண்டின் தமிழ்நாட்டு மானியக் கோரிக்கையில், நீர்ப்பாசனத்துறைச் சாதாரணச் செலவு, XXVI எண்ணுள்ள கோரிக்கையிலும், அத்துறை மூலதனச் செலவு, XLI எண்ணுள்ள கோரிக்கையிலும் சேர்க்கப்பட்டிருந்தன.

(e) 'பொதுப் பணிகள்' என்று வகைப்படுத்தப்படும் செலவு விஷயத்தில், தமிழ்நாட்டு அரசாங்கத்திலும், வேறு மாநில அரசாங்கங்களிலும், ஒரு தனி முறை பின்பற்றப்படுகிறது. இது பின்னர் விவரிக்கப்படும். இங்குத் தெரிந்துகொள்ளவேண்டியது ஒரே ஒரு குறிப்புத்தான். 'பொதுப் பணிகள்—பணியாளர், கருவிகள், யந்திர சாதனங்கள்' என்ற மானியக் கோரிக்கையில் அத்தகைய எல்லாச் செலவு

களும் சேரும். அதாவது, பின்னர்—ரெவின்யூ கணக்குக்குப் புறம்பான தலைப்பின்கீழ்ச் சேர்க்கப்படவேண்டிய செலவும் அடங்கியிருக்கும்.

(f) ஒரு மானியக் கோரிக்கையில் அடங்கிய தலைப்புகளில் ஏதாவது சாட்டப்பட்ட செலவுகள் சார்ந்திருந்தால், அத்தகைய செலவுகள் கோரிக்கை விவரணத்தில் தனியாகக் குறிக்கப்பட்டிருக்கும். ஒரு பெருந்தலைப்பின்கீழ்ப் பதிவு செய்யப்படும் செலவு முழுவதும் சாட்டப்பட்ட செலவாக இருந்தால் (உதாரணம்—கடனுக்குரிய வட்டி முதலிய செலவு), அது ஒரு கோரிக்கையுடனும் குறிக்கப்படாமல், தனியே பட்டியலில் மட்டும் இடம் பெறும். எப்படிக் குறிக்கப்பட்டிருந்தாலும், முன்னர் கூறியபடி, சாட்டப்பட்ட செலவுகளுக்கு, சட்ட சபையின் அனுமதி வேண்டப்படாது.

(g) மானியக் கோரிக்கை எண்கள் ஆண்டுதோறும் ஒரே மாதிரியாக இருக்கவேண்டுமென்ற நியதியில்லை; அமைப்பிலும் மாறுதல் இருக்கலாம்.

**பொதுக் குறிப்பு :—**(i) ஒரு பெருந் தலைப்பின் கீழ்ப் பதிவாகும் செலவு மதிப்பீடுகள், எந்தெந்த கோரிக்கைகளில் சேர்க்கப்பட்டுள்ளனவோ, அந்தக் கோரிக்கைகளின் எண்கள், ஒவ்வொரு பெருந்தலைப்புக்கும் எதிராக, தமிழ்நாட்டு அரசாங்க பட்ஜெட் பொது அறிக்கை ‘B’-ல், கடைசிப் பத்தியில் குறிக்கப்பட்டிருக்கும் (உதாரண அறிக்கையைப் பார்க்கவும்). இம்முறை, வேறு மாநிலங்களிலும் பின்பற்றப்படலாம்; அல்லது, தனியாக இவ்விளக்கம் தரப்படலாம். மத்திய அரசாங்க ‘பட்ஜெட் விளக்கக் குறிப்பில்’ (Explanatory Memorandum on the Budget) இதற்கென ஒருதனி அனுபந்தமே இருப்பது வழக்கம்.

(ii) சில சமயங்களில், ஒரு பெரிய தலைப்புக்கென ‘I-B’ அறிக்கையில் காட்டப்பட்ட மொத்தத் தொகை, அத்தலைப்புக்குரிய கோரிக்கைகளில் அடங்கிய தொகைகளையும், அத்தலைப்பைச் சார்ந்ததாக தனியே குறித்துள்ள சாட்டப்பட்ட தொகைகளையும் கூட்டினால் வரும் தொகையோடு பொருந்தாமல் இருக்கும். இதற்கு ஒரு முக்கிய காரணம், அரசாங்கத்துக்குக் கிடைக்கும் சில ‘வசூல்கள்’ (Recoveries) அதனதற்குரிய தலைப்பில் பதிவாகும் செலவிலிருந்து கழிக்கப்பட்டு நிகரச் செலவே, அத்தலைப்புக்குரிய தொகையாகக் கணக்கில் காட்டப்படுகிறது. ஆனால், மானியக் கோரிக்கையில் இத்தகைய ‘வசூல்களைக்’ கணக்கிடாத மொத்தச் செலவுத் தொகையே சேர்க்கப்படுகிறது. இவ்வித ‘வசூல்கள்’ பெரும்பாலும் ஒரு துறைக்கும் இன்னொரு துறைக்கும் உள்ள ஏற்பாட்டின் விளைவாக இருக்கும்; அதாவது ஒருதுறை, இன்னொரு துறைக்கு ஏதாவது வேலை செய்து கொடுத்தால், அதற்காகக் கொடுக்கப்படும் ஊதியம், ஒரு துறையின்

செலவாகவும், இன்னொரு துறையின் வரவாகவும் கணக்கில் பதிவு செய்யப்படும். இத்தகைய வேற்றுமைகளை மனதிற்கொண்டு, இரு அறிக்கைத் தொகைகளையும் சமன்படுத்திக்காட்ட ஒரு தனி விளக்கம் தரப்படுவது வழக்கம்.

உதாரணம் :—1964–65 ஆண்டு பட்ஜெட் மதிப்பீட்டில் கீழ்க்கண்டபடி ஒப்புதல் செய்யப்பட்டது.

**மத்திய அரசாங்கம்**

(ரூபாய் கோடிக் கணக்கில்)

| | | |
|---|---|---|
| **ரெவின்யூ கணக்கு** | | |
| மானியக் கோரிக்கையில் உள்ளபடி ரெவின்யூ கணக்கில் செலவு மொத்தம் | | 2,299 |
| **கழிக்கவும்** | | |
| (a) வசூல்கள் ... | 113 | |
| (b) நாட்டுக் காப்புத் துறையில் வரவு ... (இது பொது அறிக்கையில் செலவினங்களிலிருந்து கழிக்கப்பட்டது) | 18 | |
| (c) தபால் தந்தித் துறையில் வரவு ... | 127 | |
| மொத்தக் கழிப்பு | | 258 |
| நிகரத் தொகை அறிக்கை I-ல் கண்டபடி | | 2,041 |

**மாநில அரசாங்கம் (தமிழ்நாடு)**

(ரூபாய் இலட்சக் கணக்கில்)

| **ரெவின்யூ கணக்கு** | சாட்டப்பட்டது | அனுமதித்தது |
|---|---|---|
| மானியக் கோரிக்கைகள் தொகை ... | **16,22** | 130,05 |
| **கழிக்கவும்** | | |
| வசூல்கள் ... | **34** | 4,47 |
| நிகரத் தொகை ... | **15,88** | 125,58 |
| **கழிக்கவும்** | | |
| பொதுப்பணிகள் ... பணியாளர் முதலிய செலவில் மூலதனச் செலவுக்கென்று | | 64 |
| | **15,88** | 124,94 |
| மொத்தத் தொகை அறிக்கை 'I-B' | 140,82 | |

**அரசாங்கச் செலவு முழு விவரம் :—**‘மானியக் கோரிக்கைகளும் விரிவான வரவுசெலவுத் திட்ட மதிப்பீடுகளும்’ அடங்கியுள்ள வெளியீடு உண்மையிலேயே ஒரு பெரும் புத்தகமாகின்றது. வேண்டுமான பகுதிகளைச் சுலபமாகக் கண்டுபிடித்து, அரசாங்க நிதி எவ்வாறு செலவிடப்படுகிறது என்பதைக் கண்டறிய வேண்டுமானுல், இந்தப் புத்தகத்தைப் பார்த்துப் பழக்கப்படுத்திக் கொள்ளவேண்டும். புத்தகம் பார்வைக்குக் கனமாக இருக்கலாம்; ஆனுல், இதை ஆராய மிகுந்த நேரம் தேவைப்படும் என்பதில்லை. ஏனெனில், செலவுப் போக்கில் ஒரு துறைக்கும் மற்ெருரு துறைக்குமிடையே அதிக மாறுபாடு இல்லாமல் விஷயங்கள் திரும்பத் திரும்ப வருகின்றன. இந்தப் புத்தகத்தை நன்கு புரிந்து கொள்ள வேண்டுவதற்கு வழி பின்வருமாறு. இந்தப் புத்தகத்தின் முன்னுரைக் குறிப்பு, உள்ளே இருக்கும் விஷயங்களுக்குப் பொருளடக்கமாக உள்ளது. இதையடுத்து, மொத்தமாக, எல்லா மானியக் கோரிக்கைகளையும் காட்டும் சுருக்க அறிக்கை உள்ளது. புத்தக முடிவில் ‘அகர’ வரிசைப் பொருட் குறிப்பு ஒன்று இருக்கிறது. ஒவ்வொரு செலவினமும் உள்ள பக்கங்கள் பற்றி அது வழி காட்டுகிறது. குறிப்பிட்ட பக்கத்தைத் திருப்பிப் பார்த்தால், மூன்று வரவுசெலவுத் திட்ட ஆண்டுகளுக்கும் கெஜட் பதிவு உள்ள அதிகாரிகளின் சம்பளம், கெஜட் பதிவில்லாத அலுவலர்கள் சம்பளம், படிச் செலவு, பராமரிப்புச் செலவு முதலியன, வகைப்படுத்திக் காட்டி இருப்பதைக் காணலாம். ஒரு சில விஷயங்களை இப்படிப் பார்த்தால், இந்தப் புத்தகத்தில் அடங்கியவை பழக்கமாகிவிடும். இந்தப் புத்தகத்தோடு தரப்படும் அனுபந்தங்கள்—துணை வெளியீடுகள், சட்டசபை அங்கத்தினர்களுக்கு நிறையத் தகவல் தரக்கூடியவை. முதலில் இந்தப் புத்தகத்தை ஒரு பொதுக்குறிப்புப் புத்தகமாகக் (Reference Book) கொண்டு, இதில் என்னென்ன தகவல்கள் இருக்கின்றன, அவைகளை எப்படிக் கண்டுபிடிப்பது என்பதை மட்டும் அறிந்துகொள்வது போதுமானது.

**நிதிநிலைக் குறிப்பு :—**ஏற்கெனவே கூறியபடி, நிதி நிலைக் குறிப்பு என்னும் நூல் (Explanatory Memorandum on the Budget or Budget Memorandum) மிகவும் பயனுடைய வெளியீடாகும். இது எல்லோருக்கும் நல்ல வழிகாட்டி. இதில் பின்வருமாறு பல விளக்கங்கள் இருக்கும்.

## மத்திய அரசாங்கக் குறிப்பு (1964–65)

**முன்னுரை**

**பகுதி I–நிதி நிலையைப் பற்றிய விளக்கம்**

மூன்று ஆண்டுகளின் (1962–63, 1963–64, 1964–65)—நிதி நிலையும் மதிப்புரையும்

**பகுதி II–வரவுசெலவுக் கணக்குச் சுருக்கம்**

வருவாயின் மதிப்பீடுகளைப் பற்றிய குறிப்புகள்—(ஒவ்வொரு வருவாயின்படி விவரணம்)

ரெவின்யூ கணக்குச் செலவினங்களின் மதிப்பீடுகள்

**பகுதி III–மூலதனச் செலவு பட்ஜெட்**

(1) முன்னுரை
(2) மூலதனக் கணக்குச் சுருக்கம்
(3) மூலதனக் கணக்கு விளக்கம்
(4) மத்திய அரசாங்கத்தின் கடன் நிலை
(5) தீர்க்கப்படாது நிற்கும் பொதுக் கடன்

**உடன் சேர்க்கைகள் :** (முந்திய பத்தாண்டுகளுக்கும், நடைமுறை ஆண்டுக்கும் உட்படப் புள்ளிகள்)

I. வருவாய் செலவினப் பாகுபாடு

(இவை உடன் சேர்க்கை Iக்கு விளக்கமாக உள்ளன:)

II. வரிகளால் பெறப்படும் வருவாய்களுக்குப் பாகுபாடு
III. வரிகளால் பெற்ற வருவாயும், அதனை வசூலிக்க ஏற்ற செலவும்
IV. வட்டி செலுத்தும் முறையில் ஏற்ற செலவுகளின் இனப் பாகுபாடு
V. இதர செலவுகளின் இனப்பாகுபாடு

(இவை உடன் சேர்க்கை Vக்கு விளக்கமாக உள்ளன:)

VI. நிர்வாகப் பணிகள் (Administrative Services) செலவின் பாகுபாடு
VII. சமூக அபிவிருத்திப் பணிகள்—செலவின் பாகுபாடு
VIII. பலநோக்க நதித் திட்டங்கள் முதலியவை, போக்குவரத்து (சாலைகள் நீங்கலாக)—இவைகளின் செலவுப் பாகுபாடு

IX. மத்திய அரசாங்கத்திலிருந்து, மாநிலங்களுக்கு வழங்கப்பட்ட வருவாய் இனங்கள், மானியங்கள், கடன்கள் முதலியவைகளின் விவரம் (ஐந்தாண்டுத் திட்ட முறையில் புள்ளிகள்)
X. இந்தியாவிலும், வேறுநாடுகளிலும் ஏற்ற செலவுகளின் பாகுபாடு (மூன்று ஆண்டுகளுக்குப் புள்ளிகள்)
XI. ஒவ்வொரு கணக்குப் பெருந் தலைப்பின் கீழ்க் காட்டப்படும் செலவினங்கள், எந்தெந்த மானியக் கோரிக்கைகளில் அடங்கியுள்ளன என்ற விவரம்

XII. அரசாங்கச் செலவுகளைச் சில பெரும் பிரிவுகளாக வகைப் படுத்திக் காட்டும் குறிப்பு—(அதிகாரி களின் சம்பளம், மற்றைய பணியாளர்களின் சம்பளம், படிகள், இதர அலுவலகச் செலவுகள், வட்டி, பென்ஷன், உதவி மானியங்கள்—இவை போன்ற பல பாகுபாடுகளில் மூன்று ஆண்டுகளுக்குப் புள்ளிகள்)

XIII. and XIV. அந்நிய நாட்டு உதவிகள் விவரம் (மானியம், கடன்கள் முதலியவை)

XV. அரசாங்கத் தொழில் நிறுவனங்கள், மற்ற நிறுவனங்கள்—இவைகளின் திட்டங்களில் ஈடு படுத்தப்பட்ட தொகை விவரமும், அவை களிலிருந்து கிடைத்த பயன் (வருமான) விவரமும்

XVI. பட்ஜெட் ஆண்டு (1964–65) உடன் முடியும் ஐந்தாண்டுகளில் பொது மக்களிடமிருந்து அரசாங்கம் பெற்ற கடன் விவரம்

XVII. நிதியிடப்படாத கடன் கணக்கில் (Unfunded Debt) ஐந்தாண்டுகளில் பெற்ற நிகர வரவு

XVIII. அரசாங்கம் ஏற்ற உத்தரவாதங்கள் (Guarantees) விவரம் (1963 ஆண்டு இறுதியில் நின்றபடி)

XIX. சர்வதேச நிறுவனங்களுக்குக் கொடுத்த உதவித் தொகை விவரம்

XX. வருமான வரி விகித விவரணம்

XXI. வழிவகை (Ways and Means) பட்ஜெட் சுருக்கம் (9 ஆண்டுகளுக்குப் புள்ளிகள்).

## மாநில அரசாங்கங்களின் குறிப்பு (1964—65)

மத்திய அரசாங்க நிதிநிலைக் குறிப்பில் உள்ளதுபோல், மாநிலக் குறிப்புகளிலும் பல விவரங்கள் இருக்கும். உதாரணமாக, 1964–65 ஆண்டுத் தமிழ்நாட்டு நிதிநிலைக் குறிப்பில் பின்வரும் விவரங்கள் இருந்தன :—

**முன்னுரை**

**பகுதி** I—மூன்றுண்டுகளுக்கு (1962–63, 1963–64, 1964–65) பட்ஜெட்டில் உள்ளபடி நிதிநிலைச் சுருக்கமும், விளக்க மும் மதிப்புரையும்

**பகுதி II**—(ரெவின்யூ கணக்கு) வருவாய் விவரம் (ஒவ்வொரு பெருந் தலைப்பிற்குத் தனித்தனி விவரம்) மானியக் கோரிக்கைகள் விவரம் (ஒவ்வொரு மானியத்திற்கும் முழு விவரம்)

**பகுதி II. A**—கணக்குகளின் சில தலைப்புகள் பற்றிய விவரம் (ஒவ்வொரு தலைப்பிலும் சேரும் வரவுசெலவு வகைகளைப் பற்றிய, பொதுவிதிகள், வருவாய் அல்லது செலவு வகையென மூன்று கூறுகளாகக் கொடுக்கப்பட்டது).

**பகுதி III**—உடன்சேர்க்கைகள்.

I. பட்ஜெட்டில் சேர்க்கப்பட்ட புதுத் திட்டங்களின் விவரம்

II. அரசாங்கச் சொத்து, பொறுப்பு (Assets and Liabilities) விவரம்.

III—IV. பஞ்ச நிவாரணநிதி, ஜமீன் ஒழிப்பு நிதி—இவைகளின் கணக்குகள்.

V. மத்திய அரசாங்கத்திலிருந்து பெற்ற கடன்களின் விவரம்.

VI. அரசாங்கங்கள் ஏற்ற உத்தரவாதங்களின் விவரம்.

VII. ரெவின்யூ கணக்கு—வரவுசெலவு விவரம் (1953–54 ஆண்டிலிருந்து 1964–65 வரை புள்ளிகள்).

VIII. ரெவின்யூ கணக்குச் செலவினங்களின் பாகுபாடு (அதிகாரிகளின் சம்பளம், இதர பணியாளர்களின் சம்பளம், படி, அலுவலகச் செலவு, மானியங்கள் முதலிய கூறுகளின் புள்ளிகள்—மூன்ருண்டுகளுக்கு).

VIII. A—மூன்ருண்டுகளில் (1962–63, 1963–64, 1964–65) பணியாளர்கள் செலவுகளின் ஏற்றத்தாழ்வு விவரம்—மொத்த வருவாயில் இச்செலவின் சதவீதம்.

IX. நடைமுறை ஆண்டுக்கான (1963–64) சில திட்டங்களின் மதிப்பீட்டுச் செலவில் ஏற்பட்டுள்ள உயர்வு விவரம்.

X. ஸ்தல ஸ்தாபனங்களுக்கு அளித்த உதவி விவரம் (1963–64, 1964–65).

XI. அரசாங்கக் கடன்களின் விவரம் (பொது மக்களிடமிருந்து பெற்றது, மத்திய அரசாங்கத்திடமிருந்து பெற்றது முதலியவைகளுக்கு முழு விவரம்).

XII. அமெரிக்க உதவி (T. C. A. திட்டம்) விவரம்.

XIII. நிதிக் கமிஷன் சிபாரிசுகள்.

**இறுதிப் பகுதி**—பொருள் குறிப்பு அகராதி

## நிதிநிலை அறிக்கை உரை (Budget Speech)

ஒவ்வோர் அரசாங்க நிதி அமைச்சரின் வரவுசெலவுத் திட்ட உரை (Budget Speech) தத்துவத்தில் ஓர் அரசியல் பத்திரமேயாகும். ஆண்டு முடிவிலும் ஆண்டுத் துவக்கத்திலும் நிதி நிர்வாகத்தின் முக்கிய ,அம்சங்களை நிதி அமைச்சர் விமர்சனம் செய்கிறார் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், இதன் தலையாய நோக்கம், தாம் எந்தக் கட்சிக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கிறாரோ அக்கட்சியின் கொள்கைகள், வேலைத் திட்டங்கள்மீது கவனத்தைத் திருப்புவதும், அவைகள் எவ்வளவு தூரம் நிறைவேற்றப்பட்டுள்ளன என்பதையும் வரவுசெலவுத் திட்ட ஆண்டில் மேற்கொண்டு, அவைகளை எப்படி அமலாக்குவது என்பதையும் குறிப்பிடுவதாகும். இந்தக் கொள்கைகள் சரியானவையா? அமல்முறை திட்டமானதாகவும் சிக்கனமானதாகவும் இருக்கிறதா? என்பவைகளை உறுதிப்படுத்திக்கொள்வது சட்டசபை அங்கத்தினர்களின் கடமை.

ஒரு மாநில ஆண்டு பட்ஜெட்டை, மேற்சபையில் (Legislative Council) சமர்ப்பிக்கும்போது, அச்சபையின் அங்கத்தினராய் நிதித் துறைப் பொறுப்பு வகிக்காத ஓர் அமைச்சரால் ஒரு தனிஉரை நிகழ்த்தப்படுவதும் உண்டு. மத்திய அரசாங்கத்தில் ரெயில்வே பட்ஜெட் தனியாக அத்துறை அமைச்சரால் முன்னதாகச் சமர்ப்பிக்கப் பட்டு, விவாதம், மசோதா முதலியவை தனியாகவே இருக்கும்.

நிதி அமைச்சரின் உரையோடு சில முக்கிய இணைப்புகளும் அச்சிடப்பட்டிருப்பது உண்டு.

உதாரணமாக, தமிழ்நாட்டில், 1964–65 ஆண்டு பட்ஜெட் சம்பந்தமாக, பின்கண்ட இணைப்புகள் இருந்தன :—

இணைப்பு I-ல் 'மாநில ரெவின்யூ கணக்கில் வருவாயும் செலவினமும் காண்பிக்கப்பட்டன. (11 ஆண்டுகளுக்குப் புள்ளிகள்.)

இணைப்பு II-ல் .அரசாங்க முதலீட்டு விவரம் இனவகையில் தரப்பட்டது. (1946—47 ஆண்டிலிருந்து 1964—65 ஆண்டு வரை புள்ளி.)

இணைப்பு II A-ல் மாநில ரெவின்யூ கணக்கில் சேராத மூலதனச் செலவினம் பெருந்தலைப்புகளின் கீழ் காட்டப் பட்டது. (1946–47 ஆண்டிலிருந்து 1964–65 ஆண்டு வரை புள்ளி.)

இணைப்பு III-ல் மாநிலக் கடன் நிலையைக் காட்டும் பட்டியல் கொடுக்கப்பட்டது.

இணைப்பு IV-ல் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப் பட்டுள்ள தனித் திட்டங்களுக்காக, மொத்தமாக ஒதுக்கப் பட்ட நிதி விவரமும், ஆண்டுவாரியில் செலவுக் கணக்கும் இருந்தன.

## சட்டசபைகளில் விவாதமும் வாக்களிப்பும்

ஓர் அரசாங்க நிதி அமைச்சரால் ஆண்டு நிதிநிலை விவரணம் உரிய சட்டசபையில் சமர்ப்பிக்கப்பட்ட பிறகு, மேல்நடக்க வேண்டிய விவாதத்திற்கும் வாக்களிப்பு முதலியவைகளுக்கும், ஒரு குறிப்பிட்ட முறை அந்தந்தச் சட்டசபைகளால் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. (அரசியல் அமைப்புப் பிரிவுகள் 119, 209-ல் இந்த அதிகாரம் முறையே பார்லிமென்ட் சபைக்கும் மாநிலச் சட்டசபைக்கும் அளிக்கப்பட்டுள்ளது.) எல்லாச் சட்டசபை முறைகளும், பெரும்பாலும் ஒரே வழியனவாக இருக்கும். உதாரணமாக, தமிழ்நாட்டு சட்டசபைகளில் வழக்கத்திலுள்ள முறை பின்வருமாறு :—

## கீழ்ச் சட்டசபையின் விதிகள்
## (Legislative Aseembly Rules)

(1) ஒவ்வோர் ஆண்டிலும், அரசாங்க பட்ஜெட், இதற்கென மாநில கவர்னரால் குறிக்கப்பட்ட நாளில் இச்சட்டசபைக்குச் சமர்ப்பிக்கப்பட வேண்டும்.

பட்ஜெட் சமர்ப்பிக்கப்பட்ட அதே நாளில், அதன் மேல் ஒரு விவாதமும் இருக்கக்கூடாது.

(2) சட்டசபை, பட்ஜெட்டை இருநிலைகளில் பரிசீலனை செய்யும்— (i) பொது விவாதம் (ii) மானியக் கோரிக்கைகளுக்கு வாக்களிப்பு.

சபாநாயகர், அரசாங்கத் தலைவரோடும் காரிய ஆலோசனைக் கமிட்டியோடும் கலந்துகொண்டு, மேற்கண்ட இரு நிலைகளுக்கும், தக்க கால அளவை நிர்ணயிப்பார். (பொது விவாதத்திற்கு எட்டு நாளுக்கு மேலும், மானியக் கோரிக்கைகளின் வாக்களிப்புக்கு இருபது நாளுக்கு மேலும் இருக்காது.)

(3) பொது விவாதத்திற்கென ஒதுக்கப்பட்ட நாட்களில் பட்ஜெட் முழுவதையும் பற்றிப் பேசலாம்; அல்லது, அதைச் சார்ந்த கொள்கைகளைப் பற்றி விவாதிக்கலாம் (நடைமுறையில், இந்த விவாதத்தின்போது எல்லாவிதமான விஷயங்களும் பேசப்படுகின்றன). ஆனுல், இந்த நிலையில், ஒருவிதமான பிரேரேபணையையும் கொண்டு வரக்கூடாது; வாக்களிப்புக் கோரிக்கைகளும் சமர்ப்பிக்கப் படக்கூடா.

பொது விவாதத்தின் முடிவில் பதில்சொல்லும் உரிமை நிதி அமைச்சருக்கு உண்டு. வேண்டுமெனக் கருதினுல், ஒவ்வோர் அங்கத்தினரும் பேசுவதற்கு ஒரு கால அளவை சபாநாயகர் ஏற்படுத்தலாம்.

(4) சபாநாயகர், சபையின் தலைவரோடும் காரிய ஆலோசனைக் கமிட்டியோடும் கலந்துகொண்டு, ஒவ்வொரு மானியக் கோரிக்கைகளின் மேல் செய்யவேண்டிய விவாதத்திற்கும், ஒரு கால அளவைக் குறிக்கலாம். மானியக் கோரிக்கைகளை எந்த வரிசையில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதையும் நிச்சயம் செய்யலாம்.

மானியக் கோரிக்கைகளுக்கு வாக்களிப்பதற்காக நிச்சயிக்கப்பட்ட நாட்களில் ஒரு குறிப்பிட்ட நேரத்திற்குமுன் (கேள்வி, பதிலைத் தவிர) வேருேர் அலுவலை மேற்கொள்ளக்கூடாது. ஆனுல், சபாநாயகர் இதற்கு விதி விலக்குச் செய்யலாம்.

(5) ஒவ்வொரு மானியக் கோரிக்கையின் விவாதத்திற்கென நிச்சயிக்கப்பட்ட நாளில் அந்த மானியக் கோரிக்கையின் விஷயத்தை அந்நாளோடு முடிவு செய்யும்படி, அனுமதித்த எல்லாப் பிரச்சினைகளின் மீதும் சபையின் அபிப்பிராயம் என்னவென சபாநாயகர் கேட்க வேண்டும். மானியக் கோரிக்கைகளின் வாக்களிப்புக்கு என்று நிச்சயிக்கப்பட்ட கடைசி நாளில், ஒருகுறித்த நேரத்தில் விவாதிக்கப் படாமல், எஞ்சி நிற்கும் எல்லாக் கோரிக்கைகளையும் முடிவு செய்யுமாறு சபையின் அபிப்பிராயத்தைக் கேட்பார். அடுத்துவரும் விதிப்படி, ஒரு மானியத்திற்காகக் கோரப்பட்ட தொகையைக் குறைப்பதற்கு ஏதாவது ஒரு பிரேரேபணை இருந்தால், அதுவும் இப்பொழுது முடிவு செய்யப்படவேண்டும்.

(6) ஒவ்வொரு மானியக் கோரிக்கையையும், அதில் அடங்கிய செலவினங்களில் பெரும்பகுதிக்குப் பொறுப்பேற்கும் அமைச்சர் பிரேரேபிப்பார்; பொதுவாயிருக்கும் கோரிக்கைகளை நிதி அமைச்சர் பிரேரேபணை செய்யலாம். பிரேரேபணையின் வாசகம் பின்வருமாறு இருக்கும் :—

"கவர்னரின் சிபாரிசின் பேரில்.........ரூபாய்க்கு மேற்படாமல் குறிப்பிட்ட ஆண்டில் இந்தக் குறிப்பிட்ட செலவுக்காக மானியம் வழங்க வேண்டுமென்று நான் பிரேரேபிக்கிறேன்."

ஒரு மானியம் வேண்டும் அமைச்சர், அதே சமயத்தில், அக் கோரிக்கையைச் சார்ந்த கொள்கைகளுக்கு விளக்கம் தரும்வகையில், ஓர் உரை நிகழ்த்தலாம். அதற்குப் பிறகு, எந்த ஓர் அங்கத்தினரும் அந்தக் கோரிக்கையின் மொத்தத் தொகையை ஒரு குறித்த அளவுக்குக்

குறைக்கவேண்டுமென்று பிரேரேபிக்கலாம். ஆனால் கோரப்பட்ட மொத்தத் தொகையை அதிகப்படுத்தவோ அல்லது அந்தக் கோரிக்கையின் நோக்கத்தை மாற்றும் வகையிலோ, ஒரு பிரேரேபணை செய்யக் கூடாது. (ஒரு துறைக்காகக் கோரப்பட்ட தொகை போதாது என்று ஓர் அங்கத்தினர் எண்ணினாலும், அதை வெளியிட மானியத் தொகையைக் குறைக்கவேண்டும் என்ற பிரேரேபணையைத்தான் செய்ய வேண்டும். அந்தப் பிரேரேபணையால் அந்த விஷயத்தில் அவருடைய அதிருப்தியைக் காட்டுகிறார் என்று மட்டும் கருதவேண்டும்; உண்மையில் கோரப்பட்ட தொகையைக் குறைக்கவேண்டும் என்பது அவர் நோக்கமெனக் கொள்ளக்கூடாது. ஒரு மானியக் கோரிக்கையின் விவரணத்தில் உள்ள ஒருவகைச் செலவைப் பற்றி மட்டும் அங்கத்தினர் குறிப்பிட விரும்பினாலும், மானியத்தின் மொத்தத் தொகையைக் குறித்துத்தான் வெட்டுப் பிரேரேபணை கொண்டு வரவேண்டும்.)

எந்த அங்கத்தினரும் தாம் பிரேரேபிக்கக் கருதும் வெட்டு விவரத்தை அதைச் சேர்ந்த கோரிக்கை வாக்களிப்புக்கு வரும் நாளுக்கு முன்னரே சபாநாயகருக்குத் தெரிவித்துவிடவேண்டும். ஒரு கோரிக்கையின் மேல் பலவெட்டுப் பிரேரேபணைகள் அங்கத்தினரால் தெரிவிக்கப் பட்டிருந்தால், அவைகளை வகைப்படுத்தி ஒரு குறிப்பிட்ட வரிசையில் விவாதம் செய்யும்படி சபாநாயகர் நிச்சயிப்பார்.

(7) மானியக் கோரிக்கைகள் வேண்டப்படுவதற்கென சபாநாயகரால் நிச்சயிக்கப்பட்ட கடைசி நாளுக்கு முன், அவரால் குறிக்கப்பட்ட வேறொரு நாளில் முதலிலேயே வெளியிடப்படாத கோரிக்கைகளைச் சமர்ப்பிக்க அனுமதி பெறலாம். மாநில கவர்னரால் இந்த விதமான புதுக் கோரிக்கைகள், மிகவும் அவசரம் என்று கருதப்பட்டு, அவை முந்தைய மதிப்பீடுகளில் சேர்க்கப்படாத புது விஷயங்களைப்பற்றியே இருந்தால்தான், புதுக்கோரிக்கைகள் சமர்ப்பிக்கப்படலாம். இந்தப் புதுக் கோரிக்கைகளை, ஏற்கெனவே சமர்ப்பிக்கப்பட்ட கோரிக்கைகளோடு உரிய வகையில் சேர்த்து, அதே மாதிரி விவரங்களுடன் கொடுப்பதே முறையாகும்.

### மேற்சபையின் விதிகள் (Legislative Council Rules)

(1) ஒவ்வோர் ஆண்டிலும், அரசாங்க பட்ஜெட் இதற்கென மாநில கவர்னர் குறிப்பிட்ட நாளில், இச் சபைக்குச் சமர்ப்பிக்கப்படவேண்டும். பட்ஜெட் சமர்ப்பிக்கப்பட்ட அதே நாளில், அதன் மேல் ஒரு விவாதமும் இருக்கக்கூடாது.

(கீழ்ச்சபைக்கு பட்ஜெட் சமர்ப்பிக்கப்பட்டபின்தான், அது மேற்சபையில் சமர்ப்பிக்கப்படுவது முறையாகக் கருதப்படுகிறது).

(2) தலைவர், இச்சபையின் தலைவரோடும் காரிய ஆலோசனைக் கமிட்டியோடும் கலந்துகொண்டு, பட்ஜெட்டின்மீது பொது விவாதம் செய்ய, போதிய நாட்களைக் குறிப்பிடுவார். (மேற்சபையில் மானியக் கோரிக்கைகள் சமர்ப்பிக்கப்படுவதில்லை. அங்குப் பொது விவாதம் மட்டும் உண்டு; இதுவும் கீழ்ச்சபையின் விவாதத்திற்குப் பின் இருப்பதே முறையெனச் சொல்லப்படுவதும் உண்டு.)

பொது விவாதத்திற்கு என்று ஒதுக்கப்பட்ட நாட்களில், பட்ஜெட் முழுவதையும் பற்றிப் பேசலாம்; அல்லது அதைச் சார்ந்த கொள்கைகளைப் பற்றி விவாதிக்கலாம். (நடைமுறையில், இந்த விவாதத்தின் போது எல்லாவிதமான விஷயங்களும் பேசப்படுகின்றன.) ஆனால், இந்த நிலையில் ஒருவிதமான பிரேரேபணையையும் கொண்டுவரக் கூடாது; பட்ஜெட்டை வாக்களிப்புக்கும் ஈடுபடுத்தக்கூடாது.

பொது விவாதத்தின் முடிவில், பதில் சொல்லும் உரிமை நிதி அமைச்சருக்கு உண்டு. வேண்டுமெனக் கருதினால், ஒவ்வோர் அங்கத்தினரும் பேசுவதற்கு ஒருகால அளவைத் தலைவர் ஏற்படுத்தலாம்.

## நிதி ஒதுக்கு மசோதா

கீழ்ச் சட்டசபையில், மானியக் கோரிக்கைகளுக்கு வாக்களிப்பு ஆனபின், தொடர்ந்து செய்யவேண்டிய காரியத்தைப் பற்றி, அரசியல் அமைப்புப் பின்வருமாறு விதிக்கிறது.

## பார்லிமென்ட் சபை

"114 (1)—மக்கட் சபை 113ஆவது பிரிவின் கீழ்க் கிரான்டுகளைச் செய்த பிறகு இயன்ற விரைவில்—

(அ) அப்படி மக்கட் சபை செய்த கிரான்டுகளுக்கும்

(ஆ) இந்தியாவின் சஞ்சித (தொகு) நிதியின்பேரில் சாட்டப்பட்டவையும், ஆனால் முன்னரே பார்லிமென்டுக்குச் சமர்ப்பித்த விவரணத்தில் கண்ட தொகைக்கு எப்படியும் மேற்படாதவையுமான செலவுகளுக்கும்,

வேண்டிய பணங்களையெல்லாம் இந்தியாவின் சஞ்சித (தொகு) நிதியிலிருந்து ஒதுக்கி வைக்க ஏற்பாடு செய்வதற்கான மசோதா ஒன்று கொணரப்படவேண்டும்.

(2) அப்படிச் செய்யப்பட்ட கிரான்டின் தொகையை மாற்றும், அல்லது அதன் நோக்கத்தை வேருக்கும், அல்லது இந்தியாவின் சஞ்சித (தொகு) நிதியின்பேரில் சாட்டப்பட்ட ஒரு செலவின் தொகையை மாற்றும் தன்மை வாய்ந்த எத்திருத்தத்தையும் பார்லிமென்டுச் சபை எதிலும் அத்தகைய மசோதாவில் பிரேரேபித்தலாகாது; ஒரு திருத்தம்

இப்பகுதியின் கீழ்வரத் தகுதியற்றதா என்பது பற்றி தலைமை தாங்குபவருடைய தீர்ப்பே முடிவானதாகும்.

(3) (துணை—மானியம், முன் மானியம், அசாதாரண மானியம் இவைகளைப் பற்றிய) 115ஆம், 116ஆம் பிரிவுகளின் ஷரத்துக்களுக்கு உட்பட்டு, இப்பிரிவின் ஷரத்துக்களின்படி நிறைவேற்றப்பட்ட சட்டத்தினல் செய்த ஒதுக்கத்தின்படியன்றி, இந்தியாவின் சஞ்சித (தொகு) நிதியிலிருந்து பணம் எதையும் எடுத்தலாகாது."

## மாநிலச் சட்டசபை

"204 (1) அந்தச் சபை 203ஆம் பிரிவின் கீழ் கிரான்டுகளைச் (மானியங்களை) செய்த பிறகு இயன்ற விரைவில்—

(அ) அப்படி அந்தச் சபை செய்த கிரான்டுகளுக்கும் (மானியங்களுக்கும்),

(ஆ) இராச்சியத்தின் (மாநிலத்தின்) சஞ்சித (தொகு) நிதியின் பேரில் சாட்டப்பட்டவையும், ஆனல் முன்னரே சபை அல்லது சபைகளுக்குச் சமர்ப்பித்த விவரணத்தில் கண்ட தொகைக்கு எப்படியும் மேற்படாதவையுமான செலவுகளுக்கும்,

வேண்டிய பணங்களையெல்லாம் இராச்சியத்தின் (மாநிலத்தின்) சஞ்சித நிதி (தொகு நிதி)யிலிருந்து ஒதுக்கிவைக்க ஏற்பாடு செய்வதற்கான மசோதா ஒன்று கொணரப்படவேண்டும்.

(2) அப்படிச் செய்யப்பட்ட கிரான்டின் (மானியத்தின்) தொகையை மாற்றும், அல்லது அதன் நோக்கத்தை வேருக்கும், அல்லது இராச்சியத்தின் (மாநிலத்தின்) சஞ்சித நிதியின் (தொகு நிதியின்) பேரில் சாட்டப்பட்ட ஒரு செலவின் தொகையை மாற்றும் தன்மை வாய்ந்த எத்திருத்தத்தையும் இராச்சியத்தின் (மாநிலத்தின்) சட்டசபை எதிலும் அத்தகைய மசோதாவில் பிரேரேபிக்கலாகாது; ஒரு திருத்தம் இப்பகுதியின் கீழ்வரத் தகுதியற்றதா என்பது பற்றி தலைமை தாங்குபவருடைய தீர்ப்பே முடிவானதாகும்.

(3) (துணை-மானியம், முன் மானியம், அசாதாரண மானியம் இவைகளைப் பற்றிய) 205ஆம், 206ஆம் பிரிவுகளின் ஷரத்துக்களுக்கு உட்பட்டு, இப்பிரிவின் ஷரத்துக்களின்படி நிறைவேற்றப்பட்ட சட்டத்தினல் செய்த ஒதுக்கத்தின்படியன்றி, இராச்சியத்தின் (மாநிலத்தின்) சஞ்சித(தொகு) நிதியிலிருந்து பணம் எதையும் எடுக்கலாகாது."

மேற்கண்டபடி சமர்ப்பிக்கப்படும் நிதி ஒதுக்கு மசோதா (Appropriation Bill) புதிய நிதி ஆண்டுக்கு முன்னதாக, அதாவது ஏப்ரல் முதல் தேதிக்குமுன் நிறைவேற்றப்பட்டு ராஷ்டிரபதி/கவர்னரின்

சம்மதத்துடன் வெளியிடப்படவேண்டும். ஆயினும், சில சமயங்களில் மானியக் கோரிக்கைகளை விவாதிக்க உறுப்பினர்களுக்குப் போதிய அவகாசம் அளிப்பதற்காக, கோரிக்கைகள் மீது விவாதம், புதிய நிதி ஆண்டின் தொடக்கத்திற்குப் பின்பும் நடத்தப்படலாம். இம்முறை மேற்கொள்ளப்பட்டால், முழு ஆண்டுக்கு வேண்டிய செலவுக்கான மசோதா நிறைவேற்றப்படுவதற்கு முன்பு ஏற்கவேண்டிய இடைக் காலத்துக்கான தேவைக்கு வேண்டிய தொகையைப் பெறுவதற்காக, சட்டசபையிடம் ஒரு முன் மானியத் தொகையைப் பெறவேண்டும். அத்தனிமுறை மானிய அங்கீகாரத்திற்கு அக்கவுன்ட் வோட்டு (மொத்தக் கணக்கு மானியம்—Vote on Account) என்று பெயர் (அரசியல் அமைப்புப் பிரிவுகள் 116, 206). சாதாரணமாக, இரண்டு அல்லது மூன்று மாதத்திற்குரிய நிதித் தேவைகள் இம்முறையில் தரப் படுவது வழக்கம். மானியக் கோரிக்கைகள் முழுவதும் விவாதிக்கப் பட்டு அனுமதி பெற்ற பின்னர், முழு ஆண்டுக்கான நிதி ஒதுக்கு மசோதா கொண்டுவரப்படும். மொத்தக் கணக்கில் அனுமதிக்கப்பட்ட தொகைகள், இந்தப் பூரண ஒதுக்கு மசோதாவில் கண்டுள்ள தொகை யுடன் சேர்ந்து விட்டதாகக் கருதப்படும். (ஒரு பொதுத் தேர்தலுக்குப் பின் ஏற்படும் அமைச்சர் அவை, புதுப் பட்ஜெட்டைத் தயாரிக்கு முன்னும், இந்த மொத்தக் கணக்கு மானிய முறை பின்பற்றப்படலாம்.)

நிதி ஒதுக்கு மசோதாக்கள் விஷயமான நடைமுறையைப் பற்றி, சட்ட சபைகளும் விதிகள் இயற்றியுள்ளன. இவைகள் எல்லாம் பொது வாக ஒரே தன்மையனவாகும். உதாரணமாக, தமிழ்நாட்டுச் சட்ட சபை முறைகளைக் காண்போம்.

## கீழ்ச் சட்டசபையின் விதிகள்
## (Legislative Assembly Rules)

(1) ஒரு நிதி ஒதுக்கு மசோதா விஷயமாக பற்றப்படவேண்டிய முறை, மற்ற மசோதாக்களுக்கு உள்ளதுபோல் இருக்கும். ஆனால், சபாநாயகர் அவசியமான மாறுதல்களைச் செய்யலாம். எந்த முறையும் அரசியல் அமைப்பு விதிகளுக்கு முரணாகாத வகையிலே நிர்ணயிக்கப் படவேண்டும்.

(2) ஒரு நிதி ஒதுக்கு மசோதாவின் மீது நடக்கும் விவாதத்தின் போது, பொது முக்கியத்துவம் உள்ளதாகவோ அல்லது நிர்வாகக் கொள்கையைப் பற்றியதாகவோ இருக்கும் விஷயங்கள்தாம் கூறப்பட வேண்டும் ; மேலும், ஏற்கெனவே அந்தந்த மானியக் கோரிக்கைகள் சமர்ப்பிக்கப்பட்டபோது நடந்த விவாதத்தில் கூறப்படாதனவையாக இருக்கவேண்டும்.

(3) ஒரு நிதி ஒதுக்கு மசோதா, ஏற்கெனவே ஒரு துறைக்கு அனுமதிக்கப்பட்ட ஆதார மானியத் தொகையை அதிகமாக்கும் துணை மானிய விஷயமாக இருந்தால், அந்த மசோதாவின் மீது நடக்கும் விவாதம், அந்தத் துணை-மானியத்தில் அடங்கிய விவரணங்களைப் பற்றியதாகவே இருக்கவேண்டும்; ஆதார மானியத்தைப் பற்றியோ அல்லது அதைச் சார்ந்த கொள்கைகளைப் பற்றியோ, அந்த விவாதத் தின்போது ஒன்றும் கூறக்கூடாது; ஆனால், விவாதத்திற்கு விஷய மான ஒரு தனி அம்சத்தை விளக்கும் அளவுக்கு அவைகளைக் குறிக்கலாம்.

### மேற்சபை விதி (Legislative Council Rule)

ஒரு நிதி ஒதுக்கு மசோதா விஷயமாக பற்றப்படவேண்டியமுறை, மற்ற மசோதாக்களுக்கு உள்ளதுபோல் இருக்கும். ஆனால், தலைவர் அவசியமான மாறுதல்களைச் செய்யலாம். எந்த முறையும் அரசியல் அமைப்பு விதிகளுக்கு முரணாகாத வகையிலே நிர்ணயிக்கப்பட வேண்டும்.

### நிதி மசோதாக்களைப் பற்றிய சில விசேஷ விதிகள்

#### பணமசோதா

அரசியல் அமைப்பில் (109, 110, 117, 198, 199, 207 பிரிவுகளில்) உள்ள விதிகளின் சாராம்சம் பின்வருமாறு:—

(1) அடியிற்கண்ட விஷயங்களில் எல்லாவற்றையுமோ அல்லது எதையேனுமோ பற்றிய ஷரத்துக்கள் மட்டும் ஒரு மசோதாவில் அடங்கியிருந்தால், அது 'பணமசோதாவாக' (Money Bill) கருதப்படும்; அவையாவன:—

(அ) எந்த வரியையும் விதித்தல், ஒழித்தல், தவிர்த்தல், மாற்றல் அல்லது முறைப்படுத்தல்;

(ஆ) கடன் கொள்வதை முறைப்படுத்தல், அல்லது அரசாங்கம் உத்தரவாதம் அளித்தல், அல்லது ஏற்றுக்கொண்ட, அல்லது ஏற்றுக்கொள்ளும் நிதிப் பொறுப்புக்களைப் பற்றிய சட்டத்தைத் திருத்துதல்;

(இ) தொகு நிதியை அல்லது எதிர்பாராச் செலவு நிதியை வைத் திருத்தல், அத்தகைய நிதி எதிலும் பணம் போடுதல் அல்லது அதிலிருந்து பணம் எடுத்தல்;

(ஈ) தொகு நிதியிலிருந்து பணத்தை ஒதுக்கி வைத்தல்;

(உ) எச்செலவையும் தொகு நிதியின்பேரில் சாட்டப்பட்ட செல வென்று அறிவித்தல், அல்லது அத்தகைய செலவுத் தொகையை அதிகப்படுத்தல்;

(ஊ) தொகு நிதிக்காகவோ பொதுக் கணக்குக்காகவோ பணத்தைப் பெற்றுக்கொள்ளுதல் அல்லது அத்தகைய பணத்தை வைத்திருத்தல் அல்லது கொடுத்தல் ; அல்லது

(எ). (அ) முதல் (ஊ) வரையுள்ள உட்பகுதிகளில் குறிப்பிட்ட விஷயங்களில் எதையும் சார்ந்த ஒரு விஷயம்.

ஒரு மசோதா பண மசோதாவா அல்லவா என்பது பற்றிய பிரச்சினை ஏதேனும் எழுமானால், சம்பந்தப்பட்ட சபாநாயகர் அது பற்றி அளிக்கும் தீர்ப்பே முடிவானதாகும்.

மேற்சபைக்கு அனுப்பப்படும்போதும், ராஷ்டிரபதி அல்லது கவர்னரிடம் சம்மதத்திற்காகச் சமர்ப்பிக்கப்படும்போதும் பண மசோதா ஒவ்வொன்றின் பேரிலும் அது பண மசோதா என்று சபாநாயகர் கையெழுத்திட்ட சரியொப்பம் எழுதப்பட வேண்டும்.

(2) 'பண மசோதா' விஷயமான எதற்காகவேனும் ஏற்பாடு செய்யும் ஒரு மசோதாவையாவது திருத்தத்தையாவது, பார்லிமென்டில் கொண்டுவருவதற்கு ராஷ்டிரபதியின் சிபாரிசு இன்றியமையாதது. அவ்வாறு ஏற்பாடு செய்யும் ஒரு மசோதாவை, மேற்சபையில் கொணரலாகாது. இம்முறை, மாநிலச் சட்டசபைகளுக்கும் பொருந்தும் ; ஆனால் இவைகளுக்கு அந்தந்த மாநில கவர்னரின் சிபாரிசு தான் தேவைப்படும்.

**குறிப்பு** :—வரி ஒன்றைக் குறைப்பதற்காவது ஒழிப்பதற்காவது ஏற்பாடு செய்யும் ஒரு திருத்தத்தைப் பிரேரேபிப்பதற்கு இப்பகுதியின் கீழ்ச் சிபாரிசு வேண்டுவதில்லை.

ஒரு மசோதாவில் அல்லது திருத்தத்தில், அபராதங்களை அல்லது மற்றைய பணத் தண்டனைகளை விதிப்பதற்காக, அல்லது லைசென்சுகளுக்கான கட்டணங்களையோ, அல்லது சேவை புரிந்ததற்கான கட்டணங்களையோ கேட்பதற்காக, அல்லது கொடுப்பதற்காக, ஏற்பாடு செய்துள்ள காரணத்தால்மட்டுமாவது, அல்லது ஸ்தலக் காரியங்களுக்காக ஒரு ஸ்தல அதிகாரியோ அல்லது நிலையமோ எவ்வரியையேனும் விதித்தல், ஒழித்தல், தவிர்த்தல், மாற்றல் அல்லது முறைப்படுத்தல் இவற்றிற்காக ஏற்பாடு செய்துள்ள காரணத்தாலாவது, அம்மசோதா அல்லது திருத்தம் மேற்சொன்ன விஷயங்களில் எதற்காகவேனும் ஏற்பாடு செய்வதாகக் கருதப்படமாட்டாது.

(3) மசோதா ஒன்றைச் சட்டமாக்கி அமலுக்குக் கொண்டு வந்தமையால், இந்தியாவின் அல்லது மாநிலத்தின் தொகு நிதியிலிருந்து செலவு செய்யவேண்டி வருமானால், அம்மசோதாவை ஆலோசனை செய்யவேண்டும் என்று, முறையே ராஷ்டிரபதி அல்லது கவர்னர்

அதற்குச் சிபாரிசு செய்திருந்தாலன்றி, பார்லிமென்ட் அல்லது மாநிலத்தின் சட்டசபை எதனுலும் அம்மசோதா நிறைவேற்றப்படலாகாது.

(4) பண மசோதா ஒன்று கீழ்ச்சபையால் நிறைவேற்றப்பட்ட பிறகு, மேற்சபைக்கு அதன் சிபாரிசுகளுக்காக அனுப்பப்பட வேண்டும்; மேற்சபை அம்மசோதாவைப் பெற்றுக்கொண்ட தேதியிலிருந்து பதிஞன்கு நாட்களுக்குள் தன் சிபாரிசுகளுடன் மசோதாவைக் கீழ்ச்சபைக்குத் திருப்பியனுப்பவேண்டும்; அதன்பேரில் கீழ்ச்சபை மேற்சபையின் சிபாரிசுகள் எல்லாவற்றையுமோ அல்லது அவைகளில் எதையேனுமோ ஒப்புக்கொள்ளலாம் அல்லது நிராகரிக்கலாம்.

மேற்சபையின் சிபாரிசுகளில் எதையேனும் கீழ்ச்சபை ஒப்புக்கொண்டால், அந்தப் பண மசோதா மேற்சபையால் சிபாரிசு செய்யப்பட்டுக் கீழ்ச்சபையால் ஒப்புக்கொள்ளப்பட்ட திருத்தங்களுடன் இரு சபைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கருதப்படும்.

மேற்சபையின் சிபாரிசுகளில் எதையேனும் கீழ்ச்சபை ஒப்புக்கொள்ளாவிட்டால், அந்தப் பண மசோதா மேற்சபையால் சிபாரிசு செய்யப்பட்ட திருத்தங்களில் எதுவுமின்றிக் கீழ்ச்சபையால் நிறைவேற்றப்பட்ட உருவத்திலேயே இரு சபைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கருதப்படும்.

கீழ்ச்சபையால் நிறைவேற்றப்பட்டு, மேற்சபைக்கு அதன் சிபாரிசுகளுக்காக அனுப்பப்பட்ட பண மசோதா ஒன்று மேற்சொன்ன பதிஞன்கு நாட்களுக்குள் கீழ்ச்சபைக்குத் திருப்பியனுப்பப்படாவிட்டால், அக்காலம் முடிவடைந்ததும் அது கீழ்ச்சபையால் நிறைவேற்றப்பட்டதாகக் கருதப்படும்.

மேற்கூறியபடி, ஒரு நிதி ஒதுக்கு மசோதா, சம்பந்தப்பட்ட சபைகளில் அனுமதிக்கப்பட்ட பின்னர், ராஷ்டிரபதி அல்லது கவர்னருடைய ஒப்புதலுக்காகச் சமர்ப்பிக்கப்படும். அவருடைய ஒப்புதல் கிடைத்தவுடன் மசோதா நிதி ஒதுக்குச் சட்டம் என்ற முறையில் அரசாங்க கெஜட்டில் வெளியிடப்படும். இந்தச் சட்டத்தின்படி அல்லாது, தொகு நிதியிலிருந்து யாதொரு தொகையையும் செலவுக்கு எடுத்துக்கொள்ளக் கூடாது. வேண்டும்போது, சாதாரண மானியங்கள் தவிர, துணை—மானியம், அதிக மானியம் முதலியவைகளையும் சட்டசபை அனுமதிக்கலாம். இவைகளுக்கு அரசியல் அமைப்பில் விதிகள் செய்யப்பட்டுள்ளன (பிரிவுகள் 115, 116, 205, 206). அவைகளின் சாராம்சம் பின்வருமாறு :—

### A. துணை-மானியமும் அதிக மானியமும்

(1) ஒரு நிதி ஆண்டில் முறையே செய்யப்பட்ட நிதி ஒதுக்குச் சட்டத்தினுல் ஒரு குறிப்பிட்ட பணிக்கு அனுமதிக்கப்பட்டுள்ள

தொகை, அவ்வாண்டுக் காரியங்களுக்குப் போதாதென்று தெரிய வந்தாலும், அவ்வாண்டுத் திட்டத்தில் முன் உத்தேசித்திராத ஒரு புதிய பணிக்காக (New Service) அதைச் சார்ந்தோ, கூடுதலாகவோ அந்த ஆண்டிலேயே செலவு செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டாலும், ஓர் ஆண்டில் ஏதாவது ஒரு பணிக்காக அவ்வாண்டில் அப்பணிக்கென அளிக்கப்பட்ட தொகைக்கு அதிகமாக ஏதேனும் செலவழிக்கப் பட்டிருந்தாலும், சந்தர்ப்பத்திற்கு ஏற்ப, அச்செலவின் உத்தேசத் தொகையைக் காட்டும் மற்றொரு விவரணத்தை உரிய சட்டசபைகளின் முன்னிலையில் வைக்கும்படி ராஷ்டிரபதி அல்லது கவர்னர் செய்ய வேண்டும்; அல்லது, செலவிடப்பட்டுள்ள அதிகத் தொகைக்கான கோரிக்கை ஒன்றை உரிய சட்டசபையில் கொணருமாறு செய்ய வேண்டும்.

(2) ஆண்டு நிதி விவரணத்தைப் பற்றியும், அதில் உள்ள சாட்டப் பட்ட செலவுகளையும் அல்லது மானியக் கோரிக்கைகளைப் பற்றியும், அச்செலவுகளுக்காகவோ மானியங்களுக்காகவோ, வேண்டிய தொகை களை உரிய தொகு நிதியிலிருந்து ஒதுக்குவதற்கு அதிகாரம் அளிக்கும் சட்டம் சம்பந்தமாகவும், எந்த விதிகள் பிரயோகிக்கப்படுகின்றனவோ, அவ்விதிகள் மேலே கூறப்பட்ட அதிகச் செலவுகள், கோரிக்கைகள், அவைகளுக்கு நிதி ஒதுக்குதல் ஆகிய விஷயமாகவும் பிரயோகிக்கப் படும்.

## B. மொத்தக் கணக்கு மானியம் (Votes on Account) விவரமில்லாப் பொது மானியம் (Votes of Credit) அசாதாரண மானியம் (Exceptional Grants)

(1) சம்பந்தப்பட்ட சட்டசபைக்குக் கீழே கண்ட அதிகாரமும் உண்டு:—

(அ) ஓர் ஆண்டில், முறைப்படி அவ்வாண்டு தொடங்குமுன் மானியங்கள் அனுமதிக்கப் பெற்று, நிதி ஒதுக்குச் சட்டம் செய்ய இயலாதிருந்தால், அவ்வாண்டின் ஒரு பகுதிச் செலவுக்கு வேண்டிய பணத்தை மொத்தக் கணக்கு மானியங்களாக முன்னரே அனுமதிக்கலாம்.

(ஆ) ஓர் எதிர்பாராப் பொறுப்பை அரசாங்கம் ஏற்க நேரிட்டு, சேவையின் மிக்க அளவினுலோ, நிர்ணயிக்க இயலாத தன் மையாலோ குறித்த ஆண்டு நிதி விவரணத்தில் சாதாரண மாகக் கொடுக்கப்படும் விவரணங்களுடன் கோரிக்கை இன்னதென்று கூற இயலாதபோது, அப்பொறுப்பை நிறை வேற்றுவதற்கு வேண்டிய ஒரு மானியத்தை அனுமதிக் கலாம்.

(இ) வேண்டுமானால் நிதி ஆண்டின் நடைமுறைச் சேவையின் பகுதி அல்லாத ஓர் அசாதாரண மானியத்தையும் அனுமதிக்கலாம்.

(ஈ) மேற்சொன்ன மானியங்களுக்கு வேண்டிய தொகையை உரிய தொகு நிதியிலிருந்து எடுத்துக்கொள்ள அதிகாரம் அளிக்கும் சட்டத்தையும் இயற்றலாம்.

(2) சாதாரண ஆண்டு நிதி ஒதுக்குச் சட்டம் விஷயமாகக் குறிக்கப்பட்ட முறைகளே மேலே கூறப்பட்ட விசேஷ மானியங்கள், சட்டம், இவைகள் விஷயமாகவும் அமையும்.

## துணை நிதி அறிக்கை
## (Supplementary Statement of Expenditure)

ஓர் ஆண்டு நடந்துகொண்டிருக்கும்போது, புதிய சில செலவுகள் ஏற்படலாம்; அவ்வாறான சமயங்களில், மீண்டும் சட்டசபை கூட்டப் பட்டு, எல்லா நடைமுறைகளும் முடியும்வரை அந்தச் செலவுகளை ஒத்திப்போட இயலாது போகலாம்; அந்நிலையில் சட்டசபையின் அங்கீகாரத்தைப் பின்னர் பெறக்கூடும் என்று கருதி, சம்பந்தப்பட்ட அரசாங்கம் இத்தகைய அவசரங்களுக்காகவே ஏற்படுத்தப்பட்டுள்ள 'எதிர்பாராச் செலவு நிதி'யிலிருந்து ராஷ்டிரபதி அல்லது கவர்னரின் அங்கீகாரத்துடன், வேண்டிய தொகையைப் பெறும்; பின்னர் கூடிய விரைவில்—அந்த நிதி ஆண்டு முடிவதற்குள்ளாக ஒரு துணை நிதி நிலை அறிக்கையைச் சட்டசபையில் சமர்ப்பிக்கவேண்டும்; இந்த அறிக் கையில், போதிய அளவுக்கு முன் அங்கீகாரம் இல்லாமல் அரசாங்கம் செய்துள்ள செலவு விவரங்கள் தெரிவிக்கப்பட்டு, துணை மானியங் கள் வேண்டப்படும். அரசியல் அமைப்பில், இதற்கென வகுத்துள்ள விதிகளை மேலே கண்டோம். துணை மானியக் கோரிக்கைகளை உரிய சட்டசபை அனுமதித்த பின்னர் எதிர்பாராச் செலவு நிதியிலிருந்து முன்னமே எடுக்கப்பட்ட பணம், மீண்டும் அந்த நிதியில் சேர்க்கப் படும். புதிய செலவுகள் இல்லாமற் போனாலும், முதலில் போட்ட மதிப்பீடு, அவ்வளவு சரியாக இல்லாமல் போய், நடைமுறைச் செலவுக்கு அதிகத் தொகை தேவைப்படலாம். இதற்கும், துணை நிதி நிலை அறிக்கை மூலம் தான் வழி செய்யவேண்டும்.

## புதிய திட்டச் செலவுகள்

ஆண்டு வரவுசெலவுத் திட்டத்தை அரசாங்கம் அமைப்பதில், மிகவும் யோசனைக்குரிய பகுதி புதிய திட்டச் செலவுகள் பற்றியதாகும். தற்காலத்தில் சேமநல நோக்குடன் அநேக திட்டங்களை மேற்கொள்ள வேண்டியிருப்பதால், அவ்வகையில் ஆண்டுதோறும் புதிய செலவுகளை

ஏற்க வேண்டியது அவசியமாகிறது. ஆனால், கிடைக்கக்கூடிய நிதி வசதிகளுக்கேற்பவே அரசாங்கத்தின் செலவுகளை அடக்கிக்கொள்வது முறையாகும். ஆகவே, புதிய செலவுகளைப்பற்றி முன்னமே ஆராய்ந்து, அவைகளின் முக்கியத்துவத்தைக் கருதி, திட்டங்களைத் தேர்ந்து எடுக்க வேண்டியிருக்கிறது. இதற்காக, நிதி அமைச்சர், திட்டத்திற்குப் பொதுவாகப் பொறுப்பு ஏற்கும் அமைச்சருடன் கலந்து ஆலோசித்து, திட்டங்களைத் தேர்ந்து எடுத்து, அவைகளை நிரந்தர நிதி கமிட்டியின் (Standing Finance Committee) பரிசீலனைக்கு வைப்பார். இந்தக் கமிட்டிக்கு, முதல் அமைச்சர் தலைமை வகிப்பார். எப்படியும் ஏற்றே தீரவேண்டும் என்று இந்த நிதிக் கமிட்டியால் கருதப்படும் திட்டங்கள் வரவுசெலவுத் திட்டத்தின் இரண்டாவது பகுதி (Part–II) யெனச் சேர்க்கப்பட்டு, அவை அமைச்சர் சபையின் (Cabinet) முடிவான அங்கீகாரத்திற்காக வைக்கப்படும். நிர்வாகத்திற்குச் சாதாரணமாக ஏற்கவேண்டிய செலவுகள் அடங்கிய பகுதி முதற் பகுதி (Part–I) ஆகும். இரு பகுதிகளையும் ஆய்ந்து, அவைகளுக்குத் தேவைப்படும் தொகை முழுவதும் அச்சமயத்தில் அமலிலிருக்கும் வரிகள், இதர வருவாய் இனங்கள்—இவைகள் பெறப்படலாமா ; இல்லாவிட்டால், வேண்டிய அளவுக்கு, எந்தச் செலவை யாவது குறைக்கலாமா, அல்லது புதிய வரிகளை விதிக்கலாமா என்று அமைச்சர் சபை முடிவு செய்யும். இம்முடிவுக்கேற்ப வரிவிதிப்புக்கு அங்கீகாரம் பெற, தக்க நிதி மசோதாக்கள் தயாரிக்கப்பட்டு, வரவு செலவுத் திட்டத்தோடோ அல்லது பின்னரோ அரசாங்கத்தால் வெளியிடப்படும். வெளியிடப்பட வேண்டிய காலத்துக்கு முன்னரே புதிய வரித் திட்டங்கள், பொதுமக்களுக்குத் தெரிந்துவிட்டால், நாட்டின் பொது நலன் பாதிக்கப்படும்.; அன்றாடத் தேவைப் பொருள்களின் விலையில் பெரிய மாற்றம் ஏற்படலாம் ; சமூக விரோதிகள் பண்டங்களை முன்கூட்டியே பதுக்கி வைத்துக்கொள்ளவும் முற்படுவர். ஆகவே, வரவுசெலவுத் திட்டம் சம்பந்தமான விஷயங்களை உரிய காலம்வரை, மிகவும் இரகசியமாக வைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

## புதுப் பணிகள்

இரண்டாவது உலகப் போருக்கு முந்திய காலத்தில், ஓர் ஆண்டு வரவுசெலவுத் திட்டத்தில் குறிப்பிடப்படாத ஒரு சிறிய செலவினத்தையும் அந்த ஆண்டு நடப்பின்போது அரசாங்கம் சாதாரணமாக அனுமதிக்காது ; ஆனால், அந்த முறையை, பலவித நெருக்கடியும், அன்றாடத் தேவைப் பொருளின் தட்டுப்பாடும் இருக்கும் தற்காலத்தில் பின்பற்றுவது இயலாத காரியம். மக்களின் ஆதரவு தொடர்ந்து இருக்குமானால்தான், அரசாங்க நிர்வாகப்பொறுப்பை அமைச்சர்களால் நன்கு கவனிக்கமுடியும். ஆகவே, ஒரு புதிய நிலையில் மிகவும் அவசிய

மாகிவிட்ட செலவுக்கு, அனுமதிபெறுவதற்காக, அடுத்த ஆண்டின் பட்ஜெட் சமர்ப்பிக்கப்படும்வரை காத்திருப்பது சாத்தியமானதன்று. இத்தகைய அனுமதி வேண்டப்படுவது தேவையான ஒரு சிறிய பொருளுக்காகவோ அல்லது ஒரு பெரிய திட்டம் பற்றியதாகவோ இருக்கலாம். சாதாரணமாக, முந்திய வரவுசெலவுத் திட்டத்தில் குறிப்பிடப்படாத எல்லாச் செலவுகளுக்கும் சட்டசபையின் அங்கீகாரம் பெறுவதே முறையானாலும், ஒவ்வொரு காரியத்திற்கும் சட்டசபையில் தனி துணை மானியக்கோரிக்கையைக் கொண்டுவருவது என்பது இயலாது. எனவே நடைமுறைத் தேவைகளைக் கருதி, ஒவ்வொரு சட்டசபையாலும் நிறுவப்பட்டுள்ள பொதுக் கணக்குக் கமிட்டி (Public Accounts Committee) இவ்விஷயத்தில் சில விதிகளை நிர்ணயித்துள்ளது. (இக்கமிட்டியைப் பற்றிய முழு விவரம் பின்னர் கூறப்படுகின்றது.) எந்த வகையான புதுப் பணிகளுக்கும் அவசியம் சட்டசபையின் தனி அனுமதியைப் பெற்றேயாக வேண்டும்; எவைகளுக்கு வேண்டாம் என்று இவ்விதிகளில் தெளிவாக்கப்பட்டிருக்கிறது. உதாரணமாக, தமிழ்நாட்டில் ஓர் இலட்சம் ரூபாய்க்கு அதிகமான செலவில் நிறுவப்பட வேண்டிய ஒரு பொதுக் கட்டடம், நடைமுறைச் செலவுக்கென 30 ஆயிரம் ரூபாய்க்கு மேலாகும் புது நிறுவனங்கள், ஏற்கெனவேயுள்ள மானியங்களை 50 ஆயிரம் ரூபாய்க்கு மேல் அதிகப்படுத்தக் கூடிய செலவினங்கள், இவைகளுக்குச் சட்டசபையின் அனுமதி பெற்ருகவேண்டும். 'புதுப் பணி' என்ற வகையில் சேராத செலவின விஷயமாய் இருந்தால், அனுமதி கோரப்பட வேண்டிய தொகை, ஏற்கெனவே அனுமதிக்கப்பட்ட திட்டத்திலுள்ள தொகையிலிருந்து ஏற்கமுடியாது, அதிகமாய் வேண்டிய அளவுக்கு மட்டும் இருந்தால் போதும்.

## நிதி ஒதுக்கு மாற்றம் (Re-Appropriation)

ஏற்கெனவே கூறியபடி, நிதி ஒதுக்குச் சட்டத்தில் அடங்கிய மானியத் தொகைகளுக்கு, பல தலைப்புகளின்கீழ் விவரம் தனியே கொடுக்கப்பட்டு இருக்கும். சட்டத்தில் கண்ட ஒரு தனி மானியத் தொகையையும் சட்டசபையின் அனுமதியின்றி மாற்றமுடியாது என்ருலும், விவரணத்தில் காட்டியுள்ள மானியப் பகுதிகளை ஓரளவுக்கு அரசாங்கம் மாற்றலாம். ஓர் ஆண்டு தொடங்குவதற்குச் சில மாதங்கள் முன்னமேயே தயாரிக்கப்படும் பட்ஜெட்டில், ஒவ்வொரு சிறிய தலைப்பின்கீழும், செலவுக்கு வேண்டியதெனக் குறிக்கப்பட்ட தொகைக்குச் சரியாகவே செலவு இருக்கவேண்டுமென்பது சாத்தியமில்லை. ஒரு தலைப்பின்கீழ் அதிகமாகச் செலவு செய்யவும், இன்னொன்றின்கீழ், குறைத்துச் செலவு செய்யவும் நேரிடும். இவைகளைச் சரிக்கட்ட, ஒரு மானியத்திற்குள் மாறுதல்கள் செய்யலாம். சாட்டப்பட்ட செலவுகளுக்கென ஒதுக்கப்பட்ட தொகைகளில் மாற்றம் செய்யவேண்டியிருந்

தால் அந்த இனங்களுக்குள்ளேயே அந்த மாற்றம் செய்யப்பட வேண்டும். அதாவது சாட்டப்படாத தொகைகளைச் சாட்டப்படும் செலவுகளுக்கு உபயோகப்படுத்தும் வகையில், மானிய மாற்றம் செய்ய வொண்ணுது; அதே மாதிரி சாட்டப்பட்ட தொகைகளைச் சாட்டப்படாத செலவுகளுக்காக மாற்றக்கூடாது. ஒரு மானியத்திற்குள், இவ்விதம் ஒரு தலைப்பிலிருந்து இன்னொரு தலைப்புக்குச் செய்யும் தொகை மாற்றத்திற்கு, 'நிதி ஒதுக்கு மாற்றம்' என்ற பெயர் வழங்கும். சில சிறப்பு இனங்களுக்காக இவ்வித மாற்றம் செய்யக்கூடாது என்ற விதியும் உண்டு; இது பின்னர் விவரிக்கப்படுகிறது. இந்த விதிக் குட்பட்டு, அரசாங்கத்தின் நிதித்துறை ஒரு மானியத்துக்குள் எந்த விதமான மாற்றங்களையும் அனுமதிக்கலாம்; அரசாங்கத் தலைமை அலுவலகத்தைச் சார்ந்த மற்றத் துறையினரும், தங்களுக்காகவும் தங்கள் நிர்வாகத்துக்குட்பட்டு இயங்கும் துறைகளுக்காகவும் நிதி ஒதுக்கு மாற்றம் எவ்வளவு வரையில் தாங்களே செய்து கொள்ளலா மென்றும் நிதித்துறையால் விதிகள் செய்யப்பட்டுள்ளன. இவை பற்றிய விவரமும் பின்னர் கூறப்படுகின்றது.

## சட்டசபைக் கமிட்டிகள்

ஒவ்வோர் அரசாங்கமும், ஒவ்வோர் ஆண்டிலும் வரும் நிதி ஆண்டுக்கான பட்ஜெட்டை, மிகுந்த கவனத்துடனும் ஆலோசனை யுடனும் தயாரிக்கின்றது. இதற்கான முறைகளும் விதிகளும் விரிவாக உள்ளன. இவைகளைப் பின்னர் காணலாம். தயாரிக்கப்பட்ட ஒரு பட்ஜெட்டில் காட்டப்படும் பற்றுக்குறையையோ அல்லது உபரித் தொகையையோ ஆதாரமாகக்கொண்டு, அரசாங்கம் புதுவரிகளை விதிக்கவும் வேறு மாற்றங்களைச் செய்யவும் முற்படுகிறது. ஆகவே, பட்ஜெட்டில், வருவாயினமும் செலவினமும் கூடியவரையில் சரியாக மதிப்பிடப்படாவிட்டால், பொதுமக்களுக்கு பாதகம் விளையக் காரணம் ஆகும். பொதுவாக, ஒவ்வோர் அரசாங்கமும் வருவாயினங்களைக் குறைத்து மதிப்பிடுவதும், செலவினங்களை அதிகமாக மதிப்பிடுவதும், ஒரு சாக்கிரதையான முறை என்று கருதும்.

சட்டசபைகள், பட்ஜெட் விவாதத்தின்போது, ஓரளவுக்குத்தான் அரசாங்கக் கொள்கைகளையும் மதிப்பீடுகளையும் பரிசீலனை செய்ய முடியும். ஆகவே, இவைகளை ஆற அமர நன்ருகப் பரிசீலனை செய்து, வேண்டிய மாறுதல்களை அரசாங்கத்திற்கும் சட்டசபைக்கும் தெரிவிப்ப தற்கு ஒரு 'மதிப்பீடு கமிட்டி' (Estimates Committee) நிறுவப் படுகிறது. மதிப்பீடுகள் சரியாக இருந்தபோதிலும், நடைமுறையில் அரசாங்கம் மேற்கொள்ளும் செலவுகள் சட்டசபைகள் அங்கீகரித்த கொள்கைகளுக்கும் அளவுகளுக்கும் உட்பட்டு இருக்கின்றனவா என்று பரிசீலனை செய்யாதுபோனுல், சட்டசபையின் அதிகாரம் பயனுடைய

தாக ஆகாது. ஆகவே, அத்தகைய ஆராய்ச்சியைச் செய்ய 'பொதுக் கணக்குக் கமிட்டி' (Public Accounts Committee) என்ற இன்னொரு கமிட்டியும் நிறுவப்படுகிறது. மதிப்பீடுகள் சரியான முறையில் இருந்தாலும், நிர்வாக அதிகாரிகள் மிகவும் ஒழுங்காக இல்லாது போனால், பயனில்லாத செலவுகளும் ஊழல்களும் விளையும். இதுபோல, அரசாங்கத்திற்குக் கிடைக்கவேண்டிய வருவாயும், முழுமை யாகத் தரப்படாமல் போகலாம். ஆகவே, இவ்விஷயங்களை நன்கு ஆராய்வதும் அவசியம் ஆகிறது. தலைமைக் கணக்கு அதிகாரி, அரசாங்க நிர்வாக ஊழல்களையும் குறைகளையும் ஆய்ந்து, அவைகளை ஓர் அறிக்கையில் ஆண்டுதோறும் குறிப்பிட்டு, அவைகளைப் பரிசீலனை செய்யும்படிப் பொதுக் கணக்குக் கமிட்டியைத் தூண்டி, அதற்குத் துணையாகவும் இருப்பார். இதற்கு அரசியல் அமைப்பில் வழி செய்யப் பட்டுள்ளது. ஆகவே, பொதுமக்களும் சட்டசபை அங்கத்தினர்களும் விழிப்புடன் தங்கள் கடமையைச் செய்யப் போதிய வாய்ப்புகள் இருக்கின்றன. அவர்கள் யாது காரணம் பற்றியோ, இவ்விஷயங்களில் போதிய கால அளவுக்கு அக்கறை செலுத்தாது போனால், விதிகளால் பயன் விளையாதுபோகும். இனி, மேற்கண்ட விதிகளையும் முறைகளையும் விவரமாய்க் காண்போம்.

## தலைமைக் கணக்கு—தணிக்கை அதிகாரி

எல்லா அரசாங்கக் கணக்குகளையும் அவ்வப்போது ஒழுங்காக வைக்கவும், அவைகளைப் பட்சபாதமின்றி, பரிசோதித்து எங்கெங்கு முறை பிறழ்ந்திருக்கிறது என்பதைக் காட்டவும், இந்தியாவின் மாபெரும் கணக்கர்—பரிசோதகர் (Comptroller and Auditor General of India) என்று தனி அந்தஸ்துள்ள ஒருவரை, ராஷ்டிரபதி தம் அதிகாரத்தின் மூலமாக நியமிக்கவேண்டுமென அரசியல் அமைப்பு விதிக்கிறது (பிரிவுகள் 148-151). இவர்கீழ் உள்ள தணிக்கைக் கணக்குத் துறையில் வேலை பார்ப்போரின் சேவை நிபந்தனைகளும், அவருடைய நிர்வாக அதிகாரமும் எவ்விதம் இருக்க வேண்டுமென்பதைப் பற்றியும் ராஷ்டிரபதி விதிகள் செய்யவேண்டும்; ஆனால், இவ்விதிகள் செய்யுமுன், அப்பொழுது அப்பதவியில் உள்ள வரைக் கலந்து ஆலோசிப்பார்.

இப்பதவிக்கு நியமிக்கப்பட்ட ஒருவருடைய உரிமைகள் (சம்பளம், ஓய்வு, பதவி நீங்கும் வயது முதலியவைகள்) அவர் பதவிக்காலத்தில் அவருக்குப் பாதகமாகப் பார்லிமென்டாலும் மாற்ற இயலாது. அவர் தம் பதவியிலிருந்து நீங்கிய பிறகு, இந்திய அரசாங்கத்தின் கீழோ அல்லது ஒரு மாநில அரசாங்கத்தின் கீழோ வேறு ஒரு பதவியும் வகிக்கக்கூடாது என்ற நிபந்தனையும் உள்ளது.

இப்பதவியில் உள்ளவருக்குக் கொடுக்கவேண்டிய சம்பளமும் படியும், உதவிச் சம்பளமும் இந்திய சஞ்சித (தொகு) நிதியில் சாட்டப் பட்ட செலவாகும் என்று ஏற்கெனவே குறிக்கப்பட்டது. இதுபோல, அவர் அலுவலகத்தின் நிர்வாகச் செலவுகள் எல்லாம் பணியாளர்களின் சம்பளம், படி, உதவிச் சம்பளம் உட்பட—இந்தியாவின் சஞ்சித (தொகு) நிதியின்பேரில் சாட்டப்பட்ட செலவுகளாகும். மத்திய மாநில அரசாங்கங்கள் வேறு நிறுவனங்கள்—இவைகளின் கணக்குகளைப்பற்றி, இவ்வதிகாரி என்னென்ன அதிகாரம் வகிக்கவேண்டும், அவருடைய கடமைகள் என்ன என்பதைப் பார்லிமென்ட் செய்த சட்டமும், அதன் கீழ் நிர்ணயிக்கப்பட்ட விதிகளும் சொல்லும். எல்லாக் கணக்குகளும் ராஷ்டிரபதியின் அங்கீகாரத்துடன் அவர் நிர்ணயிக்கும் வடிவத்தில் வைக்கப்படவேண்டும். மத்திய அரசாங்கக் கணக்குகளைப்பற்றிய அவருடைய அறிக்கைகள் ராஷ்டிரபதிக்குச் சமர்ப்பிக்கப்பட வேண்டும். அவைகளைப் பார்லிமென்டின் சபை ஒவ்வொன்றின் முன்னும் வைக்கு மாறு, ராஷ்டிரபதி ஏற்பாடு செய்யவேண்டும். இதுபோல, ஒரு மாநிலத்தின் கணக்குகளைப்பற்றிய அறிக்கைகள், அந்த மாநிலத்தின் கவர்னருக்குச் சமர்ப்பிக்கப்பட்டு, அவரால் அந்த மாநிலத்தின் சட்ட சபையின் முன் வைக்க ஏற்பாடு செய்யப்படும்.

## பொதுக் கணக்குக் கமிட்டி

இக்கமிட்டி சம்பந்தமாக ஒவ்வொரு சட்டசபையாலும் விதிகள் இயற்றப்பட்டுள்ளன. இவை பெரும்பாலும் ஒரே தன்மையனவாக இருக்கும். தமிழ்நாட்டிலுள்ள விதிகளின் சாராம்சம் பின்வருமாறு:—

(1) அரசாங்கச் செலவுக்காக சட்டசபையால் ஒதுக்கப்பட்ட தொகைகளைச் சார்ந்த கணக்குகளையும், அரசாங்கத்தின் ஆண்டு நிதிக் கணக்குகளையும், மற்றும் சட்டசபை முன் வைக்கப்படும் வேறு கணக்கு களையும், தன்னிஷ்டப்படி பரிசோதனை செய்வது பொதுக் கணக்குக் கமிட்டியின் வேலையாகும்.

(2) இந்தக் கமிட்டியில் நிதி அமைச்சரும், மதிப்பீட்டுக் கமிட்டியின் தலைவரும் தங்கள் பதவி காரணமாக அங்கத்தினராக இருப்பர். இவர் களோடு வேறு 14 அங்கத்தினரையும் சேர்த்து, இந்தக் கமிட்டி நிறுவப் படும். இந்த 14 அங்கத்தினர்களையும் கீழ்ச் சட்டசபை, தன் அங்கத்தி னர்களிலிருந்து தேர்ந்தெடுக்கவேண்டும். இந்தத் தேர்வு விகிதாசார பிரதிநிதித்துவ முறைப்படியும் மாற்றுதல் செய்யக்கூடிய ஒரே வாக்கு மூலமாகவும், இவ்விஷயமாக சபாநாயகரால் செய்யப்பட்டுள்ள விதி களுக்கு இணங்கவும் நடக்கவேண்டும். கீழ்ச் சட்டசபை ஒரு தீர்மானத் தின் மூலம் இவ்வளவு அங்கத்தினர்களை மேல்சபை அங்கத்தினர்களிட மிருந்து இந்தக் கமிட்டியில் சேர்த்துக்கொள்ளலாம் என்று நிர்ணயிக்க

லாம். அதன்படி, மேல்சபை இந்தக் கமிட்டியின் வேலையில் சேர்த்துக் கொள்ளும்படி குறிப்பிட்ட அங்கத்தினர்களை நியமிக்கலாம்.

(3) அங்கத்தினர்களின் பதவிகாலம் ஓர் ஆண்டுக்கு மேற்படக் கூடாது. அந்த ஆண்டு முடிவதற்குமுன் புதிய தேர்வு நடத்தப்பட வேண்டும். எக்காரணம் பற்றியோ அத்தகைய தேர்வு நடத்த முடியாமற் போனால், ஏற்கெனவே உள்ள அங்கத்தினர் புது அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படும்வரை, தொடர்ந்து வேலை செய்யலாம்.

(4) ஆண்டு நடுவில் அவ்வப்போது யாராவது அங்கத்தினர் தம் பதவியைவிட்டு அகல நேரிட்டால், அவருக்குப் பதிலாக வேறொருவரை ஆண்டுத் தேர்வுக்கான முறைப்படி தேர்ந்தெடுக்கலாம். அப்படித் தேர்வு செய்யப்படுபவர், முன்னிருந்தவர் சாதாரணமாக எவ்வளவு காலம்வரை கமிட்டியில் அங்கத்தினராக இருந்திருப்பாரோ அக்காலம் வரை, அங்கத்தினராக இருப்பார்.

(5) கமிட்டியின் அங்கத்தினர்களில், யாராவது ஒருவரை அதற்குத் தலைவராக இருக்கும்படி சபாநாயகர் நியமிக்கவேண்டும். நடைமுறையில், இவர் எதிர்க்கட்சித் தலைவராய் இருப்பது வழக்கம். அப்படி நியமிக்கப்படுபவர் கமிட்டியின் எல்லாக் கூட்டங்களிலும் தலைமை வகிப்பார். அவர் இல்லாதபோது, கமிட்டியால் அப்பொழுது தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் அங்கத்தினர் கூட்டத்துக்குத் தலைமை வகிப்பார்.

(6) கமிட்டியின் ஒவ்வொரு கூட்டத்திலும், தலைவர் (அல்லது அப்பொழுது தலைமை வகிக்கும் அங்கத்தினர்) உட்பட 5 பேருக்குக் குறையாமல் இருக்கவேண்டும்.

(7) ஏதாவது, ஒரு விஷயத்தைப்பற்றி வாக்கெடுத்தபோது, சாதகமாகவுள்ள வாக்குகளும் பாதகமாகவுள்ள வாக்குகளும் சமமாக இருந்தால், அதற்கு முடிவு காணும்வகையில், தலைவர் இரண்டாவது தடவை ஒரு வாக்களிக்கலாம்.

(8) அரசாங்கத்தின் நிதி ஒதுக்குக் கணக்குகளையும் அதன் மேலுள்ள தலைமைக் கணக்கு அதிகாரியின் அறிக்கையையும் பரிசீலனை செய்யும்போது, இந்தக் கமிட்டி பின்வரும் விஷயங்களை முக்கியமாகக் கவனித்து அவை சரியாக உள்ளனவா என்று தானாகவே நிச்சயித்துக் கொள்ளவேண்டும் :

(அ) செலவுக் கணக்கில் காட்டப்பட்ட தொகைகள், குறிப்பிட்ட துறைக்கோ அல்லது பணிக்கோ சட்டப்படி ஒதுக்கப்பட்டபடி உள்ளனவா ?

(ஆ) செலவானது அதற்குரிய சட்ட திட்டங்களுக்குப் பொருத்தமாயிருந்திருக்கிறதா ?

(இ) ஒவ்வொரு நிதி ஒதுக்கு மாற்றமும் அதற்கென மாநில கவர்னராலோ அல்லது நிதித் துறையாலோ நிர்ணயிக்கப் பட்ட விதிகளுக்கு இணக்கமாக இருந்திருக்கின்றதா?

பரிசீலனை முடிந்த பிறகு, இந்தக் கமிட்டி பின்வரும் விஷயங்களைச் சபையின் கவனத்திற்குக் கொண்டுவரவேண்டும் :—

(i) மேற்கண்டபடி சரியென்று நிச்சயிக்கப்படாமல் இருக்கும் நிகழ்ச்சிகள்.

(ii) நிதித் துறையால் ஏதாவது ஒரு செலவினம் சட்டசபையின் கவனத்திற்குத் தனியாகக் கொண்டுவரப்பட வேண்டுமென்று கோரப்பட்டிருந்தால், அந்தச் செலவினம்.

குறிப்பு :—இந்தப் பொதுக் கணக்குக் கமிட்டி தன் பரிசீலனையின் போது, சம்பந்தப்பட்ட எந்த அதிகாரியும் தன்முன் வந்து, வேண்டிய விவரங்களைக் கொடுத்துப் பத்திரங்களைக் காட்டும்படிச் செய்யலாம். குறுக்கு விசாரணைகள்கூடச் செய்யலாம். இதன் காரணமாக, அரசாங்க அதிகாரிகளுக்கு இந்தக் கமிட்டியிடம் மிக்க மதிப்பும், கொஞ்சம் அச்சமும்கூட இருக்கும்.

## கமிட்டியின் அறிக்கை

பொதுக் கணக்குக் கமிட்டி, தலைமைக் கணக்கு அதிகாரியால் காட்டப்பட்டுள்ள எல்லா நிர்வாக விஷயங்களைப்பற்றிய பரிசீலனையின் விளைவாகச் செய்யும் சிபாரிசுகளையும், அதிக மானியக் கோரிக்கைகள் பற்றிய சிபாரிசுகளையும், ஒரு தனி அறிக்கை மூலம் சட்டசபைக்குச் சமர்ப்பிக்கும். அதன் சிபாரிசுக்கிணங்க அரசாங்கம் அதிக மானியக் கோரிக்கைகளைச் சமர்ப்பிக்கும்; அதன்மீது உரிய முறையில் விவாதம், அனுமதி இவை நடைபெறும். ஆயினும், சட்டசபையில் கமிட்டியின் அறிக்கைமீது விரிவான விவாதம் உடனே நடக்க வேண்டுமென்பதில்லை. சட்டசபை விவாதம் வேண்டுமென எண்ணினுல்தான், அதற்குரிய பிரேரேபணை செய்யப்படும். இருந்தாலும், இந்தக் கமிட்டியின் அறிக்கை எல்லா அங்கத்தினர்களுக்கும் கிடைப்பதாலும், அவ்விவரங்கள் பொதுமக்களுக்கும் அப்போது தெரிய வருவதாலும், அரசாங்க நிர்வாக விஷயமான குறைபாடுகள் அக்கறையுள்ள எல்லோருடைய கவனத்திற்கும் வந்துவிடுகின்றன. இவைகளை, வேறு நிர்வாக சம்பந்தமான விவாதங்களின்போது அங்கத்தினர்கள் குறிப்பிடலாம். இது தவிர, கமிட்டியின் சிபாரிசுகள், சம்பந்தப்பட்ட அரசாங்க அதிகாரிகளுக்குத் தெரிவிக்கப்படுகின்றன. இதன் காரணமாக அரசாங்கம் மேற்கொண்ட செயல்களையும், பிறப்பித்த உத்தரவுகளையும் அடுத்த பொதுக் கணக்குக் கமிட்டிக்குத் தெரியப்படுத்த வேண்டு

மென்ற முறையும் உண்டு. ஆகவே, கமிட்டிகளின் சிபாரிசுகள் ஒன்றும் பயனில்லாது போவதில்லை.

## மதிப்பீட்டுக் கமிட்டி

பொதுக் கணக்குக் கமிட்டி கடந்துபோன ஆண்டுகளின் கணக்குகளையும் நிர்வாக விஷயங்களைப்பற்றியும்தான் பரிசீலனை செய்கிறது. ஓர் ஆண்டின் கணக்குகள் இறுதியாக்கப்பட்டு, அவைகளைச் சார்ந்த அறிக்கையைக் கணக்கு அதிகாரி வெளியிடுவதற்கு ஓர் ஆண்டு அல்லது அதற்கு மேற்பட்ட காலம் வேண்டியிருக்கிறது. பொதுக் கணக்குக் கமிட்டி அவைகளைப் பரிசீலனை செய்து தன் அறிக்கையைச் சமர்ப்பிப்பதற்கு மேலும் காலம் வேண்டியிருக்கிறது. ஆகவே, அவ்விஷயங்கள் சட்டசபை அங்கத்தினர்களுக்கும் பொது மக்களுக்கும் தெரிவதற்கு வெகுகாலம் ஆகிவிடுகிறது. இது தவிர்க்கமுடியாதது. அரசாங்க நடைமுறை மதிப்பீடுகளை அவ்வப்போது பரிசீலனை செய்வது மதிப்பீட்டுக் கமிட்டியின் வேலையாகும். இந்தக் கமிட்டி சம்பந்தமான விதிகளும் முறைகளும் நாடு முழுவதும் பொதுவாக ஒரே மாதிரியாக இருக்கும். தமிழ்நாட்டுச் சட்டசபையால் செய்யப்பட்டுள்ள விதிகள் பின்வருமாறு:—

(1) மதிப்பீட்டுக் கமிட்டி, தன்னிஷ்டப்படி எந்த அரசாங்க மதிப்பீடுகளையும் பரிசீலனை செய்யலாம். குறிப்பிட்ட மதிப்பீடுகளை ஆராயவேண்டுமென்றும் சட்டசபை அதற்குச் சொல்லலாம். அதன் முக்கிய கடமைகள் பின்வருமாறு விதிக்கப்பட்டுள்ளன :—

(அ) ஓரின மதிப்பீடுகளைச் சார்ந்த கொள்கைக்கு இணங்க எந்த எந்த விதத்தில் சிக்கனம் செய்யலாம், நிர்வாக அமைப்பை எப்படி மேம்படச் செய்யலாம், அல்லது அது இன்னும் நன்றாக இயங்க என்ன சீர்திருத்தம் செய்யலாம்—இவைகளைப் பற்றி அறிக்கை சமர்ப்பிக்கவேண்டும்.

(ஆ) நிர்வாகத்தில், திறனும் சிக்கனமும் மேம்பட, அரசாங்கக் கொள்கைகளில் என்ன மாற்றம் செய்யலாம் என்றும் யோசனை கூறவேண்டும்.

(இ) ஓரின மதிப்பீட்டுக்குச் சார்ந்த கொள்கையின் வரம்புக்குள் செய்யப்படும் செலவானது, தக்க பயன்தரும் வகையில் செய்யப்படுகிறதா என்றும் பரிசீலனை செய்யவேண்டும்.

(ஈ) மதிப்பீடுகளைச் சட்டசபைக்கு எந்த வடிவத்தில் சமர்ப்பித்தால் நல்லது என்றும் யோசனை கூறலாம்.

(2) இந்தக் கமிட்டியில், நிதி அமைச்சரும் பொதுக் கணக்குக் கமிட்டியின் தலைவரும் தங்கள் பதவி காரணமாக அங்கம் வகிப்பர். மற்றப்படி இக்கமிட்டியின் அமைப்புமுறை, பதவிக்காலம் முதலி

யவைகள் பற்றிய விதிகள் பொதுக் கணக்கு கமிட்டியின் விதிகள் போன்றவையே.

(3) சட்டசபைக்கு முடிவான அறிக்கையைச் சமர்ப்பிப்பதற்கு முன், இந்தக் கமிட்டி வேண்டுமென்று கருதினால், தன் அறிக்கையின் ஏதாவது ஒரு முடிவான பகுதியை அரசாங்கத்திற்கு முன்னதாகவே தெரியப்படுத்தலாம். இவ்விதமான அறிக்கைப் பகுதிகள் சபைக்குச் சமர்ப்பிக்கப்படும்வரை, இரகசியமாகக் கருதப்படும்.

(4) அதிகாரிகளைக் கூப்பிட்டு விசாரிக்கவும், பரிசீலனையிலுள்ள மதிப்பீடு சம்பந்தமாகத் தகவல்களைச் சாட்சிகள் மூலம் சேகரிக்கவும், ஏதாவது குறிப்பிட்ட பத்திரங்களைக் கொண்டுவந்து காட்டும்படி உத்தரவு பிறப்பிக்கவும், இக்கமிட்டிக்கு அதிகாரம் உண்டு. அப்படிச் சேர்க்கப்பட்ட தகவல்களில் ஏதாவது ஒன்றை, இரகசியமாக வைக்க வேண்டுமா என்பதைப் பற்றி, இந்தக் கமிட்டியின் தீர்மானமே முடிவானது. ஏதாவது ஒரு பத்திரத்தை வெளியிடுவது பொது நலத்திற்கு உகந்ததாக இருக்காது என்று அரசாங்கம் கருதினால், அத்தகைய பத்திரத்தைக் கமிட்டிக்குமுன் சமர்ப்பிக்காமல் இருக்கலாம்.

(5) ஒரு நிதி ஆண்டு முழுவதும் மதிப்பீடுகளின் பரிசீலனையை இக்கமிட்டி தொடர்ந்து நடத்தலாம். நடுவில், அவ்வப்போது அறிக்கைகளையும் சட்டசபைக்குச் சமர்ப்பிக்கலாம். ஓர் ஆண்டின் மதிப்பீடுகள் முழுவதையும் பரிசீலனை செய்தாக வேண்டுமென்ற நிர்ப்பந்தமில்லை. இந்தக் கமிட்டியானது ஓர் அறிக்கையும் சமர்ப்பிக்காது போனாலும், அரசாங்கம் வேண்டும் மானியக் கோரிக்கைகளை, அவைகளுக்கு உரிய முறையில் சபை அனுமதிக்கலாம்.

(6) இந்தக் கமிட்டியின் அறிக்கைகள் ஒருமுகமாக இருக்க வேண்டும்; பிறிதான தனிக் கொள்கைகள் அவைகளில் இடம் பெறக் கூடாது.

(7) இந்தக் கமிட்டியின் அறிக்கையை அதன் தலைவரோ அல்லது அவர் சார்பாக வேறோர் அங்கத்தினரோ சட்டசபைக்குச் சமர்ப்பிக்க வேண்டும்.

(8) மேலே குறிப்பிடாத எவ்விஷயத்திலும், சட்டசபையால் செய்யப்பட்டுள்ள தனிக் கமிட்டி (செலக்ட் கமிட்டி) விதிகள் பொருந்தும்.

பகுதி 2

# தனி விளக்கம்

## 7. நிதித் துறை

1. பொருள்கருவி காலம் வினையிடனோடு ஐந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்.

2. முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். —(குறள்)

பொறுப்பு :—முன் அத்தியாயங்களில் ஆங்காங்கு அரசாங்க நிதித் துறையைப் பற்றிய குறிப்புகள் வந்துள்ளன. அத்துறையின் பொறுப்பையும் இயங்கு முறையையும் சற்று விரிவாக இப்பொழுது காண்போம். அரசாங்கத் தலைமை அலுவலகத்திலுள்ள பல துறை களில் ஒன்றுதான் நிதித்துறை. அது நிதி அமைச்சரின் கீழ் வேலை செய்வதாகக் கருதப்படுகிறது. ஆயினும், உண்மையில் அது அமைச்சர் அவை முழுவதற்கும் பொதுவான ஒரு துறையே ஆகும். நடைமுறையில் இத் துறைக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றது. அரசியல் அமைப்பில் (பிரிவுகள் 77, 166) ராஷ்டிரபதியும், மாநில கவர்னரும் முறையே அவர்களின் கீழ் இயங்கும் அரசாங்கத்தின் அலுவல்கள் நன்கு நடைபெற விதிகள் செய்யவேண்டும் எனச் சொல்லப்பட்டுள்ளது. இதற்கு இணங்க, ஒவ்வோர் அரசாங்கத்தின் தலைமை அலுவலகம், எம்முறைகளைப் பின்பற்றவேண்டும் என்ற விதிகள் செய்யப்பட்டு அமலில் உள்ளன. இவைகளில், அரசாங்க நிதிக்கு எவ்விதத்திலாவது தொடர்புள்ள ஒவ்வொரு யோசனையும், உத்தரவும், அது முடிவு செய்யப்படுமுன், நிதித் துறையின் பரிசீலனைக்கு உட்படுத்தப்படவேண்டும் என்பது ஒரு விதி. இதனால், அரசாங்கத்தில் நிதித்துறைக்கு ஒரு தனிப்பொறுப்பு சேருகிறது. முடிவுகள் எல்லாம் அமைச்சர் அவையின் பொதுப் பொறுப்பாக உள்ளன என்பதும், நிதித் துறை தெரிவித்த கருத்துக்களை நன்கு ஆய்ந்து, பின்னரே அரசாங்கம் எந்த முடிவுக்கும் வரவேண்டும் என்ப

தும் முறை. ஆகவே, நிதித் துறை, தன் பரிசீலனைக்கு வரும் ஒவ்வொரு விஷயத்தையும் விருப்பு வெறுப்பின்றி, அமலில் இருக்கும் விதிகளுக்கும் முறைகளுக்கும் இணங்கவும், தற்கால, நெடுங்கால விளைவுகளைக் கருதியும், தன் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கவேண்டியிருக்கிறது. சம்பளம், படி, உதவிச் சம்பளம் போன்ற நிர்வாகச் செலவு விஷயமாக, விதிகளைச் செய்வதிலும் பொறுப்பு ஏற்கிறது. பொதுவாக, எவ்வளவு வற்புறுத்தல் இருந்தாலும், அமலில் உள்ள விதிகளை ஒரு தனி விஷயத்தில் புறக்கணிக்க, நிதித் துறை ஒத்துக்கொள்ளாது. மேலும், மாநிலத் தலைமைக் கணக்கு அதிகாரியின் யோசனைகளுக்கும் அது பெரும்பாலும் ஆதரவு தரும். இதனால், அரசாங்க நிதித் துறைக்கு, மற்றத் துறைகளிடம் பொல்லாப்பு நேருகிறது. நியாயமாகப் பார்த்தால், அரசாங்கத் துறை ஒவ்வொன்றும், அரசாங்கம் நன்கு இயங்க, தனக்கு முழுப் பொறுப்பு உள்ளது என்று கருதி, எல்லா விஷயங்களையும் பரிசீலனை செய்வதுதான் முறையாகும். ஆனால், நடைமுறையில், ஒவ்வொரு துறையும் தன் விருப்பப்படி ஒவ்வொரு விஷயத்திற்கும் ஆதரவை அளித்துவிட்டு, அதிலுள்ள குறைகளை எடுத்துக் காட்டவோ, யோசனையைப் புறக்கணிக்கவோ வேண்டிய நிர்ப்பந்தத்தை, நிதித் துறைக்கு விட்டுவிடுகிறது. அநேகமாக, எல்லா யோசனைகளும் நிதித்துறைக்கு வரவேண்டியிருப்பதால், தவிர்க்க முடியாமல் தீர்வுகளில் காலதாமதம் ஏற்படலாம். மிகவும் முக்கியமும் அவசரமும் வாய்ந்த விஷயங்களில், தாமதம் இல்லாமல் காரியங்கள் நடக்கத் தனி முறைகள் உள்ளன. மத்திய அரசாங்கத் தலைமை அலுவலகத்தில், ஒவ்வோர் அமைச்சுத் துறையிலும், நிதித் துறையின் சார்பாக ஒரு தனி ஆலோசகர் நிறுத்தப்பட்டு, நிதி விஷயமான ஆலோசனைகளை உடனுக்குடன் தெரிவிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பொதுவாக, மாநிலங்களில், இத்தகைய விசேஷ ஏற்பாடு இல்லை.

**கடமைகள் :**—எந்தெந்த வரிகளை விதிக்கலாம், குறைக்கலாம், அல்லது எடுத்து விடலாம், எந்தத் தொழில்களை மேற்கொள்ளலாம் என்ற விஷயங்களை, முடிவாகத் தீர்மானிப்பது அமைச்சர் அவையின் பொறுப்பு. ஆனால், ஒரு தீர்மானத்திற்கு வருமுன், அதன் பலாபலன்களை நன்கு எடுத்துக் காட்டுவது, சம்பந்தப்பட்ட எல்லா அரசாங்கத் துறைகளின் கடமை. ஆனால், சிறப்பாக, இது நிதித் துறையின் பொறுப்பாகும். ஒரு வரி அமலுக்கு வந்த பின்னரும், ஒரு தொழில் திட்டம் செயல் அளவில் வரும்போதும், அவைகளின் நிர்வாகம் சரியாக நடக்கின்றதா என்று விடாமல் கண்காணிப்பதும், குறைகளை அவ்வப்போது எடுத்துக் காட்டி, அவைகளுக்குப் பரிகாரம் தேடும்படி மற்றத் துறைகளை வற்புறுத்துவதும் நிதித் துறையின் முக்கியக் கடமை.

இதன் ஓர் அம்சம், நியாயமாக அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய பொருள்கள், உரிய காலத்தில், கால தாமதமின்றிக் கிடைக்கின்றனவா

என்று பார்ப்பதாகும். இவ்விஷயமாக, நிதித் துறை, மற்றத் துறைகளிலிருந்தும் அதிகாரிகளிடமிருந்தும், அடிக்கடி அறிக்கைகளும் புள்ளி விவரங்களும் கேட்டு வாங்கி, அவைகளைப் பரிசீலனை செய்கின்றது. தகுந்த காரணமின்றி, வரவேண்டிய இனங்களைத் தள்ளிக் கொடுப்பதற்கோ, விலை மதிப்புள்ள சொத்துக்களை இழக்கவோ, அல்லது குறைந்த விலைக்குக் கொடுப்பதற்கோ, அல்லது குறிப்பான ஓரிடத்திலிருந்து ஒரு பொருளை அதிக விலைக்கு வாங்கவோ, நிதித் துறை ஒத்துக்கொள்ளாது. கிடைத்த பொருள்களுக்குச் சரியான கணக்கு வைத்துக்கொண்டு, எவ்விதத்திலும் நஷ்டம் ஏற்படாமல் இருக்கும்படி, நிதித்துறை விதிகளை இயற்றுகிறது. விதிகளைக் கவனக் குறைவாலோ, அல்லது வேண்டுமென்றோ மீறியவர்களைக் கண்டிக்கும்படியும், மற்றும் உரிய தண்டனையை அளிக்கும்படியும், நிதித் துறை அரசாங்கத்தை வற்புறுத்தும். இவ்விஷயங்களில் தணிக்கைத் துறையோடு நிதித் துறை மிகவும் ஒத்துழைக்கும்.

அரசாங்கத்தின் எல்லாத் துறைகளும், மக்களின் பொது நலத்துக்காகவே பாடுபடும்; ஆனால், தங்கள் தங்கள் காரியமே பெரிது என்று ஒவ்வொரு துறையினரும் எண்ணுவதில் வியப்பில்லை. இதனைப் போற்றுது, காலம், பொருள், இடம், ஏவல் எல்லாவற்றையும் ஒருங்கே ஆராய்ந்து தராதரப்படி காரியம் செய்வதுதானே அமைச்சர்களுக்கு அழகாகும்? இவ்விஷயத்தில், அமைச்சர் அவையோடு நிதித்துறை முற்றிலும் ஒத்துழைக்கும்; இதை, தங்கள் தங்கள் துறையிலே, மேலும் மேலும் செலவு செய்யத் துடிக்கும் மற்றைய துறைகள், ஓர் இடையூறு எனக் கொள்ளும். ஒரு குடும்பத்தில், பொது நலத்தைக் கோரி, அவ்வப்போது அறிவுரை செய்து, விருப்பு வெறுப்பின்றி நிலைமையை நேராக்கும் பெரியோரை, மற்றைய அங்கத்தினர்கள் ஒரு முட்டுக்கட்டையெனக் கொள்வது இயற்கைதானே! முட்டுக்கட்டை என்று சொன்னாலும் நிதித்துறைக்கு இகழ்ச்சியில்லை; ஒரு பெரிய தேர், வீதியில் பவனி வரும்போது, அதன் வேகத்தை முட்டுக்கட்டை போட்டுத் தடுப்பதை நாம் பார்த்து இருப்போம்; அது, தேர் ஓட்டத்தின் நன்மைக்குத் தானே!

நிதித் துறையானது, ஒவ்வொரு பொதுவினச் செலவையும் அலசிப் பார்த்து, தன்னுடைய கருத்தைத் தெரிவிக்கும்—இதற்கு அவசியமில்லை, அல்லது அவசரமில்லை என்றே சொல்லலாம்; செய்ய வேண்டியதானாலும், இன்னும் குறைந்த செலவில் செய்யலாம், அல்லது செலவின் ஒரு பகுதிக்கு ஏற்ப வருமானம் பெறலாம் என்று கூறலாம்; அல்லது, இன்னும் கொஞ்சம் பரிசீலனை செய்யவேண்டும்; சிறிய அளவில் இந்தச் சோதனையை நடத்தலாம் என்று அறிவுறுத்தலாம்—ஆனால், ஒரு யோசனை, அவசியம், அவசரம், செலவும் சிக்கனம் என்று தெரிந்தால், நிதித் துறை அதை ஒப்புக்கொள்ளும். பல நல்ல திட்டங்கள் நடை

பெறும் இக்காலத்தில், நிதித் துறை கொஞ்சம் தாராள மனப்பான்மை யைக் காட்டுகின்றது. ஒரு குறிப்பிட்ட நல்ல காரியத்தை, குறைந்த ஊழியர்களைக் கொண்டு, நீடித்த காலத்தில் செய்வதினும், போதிய பணியாளர்களைக் கொண்டு விரைவில் செய்வதேமேல் என்று சொல்லும் பான்மையும் இப்போது உள்ளது. எனினும், சுருங்கச் சொன்னல், பொதுப்பணத்தைக் கொஞ்சமேனும் அனுவசியமாகச் செலவு செய்யக் கூடாது என்று, படித்துப் படித்துக் கூறுவதுதான் நிதித் துறையின் நோக்கம். மற்றத் துறைகளுக்கு, ஒவ்வொரு சமயம், இது ஒரு கிளிப் பிள்ளைப் பேச்சாகத் தோன்றும்; அதற்காக நிதித் துறை வருந்தாது; பொதுப் பணி செய்வதே தன் கடன் என்று இருக்கும். பொது மக்களிடம் இருந்து பெறும் பணத்திற்கு, நல்லதோர் அறக்காவலனுக விளங்கி, சட்டசபை அங்கத்தினர்களுக்கும் மற்றவர்களுக்கும் இயன்ற உதவியைச் செய்ய வேண்டுவதே நிதித் துறையின் இலக்கு என்றும் சொல்லலாம். இம்மாதிரி, பணியைப் பட்சபாதமின்றிச் செய்ய வேண்டுமென்பதற்காக, நிதித் துறையின்கீழ் வேறு நிர்வாகப் பொறுப்பு சாதாரணமாய் ஒப்படைக்கப்படுவதில்லை. அதன் தனிப் பொறுப்புக்கு வேண்டிய செலவை நிர்ணயிக்கும் விஷயத்திலும், பொதுத் துறையின் (Public Department) சம்மதத்தைப் பெற வேண்டும் என்ற நியதியும் உண்டு.

ஆனுல், ஒன்றை மறக்கக்கூடாது. முதலில் கூறியபடி நிதித்துறை யானது, அரசாங்கத்தின் ஓர் அங்கமேயாகும். அது அமைச்சர்களின் ஆணைக்கு உட்பட்டது. நிதி அமைச்சரோடு சேர்ந்து மற்றைய அமைச்சர்களும், ஒரு விஷயத்தில் நிதித் துறையின் கருத்தைத் தள்ளி விட்டால், நிதித் துறை மறுபடியும் அதை எதிர்க்க முடியாது. உறுதி செய்த விஷயத்தை நிறைவேற்றுவதில்தான், அதன் நோக்கம் இருக்க முடியும். பொதுவாகக் கூறுமிடத்து, நிதி அமைச்சர் நிதித் துறையின் கருத்துக்களுக்கு ஆதரவு அளிக்கவேண்டும்; அவரும் பிறரின் வேண்டுகோள் விஷயமாக, ‘இல்லை’, ‘முடியாது’ என்ற பட்டயத்தை நெற்றியிலே தாங்கி இருக்கவேண்டும் என்று நிர்வாகக் கலை வல்லுநர் கூறுவர்! தற்காலத்தில், ஒவ்வொரு மாநிலங்களில், முதல் அமைச்சரே நிதித் துறைக்கும் பொறுப்பு ஏற்றுக்கொள்ளும் வழக்கம் பரவி வருகிறது. இதனுல், அவர் பொது நோக்குடன் பணியாற்ற இயலும் என்று ஒருசாரார் கருதுவர்.

ஆண்டுதோறும், அரசாங்க வரவுசெலவுத் திட்டத்தைத் தயாரிப்பது நிதித் துறையின் முக்கிய வேலையாகும். இவ்விஷயமாக, ஒவ்வொரு சிறிய இனச்செலவையும் கண்ணில் எண்ணெய் போட்டுக்கொண்டு ஆராய்வதுபோல், நிதித் துறை இயங்கும்—தமிழ்நாட்டில், இம்முறை சிறப்பாக உள்ளது என்றும் கூறலாம். எனினும், மற்ற எல்லாத் துறை யினரின் ஒத்துழைப்பு பூரணமாக இல்லாதபோது, இறுதித் திட்டம்

குறைபாடு உள்ளதாகத்தான் இருக்கும். அரசாங்கத்தின் இலக்குகளும் பொறுப்புகளும் இக்காலத்தில் மிகவும் அதிகமாக உள்ளதால், திட்டத்தைச் சரியாகத் தயாரிக்க முடியாது போகிறது என்று முன்னரே காட்டப்பட்டது. பட்ஜெட் தயாரிப்புக்காக, நிதித் துறையால் செய்யப்பட்டுள்ள விதிகளையும் முறைகளையும் பின்னர் விரிவாகக் காண்போம்.

வரவுசெலவுத் திட்டத்திற்குரிய அங்கீகாரம் கிடைத்தவுடன், அதன்படி எல்லாம் பிறகு நடக்கின்றனவா என்று கண்காணிப்பதும் நிதித் துறையின் முக்கியக் கடமை. இந்த வேலையை, தணிக்கைத் துறையின் ஒத்துழைப்புடன் நிதித்துறை செய்கிறது. இதற்குப் பல விதிகளையும் இயற்றியிருக்கிறது. இவ் விஷயமும் பின்னர் விவரிக்கப்படும். ஒதுக்கப்பட்டுள்ள நிதிக்கு அதிகமாகச் செலவு போகாமல் இருக்கிறதா, அவசியமானல் எந்த நிதிக்கு மாற்றம் செய்யலாம் என்றும் கவனிக்கவேண்டும். ஒவ்வோர் ஆண்டிலும் ஏற்பட்ட குற்றங்குறைகளை, தலைமைக் கணக்கு அதிகாரி ஓர் அறிக்கையின்மூலம் காட்டுவதும், அது பொதுக் கணக்குக் கமிட்டியின் பரிசீலனைக்குப் போவதும் மேலே குறிக்கப்பட்டது. இந்தக் கமிட்டியின் பரிசீலனைக்கும் நிதித் துறை உதவி செய்யும்.

நிதித் துறையின் இன்னொரு முக்கியமான வேலை, உரிய அரசாங்கத்துக்கு, கஜானாக்களில், எவ்வளவு பணம் கைவசத்தில் இருக்கும் என்று முன்கூட்டியே மதிப்பிட்டு, நாள்தோறும் வேண்டிய அளவுக்குப் பணம் கிடைக்கும்படி ஏற்பாடு செய்தல் ஆகும். அரசாங்க வரவும் செலவும் முன்பின்னாக ஏற்படுவதால், இது அவசியமாகிறது. ரிசர்வ் பாங்கின் ஒத்துழைப்போடு இவ்வேலை நடைபெறுகிறது. ரிசர்வ் பாங்கிலிருந்து வார அளவில் கைமாற்றுக் கடன் பெறுவதும், மற்றைய பொது நிறுவனங்களிலிருந்து பணம் பெற மூன்று மாதம் அல்லது ஆறு மாதம் என்னும் தவணையில் கருவூல உண்டியல்களை விநியோகிப்பதும், இவ்விஷயத்தில் சாதனங்களாகின்றன. நீர்ப்பாசன, மின்சார, கைத்தொழில் அபிவிருத்தி—இதுபோன்ற முக்கியப் பணிகளுக்கு பணம் வேண்டும்போது, மத்திய அரசாங்கத்திடமிருந்தோ, பொது மக்களிடமிருந்தோ அரசாங்கம் கடன் வாங்க நேரிடும். இதை, எப்பொழுது எவ்விதமாக லாபகரமாகச் செய்யலாம் என்று, ரிசர்வ் பாங்குடன் கலந்து, நிதி அமைச்சருக்கு ஆலோசனை கூறுவதும் நிதித் துறையின் கடமையாகும்.

அரசியல் அமைப்பின்படி, அவ்வப்போது நிறுவப்படும் நிதி சம்பந்தமான தனிக் குழாங்களிடம் (கமிஷன்களிடம்) சமர்ப்பிக்கும்படி உரிய அரசாங்கத்தின் நலனைக் கருதி, புள்ளிகளையும் அறிக்கைகளையும் தயாரிப்பதும் நிதித் துறையின் கடமையே.

## 8. பட்ஜெட் தயாரிப்பு

1. மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்
யாஉள முன்னிற் பவை.

2. முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர்
திறப்பாடு இல்லாஅ தவர். —(குறள்)

ஒவ்வொரு நிதியாண்டின் பட்ஜெட் தயாரிப்பு வேலையை, அரசாங்கத்தின் நிதித் துறை சுமார் ஆறு மாதங்களுக்கு முன்னமேயே தொடங்குகிறது. இதற்கென தனி அதிகாரிகளும் பணியாளர்களும் நியமிக்கப்படுவது வழக்கம். அரசாங்க பட்ஜெட் மதிப்பீடுகளுக்கு, பல துறைத் தலைமையினராலும், வேறு குறிப்பிட்ட அதிகாரிகளாலும் தயாரித்து அனுப்பப்படும் மதிப்பீடுகள் ஆதாரமாகும். ஒவ்வொரு துறைத் தலைமையும் தனக்குரிய மதிப்பீடுகளை, தன் நிர்வாகத்தின் கீழுள்ள அதிகாரிகளிடமிருந்து பெறும் விவரணங்களைச் சார்ந்தே தயாரிக்கும்; தலைமை அதிகாரிகள் இவ்விஷயத்தில் தனிக்கவனம் செலுத்துவார்கள் என அரசாங்கம் எதிர்பார்க்கின்றது. குறிப்பிட்ட தேதிகளில், ஒவ்வொரு குறிப்பிட்ட இன மதிப்பீடுகள் நிதித்துறைக்கு வந்து சேரவேண்டுமென்ற நியதி உண்டு; இது தவறக்கூடாது.

ஒவ்வோர் ஆண்டு பட்ஜெட்டிலும் இருபகுதிகள் உண்டு என்பது முன்னரே சொல்லப்பட்டது :—பகுதி I—இது அவ்வப்போது அமலில் உள்ள, சட்டங்கள், விதிகள், உத்தரவுகள், அனுமதிகள் இவைகளுக்கு இணக்கமாய், வரும் ஆண்டில் ஒவ்வோர் இனத்திலும் எவ்வளவு வருவாய் வரலாம், செலவு ஏற்படும் என்பதைப் பற்றியது; பகுதி II இது புதுப்பணிகள், திட்டங்கள் பற்றியது. முதற்பகுதியை நன்கு மதிப்பிட்டபின்தான், இரண்டாவது பகுதியைப் பற்றி யோசனை செய்யமுடியும். ஆகவே, முதற்பகுதி மதிப்பீடுகள்தான் முதலில் கவனிக்கப்படும். அமலில் உள்ள இனச் செலவுகளில் மிகவும் முக்கிய மானது, அரசாங்க ஊழியர்களின் ஊதியத்திற்கென ஆகும் செலவு. இது ஒவ்வோர் அரசாங்கத்திலும், ஒவ்வோர் ஆண்டிலும் மாறுபடும்;

ஆயினும், கீழே உள்ள புள்ளி விவரங்களால், இவ்வினச் செலவின் அளவைப் பொதுவாய் அறியலாம்.

**அரசாங்க ஊழியர்களின் சம்பளம், படி முதலியவைகளுக்கான செலவு (உதவிச்சம்பளச் செலவு தவிர)**

| 1964–65 ஆண்டு பட்ஜெட் மதிப்பீடு | ரெவின்யூ கணக்கில் மட்டும் | | |
|---|---|---|---|
| | மொத்தச் செலவு | ஊழியர்களுக்கான செலவு | |
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | மொத்தச் செலவில் சதவிகிதம் |
| 1. மத்திய அரசாங்கம்— (நாட்டுக் காப்புத் துறை நிர்வாகம் நீங்கலாக) | | | |
| (a) சிவில் துறை ... | 1,410 | 143 | 10% |
| (b) தபால் தந்தித் துறை ... | 136 | 67 | ·50% |
| (c) மொத்தம் ... | 1,546 | 210 | 14% |
| 2. தமிழ்நாட்டு அரசாங்கம் ... | 141 | 36 | 26% |

ஆகவே, இவ்வினச் செலவைக் கணக்குப் பார்த்து மதிப்பிடுவதில், முதற்கண் கவனம் செலுத்தப்படும். எல்லா அரசாங்கங்களிலும் பொதுவாக பட்ஜெட் தயாரிப்பு விஷயமாக ஒரே முறைதான் பின் பற்றப்படும். உதாரணத்திற்கு, தமிழ்நாட்டு அரசாங்க முறையைப் பார்ப்போம்.

### எண்ணிக்கை அறிக்கைகள் (Number Statements)

மதிப்பீடு அதிகாரிகள் ஒவ்வொருவரும், ஆகஸ்டு மாதம் முதல் தேதிக்குள் நிதித் துறைக்கு, பணியாளர்களின் விவரம், அவர்களுக் குரிய படி விவரம், என்ற இருவகை விவரங்களை அனுப்பவேண்டுமென விதி செய்யப்பட்டுள்ளது.

(1) **பணியாளர்களின் விவரம் :** நிலையாய் அனுமதிக்கப்பட்டிருக் கிற பணியாளர்கள் பற்றியும், தாற்காலிகமாக அனுமதிக்கப்பட்டுள்ள பணியாளர்களைப் பற்றியும், அவர்களின் எண்ணிக்கை, அவர்களுக்காக

அனுமதிக்கப்பட்டுள்ள ஊதிய விகிதம், அதன்படி ஒவ்வொருவரும் அடுத்த ஏப்ரல் மாத முதல் தேதியில் என்ன ஊதியம் பெறுவர் என்ற விவரங்களைக்கொண்ட ஓர் அறிக்கை அனுப்பப்படவேண்டும். இது கெஜட் பதிவுள்ள அதிகாரிகளுக்கும் அந்தப் பதவி இல்லாத சாதாரணப் பணியாளர்களுக்கும் பொருந்தும். சுருங்கச் சொன்னால், அடுத்த பட்ஜெட்டில் ஒவ்வொரு துறையின் மதிப்பீடுகளிலும், சேர்க்கப்பட வேண்டிய எல்லாப் பணியாளர்களின் விவரமும் தரப்படவேண்டும். எல்லாத் துறையினரும் ஒரே மாதிரியாக இந்த விவரங்களை அளித்தால் தான், அவைகளையெல்லாம் சேர்த்துப் பரிசீலனை செய்ய, நிதித் துறைக்கு வசதியாக இருக்கும். ஆகவே, விவரங்கள் கீழ்க்கண்ட பட்டியலின் முறைப்படி இருக்கவேண்டுமென்ற ஒரு நியதியுள்ளது.

**ஒவ்வொரு துறையிலும் நிலையாகவோ அல்லது தாற்காலிகமாகவோ அனுமதிக்கப்பட்டுள்ள நியமனங்களின் விவரம்**

**(கெஜட் பதிவுள்ளதும் இல்லாததும் உட்பட)**

1. பணியாளர்களின் வகை ;
2. ஒவ்வொரு வகையிலும் அடங்கும் நியமனங்களின் விவரம் ;
3. ஊதிய விகிதம் ;
4. ஒவ்வோர் ஊதிய விகிதத்தையும் சார்ந்த பணியாளர் களின் எண்ணிக்கை ;
5. அடுத்த ஏப்ரல் முதலில் பெறக்கூடிய ஊதியம் ;
6. ஒவ்வொரு வகையைச் சார்ந்த அதிகாரிகள் அல்லது ஊழியர்களுக்காக அடுத்த ஆண்டின் மதிப்பீட்டில் வேண்டிய தொகை ;
7. நடப்பு ஆண்டின் மதிப்பீடுகளிலிருந்து நியமனங்களின் எண்ணிக்கையிலோ அல்லது ஊதிய வகையிலோ மாறுதல் இருந்தால் அதற்கு ஆதாரம்.
8. விசேஷக் குறிப்புகள்.

(2) **படிகளின் விவரம் :**—ஒவ்வொரு நியமனத்திற்கும் அல்லது ஊழியருக்கும் அனுமதிக்கப்பட்டுள்ள நிலையான படி விவரங்களும் ஒரு குறிப்பிட்ட பட்டியல் முறையில் அனுப்பப்படவேண்டும்.

**நிலையான படிகளின் விவரம்**

1. அலுவலகத்தின் பெயர் ; நியமனத்தின் பெயர்.
2. இடம்.
3. நியமனத்துக்குள்ள ஊதியம்.

4. நியமனத்தைச் சார்ந்த படியின் வகை (அதாவது இடத்தைப் பற்றியதா, தலைமை நகருக்கென உள்ளதா, வீட்டு வாடகைக்காகவா, வாகனங்களுக்காகவா, பயணத்துக்காக மொத்தமாய்த் தரப்படுவதா—இது போன்ற விவரம்)
5. ஒவ்வொரு வகையிலும் அனுமதிக்கப்பட்டுள்ள படி விகிதம்.
6. வரும் நிதியாண்டின் பட்ஜெட்டில் ஒதுக்கப்படவேண்டிய தொகை—ஒவ்வொரு வகைப்படிக்காகவும், ஒவ்வோர் இன அதிகாரிகள், ஊழியர்கள் இவர்களுக்காகவும்.
7. நடப்பு ஆண்டின் மதிப்பீடுகளிலிருந்து மாறுபட்டால், அதற்கு ஆதாரம் (அரசாங்க உத்தரவு விவரம்)
8. விசேஷக் குறிப்புகள்.

குறிப்பு :—கிராமப் பணியாளர்களைப் பற்றிய விவரங்கள் மிகவும் அதிகமாக இருக்கும்; ஆதலால், அவை மேற்கண்ட அறிக்கைகளில் சேர்க்கப்படுவதில்லை. ரெவின்யூ போர்டு உரிய மதிப்பீடுகளை, பின்னர் அரசாங்கத்திற்கு அனுப்பும் போது, கிராமப் பணியாளர்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ள ஊதிய விகிதங்களெல்லாம் பரிசீலனை செய்யப்பட்டு, அவை சரியாக இருக்கின்றன என்று தேர்ந்ததாகச் சொல்ல வெண்டும்; இம்மாதிரி செய்யுமுன், சம்பந்தப்பட்ட கஜானா அதிகாரிகளிடமிருந்து இதைப் பற்றிய உறுதிமொழிகளைப் பெற வேண்டும்.

இம்மாதிரியாகத் தன்னிடம் வரும் விவரங்களையெல்லாம், நிதித் துறை அரசாங்கத்திலுள்ள தகவல்களோடு ஒத்துப் பார்த்து, அவை சரியாக இருக்கின்றனவா என்று பரிசீலனை செய்யும். (பணியாளர்களின் எண்ணிக்கை, வகை, ஊதிய விகிதம் முதலிய விவரங்கள் இறுதியாக்கப்பட்டபிறகு, ஏற்கெனவே கூறியபடி பட்ஜெட்டின் ஓர் அனுபந்தமாக வெளியிடப்படுகின்றன.)

## ஊதியச் செலவு மதிப்பீடுகள்

மேற்கண்ட எண்ணிக்கை அறிக்கைகளுக்குப் பிறகு, ஒவ்வொரு துறையும் தனக்குச் சம்பந்தப்பட்ட மதிப்பீடுகளை நிதித் துறைக்கு செப்டம்பர் மாதத்திலிருந்து குறிப்பிட்ட தேதிகளில் அனுப்ப வேண்டும். அப்போதும், ஒவ்வொரு துறைத் தலைவரும், 'அதிகாரிகளின் ஊதியம்', 'மற்றைய பணியாளர்களின் ஊதியம்' என்கிற தலைப்புகளின்கீழ், அவர்களின் எண்ணிக்கை, ஊதியம், படி முதலிய விகிதங்களை வகைப்படுத்திக்கொடுக்கவேண்டும்; நிலையான நியமனங்

களை, தாற்காலிக நியமனங்களிலிருந்து பிரித்துக் காட்டவேண்டும்; சில தாற்காலிக நியமனங்களுக்கு ஓர் ஆண்டு முழுவதும் நிதி ஒதுக்க வேண்டப்படாமல் இருந்தால், ஆண்டின் எப்பகுதிக்கு மட்டும் செலவுத் தொகை தேவைப்படுகிறது என்பது குறிக்கப்படவேண்டும்; எந்த அதிகாரியினுடைய ஊதியமும் மாநிலத்தின் தொகு நிதியில் சாட்டப் பட்டதாயிருந்தால், அதன் விவரம் மற்றவைகளிலிருந்து பிரித்துக் காட்டப்படவேண்டும். இதுபோல், மதிப்பீடுகளுடன் நிலையான படிகளைப் பற்றிய விவரங்கள் தரப்படும்பொழுது, எந்த வகையான அதிகாரிகளுக்கு அவை உரியவை, எவ்வளவு பேர் அவற்றிற்கு உரிய வர்கள், ஒவ்வொரு படிகளின் விகிதம் என்பவை குறிக்கப்படவேண்டும். உதாரணமாக, இப்படிச் சொல்லப்படலாம் :—(வளைவு கோடுகளுக்குள் குறிக்கப்படுவது படியின் தொகை ஆகும்) வாகனங்களை வைத்துக் கொள்ளுவதற்கான படிகள்—போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர்கள் 10 (25); நிலையான பிரயாணப் படிகள்—ஆயத்துறை சப்-இன்ஸ்பெக்டர்கள் 20 (18).

பணியாளர்களுக்கான செலவை மதிப்பிடும்போது, பின்வரும் சிறப்பு விதிகளைப் பின்பற்ற வேண்டும் என்ற நியதியும் உண்டு :—

(1) நடைமுறையில் நிதி ஆண்டில் எவ்வளவு செலவு ஆகலாமோ அதைத்தான் ஆதாரமாகக் கொள்ளவேண்டும். அதாவது, ஓர் அலுவலகத்திற்கு நியமனங்கள் ஓரளவுவரை செய்யலாம் என்று அரசாங் கத்தின் அனுமதி இருந்தபோதிலும், அதற்கு ஏற்ற பணியாளர்களை வேலைக்கு அமர்த்துவதில் காலதாமதம் ஆவது இயல்பு; ஒருவருக்குப் பதிலாக இன்னொருவரை ஒரு வேலைக்கு அமர்த்துவதில் ஊதியச் செலவும் மாற்றம் அடையலாம்; இவைகளை எல்லாம் மனத்திற் கொண்டால்தான், மதிப்பீடு சரியானதாக ஆகும். சில சேவைத் துறைகளின் அதிகாரிகள் ரஜாவில் போனால், அவர்களுக்குப் பதிலாக வேறு அதிகாரிகளை நியமனம் செய்வதற்கு ஓர் அளவுக்குத் தனியான நியமனங்கள் அனுமதிக்கப்பட்டிருக்கும். இந்த வகையில் உள்ள அதிகாரிகளுக்கான ஊதிய மதிப்பீடு செய்யும்போது, எவ்வளவு பேர் பணியில் இருக்கலாம், எவ்வளவு பேர் ரஜாவில் இருக்கலாம் என்று சேர்த்து மதிப்பிடவேண்டும். ஆனால், தனியாக ரஜா சம்பளம் என்று மதிப்பீட்டில் குறிப்பிடவேண்டியதில்லை.

(2) ஒவ்வோர் ஆண்டிலும் ரெவின்யூ துறையில், பல அனுபவ மிக்க தாசில்தார்கள், டெபுடி கலெக்டர்கள் ஆகவோ அல்லது வேறு வேலையிலோ தாற்காலிகமாக உயர்வு பெறுவர். அவர்களுக்குப் பதிலாக டெபுடி தாசில்தார்கள், தாசில்தார்களாக உயர்த்தப்படுவர். பட்ஜெட் மதிப்பீடுகளில், இதைக் கருதி, 'சாதாரணப் பணியாளர் களின் சம்பளம்' என்ற தலைப்பில், யார் யார் தாசில்தார்களாக நிய

மனம் பெறுவார்களோ, அவர்களுடைய சம்பளத் தொகைக்கான செலவுக்கு வேண்டிய தொகையைத்தான் மதிப்பிட்டுச் சேர்க்க வேண்டும்.

(3) போலீஸ் சிப்பந்திகள் விஷயத்தில், சாதாரணமாக அனுமதிக்குக் குறைவாகவே நியமனங்கள் செய்யப்பட்டு இருப்பது வழக்கம். எவ்வளவு பேர் நடைமுறையில் வேலையில் இருப்பார்களோ, அவர்களுடைய செலவுக்காக மட்டும்தான் திட்டத்தில் தொகை சேர்க்கப்பட வேண்டும்.

(4) கல்வித் துறையில் ஆசிரியர்களுக்கு நல்ல தகுதி இருக்க வேண்டும் என்பது முறை. போதிய தகுதியுள்ளவர்கள் கிடைக்காத போது, தகுதிக் குறைவாக உள்ளவர்கள் வேலையில் தாற்காலிகமாக நியமிக்கப்படலாம்; நல்ல தகுதியுடையவர்கள் கிடைத்தவுடன், அவர்கள் இந்த வேலையில் அமர்த்தப்படுவார்கள். இதை மனத்திற் கொண்டு கல்வித் துறையில் முழுத் தகுதியுடையவர்கள் ஆசிரியர்களாக நியமிக்கப்பட்டால், அவர்களுக்கு என்ன விகித ஊதியம் கொடுக்கப்பட வேண்டுமோ, அதற்கு ஏற்ப மதிப்பீட்டுத் தொகை குறிப்பிடப்பட வேண்டும்.

(5) சில சமயங்களில், சில நியமனங்களுக்கு ஒருவரையும் வேலைக்கு அமர்த்த வேண்டாம் என்ற உத்தரவு இருந்தால், அந்த நியமனங்களுக்கென ஒரு தொகையையும் மதிப்பீட்டில் சேர்க்கக்கூடாது; ஏதாவது சில நியமனங்கள் அவசியம் செய்தாக வேண்டும் என்று கருதப்பட்டால், அதற்கு வேண்டிய உத்தரவைக் கோரி, அரசாங்கத்திற்குத் தனியே யோசனைகள் அனுப்பவேண்டும்; அதை எதிர்பார்த்து மதிப்பீட்டுத் தொகையில் ஒன்றும் சேர்க்கக்கூடாது.

(6) சில அதிகாரிகள் ரஜா எடுத்துக்கொண்டு, அக்காலத்தில் இந்நாட்டிற்கு வெளியே இருக்க ஏற்பாடு செய்வர்; அவர்களில் ஒரு பகுதியினர்க்கு, ரஜா ஊதியம் ரூபாய்க் கணக்கில் இல்லாமல், ஸ்டெர்லிங் என்னும் ஆங்கிலச் செலாவணி முறையில் கொடுக்கவேண்டியிருக்கும். இவைகளின் மதிப்பீடு, தனியாகச் செய்யப்பட்டு, முழு விவரங்களுடன் அரசாங்கத்திற்கு அளிக்கப்படவேண்டும். சிலவகைச் சேவையாளர்களுக்கு, இந்தியாவில் கொடுக்கப்படும் சம்பளம் தவிர, ஸ்டெர்லிங் முறையில், வேறு ஊதியம் வெளிநாட்டில் கொடுக்கப்படலாம். அவைகளையும் தனியே மதிப்பிட்டு, விவரங்களை அரசாங்கத்திற்குத் தெரிவிக்க வேண்டும். சில அதிகாரிகள், வெளிநாட்டில் தாற்காலிகமாக வேறு பணியில் இருந்தால், அவர்களுக்காக ஏற்கப்படவேண்டிய செலவும் இம்முறையில் மதிப்பிடப்பட வேண்டும். இந்த வகைச் செலவுகளில் ஏதாவது அரசாங்கத் தொகு நிதியில் சாட்டப்பட்ட செலவாக

இருந்தால், அவைகளை மற்றைய செலவுகளிலிருந்து பிரித்துக் காட்ட வேண்டும்.

(7) பொதுவாக அதிகாரிகளும், சாதாரண ஊழியர்களும், தங்கள் ரஜாக் காலத்தை இந்நாட்டிலேயே கழிப்பர். அவர்களுக்கான ரஜா ஊதியச் செலவு, 'ரஜாப் படிகள்' என்ற தலைப்பின்கீழ், வரவுசெலவுத் திட்ட மதிப்பீட்டில் குறிக்கப்படவேண்டும். இதற்கான தொகையை நடைமுறையில் எவ்வளவு பேர் ரஜாவில் இருக்கலாம் என்பதை எதிர் பார்த்து மதிப்பிட வேண்டியதானாலும், அது ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேற்படாமல் இருக்கவேண்டும். கல்வி நிலையங்கள், நீதிஸ்தலங்கள் போன்ற சில துறைகளில், ஆண்டில் ஒருபகுதி முழுவதும் ரஜாவாக இருக்கும். அவைகளின் விஷயத்தில், பணியாளர்களின் மொத்தச் சம்பளத்தில் 2½ சதவிகிதத்திற்கு மேற்படாமல் ரஜாப்படித் தொகை மதிப்பீடு இருக்கவேண்டும். தனியாக ரஜா காலம் இல்லாத மற்றத் துறைகளுக்கு, இந்த அளவு 5 சதவிகிதம் வரை இருக்கலாம். ரஜா என்று தனியாக ஒரு வசதியும் இல்லாத கீழ்த்தர நியமனங்களில் உள்ள பணியாளர்கள் விஷயத்தில், ரஜாப் படி என்று ஒரு தொகையும் ஒதுக்கப்பட வேண்டுவது இல்லை. இதுபோலவே, அதிகாரிகள் ரஜா வில் போனால், அவர்களுக்குப் பதிலாக நியமனம் செய்வதற்கு ஓர் அளவு தனி நியமனங்கள் உள்ள துறைகளில், 'பணியாளர்களின் ஊதியம்' என்ற தலைப்பில், ஒரு தொகையையும் சேர்க்கவேண்டா; ஏனெனில், அவர்களுடைய ரஜா விஷயமான செலவுக்கு, வேறு தனி யாக மதிப்பீடுகள் உள்ளன.

(8) ஓர் ஆண்டின் மார்ச்சு மாத சம்பளம் அடுத்த ஏப்ரல் மாதத் தில்தான் பட்டுவாடா ஆகும். ஆகவே, இந்தச் செலவு அடுத்த நிதி யாண்டில் சேர்க்கப்பட வேண்டும்.

(9) மேலே விவரித்தபடி எவ்வளவு கணக்காகப் பணியாளர்களின் ஊதிய விஷயமான செலவை மதிப்பிட்டாலும், நடைமுறையில் செலவு பல காரணங்களால் குறைவாக இருப்பது இயல்பு. முந்தைய ஆண்டு களில் இவ்விதமாய்க் குறைவு எந்த அளவில் நேர்ந்தது என்பதை மனத்திற் கொண்டு, வரும் ஆண்டின் மதிப்பீடுகளிலிருந்து தோராய மாக ஓர் அளவுக்குச் செலவைக் குறைத்துக் காட்டவேண்டும்.

(10) பிரயாணப் படிகளுக்கான செலவு எப்போதும் ஒருநிலையாக இருக்காது. வரும் ஆண்டின் செலவை மதிப்பிடும்போது, முந்தைய மூன்று ஆண்டுகளில், இந்த வகையில் எவ்வளவு செலவு ஆனது என் பதைக் காட்டி, புது மதிப்பீட்டில், அதிக வேறுபாடு இருந்தால், அதற்குக் காரணம் சொல்லவேண்டும்.

(11) சில உயர்தர அதிகாரிகள், வெளிநாடுகளில் இருந்தால், நாட்டுக்குத் திரும்பி வருவதற்கு, அவர்களுக்கும் அவர்கள் குடும்பத்

திற்கும், தனியாகப் பயணச் செலவு அனுமதிக்கப்படும். இதன் விவரங்கள், தனியே மதிப்பீடுகளோடு, உரிய கணக்குத் தலைப்புகளின் கீழ்க் காட்டப்படவேண்டும்.

குறிப்பு :—பட்ஜெட்டின் முதல் பகுதிக்கான மதிப்பீடுகளைச் செய்யும்போது, எந்த விதமான புது யோசனைகளுக்கும் செலவுத் தொகையைச் சேர்க்கக்கூடாது. ஏதாவது புது யோசனைகளுக்கு அரசாங்கம் பின்னர் அனுமதி அளித்தால், அதற்காக எவ்வளவு அதிகத் தொகை எந்தக் கணக்குகளில் சேர்க்கப்பட வேண்டும் என்று அரசாங்கத்திற்குத் தனியே தெரிவிக்கவேண்டும். பட்ஜெட்டின் இரண்டாவது பகுதியான புதுப் பணிகளின் செலவு விஷயத்திலும், ஏதாவது ஒரு திட்டம் அரசாங்கத்தால் அனுமதிக்கப்பட்டபின், நடைமுறையில் அதைத் தொடங்கவும் நியமனங்களைச் செய்யவும் காலதாமதமாவது இயல்பு. ஆகவே, இதற்கான செலவுகளை மதிப்பிடும்போது, தவிர்க்க முடியாத தாமதத்தை நன்கு கருதி, செலவாகக்கூடிய அளவுக்கு மட்டும் மதிப்பீடுகளில் சேர்க்கவேண்டும். இவ் விஷயத்தில், போதிய அளவு கவனம் இல்லாமல், மதிப்பீடுகளைவிடச் செலவு குறைவாக இருப்பது வழக்கமாகின்றது.

## சில்லறைச் செலவுகள் (Contingencies)

அரசாங்கத் துறைகளுக்கு எல்லாம் பொதுவாக உள்ள மற்றோர் இனச்செலவு ‘ சில்லறைச் செலவு ’ எனப்படும். அரசாங்க அலுவலுக்காகத் தபால் தந்திச் செலவு, சுத்தம் செய்பவர்கள் போன்ற பணியாளர்களுக்குக் கொடுக்கப்படும் ஊதியம், அதிகாரிகளின் நிர்வாகப் பயணங்களையொட்டி, அலுவலக சம்பந்தமாக ஏற்கப்படவேண்டிய செலவுகள், அலுவலகங்களுக்கு வேண்டிய தட்டுமுட்டுச் சாமான்கள், நாட்டாண்மைக் கழகங்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய வரிகள், புத்தகங்கள், பத்திரிகைகள் வாங்குவதற்கான செலவு இவைபோன்ற செலவுகள் இவ்வினத்தில் சாரும். ரூ. 5,000க்குள் அடங்கும் சிறிய கட்டட வேலைகள், பழுதுபார்க்கும் வேலை—இவை, சம்பந்தப்பட்ட அலுவலகத்தாராலேயே மேற்கொள்ளப்பட்டால், அச் செலவும் சில்லறைச் செலவில் சேரும். பின்வரும் புள்ளிகளால் இந்த இனச் செலவுகளின் அளவு ஒருவாறு புலன் ஆகும்.

## சில்லறைச் செலவுகள் (1964–65 மதிப்பீடு)

**ரெவின்யூ கணக்கு மட்டும்**

| விவரம் (1) | சில்லறைச் செலவு (2) | மொத்தச் செலவு (3) | சதவிகிதம் (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| **மத்திய அரசாங்கம்** | | | |
| சிவில் துறைகள் (அதாவது நாட்டுக் காப்புத் துறை தவிர) ... | 44 | 1,410 | 3% |
| தபால் தந்தித் துறை ... | 7 | 136 | 5% |
| மொத்தம் ... | 51 | 1,546 | 3·3% |
| **மாநில அரசாங்கம்** | | | |
| தமிழ் நாடு ... | 4 | 141 | 3% |

ஓர் ஆண்டுக்கான இவ்வினச் செலவை மதிப்பிடும்போது, முந்தைய மூன்று ஆண்டுகளிலான சராசரிச் செலவைத்தான் ஆதாரமாகக் கொள்ளுவது முறை. ஆகவே, ஒவ்வொரு துறையும் தன் மதிப்பீட்டோடுகூட, முந்தைய மூன்று ஆண்டுப் புள்ளி விவரங்களையும் தொகுத்துத் தரவேண்டும்; முந்தைய ஆண்டு ஒன்றில், ஏதாவது விசேஷச் செலவு இருந்திருந்தால் அதைக் காட்டியும், அதுபோல, வரும் ஆண்டில் விசேஷச் செலவுகள் சேர்க்கப்பட வேண்டியிருந்தால், அதை விவரித்தும், குறிப்புகள் அனுப்பவேண்டும். பட்ஜெட்டில் விவரம் கொடுக்கப்படாமல், 'மற்றைய செலவுகள்' என்ற ஓரினமும் சேர்க்கப்படுவது உண்டு; இவைகளுக்கும் ஒவ்வொரு துறையும், தன் மதிப்பீட்டில் விவரம் கொடுக்கவேண்டும். 'சில்லறைக் கட்டட வேலையும், பழுது பார்த்தலும்' என்ற தலைப்பில் பதிவு செய்யப்படும் செலவுகளுக்கு, புதுப்பணிகள், நடந்துவரும் பணிகள், என்ற பாகுபாட்டுடன், முந்திய மூன்று ஆண்டுகளில் இனவாரியாக ஏற்கப்பட்ட செலவும் காட்டப்படவேண்டும். புதுப் பணிகளுக்கு, பின்கண்ட பட்டியல் முறையில் விவரங்கள் தரவேண்டும் :—

1. பணியின் பொது விவரணம்
2. மொத்தச் செலவின் மதிப்பீடு
3. பட்ஜெட் ஆண்டில் இதற்காக எதிர்பார்க்கப்படும் செலவின் மதிப்பீடு.

4. விசேஷக் குறிப்புகள்
(அந்தந்தப் பணிக்கான, பொதுத் திட்டங்களும், தொகை மதிப்பீடுகளும் தயாரிக்கப்பட்டு, சம்பந்தப்பட்ட மேல் அதிகாரிகளால் சரியென்று ஒப்புக்கொள்ளப்பட்டனவா என்கிற விவரம் முதலியவை.)

## சாதாரணப் பணிகள் (Works)

மொத்தச் செலவு ரூ. 5,000-க்கு மேலாகும் என்று எதிர்பார்க்கப் படும் ஒரு கட்டடம் அல்லது வேறு ஒரு பணி, பயனடையும் துறையால் மேற்கொள்ளப்பட்டால், அதற்கான செலவு, அந்தத் துறையைச் சார்ந்த கணக்குப் பெருந்தலைப்பின்கீழ், 'பணிகள்' என்ற சிறிய தலைப்பில் பதிவு செய்யப்படும். அவைகளுக்கும், 'சில்லறைச் செலவு களில்' சேர்க்கப்படும் சிறு பணிகளுக்கும் மேற்கூறியுள்ள முறையில் விவரம் தரப்படவேண்டும். பொதுப்பணி, மின்சார யந்திரத்துறை, காட்டுவளம்—இந்தத் துறைகளைச் சார்ந்து, நடந்துவரும் முக்கியப் பணிகளுக்கு, பின்வரும் பட்டியல் முறையில் விவரங்கள் தர வேண்டும் :—

1. பணியின் பெயர்.
2. மொத்தச் செலவு மதிப்பீடு.
3. முந்திய ஆண்டு முடிய, இதற்கான செலவு.
4. நடைமுறை ஆண்டில் செலவு—முதல் மதிப்பீடு.
5. ,, ,, ,, —திருத்தப்பட்ட மதிப்பீட்டின்படி.
6. வரும் ஆண்டில் ஆகும் செலவு மதிப்பீடு.

பொதுப்பணித் துறையால் ஏற்கப்படும் சிறு பணிகளுக்கான செலவை, அத்துறைக்கான கணக்குப் பெருந்தலைப்பின்கீழ் ('50. பொதுப்பணிகள்') பதிவு செய்யவேண்டும். ஒவ்வோர் ஆண்டிலும் மற்றைய துறை ஒவ்வொன்றுக்குமாக, பொதுப்பணித் துறையால் ஏற் கப்படும் இவ்வினச் செலவு, ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் போகக் கூடாது என்ற நியதியும் அரசாங்கத்தால் செய்யப்பட்டுள்ளது. ஏதாவது ஓர் ஆண்டில், அனுமதித்துள்ள அளவுக்குமேல் செலவு செய்யவேண்டி யிருந்தால், அதைத் தனியே தெளிவாக்கி, அரசாங்கத்தின் அனுமதி பெறவேண்டும்.

## சுங்கத் தீர்வை

ஒரு மாநில அரசாங்கத்தின் உபயோகத்திற்காக வெளிநாடுகளி லிருந்து சாமான்கள் பெறவேண்டியிருந்தால், அவைகளுக்கு மத்திய அரசாங்கத்தால் பொதுவாக விதிக்கப்பட்டுள்ள சுங்கத் தீர்வையைக்

கட்டவேண்டும். இந்த வகைச் செலவு, சாமான்களின் மொத்தச் செலவில் அடங்கும். ஆகவே, அவைகளைத் தனியாக மதிப்பீடுகளில் காட்டுவதில்லை; ஆயினும், இந்தவிதமான செலவையும் சரியாக மதிப்பிட்டு, ஒவ்வொரு துறையின் செலவில் சேர்க்கவேண்டும். சாமான்களின் விலை வெளிநாட்டுச் செலாவணிகளில் கொடுக்கப்படவேண்டியிருந்தால், அதற்கான தொகையை, அரசாங்கம் இதற்கென ஏற்படுத்தியுள்ள விகிதாசாரத்தின்படி, நம் நாட்டின் செலாவணிக்கு மாற்றி, மதிப்பீட்டோடு சேர்க்கவேண்டும்.

## மொத்த மதிப்பீடு (Lump Sum Provision)

பொதுவாக பட்ஜெட் மதிப்பீடுகளில், விவரம் இல்லாமல் மொத்தத் தொகையாக ஒன்றையும் சேர்க்கக்கூடாது. ஆனால், தனித்தனி விவரங்களில் சேரும் ஓர் இன மதிப்பீடுகளைச் சேர்த்துப் பார்க்கும்போது, முந்திய ஆண்டுகளைவிடச் செலவுத் தொகை அதிகமாகத் தோன்றினால், பழைய அனுபவத்தைக்கொண்டு எதிர்பார்க்கக்கூடிய செலவுக் குறைவைக் கருதி, 'நேரக்கூடிய குறைவு கருதிச் செய்யும் வெட்டு' (Deduction for Probable Savings) என்று ஒரு தொகையை மொத்தமாகக் குறித்து மதிப்பீட்டைக் குறைப்பது முறையாகும்.

ஸ்தல ஸ்தாபனங்களுக்கோ, அல்லது தனி நிறுவனங்களுக்கோ, குடிநீர்த் திட்டம், கழிநீர்த் திட்டம், சாலைகள், பாலங்கள், கல்வி, மருத்துவ நிலையங்கள்—இவை போன்றவைகளுக்காக அளிக்கப்படவேண்டிய மானியங்களுக்கு, பட்ஜெட் மதிப்பீடுகளில், தனித்தனியே முன்கூட்டி விவரம் கொடுக்க இயலாது. இவைகளைச் சார்ந்த தொகையை மொத்தமாகத்தான், இனவாரி மதிப்பீட்டில் சேர்க்க முடியும். ஆயினும், ஏற்கெனவே அரசாங்கத்தால் ஏற்கப்பட்டுள்ள செலவினங்களுக்காக வரும் நிதி ஆண்டில் இன்னும் எவ்வளவு செலவு ஏற்கப்படவேண்டியிருக்கும் என்பதற்கு, விவரங்களைக் கீழேயுள்ள பட்டியல் முறையில் அனுப்பவேண்டும் :—

### I. ஆண்டுதோறும் பொதுவாகக் கொடுக்கவேண்டியுள்ள மானியங்கள்

1. விவர எண்.
2. திட்டத்தின் விவரணம்.
3. நடைமுறை ஆண்டுக்காக பட்ஜெட்டில் அனுமதிக்கப்பட்ட மானியம்.
4. முந்திய ஆண்டுகளில் அனுமதிக்கப்பட்டுள்ள திட்டங்களுக்கு, நடைமுறை ஆண்டில் ஏற்கப்படவேண்டிய செலவு.

5. நடைமுறை ஆண்டில் புதிதாக அனுமதிக்கப்பட்ட இனங்களுக்காக, ஏற்கப்படவேண்டிய செலவு—நடைமுறை ஆண்டுக்கு.
6. நடைமுறை ஆண்டில் புதிதாக அனுமதிக்கப்பட்ட இனங்களுக்காக, ஏற்கப்படவேண்டிய செலவு—வரும் ஆண்டுகளில் மேலும் ஏற்கவேண்டிய செலவு.
7. விசேஷக் குறிப்புகள்.

## II. ஒரு குறிப்பிட்ட காலத்துக்குமட்டும் கொடுக்கவேண்டிய மானியங்கள்

1. விவர எண்.
2. திட்டத்தின் விவரணம்.
3. மொத்தச் செலவின் மதிப்பீடு.
4. அதற்காகக் கொடுக்கக்கூடிய மானியத்தின் அளவு.
5. ஏற்கெனவே கொடுக்கப்பட்டுள்ள மானியம்.
6. நடைமுறை ஆண்டின் பட்ஜெட்டில் அனுமதிக்கப்பட்டுள்ள மானியம்.
7. வரும் ஆண்டுகளில் கொடுக்கக்கூடிய மானிய பாக்கி.
8. விசேஷக் குறிப்புகள்.

## III. ஒரு பகுதிக்கு மானியமும் இன்னொரு பகுதிக்குக் கடனுமாக உதவி பெறும் திட்டங்கள்

1. ஸ்தல ஸ்தாபனத்தின் பெயர்.
2. திட்டத்தின் விவரணம்.
3. நடைமுறை ஆண்டின் பட்ஜெட்டில் அனுமதிக்கப்பட்டது—மானியம்.
4. நடைமுறை ஆண்டின் பட்ஜெட்டில் அனுமதிக்கப்பட்டது—கடன்.
5. நடைமுறை ஆண்டில் ஸ்தல ஸ்தாபனம் தானே ஏற்கும் என எதிர்பார்த்த செலவுப் பகுதி.
6. நடைமுறை ஆண்டின் திருத்தப்பட்ட மதிப்பீடு—மானியம்.
7. ,, ,, ,, ,, —கடன்.
8. நடைமுறை ஆண்டில் ஸ்தல ஸ்தாபனம் ஏற்கும் செலவுக்குத் திருத்திய மதிப்பீடு.
9. வரும் ஆண்டின் மதிப்பீடு—மானியம்.
10. ,, ,, ,, —கடன்.
11. ,, ,, ,, —ஸ்தல ஸ்தாபனம் ஏற்கும் செலவு.
12. விசேஷக் குறிப்புகள்.

## பொது விதிகளும் முறைகளும்

சில குறிப்பிட்ட செலவினங்களைப்பற்றிய விசேஷ விதிகளையும் முறைகளையும் மேலே கண்டோம். இப்பொழுது, வருவாய்—செல வினங்களைச் சார்ந்த மதிப்பீடுகளைத் தயாரிப்பதற்கு ஏற்பட்டுள்ள பொதுவான விதிகளையும் முறைகளையும் காணலாம்.

(i) ஒவ்வொரு துறையைச் சார்ந்த மதிப்பீடுகள் நடைமுறை ஆண்டின் பட்ஜெட்டில் உள்ள வடிவத்திலேயே தயாரிக்கப்பட வேண்டும்; மதிப்பீடுகள் சரியாக உள்ளனவா என்று அரசாங்கம் பரிசீலனை செய்யுமாறு, போதிய விவரணங்களும் கொடுக்கப்பட வேண்டும். இதைக் கருத்திற் கொண்டு, அரசாங்க நிதித் துறை ஒவ் வோர் ஆண்டிலும், உதிரியாக, பட்ஜெட் தாள்களை அச்சடித்து, சம்பந் தப்பட்ட துறைத் தலைமை அதிகாரிகளுக்கும், மற்றைய மதிப்பீட்டு அதிகாரிகளுக்கும் முன்னதாக அனுப்புகிறது. ஒவ்வோர் ஆண்டின் பட்ஜெட்டிலும் பெருந்தலைப்புகளுக்குக் கீழ் எந்த வகையான புள்ளிகள் கொடுக்கப்படும் என்பதை, முன்னமே அறிந்துள்ளோம். மதிப்பீடு களைத் தயாரிக்க வசதியாக அனுப்பப்படும் மாதிரித் தாள்கள் கீழ்க் கண்டவாறு இருக்கும்.

### 1964–65 மதிப்பீடு—செலவினங்கள்

### மானியக் கோரிக்கை—பெருந்தலைப்பு

1. சிறு தலைப்புகளும், பிரிவுகளும், நிதி ஒதுக்கு உட்பிரிவுகளும், விவரணத் தலைப்புகளும்.

2.
3. } 1962–63 கணக்கு.

4.
5. } 1963–64 திட்ட மதிப்பீடு.

6.
7. } 1963–64 திருத்த மதிப்பீடு.

8.
9. } 1964–65 திட்ட மதிப்பீடு.

10. விசேஷக் குறிப்புகள்

3, 5, 7, 9 என்னும் எண்ணுள்ள பத்திகளில், சிறு தலைப்புகளையும், நிதி ஒதுக்கு உட்பிரிவுகளையும் சார்ந்த தொகைகள் குறிக்கப்படும். 2, 4, 6, 8 என்னும் எண்ணுள்ள பத்திகளில், ஒவ்வொரு நிதி ஒதுக்கு உட் பிரிவின் விவரணங்களுக்குரிய தொகைகள் தரப்படும். இந்த விவர ணங்களுக்குரிய தொகைகளைச் சேர்த்துக் கூட்டினால், அடுத்த பத்தியில் மேலே ஒரு தலைப்புக்கு எதிரில் காட்டப்பட்டுள்ள தொகைக்குச்

சமமாகும். வருவாயினங்களுக்கு உரிய தாள்களில், விவரம் சற்று மாறி யிருக்கும். உதாரணமாக :—

**1964–65 மதிப்பீடு—வருவாயினங்கள்—பெருந்தலைப்பு**

1. சிறு தலைப்புகளும் உட்பிரிவுகளும்.
2. 1962–63 கணக்கு.
3. 1963–64 திட்ட மதிப்பீடு.
4. 1963–64 திருத்த மதிப்பீடு.
5. 1964–65 திட்ட மதிப்பீடு.
6. விசேஷக் குறிப்புகள்.

**குறிப்பு :—**செலவினங்களுக்கு உள்ள மாதிரித் தாள்களில் 4, 5 என்ற எண்ணுள்ள பத்திகளில் நடைமுறை ஆண்டின் திட்டத்தில் சேர்க்கப்பட்ட தொகைகள் அச்சடிக்கப்பட்டிருக்கும். மதிப்பீட்டு அதிகாரிகள் இந்தத் தொகையை மாற்றக்கூடாது. இதுபோல, வருவாயினங்களுக்குரிய மாதிரித் தாள்களில் 3 என்ற எண்ணுள்ள பத்தியில், நடைமுறை 'ஆண்டின் திட்டத்தில் உள்ள தொகைகள் கொடுக்கப்பட்டிருக்கும்.

**(ii) நிதி ஒதுக்கு உட்பிரிவுகள்—விவரணத் தலைப்புகள் :—** மேலே காட்டப்பட்ட செலவின மாதிரித் தாளின் '1' என்ற எண்ணுள்ள பத்தியைப் பற்றியது இது. விவரணத் தலைப்புகள் அரசாங்கத்தால் நிர்ணயிக்கப்பட்டவை; அவைகளைத் திட்ட மதிப்பீட்டு அதிகாரிகள் மாற்றக்கூடாது. ஓர் ஆண்டின் நடுவில், அரசாங்கம் ஏதாவது ஒரு புதுத் தலைப்பை உபயோகத்திற்குக் கொண்டுவரும்படி, உத்தரவிட்டு இருந்தால், அதை இந்த மாதிரித் தாளில் கையால் எழுதி, விசேஷக் குறிப்புகள் என்ற பத்தியில் அந்த உத்தரவைப்பற்றிய குறிப்பைக் கொடுக்கவேண்டும்.

**(iii) கணக்குகள் :—**செலவின மாதிரித் தாளில், 2, 3 என்ற எண்ணுள்ள பத்திகளைப் பற்றியது இது. இந்தப் பத்திகளில் தரப்படும் தொகைகள், மாநிலத் தலைமைக் கணக்கு அதிகாரியின் இறுதிக் கணக்குகளில் பதிவு செய்யப்பட்ட தொகைகளோடு ஒத்திருக்க வேண்டும். தொகைகள் எல்லாம் ரூபாய்க் கணக்கிலேயே குறிக்கப்பட வேண்டும்; அதாவது, ஒரு ரூபாய்க்குக் குறைவான செலவை, ஒரு ரூபாய் என்று கொள்ளவேண்டும், அல்லது விட்டுவிடவேண்டும். ஒரு துறைக் கணக்கில் பதிவு செய்யப்பட்டுள்ள தொகைகளுக்கும், தலைமைக் கணக்கு அதிகாரியின் கணக்கில் உள்ள தொகைகளுக்கும் வேறுபாடு இருந்தால், அது எதனால் ஏற்பட்டுள்ளது என்பதை மதிப்பீட்டு அதிகாரி தனியாக ஒரு குறிப்பில் காட்டவேண்டும்.

(iv) **திருத்த மதிப்பீடு :**—இது செலவின மாதிரித் தாளில் 6, 7 என்ற எண்ணுள்ள பத்திகளைப் பற்றியது. ஒவ்வோர் ஆண்டின் திருத்த மதிப்பீடு என்பது, ஒவ்வொரு தலைப்பின் கீழும் அந்த ஆண்டில் பெறக்கூடிய வருவாய் அல்லது ஏற்கவேண்டிய செலவினங் களைப்பற்றியது ஆகும். ஓர் ஆண்டு நடக்கும்போது, சென்ற சில மாதங்களில் கணக்கில் பதிவு ஆகியுள்ள வருவாய் அல்லது செலவினங் களின் போக்கைக் கருதி, முதலில் பட்ஜெட் திட்டத்தில் குறிக்கப்பட்ட மதிப்பீடுகள் எப்படி அந்த ஆண்டு முடிவதற்குள் மாறலாம் என்று காட்டுவதுதான் இதன் நோக்கம். இந்தத் திருத்த மதிப்பீடுகள், பொதுவாக அடுத்த ஆண்டின் வரவு செலவு மதிப்பீட்டுக்கு நல்ல ஆதாரமாக இருக்கும். ஆகவே, இந்தத் திருத்த மதிப்பீடுகளை மிகவும் கவனத்தோடு தயாரிக்கவேண்டும்.

திருத்த மதிப்பீடுகளைத் தயாரிக்கத் தொடங்கும்போது சாதாரண மாக, நடைமுறை ஆண்டின் முதல் நான்கு மாதங்களின் செலவுக் கணக்கு எழுதப்பட்டு, பரிசீலனைக்கு ஏற்றதாக இருக்கலாம். அப் போது, திருத்த மதிப்பீடுகளைப் பின் வருமாறு தயார் செய்யலாம் :—

(1) நடைமுறை ஆண்டில் முதல் 4 மாதங்களில் செய்த செலவோடு, முந்திய ஆண்டின் பின் 8 மாதங்களிலான செலவுகளைக் கூட்டி, வரும் தொகையை நடைமுறை ஆண்டின் மொத்தச் செலவின் மதிப்பீடாகக் கொள்ளலாம் ; அல்லது

(2) முதல் 4 மாதங்களின் செலவு சராசரியாக இருக்கும் எனத் தோன்றினல், அதைப்போல 3 மடங்குத் தொகையை முழு ஆண்டுச் செலவின் மதிப்பீடாகக் கொள்ளலாம் ; அல்லது

(3) முந்திய ஆண்டில், முதல் 4 மாதங்களின் செலவும், அந்த ஆண்டின் மொத்தச் செலவும் எந்த விகிதாசாரத்தில் இருந்தனவோ, அதுபோல, நடைமுறை ஆண்டிலும் முதல் 4 மாதச் செலவும் முழு ஆண்டின் செலவும் இருக்குமென்று, அவ்வாண்டின் திருத்த மதிப் பீட்டைக் கணக்கிடலாம்.

ஒவ்வொரு கணக்குத் தலைப்புக்கும் மேற்கண்ட முறைகளில் ஏதா வது ஒன்றுதான் மிகவும் பொருத்தமாக இருக்கும். மதிப்பீடு செய்யும் அதிகாரிகள், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், எந்த முறையைக் கைக் கொள்ளுவது நல்லது என்பதை அவர்களே தீர்மானித்துக்கொள்ள வேண்டும். ஏதாவது ஓரினச் செலவு நிலையானதாக இருந்தால், அதைத் தனியாக மதிப்பிடும் சிரமம் இல்லை. சில செலவினங்கள், ஒரு விகிதாசாரப்படியும் இல்லாமல், ஒவ்வொரு மாதத்திலும் மிக்க மாறுபாடுள்ளவையாக இருக்கும் ; அவைகளுக்கு மூன்ருவது முறை உபயோகப்படாது. முதல் அல்லது மூன்ருவது முறையை மதிப்பீடு

செய்வதற்காகப் பின்பற்றும்போது, முந்திய ஓர் ஆண்டுக் கணக்கை மட்டுமல்லாது முந்திய மூன்று ஆண்டுகளின் சராசரியை, ஆதாரமாகக் கொள்வது சிறந்தது; இப்படிச் செய்யும்போது, முந்திய ஆண்டுகளில் ஏதாவது அசாதாரண நிகழ்ச்சி இருந்தால், அதைத் தள்ளிவிட்டுப் பார்க்கவேண்டியது அவசியம். இதே மாதிரி, நடைமுறை ஆண்டிலும், ஏதாவது விசேஷ அல்லது அசாதாரண நிகழ்ச்சிகள் இருந்தால், அவைகளைக் கருதி மதிப்பீடுகளைத் திருத்தவேண்டும்.

திருத்த மதிப்பீடுகளில், அரசாங்க ஊழியர்களின் ரஜா ஊதியத் தொகையைத் தனியாகக் காட்டவேண்டாம். இதுபோல், 'அதிகாரி களின் ஊதியம்', 'சாதாரணப் பணியாளரின் ஊதியம்' என்ற தலைப்பு களின் கீழ்வரும் செலவுகளுக்கும் விவரம் தரவேண்டாம்; அதாவது, மொத்தத் தொகையாய்க் குறிப்பிடுவது போதுமானது. ஆயினும், சாட்டிய செலவை மற்றைய செலவிலிருந்து பிரித்துக் காட்டவேண்டும். இந்த மதிப்பீடுகள் எல்லாம் 100 ரூபாய்க் கணக்குகளாக இருக்க வேண்டும். நடைமுறை ஆண்டின் பட்ஜெட் அனுமதிக்கப்பட்ட பிறகு, ஏதாவது அதிக நிதி ஒதுக்கம் அனுமதிக்கப்பட்டிருந்தால், அதையும் திருத்த மதிப்பீடு செய்யும்போது, சேர்த்துக்கொள்ளவேண்டும். விசேஷக் குறிப்புகள் என்ற பத்தியில், இது சம்பந்தமான அரசாங்க உத்தரவுகளைச் சுட்டிக் காட்டவேண்டும்.

இச்சந்தர்ப்பத்தில் ஒரு முக்கியமான விஷயத்தைக் கவனிக்க வேண்டும். ஒரு திருத்த மதிப்பீடு ஒருவிதமான செலவுக்கும் அனுமதி ஆகாது. திருத்த மதிப்பீட்டில், ஏதாவது அதிகச் செலவுக்கு வழி செய் திருந்தாலும், வேண்டிய அதிக நிதி ஒதுக்குதலுக்காக, தனியாக அரசாங்கத்தின் அனுமதியைக் கோரவேண்டும்; ஏற்கெனவே இந்த அனுமதியைப் பெற்றிருந்தால், மறுபடியும் கோர வேண்டாம். இதே போல, ஒரு திருத்த மதிப்பீட்டில், முன் பட்ஜெட்டிலுள்ள தொகையைக் குறைத்துக் காட்டியிருந்தாலும், முன் செய்துள்ள நிதி ஒதுக்கத்தில் செலவாகாமல் இருக்கக்கூடிய தொகை எவ்வளவு என்று தனியே குறிப் பிட்டு, அது வேண்டுவதில்லை என்று அரசாங்கத்திற்குத் தெரிவிக்க வேண்டும்.

(v) **வரும் ஆண்டுத் திட்ட மதிப்பீடு**:—(1) இது மாதிரித் தாள்களில் 8, 9 என்ற எண்ணுள்ள பத்திகளைப் பற்றியது. சாதாரண மாக, வரும் ஆண்டின் திட்ட மதிப்பீடுகள், நடை முறை ஆண்டின் திருத்திய மதிப்பீடுகளை .ஆதாரமாகக்கொண்டு தயாரிக்கப்பட வேண்டும். அப்படிச் செய்யும்போது, நடைமுறை ஆண்டிலுள்ள, ஏதாவது விசேஷ நிகழ்ச்சிகளையும் அல்லது வரும் ஆண்டில் நேரக்கூடிய விசேஷ நிகழ்ச்சிகளையும் மனத்திற் கொண்டு, வேண்டிய மாற்றங்களைச் செய்வது அவசியம். சரியான காரணம்

காட்டாமல் நடைமுறை ஆண்டின் திருத்த மதிப்பீட்டுத் தொகையை விட, வரும் ஆண்டில் அதிகமாக மதிப்பிடக்கூடாது ; ஒரு நடைமுறை ஆண்டின் திருத்த மதிப்பீட்டில் கண்ட தொகையை, மாற்ருமல், அடுத்த ஆண்டுக்கும் காட்டிவிடவேண்டும் என்பதும் முறையாகாது. ஒவ்வொரு துறைத் தலைமை அதிகாரியும், வேறு மதிப்பீட்டு அதிகாரியும், இந்த பட்ஜெட் மதிப்பீடுகளைச் செய்யும் சந்தர்ப்பத்தில், தங்களுடைய துறை அல்லது அலுவலக நிர்வாகத்தில், ஏதாவது மாற்றம் செய்யவேண்டுமா, அல்லது ஏதாவ்து செலவுச் சிக்கனம் செய்யலாமா என்பவை போன்ற விஷயங்களைப் பரிசீலிக்கவேண்டும். அரசாங்கத்தால் அனுமதிக்கப்பட்டு, ஒவ்வோர் ஆண்டிலும் ஒரு செலவினத்துக்காகத் தொகை ஒதுக்கப்பட்ட போதிலும், ஒரு குறித்த கால அளவுக்குப் பிறகு, அந்த மாதிரிச் செலவுக்கு அவசியம் இல்லாமல் போய்விடலாம். உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட காலத்தில் கட்டடங்களைப் பழுது பார்த்தல் போன்ற அவசியமான வேலை நிறுத்தப்பட்டு இருந்தால், அதைச் சரிப்படுத்துவதற்காக, ஓர் ஆண்டில் அதிகக் தொகை ஒதுக்கப்பட்டு இருக்கலாம் ; இதே காரணமாக, மற்றைய ஆண்டுகளிலும், அதிகத் தொகையை மதிப்பிட்டால் சரியாகாது. சாதாரணமாக, பட்ஜெட் மதிப்பீட்டில், நிர்வாகத்தில் ஏதாவது நஷ்டம் ஏற்படும் என்று முன் கூட்டியே எதிர்பார்ப்பதும், அதற்குத் தகுந்தபடி மதிப்பீடு செய்வதும் கூடாது ; ஆயினும், ஒரு துறையில் அல்லது ஒருபணியில், சில ஆண்டுகளுக்காவது, ஏதாவது நஷ்டம் இருப்பது இயல்பாளுல், அதை முன் கூட்டியே நிதித் துறைக்குத் தெரிவித்து, அதன் அனுமதியைப் பெற்ற பின், மதிப்பீட்டில் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலாம்.

(2) வருவாயினங்களை மதிப்பிடும்போது, அப்போது அமலில் உள்ள வரி விகிதங்கள், தீர்வைகள், கட்டணங்கள் முதலியவைகளை ஆதாரமாகக் கொள்ளவேண்டும். ஓர் அதிகாரி, அமலில் இருக்கும் விகிதங்களை உயர்த்தவோ அல்லது குறைக்கவோ வேண்டுமென்று கருதினல், அதைத் தனியே அரசாங்கத்திற்குத் தெரிவிக்கவேண்டும். அதன் விளைவை எண்ணி, முன்கூட்டியே திட்ட மதிப்பீட்டில் ஒரு மாறுதலையும் செய்யக்கூடாது. மதிப்பீடுகளை அரசாங்கத்திற்கு அனுப்பும் முன்னரே இந்த மாதிரியான யோசனைகள் சொல்லப்பட்டு, அரசாங்கத்தின் பொது அனுமதி பெற்றிருந்தால், அதனுல் மதிப்பீடுகள் எப்படி மாறும் என்ற விவரத்தை விசேஷக் குறிப்புகள் என்கிற பத்தியில் குறிக்கவேண்டும். முக்கியமான வருவாய்த் தலைப்புகளுக்கு, மதிப்பீடுகளைக் குறிக்கும்போது, நடைமுறை ஆண்டின் முதல் 5, 6 மாதங்களில் கிடைத்த வருவாயை, அதே காலத்தில் முந்திய மூன்று ஆண்டுகளில் கிடைத்த மொத்த வருவாயோடு ஒத்துப் பார்த்து வேறுபாடுகளுக்குக் காரணம் கூறவேண்டும். பலவகையான சிறு வருவாய் இனங்கள், ஒரு கணக்குத் தலைப்பின் உட்பிரிவில் மொத்தமாகக் குறிக்கப்பட்டால், அவ்

வினங்களில் சிறப்பானவைகளை விசேஷக் குறிப்புகள் என்ற பத்தியில் காட்டவேண்டும்.

செலவினங்களின் திட்ட மதிப்பீடுகளையும், அப்போது அமலிலிருக்கும் திட்டங்களை மட்டும் கருதித் தயாரிக்கவேண்டும். புதுப் பணிகளுக்காக ஒன்றும் மதிப்பீட்டில் சேர்க்கக்கூடாது. ஆயினும், ஏதாவது முன் அனுமதி பெற்ற செலவு எக்காரணத்தாலோ அவசியம் இல்லாமல் போய், அவ்விஷயம் அரசாங்கத்திற்குத் தெரிவிக்கப்பட்டிருந்தால், அதற்கு அரசாங்கத்தின் உத்தரவு வராது இருந்தாலும், அதற்கு வேண்டிய தொகையை மதிப்பீட்டிலிருந்து அகற்றிவிட்டு, அதற்குரிய காரணத்தை விசேஷக் குறிப்புகள் என்ற பத்தியில் குறிப்பிடவேண்டும். புதுப் பணிகளைப்பற்றிய யோசனைகள் எவ்வாறு அரசாங்கத்திற்குத் தெரிவிக்கப்படவேண்டும், அவைகளுக்கு என்ன முறை பின்பற்றப்பட வேண்டும் என்பவையெல்லாம் பின்னர் விவரிக்கப்படும்.

(3) வருவாயினங்கள், செலவினங்கள்—இவைகளுக்குரிய மதிப்பீடுகளைத் தயாரிக்கும்போது ஒவ்வோர் அதிகாரியும், கணக்குகளில் இவை என்ன என்ன முறையில் பதிவு செய்யப்படவேண்டும் என்பதற்கு அமலில் உள்ள விதிகளைக் கவனிக்கவேண்டும். இது பற்றிய சில விசேஷ விதிகளைப் பின்னர்க் காண்போம். முக்கியமாக, செலவினங்களைத் திருப்பிப் பெறும் விஷயத்தில், கணக்குப் பதிவு முறை அவ்வப்போது மாறலாம்; இதை நன்கு கவனித்து மதிப்பீடு செய்யவேண்டும். ஓர் அரசாங்கமும் இன்னோர் அரசாங்கமும் சில ஊழியர்களுடைய ரஜா ஊதியம், ஒய்வுச் சம்பளம் முதலியவைகளைச் சார்ந்த செலவைப் பகிர்ந்து கொள்ளுவதற்கென உள்ள விதிகளையும் நன்கு கவனிக்க வேண்டும். ஒவ்வோர் அரசாங்க மதிப்பீடுகளிலும், அந்த அரசாங்கத்துக்குரிய வருவாய் அல்லது செலவுக்கான தொகைகளை மட்டுமே சேர்க்கவேண்டும்.

(4) எல்லாத் தொகையும் 100 ரூபாய்க் கணக்கில் இருக்கவேண்டும்.

## மதிப்பீடுகளை அரசாங்கத்திற்கு அனுப்பும் முறை

ஒவ்வொரு துறைத் தலைமை அதிகாரியும், வேறு மதிப்பீட்டு அதிகாரியும், தங்களுக்குரிய மதிப்பீடுகளை, நிதித் துறை முன்னம் அவர்களுக்கு அனுப்பியுள்ள மாதிரித் தாள்களிலே தயார் செய்ய வேண்டும். இரண்டு பிரதி எடுத்து, ஒன்றை நேராக நிதித் துறைக்கும் இன்னொன்றை மதிப்பீட்டுத் துறைக்கு நேர் பொறுப்பு வகிக்கும் அரசாங்கத் தலைமை அலுவலகத் துறைக்கும் அனுப்பவேண்டும். எந்தெந்தக் கணக்குத் தலைப்புகளுக்கு அல்லது மானியங்களுக்கு, எந்த அதிகாரிகள் மதிப்பீடுகளைத் தயாரித்து அனுப்பவேண்டும், எந்தத் தேதிகளில் அவைகளை அனுப்பவேண்டுமென்பதற்கு எல்லாம் ஆண்டு

தோறும் நிதித் துறை உத்தரவுகள் பிறப்பிக்கும். ஏற்கெனவே கூறிய படி, குறிப்பிட்ட தேதிகளில், ஒவ்வொரு மதிப்பீடும் அரசாங்கத்திற்கு வந்து சேரவேண்டியது மிகவும் அவசியம். ஏதாவது ஒரு மதிப்பீடு, குறிப்பிட்ட காலத்தில் வராமல் போனுல், படிப்படியாக எல்லா மதிப்பீடு களையும், சரியான காலத்திற்குள் முழுப் பரிசீலனை செய்வதில் கஷ்டம் ஏற்படும். மதிப்பீடுகளை அரசாங்கத்திற்கு அனுப்பும்போது, தனியாக யாதொரு கடிதமும் எழுத வேண்டுவதில்லை. ஏதாவது தனி விவரங்கள் உபயோகமாக இருக்கும் என்று கருதினுல், அவைகளை மதிப்பீடு களோடு சேர்த்து அனுப்பலாம்.

## நிதித் துறையின் பரிசீலனை

நிதித் துறையானது, எல்லா வரவுசெலவுத் தலைப்புகளின் கீழும், மாநிலத் தலைமைக் கணக்கு அதிகாரியிடமிருந்து, குறிப்பிட்ட தேதி களில் விவரமான கணக்குகளைப் பெறும். இந்தக் கணக்கு, முந்திய ஆண்டில் இறுதியாய்ப் பதிவாயுள்ளதைப் பற்றியும், நடைமுறை ஆண்டின் அவ்வப்போது தயாராகவிருக்கும் 4, 5, 6 மாதக் கணக்கு களைப் பற்றியும், அதே காலத்தில் முந்திய ஆண்டில் பதிவானதைப் பற்றியும் இருக்கும். இந்தக் கணக்கு விவரங்களையும், மதிப்பீட்டு அதிகாரிகளால் அனுப்பப்பட்ட விவரங்களையும் யோசனைகளையும், மனத்திற் கொண்டும், தனக்குத் தனியே தெரிந்துள்ள விஷயங்களை ஆய்ந்தும், நிதித்துறை ஒவ்வொரு தலைப்பின் கீழும், தக்க மாற்றத் தைச் செய்யும். அரசாங்கத் தலைமை அலுவலகத்தைச் சேர்ந்த மற்றத் துறையினர், கீழ் அதிகாரிகளிடமிருந்து கிடைத்த மதிப்பீடுகளை ஆராய்ந்து, ஏதாவது மாறுதலைத் தெரிவித்தால், அதையும் நிதித்துறை அச்சந்தர்ப்பத்தில் பரிசீலனை செய்யும். அவ்வப்போது, நிதித் துறை யால் ஒப்புக்கொள்ளப்பட்ட மதிப்பீட்டு விவரங்கள், சம்பந்தப்பட்ட தலைமை அலுவலக நிர்வாகத் துறைக்குத் தெரிவிக்கப்படும். அவசியம் என்று கருதினுல், அந்த நிர்வாகத் துறை தன்கீழுள்ள துறைத் தலைமை அதிகாரிக்கு, நிதித் துறையால் செய்யப்பட்ட மாற்றத்தைத் தெரிவிக்கலாம். நிதித் துறை செய்த மாற்றம் அவ்வளவு சரியில்லை என்று ஓர் அதிகாரி கருதினுல், அதை, சம்பந்தப்பட்ட தலைமை அலுவலகத் துறைக்குத் தெரிவிக்கலாம்; அது பின்னர் நிதித் துறை யின் ஆலோசனைக்கு வரும். நிதித் துறையால், ஏதாவது ஒரு தலைப் பின்கீழ் மதிப்பீடு செய்யப்பட்டபின், அரசாங்கத்தால் புது உத்தரவுகள் போடப்பட்டு இருக்கலாம்; அல்லது, வேறு ஏதாவது விசேஷ நிகழ்ச்சி கள் ஏற்பட்டு இருக்கலாம்; அல்லது, சட்டசபையிலிருந்து துணைமானி யங்கள் பெற்றிருக்கலாம். இவைகளையெல்லாம் கருதி, நிதித்துறை முதலில் செய்த மதிப்பீட்டை, பின்னர் மாற்றவேண்டியிருக்கும். இவைகளை மதிப்பீட்டு அதிகாரிகள் நிதித் துறைக்கு அவ்வப்போது தெரிவிக்கவேண்டும். ஆயினும், இந்த மாதிரி மாற்றங்கள் செய்து

கொண்டே இருந்தால், பட்ஜெட்டைக் குறித்த காலத்துக்குள் இறுதி யாக்க முடியாது. ஆகவே, ஒவ்வோர் ஆண்டிலும் டிசம்பர் மாதத்தில் ஒரு குறிப்பிட்ட தேதிக்குப் பிறகு, ஒரு நிதி ஒதுக்கு உட்பிரிவுத் தலைப்புக்காக, 10 ஆயிரம் ரூபாய்க்குக் குறைந்த மாற்றம் கருதப்பட மாட்டாது என்று, நிதித்துறை ஒரு நியதி செய்யும். இதேபோல, அடுத்த ஜனவரி மாதத்தில் ஒரு குறிப்பிட்ட தேதிக்குப் பிறகு, எவ்வித மான மாற்றமும் ஏற்றுக் கொள்ளப்படாது போகும். ஆயினும், சாதாரணமாக ஜனவரி 25ஆம் தேதி அளவில், நிலவரி வருவாய்க்கான மதிப்பீட்டில் முக்கியமான மாறுதல்கள் செய்யவேண்டியிருந்தால், அதற்கான ஓர் அறிக்கையை ரெவின்யூபோர்டு நிதித் துறைக்கும், வருவாய்த் துறைக்கும் அனுப்பவேண்டும். இந்தத் தனி விதிக்குக் காரணம், நிலவரியின் பெரும் பகுதியை ஒவ்வோர் ஆண்டிலும் கடைசி மூன்று நான்கு மாதங்களில் வசூலிக்கும் முறையே.

நடைமுறை ஆண்டின் முதல் 8 அல்லது 9 மாதங்களில் ஒவ்வொரு தலைப்பின்கீழும் பதிவான வருவாய்—செலவின விவரங்களை, டிசம்பர், ஜனவரி மாதங்களில், தலைமைக் கணக்கு அதிகாரியிடம் இருந்து நிதித்துறை பெறும். இவைகளையும், மொத்தமாகப் பார்த்து, ஏற்கெனவே செய்யப்பட்ட மதிப்பீடுகளில் மாற்றம் செய்யலாம். முக்கியமான வருவாய் இனங்களுக்கும், பணியாளர்களின் சேம நிதிக்கும், நடைமுறை ஆண்டின் முதல் 9 மாதக் கணக்கை, தலைமைக் கணக்கு அதிகாரி ஜனவரி 24ஆம் தேதிக்குள் அனுப்புவார். இயலு மானால், நிதித்துறை இந்தக் கணக்குகளையும் விரைவாகப் பரிசீலித்து, ஏற்கெனவே தீர்மானித்துள்ள மதிப்பீடுகளில் மாற்றம் செய்யும். ஆனால், இச்சந்தர்ப்பத்தில் ஒரு நிதி ஒதுக்கு உட்பிரிவுத் தொகையை மாற்றுவதானால், 50 ஆயிரம் ரூபாய்க்குக் குறையாமல் இருந்தால்தான், அம்மாற்றம் செய்யப்படும். இதுகாறும் கூறப்பட்டவை பட்ஜெட்டின் முதல் பகுதியைப் பற்றியவை. இனி பட்ஜெட்டின் இரண்டாவது பகுதியைப்பற்றிய முறைகளைப் பார்ப்போம்.

## புதிய திட்டங்கள்

ஆண்டுதோறும் புதிய திட்டங்கள் பட்ஜெட்டின் இரண்டாவது பகுதியில் சேர்க்கப்படுகின்றன என்றும், இது சம்பந்தமாக மிகுந்த யோசனை செய்யவேண்டியிருக்கிறது என்றும், நிதி அமைச்சர், திட்டத் திற்குப் பொதுவாகப் பொறுப்பு ஏற்கும் அமைச்சர், நிதிக் கமிட்டி, இவர்களால் முறையே பரிசீலனை செய்யப்பட்டபின், இறுதியாக அமைச்சர் சபையால் அங்கீகரிக்கப்படுகிறது என்றும், 6ஆம் அத்தி யாயத்தில் விவரிக்கப்பட்டது. புதிய திட்டங்கள் என்றால், அரசாங்கக் கொள்கைகளிலும் நடைமுறையிலும் மிகுந்த மாறுபாடுகள் இருக்க வேண்டுமென்பதில்லை. அத்தகைய மாறுபாடுகள் மிகவும் அரிதாகவே

மேற்கொள்ளப்படும். இப்பொழுது, நாட்டின் அபிவிருத்திக்காக ஐந்தாண்டுத் திட்டங்கள் தயாரிக்கப்பட்டு, அவைகளுக்கேற்ப, ஆண்டுதோறும் செலவுகள் ஏற்கப்படுகின்றன. ஆதலால், புதிய திட்டங்கள் என்பவை பெரும்பாலும் ஒவ்வொரு துறையிலும், நடைமுறையில் உள்ள சேவைகளை விஸ்தரிக்கும் முறையிலே அமையும். இப்படித் திட்டமிட்டுச் செலவு செய்யவேண்டிய யோசனைகளுக்கே போதிய நிதி ஒதுக்குவதில் சிரமம் ஏற்படுவதால், திட்டத்துடன் சம்பந்தம் இல்லாத வேறு புதிய நிர்வாகச் செலவுகளை அரசாங்கம் சாதாரணமாக ஏற்காது. ஆகவே, நிதித்துறை, ஒவ்வோர் ஆண்டின் பட்ஜெட் தயாரிப்புக்காக, நியதிகளையும் முறைகளையும் மற்றத் துறைகளுக்குத் தெரிவிக்கும்போது, பட்ஜெட்டின் இரண்டாவது பகுதியில் சேர்க்கப்படவேண்டிய யோசனைகள், ஐந்தாண்டுத் திட்டம் சம்பந்தமாக இருக்கவேண்டும்; அப்படிச் சம்பந்தம் இல்லாத வேறு யோசனைகளைப் பரிசீலிக்கவேண்டுமானால், அவை மிகவும் அவசியம், அவசரம் என்றும் நிரூபிக்கப்படவேண்டும் என்று, கண்டிப்பாகக் கூறிவிடும். ஆனால், ஏதாவது ஒரு யோசனையால் அரசாங்கத்திற்கு வருவாய் அதிகரிக்கும்போல் இருந்தால், அது வரவேற்கப்படும். சில சமயம், கொள்கை காரணமாக, அமலில் இருக்கும் ஏதாவது கட்டணங்களைக் குறைக்க வேண்டுமென்றோ, அல்லது முழுவதும் எடுத்துவிட வேண்டுமென்றோ, யோசனைகள் கூறப்படலாம்; அவைகளுக்குத் தக்க முகாந்தரங்கள் தெளிவாகச் சொல்லப்படவேண்டும்.

நிர்வாக சம்பந்தமான யோசனைகளை அரசாங்கத்திற்கு அனுப்புவதானால், அவைகளில் எந்த இனங்களைப் புதிய திட்டமென்று கொள்ள வேண்டும், எவைகளை அப்படிக் கொள்ளவேண்டாம் என்பதற்கு விதிகள் உள்ளன. சில உதாரணங்களைக் காண்போம்:—

(1) சாதாரண நிர்வாகத்தில், ஒரு குறித்த அளவு வேலைக்கு, இவ்வளவு பணியாளர்கள் இருக்கவேண்டும் என்ற முறை உண்டு; அதற்கு ஏற்ப, ஓர் ஆண்டில் வேலை அதிகமாயிருப்பதால், அதிகப் பணியாளர்களை நியமிக்க வேண்டியிருக்கலாம்; இவ்விதமான யோசனையைப் புதுத் திட்டமாகக் கொள்ளவேண்டியதில்லை. ஏதோ ஒரு குறிப்பிட்ட வேலைக்காக அதிகப் பணியாளர்களை நியமித்து, அதனால் ஆகும் செலவு முழுவதையும் வேறு ஒரு நிறுவனத்திலிருந்து திருப்பிப் பெறுவதாக இருந்தால், அதையும் புதுத் திட்டமாகக் கொண்டுவர வேண்டாம். ஏதோ ஒரு குறிப்பிட்ட விஷயத்திற்காக, ஆண்டின் ஒரு பகுதிக்கு மட்டும் தாற்காலிகமாக, புதிய நியமனங்கள் செய்வது அவசியமானால், வேண்டும்போது அவைகளுக்கு அரசாங்கத்தின் அங்கீகாரத்தைக் கேட்டுப் பெறலாம்; அந்த யோசனையை அடுத்த ஆண்டின் புதுத் திட்டமாகத்தான் கொண்டுவரவேண்டும் என்ற நியதியில்லை. ஏற்கெனவே, தாற்காலிகம் என்ற முறையில் நியமிக்கப்

பட்டுள்ள சில நியமனங்களைப் பின்னர் நிலையாக வைத்துக்கொள்ள வேண்டி யிருந்தால், அதையும் புதுத் திட்டமாகக் கொள்ளவேண்டா.

(2) ஒரு நிறுவனத்துக்கு ஆண்டுதோறும் கொடுக்க வேண்டிய மானிய முறைப்படி, வருகிற ஆண்டில் கொடுக்க வேண்டியதற்கான செலவைப் புதுத் திட்டமாகக் கொள்ளவேண்டா. ஆனால், ஒரு கல்வி நிலையத்தில், புதிய வகுப்புகளைத் திறப்பதாலோ, அல்லது புதிய கல்வி முறைகளை ஏற்படுத்துவதாலோ, அதிக மானியங்கள் கொடுக்க வேண்டியிருந்தால், அதனைப் புதுத் திட்டமாகத்தான் கொண்டுவர வேண்டும். இம்முறை, கல்வித் துறையைச் சேராத மற்ற நிறுவனங் களுக்கும் பொருந்தும்.

பொதுவாக, ஒரு துறையின் செயல்முறையின் விஸ்தரிப்பு காரணமாகவோ, அல்லது, நிர்வாகத் திறனை அதிகப்படுத்தவோ, புதிய நியமனங்களைச் செய்யவேண்டுமானல், அல்லது ஊதிய விகிதங்களை மாற்ற வேண்டுமானல், அவைகளையும் புதுத் திட்டமாகக் கொண்டு வரவேண்டும்.

(3) புது யந்திரங்கள், கருவிகள், தட்டுமுட்டுச் சாமான்கள், ஆடு மாடு போன்ற விலங்குகள்—இவைகளை வாங்க வேண்டுமென்கிற யோசனை, புதுத் திட்டமாகவே கருதப்படவேண்டும். ஆனால், அவசியமான யந்திரம், கருவிகள் போன்றவைகள் பழுதானதால் அவைகளுக்குப் பதிலாக வேறு புதிதாக வாங்க வேண்டியிருந்தால், அவைகளைச் சாதாரணமான செலவாகவே கருதவேண்டும்.

(4) 10,000 ரூபாய்க்கு மேல் மொத்தச் செலவு ஆகும் என்கிற ஒவ்வொரு புதிய வேலையையும், அது எந்தத் துறையைச் சார்ந்ததாக இருந்தாலும், புதுத் திட்டமாகக் கொண்டுவரவேண்டும். இதுபோல், நீர்ப்பாசனத் துறையில், ‘விரிவுகளும் அபிவிருத்திகளும்’ என்ற தலைப்பின்கீழ், 10 ஆயிரம் ரூபாய்க்கு மேல் செலவாகும் ஒவ்வொரு பணியையும், புதுத் திட்டமாகவே கொள்ளவேண்டும்.

(5) ஒரு புதுத் திட்டம் ஒரு பட்ஜெட்டின் இரண்டாவது பகுதியில் சேர்க்கப்பட்டு இருந்தும், அதற்காக ஒருவிதமான செலவும் அந்த ஆண்டில் யாது காரணம் பற்றியோ ஏற்கப்படாமல் இருந்தால், அதை மறுபடியும் அடுத்த ஆண்டுக்குப் புதுத் திட்டமாகக் கொண்டுவர வேண்டும். செலவு ஒன்றும் ஆகாது இருந்தாலும், செலவுக்குப் பொறுப்பு ஏற்றிருந்தால், அதை மறுபடியும் புதுத் திட்டமாகக் கொண்டுவரவேண்டாம்; உதாரணமாக, புது யந்திரங்கள் அல்லது கருவிகள் வழங்கும்படி ஏற்கெனவே இட்ட உத்தரவின்படி, அவை களுக்கான கிரயத்தை அடுத்த ஆண்டில் கொடுக்க வேண்டியிருக்கும்; இதனல், அதனைப் புதுத் திட்டமாகக் கொள்ளுவதில்லை.

புதிய யோசனைகளை எல்லாம், ஒவ்வொரு துறைத் தலைமை அதிகாரியும் தன் நிர்வாகத்திற்குப் பொறுப்பு ஏற்கும் அரசாங்கத் தலைமை அலுவலகத்தின் துறைக்கு, அக்டோபர் முதல் தேதிக்குமுன் அனுப்ப வேண்டும். அங்குப் பரிசீலனை செய்யப்பட்டு, அவை அரசாங்க நிதித் துறைக்கு, நவம்பர் மாதம் முதல் தேதிக்கு முன் வந்தாகவேண்டும். இதற்குப் பிறகு வந்த யோசனைகளை, நிதித்துறை சாதாரணமாகப் பரிசீலனைக்கு ஒப்புக்கொள்ளாது. ஒவ்வொரு யோசனையோடும், அதன் முழு விவரணமும், அதன் அவசிய அவசர விளக்கமும், அதனால் உண்டாகும் அதிகச் செலவு அல்லது வருவாய்க் குறைவு, இவைகளின் மதிப்பீடும் கொண்ட அறிக்கை அனுப்பப்பட வேண்டும். ஒரு யோசனையை ஏற்பதால், அது நடைமுறைக்கு வரும் முதல் ஆண்டில் அதிகச் செலவு இல்லாமல் இருக்கலாம் ; ஆனால், அதற்குப் பிறகு வரும் ஆண்டுகளில், செலவு அதிகமாக ஏற்க வேண்டியிருக்கும் ; சில சந்தர்ப்பங்களில், ஒரு யோசனையால் ஆண்டுதோறும் அதிகச் செலவு ஏற்படாமல் போனாலும், செலவானது 2, 3 ஆண்டுகளில் பரவலாக ஏற்கும்படி இருக்கலாம் ; ஆகவே, இந்த விவரங்கள் எல்லாம் ஒவ்வொரு யோசனையோடும் நன்ருகக் குறிக்கப்படவேண்டும்.

உரிய காலத்திற்குள் வந்திருந்தும், ஏதாவது ஒரு யோசனைக்கு முழு விவரங்கள், மதிப்பீடுகள், இவை கொடுக்கப்படாமல் இருந்தால், அவைகளை நிதித்துறை' நிராகரிக்கலாம்.

இம்மாதிரி சேர்க்கப்பட்டுள்ள புதுத் திட்டங்களின் முழு விவரமும், ஒரு பட்ஜெட் வெளியீட்டில் தரப்படும் என்பதை முன்னரே கண்டோம். விவரங்கள் துறை வாரியாகப் பாகுபடுத்தப்பட்டு, பின்வரும் பட்டியல் முறையில் இருக்கலாம் :—

1. தொடர் இலக்கம்
2. திட்டத்தின் விவரம்
3. முடிவான மொத்தச் செலவு (Ultimate Cost) மதிப்பீடு—ஆண்டுதோறும் நடைமுதல் செலவு (Recurring)
4. முடிவான மொத்தச் செலவு (Ultimate Cost) மதிப்பீடு—ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு மட்டும் ஏற்கவேண்டிய செலவு (Non-Recurring)
5. பட்ஜெட் ஆண்டின் செலவு—ரெவின்யூ கணக்கில் செலவு
6. ,, ,, ,, —மூலதனக் கணக்கில் செலவு
7. ,, ,, ,, —கடன் செலவு
8. ,, ,, ,, —மொத்தம்
9. வருவாய்—மத்திய அரசாங்கத்திடமிருந்து பெறக்கூடிய மானிய மதிப்பீடு

10. வருவாய்—மத்திய அரசாங்கத்திடமிருந்து பெறக்கூடிய கடன் உதவி மதிப்பீடு

11. வருவாய்—மானியங்கள் நீங்கலாக இதர வருவாய்.

ஒவ்வொரு துறைத் திட்டங்களும், ஐந்தாண்டுத் திட்டத்தைச் சார்ந்தவை, அதில் சேராதவை என்று பாகுபடுத்தப்பட்டிருக்கும்.

ஓர் ஆண்டின் பட்ஜெட்டில் புதிய திட்டங்கள் சேர்க்கப்பட்டபின், அவைகளையெல்லாம் பொது விவாதம், மானிய விவாதம் என்ற சந்தர்ப்பங்களில் சட்டசபை பரிசீலிக்கலாம்.

யாது காரணம் பற்றியோ, ஓர் ஆண்டின் பட்ஜெட்டில் சேர்க்கப் படாமல் உள்ள புதுப் பணிகளை, பட்ஜெட் ஆண்டின் நடுவில் ஏற்க வேண்டிய அவசியம் ஏற்பட்டால், அதைப்பற்றி என்ன முறை பின்பற்றப்படவேண்டுமென்பது, 6ஆம் அத்தியாயத்தில் 'புதுப் பணிகள்' என்ற தலைப்பில் விவரிக்கப்பட்டுள்ளது. சட்டசபை முறைகளும் நிதி ஒதுக்கு மசோதா விவரங்களும் துணை மானிய முறைகளும் இதே அத்தியாயத்தில் முன்னர் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

## 9. செலவுப் போக்கும் கண்காணிப்பும்
## (Control of Expenditure)

1. ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி. —(குறள்)
2. ஆனமுதலில் அதிகம் செலவானல்...பொல்லனும்... —(நல்வழி)

ஒவ்வோர் ஆண்டிலும் சட்ட ரீதியாக அனுமதிக்கப்பட்ட மானிய அளவுக்குமேல் போகாமல் இருக்கும்படிப் பார்த்துக்கொள்ளவேண்டியது அரசாங்கத்தின் கடமையாகும். இதற்காக விசேஷ விதிகளும் முறைகளும் அமலில் உள்ளன. இவை எல்லா அரசாங்கங்களுக்கும் பொதுவானவை. பெரும்பாலும் ஒருவிதமாய் இருக்கும். உதாரணமாக, தமிழ்நாட்டில் நிதித்துறையால் ஏற்படுத்தப்பட்ட விதிகள் இங்கு விவரிக்கப்படுகின்றன.

ஓர் ஆண்டின் திட்ட மதிப்பீடுகளுக்கு, சட்டசபை அங்கீகாரம் அளித்தவுடன், அரசாங்கத்துக்கு நேராக மதிப்பீடுகளைச் சமர்ப்பித்த ஒவ்வொரு தலைமைச் செலவுக் கண்காணிப்பு அதிகாரிக்கும் (Chief Controlling Officer) விவரமான மானிய மதிப்பீடுகள் தெரிவிக்கப்படுகின்றன என்று முன்னரே குறிக்கப்பட்டது. அப்படி அனுப்பப்படும் பட்ஜெட் பகுதி அறிக்கைகளில் நிதி ஒதுக்குச் சிறுகூறுகளுக்கு மட்டுமன்றி, அவைகளின் விவரணங்களுக்கும் (Detailed Account Heads) தனித்தனியே தொகை குறிக்கப்பட்டிருக்கும். எனினும், பொதுவாக, நிதி ஒதுக்குச் சிறுகூறுகள் தாம் செலவுக்கு வரம்பாகக் கொள்ளப்படும். சில சந்தர்ப்பங்களில் ஒரு விவரணத் தலைப்புக்குரிய தொகையும் (உதாரணம்—“50. பொதுப் பணிகள்—புதுப் பணிகள்—கட்டடங்கள்” என்ற தலைப்பின்கீழ், ஒவ்வொரு பெரிய பணிக்கும் குறிக்கப்பட்ட தொகை) தனி நிதி ஒதுக்காகக் கருதப்படுகிறது. ஒவ்வொரு தலைப்புக்குமாகப் பிரிக்கப்பட்டுள்ள தொகை, சம்பந்தப்பட்ட தலைமைச் செலவுக் கண்காணிப்பு அதிகாரியிடம், அவ்வின அரசாங்கச் செலவுக்காக, அவரிடம் வைக்கப்பட்ட

தொகையெனலாம். இப்பொதுநியதிக்கு விலக்காகச் சில குறிப்பிட்ட செலவினங்கள் அரசாங்கத் தலைமை அலுவலகத்திலேயே கண்காணிக்கப்படுகின்றன; அவைகளுக்காக ஒதுக்கப்பட்ட நிதித்தொகை, கீழ் அதிகாரிகளிடம் ஒப்படைக்கப்படுவதில்லை.

ஒவ்வொரு தலைமைச் செலவுக் கண்காணிப்பு அதிகாரிக்கும் தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட ஒவ்வொரு தனி நிதி ஒதுக்குத் தொகைக்கு அதிகமாக, செலவு போய்விடாதபடி, கண்காணிக்க வேண்டிய கடமையுண்டு. யாதொரு காரணம்பற்றியோ, செலவை அம்மாதிரி கட்டுப்படுத்த முடியாதெனத் தோன்றினல், செலவுக்குத் தேவையான அதிக நிதி ஒதுக்கத்தை, அதனை அனுமதிக்கக்கூடியவரிடமிருந்து, முன்னமேயே பெறவேண்டும். ஆகவே, இடையருது செலவின் போக்கைக் கண்காணித்து வருவது அவசியம் ஆகிறது; இதனுடன் என்னென்ன பொறுப்புகள் (Liabilities) ஏற்கப்பட்டு, உரிய தொகை பின்னர் கொடுக்கப்பட வேண்டியதாக உள்ளது என்பதையும் கவனிக்க வேண்டும். இப்படிச் செலவைக் கண்காணிப்பதற்கு இருமுறைகள் உள்ளன :—

(1) ஒரு தலைமைக் கண்காணிப்பு அதிகாரி, ஒதுக்கப்பட்ட நிதித் தொகையை, தம்மிடமே உள்ளதாகக் கொண்டு, மாநிலம் முழுவதும் ஒவ்வொரு குறிப்பிட்ட தலைப்பின்கீழும், பதிவு செய்யப்படுகிற செலவுகளைத் தொகுத்துச் செலவைக் கண்காணிக்கலாம்; அல்லது

(2) ஒதுக்கப்பட்ட மொத்தத் தொகையை, தமக்குக்கீழ் உள்ள கண்காணிப்பு அதிகாரிகளின் (Sub-ordinate Controlling Officer) செலவுக்காகப் பகிர்ந்து கொடுக்கலாம்; அவர்களும் தங்களுக்குக் கீழ் உள்ள செலவு அதிகாரிகளுக்கு (Disbursing Officers) தொகையை மேலும் பகிர்ந்து கொடுக்கலாம்.

தங்களுடைய செலவுக்கென்று ஒதுக்கப்பட்டுள்ள ஒவ்வொரு தொகைக்கும் அதிகமாக, செலவுபோகாமல் பார்த்துக்கொள்ளவேண்டிய பொறுப்பு அந்தந்த அதிகாரியைச் சாரும். ஆயினும், தலைமைக் கண்காணிப்பு அதிகாரி இந்த விஷயத்தில் முழுப் பொறுப்பையும் வகிக்க வேண்டும்; அதாவது, கீழ்ப்பட்ட அதிகாரிகளுக்கும் இக்கடமையில் பங்கு இருந்தாலும், அவர்கள் சரியாக அந்த வேலையைச் செய்கிருர்களா என்று பார்க்க வேண்டியது தலைமைக் கண்காணிப்பாளரின் பொறுப்பாகும்.

நிலையான அரசாங்கப் பணியாளர்களின் ஊதியம் சம்பந்தமான செலவை, மாநிலம் முழுவதற்கும் சேர்த்துக் கண்காணிப்பதுதான் சரியான முறை ஆகும்; இது திட்டவட்டமாகச் சம்பள விகிதங்கள் ஏற்படுத்தப்பட்ட பணியாளர்களுக்குப் பொருந்தும். செலவின் அளவு,

ஒரு நிலையாய் இல்லாமல், அது செலவு செய்யும் அதிகாரியுடைய தீர்மானத்தைப் பொறுத்ததாக இருக்கும்போது, மொத்த நிதி ஒதுக்குத் தொகையை, செலவு அதிகாரிகளுடன் பகிர்ந்துகொள்ளுவதுதான் நல்லது; நிலையில்லாத பிரயாணப் படிகளும், அலுவலகச் செலவுகளும், இதற்கு உதாரணமாகும். பணியாளர்களின் ஊதியம் தவிர, மானியங்கள் அளித்தல், மற்றத் துறைகள், வேறு அரசாங்கங்கள், முதலியவைகளுக்குக் கொடுக்கவேண்டிய தொகை—இவை போன்ற சில விசேஷச் செலவுகளையும், தலைமைக் கண்காணிப்பு அதிகாரி, தாமே கண்காணிக்க வேண்டியிருக்கும்; ஒதுக்கப்பட்ட நிதித் தொகை முழுவதையும் தமக்குக் கீழ் உள்ள கண்காணிப்பு அதிகாரிகளோடு பகிர்ந்து கொள்ளாமல், ஒரு சிறு தொகையைத் தம்மிடமே வைத்துக்கொள்வது தலைமை அதிகாரிக்கு நலம் ஆகும்; ஏனெனில், யாராவது ஒரு கீழ் அதிகாரி தனக்குப் பகிர்ந்து கொடுக்கப்பட்ட தொகை, தேவைக்குப் போதவில்லை என்று சொல்லி அதிகத் தொகை கேட்டால், தலைமை அதிகாரி, தம்மிடமே வைத்துக்கொண்டிருந்த தொகையிலிருந்து அதை அளிக்கலாம். கீழ்க் கண்காணிப்பு அதிகாரிகளும், செலவு அதிகாரிகளுக்கு, அவர்களுக்கான நிதித் தொகைகளைக் குறிப்பிடும்போது, இம்முறையைப் பின்பற்றலாம். இம்மாதிரியாக, தலைமை அதிகாரிகள், தங்களுக்குக்கீழ் உள்ள அதிகாரிகளோடு, நிதி ஒதுக்குத் தொகையைப் பகிர்ந்துகொண்டு, செலவுக்கு வரம்பு குறிக்கும் வேலையை, ஏப்ரல் மாதத் தொடக்கத்திலேயே விரைவாகச் செய்யவேண்டும்.

ஒவ்வொரு தலைமைச் செலவுக் கண்காணிப்பு அதிகாரியும், இடையருது செலவின் போக்கைக் கவனிக்க வேண்டியிருப்பதால், அவர் தமக்குக்கீழ் உள்ள செலவு அதிகாரிகளையெல்லாம் மாதந்தோறும், முந்திய மாதத்தில் செலவான தொகையையும், பொறுப்பு ஏற்கப்பட்டு இன்னும் தீர்க்கப்படாத இனங்களையும், தமக்கு அறிவிக்குமாறு ஏற்பாடு செய்யவேண்டும். அந்த ஏற்பாட்டுக்கு இணங்க, ஒவ்வொரு செலவு அதிகாரியும், செலவினங்களையும் பொறுப்புகளையும், அவ்வப்போது தனியாக ஒரு கணக்குப் புத்தகத்தில் எழுதி வைக்கவேண்டும். ஒரு தொகையை, அதற்கு உரியவருக்குக் கொடுப்பதற்காக, கஜானுவிலிருந்து பணம் பெற்றவுடன், அந்தத் தொகையை மேற்சொன்ன கணக்குப் புத்தகத்தில் அதற்குரிய பத்திகளில், கஜானு எந்த மாவட்டத்தை சேர்ந்ததோ அந்த மாவட்டக் கணக்கில் எழுதிக்கொள்ள வேண்டும். கிராமப் பணியாளர்களின் ஊதியம், விவசாயிகளுக்குக் கொடுக்கப்படும் கடன்கள், விலங்கினக் கொட்டடிச் (Cattle Pounds) செலவுகள் போன்றவைகளுக்கு விவரம் இல்லாது, மொத்தத் தொகையை மட்டும் தெரிவித்தால் போதும். சில சமயங்களில், மாநிலத்தின் தலைமைக் கணக்கு அதிகாரி தன் கணக்கில் சில மாற்றங்களையும் ஏற்பாடுகளையும் தனியே செய்திருப்பதாக, சம்பந்தப்பட்ட செலவு

அதிகாரிக்குத் தெரியப்படுத்துவார். இவைகளையும், அவ்வப்போது கணக்குப் புத்தகத்தில் பதிந்துகொள்ளவேண்டும். ஒவ்வொரு மாதத்தின் இறுதியிலும், செலவு அதிகாரி, தன்னுடைய கணக்கிலுள்ள புள்ளிகளை, சம்பந்தப்பட்ட கஜானுவில் வைக்கப்பட்டிருக்கும் கணக்கோடு ஒத்துப்பார்த்து, தனக்கு அடுத்த மேல் அதிகாரிக்கு, தன்னுடைய கணக்கில் இருந்து எடுத்து எழுதப்பட்ட ஓர் அறிக்கையை அனுப்ப வேண்டும். இதில் குறிப்பிட்ட சில இனங்களுக்கு மாவட்டத்திற்குரிய மொத்தத் தொகைகளை மட்டும் காட்டினுல் போதும் என்ற நியதி உண்டு. பல செலவு அதிகாரிகளுக்கு மேலுள்ள ஒரு சாதாரண செலவுக் கண்காணிப்பு அதிகாரியும் தனிக் கணக்கு வைத்துக்கொள்ளவேண்டும். அந்தக் கணக்கில் செலவு அதிகாரிகளால் தனக்கு அறிவிக்கப்பட்ட விவரங்களைத் தொகுத்து எழுதிக் கொள்ளவேண்டும். தான் சொந்தமாகச் செலவு செய்த வகைகளுக்கும் தனிக் கணக்கு வைத்திருந்து, அந்தத் தொகையையும் மேற்சொன்ன தொகுப்பில் சேர்த்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு நிதி ஒதுக்குச் சிறு தலைப்பைச் சார்ந்த செலவினங்களை எல்லாம் மாவட்ட முறையில் சேர்த்து எழுதித் தொகுக்க வேண்டும். பிறகு, இந்தக் கண்காணிப்பு அதிகாரியும், தன்னுடைய கணக்கில் உள்ள புள்ளிகளை, சம்பந்தப்பட்ட கஜானுக் கணக்கோடு ஒத்துப் பார்த்து, தன்னுடைய தொகுப்புக் கணக்கிலிருந்து எடுத்து எழுதிய ஒரு பிரதியை, தலைமைச் செலவுக் கண்காணிப்பு அதிகாரிக்கு அனுப்பவேண்டும். இப்படிச் செய்யும்போது, ஒவ்வொரு குறிப்பிட்ட தலைப்பைச் சார்ந்த மொத்தத் தொகையை மட்டும் குறித்தால் போதும்.

எந்தெந்தச் செலவு அதிகாரிகளும், சாதாரணச் செலவு கண்காணிப்பு அதிகாரிகளும், தங்களுடைய கணக்குகளை கஜானுவிலுள்ள கணக்கோடு ஒத்துப் பார்த்த பின்னரே, மேல் அதிகாரிகளுக்கு அவைகளை அனுப்பவேண்டும் என்பதை அரசாங்கம் முன்னரே தீர்மானித்து அறிவித்திருக்கும். கஜானுவோடு கணக்கு ஒத்துப் பார்ப்பதில் கால தாமதம் ஏற்படக்கூடாது. சாதாரணமாக, ஒவ்வொரு மாதத்திலும் முதல் 4 நாட்களுக்குள் இந்த வேலை முடிந்துவிடவேண்டும். கஜானுவுக்கு அருகிலேயே தங்கள் அலுவலகமுடைய அதிகாரிகள், தங்களுடைய கணக்கரை, நேராக மாவட்ட கஜானுவுக்கு அனுப்பி, அங்கே கணக்கை ஒத்துப்பார்க்கச் செய்யவேண்டும். மாவட்டத்தின் தலைநகருக்குக் கொஞ்ச தூரத்திலுள்ள அதிகாரிகளும் தங்களுடைய மேல் அதிகாரியால் முன்னர் அனுமதிக்கப்பட்டிருந்தால், தங்கள் கணக்கர்களை மாவட்ட கஜானுக் கணக்கோடு ஒத்துப்பார்ப்பதற்கு அனுப்பலாம். இம்முறை பின்பற்றப்படாதபோது, கணக்குகளை கஜானுக் கணக்கோடு ஒத்துப் பார்க்காமலேயே மேல் அதிகாரிகளுக்கு அனுப்பலாம். இந்த மாதிரி எந்தெந்த அதிகாரிகள் செய்யலாம் என்பதையும் அரசாங்கம் முன்னரே குறித்திருக்கும்.

ஒரு தலைமைச் செலவுக் கண்காணிப்பு அதிகாரி, தான் சொந்தத்தில் செய்த செலவுத் தொகைகளையும், தனக்குக் கீழ் உள்ள கண்காணிப்பு அதிகாரிகளால் அறிவிக்கப்பட்ட கணக்குகளில் உள்ள தொகைகளையும் தொகுத்து, ஒரு தனிக் கணக்கில் பதிந்துகொள்ளவேண்டும். தலைமைக் கண்காணிப்பு அதிகாரிகள் சாதாரணமாக அரசாங்கத்தின் தலைநகரில் இருப்பார்கள் ; அவர்கள் தங்கள் அலுவலகத்தில் தொகுக்கப்பட்டுள்ள கணக்குகளை மாதந்தோறும் ஒரு குறிப்பிட்ட நாளில், தலைமைக் கணக்கு அதிகாரி வைத்திருக்கும் கணக்கோடு ஒத்துப்பார்க்கும்படி, ஒரு கணக்கரை அனுப்பவேண்டும். இப்படிச் செல்லும் கணக்கர், தலைமைக் கணக்கு அதிகாரியின் அலுவலகத்தி லுள்ள பணியாளர்களின் துணையோடு, கணக்குகளை ஒத்துப்பார்க்க வேண்டும். இந்தப் பரிசீலனையால் புலனாகும் மாறுபாடுகளை எல்லாம் தனியாக ஓர் அறிக்கையில் எழுதவேண்டும் ; இதில் இரண்டு பத்திகள் இருக்கும்—ஒன்றில், தலைமைக் கணக்கு அதிகாரி வைத்துள்ள கணக்குகளில் எந்த இனங்கள் தவறாகப் பதிவு செய்யப் பட்டுள்ளன ; அவைகள் எப்படி மாற்றப்படவேண்டும் என்பது குறிக்கப் படும். இன்னொரு பத்தியில், இதே முறையில் தலைமைச் செலவுக் கணக்கு அதிகாரியின் கணக்கில் மாற்றம் செய்யப்படவேண்டிய புள்ளிகள் குறிக்கப்படும். இந்த அறிக்கைக்கு இரண்டு பிரதிகள் தயாரிக்கப்பட்டு, ஒன்று தலைமைக் கணக்கு அலுவலகத்தில் கொடுக்கப் படும் ; இன்னொரு பிரதியை அரசாங்கத்துறைக் கணக்கர் தம்முடைய அலுவலகத்திற்கு எடுத்துப்போவார். அதற்குப் பிறகு, அறிக்கைக்கு இணங்க, அரசாங்கத் துறைக் கணக்குகளில் வேண்டிய மாற்றங்கள் செய்யப்படும் ; இப்படிச் செய்தவுடன், அந்தமாதிரி மாற்றங்கள் செய்யப்பட்டுவிட்டன என்று தலைமைக் கணக்கு அதிகாரிக்குத் தெரிவிக்கவேண்டும். இதுபோல், தலைமைக் கணக்கு அதிகாரியும், தன்னுடைய கணக்குப் புத்தகத்தில் தேவையான மாற்றங்கள் செய்யப்பட்டுவிட்டன என்பதைத் தலைமைச் செலவுக் கண்காணிப்பு அதிகாரிக்குத் தெரிவிப்பார். இதன் பிறகு, கண்காணிப்பு அதிகாரி தன்னுடைய கணக்குப் புத்தகங்களிலுள்ள புள்ளிகள் தலைமைக் கணக்கு அதிகாரியின் கணக்குப் புத்தகங்களோடு ஒத்துப் பார்க்கப்பட்டுச் சரி செய்யப்பட்டுவிட்டன என்று உறுதிப் பத்திரம் ஒன்றைக் கணக்கு அதி காரிக்கு அனுப்புவார். யாதாவது ஒரு தலைமைச் செலவுக் கண்காணிப்பு அதிகாரியின் அலுவலகம், மாநிலத் தலைநகருக்கு வெளியே இருந்தால், அந்த அதிகாரி, ஒவ்வொரு மாதமும் தன்னுடைய கணக்கில் ஒவ்வொரு தலைப்பின் கீழும் பதிவான கணக்கு விவரத்தைத் தலைமைக் கணக்கு அதிகாரிக்குத் தெரியப்படுத்தவேண்டும். ஒரு மாதத்துக்கான அறிக்கையை அடுத்த மாதம் முடிவதற்கு இரண்டு மூன்று நாட்கள் முன்பே அனுப்பவேண்டும். இந்த அறிக்கையைக்கொண்டு, தலைமைக் கணக்கு அதிகாரி தன்னுடைய கணக்குகளைப் பரிசீலனை செய்வார்.

அரசாங்கச் செலவுக் கண்காணிப்பு அதிகாரியும், தலைமைக் கணக்கு அதிகாரியும் தங்களுடைய கணக்குகளைப் ஒத்துப்பார்த்து சரிசெய்து கொள்ளுவதற்கு, சேர்ந்தே பொறுப்பு வகிப்பார்கள். (அரசாங்கத் தேர்வுகளை நடத்தும் அதிகாரியும், மாநிலச் சட்டசபையின் செயலாளரும், தங்களுடைய விசேஷச் செலவுக் கணக்கை, தலைமைக் கணக்கு அதிகாரியின் கணக்கோடு ஒத்துப்பார்ப்பதற்கு, சில தனி முறைகள் விதிக்கப்பட்டுள்ளன.)

ஒரு துறைக்கும் இன்னொரு துறைக்குமாகவும், ஓர் அரசாங்கத் திற்கும் இன்னோர் அரசாங்கத்திற்குமாகவும், செய்யப்படுகின்ற ஏற்பாடுகளும், வெளிநாட்டில் ஏற்கப்படும் செலவு போன்றவைகளும், தலைமைக் கணக்கு அதிகாரியாலேயே செய்யப்படுகின்றன. அவர், இம்மாதிரி தன்னால் செய்யப்பட்ட செலவுக் கணக்கு விவரங்களை, சம்பந்தப்பட்ட தலைமைச் செலவுக் கண்காணிப்பு அதிகாரிக்கு அவ்வப் போது தெரிவிப்பார். அந்த விவரங்களை, கண்காணிப்பு அதிகாரி தன்னுடைய கணக்கிலே பதிந்துகொள்வார்; அல்லது, தனக்குக் கீழ் உள்ள அதிகாரிகள் தங்களுடைய கணக்குப் புத்தங்களில் அவைகளைப் பதிவு செய்துகொள்ளுமாறு, அவர்களுக்குத் தெரிவிப்பார். குறிப்பிட்ட செலவுக்குரிய நிதி ஒதுக்குத் தொகையைத் தம்மிடமே வைத்துக் கொண்டிருந்தாரா, அல்லது அதைப் பகிர்ந்து கீழ் அதிகாரிகளுக்கு ஒதுக்கி இருந்தாரா என்பதற்கிணங்க, பற்றப்படும் முறை அமையும். ஒரே செலவினம், கணக்கில் இரண்டு தடவை பதிவு செய்யப்பட்டு விடாமல் இருக்க, போதிய கவனம் வேண்டும்.

மாநில அரசாங்கத்திற்குத் தேவைப்படும் துணிமணிகள், உணவுப் பொருள்கள், மருந்து சாமான்கள் முதலியவைகளை, மத்திய அரசாங்கக் காப்புத் துறையினின்று பெறுவது வழக்கம். இவைகளுக் கான செலவு எப்போதோ நேரும்; ஒரு குறித்த முறையில் அடிக்கடி நேராது. இத்தகைய செலவின் போக்கை, மாதமாதக் கணக்கின் ஆதாரத்தில் நிர்ணயிக்க முடியாது. ஆகவே, இந்தமாதிரி விசேஷச் செலவினங்களுக்கு, செலவு அதிகாரிகள், தலைமைக் கண்காணிப்பு அதிகாரிக்கு, அவ்வப்போது விசேஷ அறிக்கை அனுப்பும்படி ஏற்பாடு இருக்கும். முன்கூட்டியே, வரும் மாதங்களில் இந்த இனத்தில் எவ்வளவு செலவு நேரிடலாம் என்று தெரிவிக்கவும் சொல்லலாம்.

## தலைமை அலுவலகக் கண்காணிப்பு

சில செலவினங்களை, அரசாங்கத் தலைமை அலுவலகமே நேரில் கண்காணித்து வருவதாக முன்னர் சொல்லப்பட்டது. இதற்காக மாத மாதம், தலைமைக் கணக்கு அதிகாரியிடமிருந்து, அந்த இனச் செலவு விவரங்கள் பெறப்படும். இவ்விவரங்கள் வந்தவுடன், அவை

ஏற்கெனவே அரசாங்கத்தால் செய்யப்பட்டுள்ள பொது விதிகளுக்கும், தனி உத்தரவுகளுக்கும் இணக்கமாக உள்ளனவா என்று பரிசீலனை செய்யவேண்டும். சில சமயங்களில், கீழ் அதிகாரிகளிடமிருந்தும், அவர்களுடைய துறைக் கணக்குகளில் என்ன தொகை பதிவு ஆகியிருக்கிறது என்ற விவரத்தையும் கேட்டுச் சரிபார்த்துக் கொள்ளலாம். அரசாங்கத் தலைமை அலுவலகம், அதன் கணக்கில் பதிவாகிய செலவுத் தொகைகளை, மாத மாதம் தலைமைக் கணக்கு அதிகாரியின் அலுவலகத்தில் பதிவுசெய்யப்பட்டுள்ள தொகைகளோடு ஒத்துப் பார்த்துச் சரிசெய்துகொள்ளும் விஷயத்தில், கீழ் அதிகாரிகள் தங்கள் கணக்குகளை ஒத்துப் பார்த்துக்கொள்வதற்கு என்ன முறை மேலே விவரிக்கப்பட்டதோ அம்முறையே பொதுவாகப் பொருந்தும்.

## சில தனியினச் செலவுகள்

(i) சில கணக்குத் தலைப்புகளின் கீழ், நேரிடையான ஒரு தொகையும் ஒருவருக்கும் கொடுக்கப்படாது, கணக்குகளில் மட்டும் பற்று வரவு எழுதப்படுவதாக இருக்கலாம்; அல்லது, சில இனங்களின் எல்லாச் செலவையும், தலைமைக் கணக்கு அதிகாரி, தணிக்கை செய்து வரலாம்; இந்த மாதிரியான செலவினங்களுக்கு, மாத மாதம் கணக்குகளைப் பரிசீலனை செய்யவேண்டிய அவசியம் இல்லை; ஆண்டின் நடுவில் எவ்வளவு அதிக நிதி ஒதுக்கம் தேவைப்படும், அல்லது முதலில் ஒதுக்கப்பட்ட தொகையில் ஒரு பகுதியைத் தேவையில்லை என்று திருப்பிக் கொடுத்துவிடலாமா என்ற விஷயம் பரிசீலனைக்கு வரும்போது மட்டும், தலைமைக் கணக்கு அதிகாரி அனுப்பியுள்ள கணக்கு விவரங்களை ஆராய்ந்தால் போதும்.

(ii) '50. பொதுப் பணிகள்' என்ற தலைப்பின் கீழ்ப் பதிவு செய்யப்படுகின்ற மானியச் செலவுகளுக்கு, ஒரு விசேஷ முறை உண்டு. தலைமைக் கணக்கு அதிகாரி, இவ்வினக் கணக்கில் தன் அலுவலகத்தில் பதிவு ஆகியிருக்கிற செலவின் விவரத்தை, சம்பந்தப்பட்ட அரசாங்க அலுவலகத் துறைக்கு, ஒவ்வொரு மாதத்திலும் இறுதி வாரத் தொடக்கத்தில், ஒரு பட்டியலாக அனுப்பவேண்டும்; இதில், மாவட்ட வாரியாக, ஒவ்வோர் இன மானியத்திற்கும் ஒவ்வொரு ஸ்தல ஸ்தாபனத்திற்கும், முந்திய மாதத்தில் எவ்வளவு தொகை கொடுக்கப்பட்டது என்ற விவரம் இருக்கும். ஒவ்வொரு மாதத்திலும், இந்த அறிக்கையை ஆதாரமாகக்கொண்டு, அரசாங்க அலுவலகத் துறை, அவசியமான நடவடிக்கைகளை மேற்கொள்ளும்; பிறகு, அந்த அறிக்கையைத் தலைமைக் கணக்கு அதிகாரிக்குத் திருப்பி அனுப்பிவிடும்.

(iii) வாலாயமாக இல்லாமல், ஒவ்வொரு சமயத்தில்மட்டும், சாலைகள், பாலங்கள், இவைகளுக்காகவும், சிறப்பாக, கிராமச் சாலை

களைச் செப்பனிடவும், ஸ்தல ஸ்தாபனங்களுக்குக் கொடுக்கப்படும் மானியங்கள் விஷயத்தில் பற்றப்படும் முறை பின்வருமாறு இருக்கும். சட்டபூர்வமாக பட்ஜெட்டில் எவ்வளவு நிதி ஒதுக்கப்பட்டு இருக்கிறது என்பதை, ஒவ்வோர் ஆண்டிலும், அதன் தொடக்கத்தில் சம்பந்தப் பட்ட ஸ்தல ஸ்தாபனங்களுக்கு அரசாங்கத் துறை அறிவிக்கும். மானியங்களுக்குத் தொகை ஒதுக்கப்பட்டுள்ள ஸ்தல ஸ்தாபனங்களின் தலைவர்கள், நிதியாண்டின் ஜனவரி மாதம் 10ஆம் தேதி அளவில், ஒரு தனி அறிக்கையைக் குறிப்பிட்ட பட்டியல் முறையில் அரசாங்கத் துக்கு அனுப்பவேண்டும்; அதில், மானியம் பெறக்கூடிய ஒவ்வொரு பணியின் விஷயமாக, முந்திய டிசம்பர் மாதம் இறுதி வரையில் எவ்வளவு செலவு ஆகியது, அதற்காக எவ்வளவு மானியம் பெறப் பட்டது என்ற விவரமும், எஞ்சியுள்ள மூன்று மாதங்களில் எவ்வளவு செலவு ஆகலாம் என்பதற்கு ஒரு நல்ல மதிப்பீடும் இருக்கவேண்டும்.

(iv) வேலையிலிருந்து ஓய்வு பெற்றவர்களுக்குக் கொடுக்கப்படும் உதவி நிதி விஷயமான செலவைக் கண்காணிப்பதற்கு ஒரு தனியான முறை, அரசாங்கத்தால் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இதன்படி, மாவட்ட கஜானு அதிகாரிகளும், தலைமைக் கணக்கு அதிகாரியும் இவ்வினச் செலவு விவரங்களை, மாதந்தோறும் நிதித் துறைக்கு அனுப்ப வேண்டும்.

## வெளிநாட்டுச் செலவு

வெளிநாடுகளில், முக்கியமாக இங்கிலாந்தில், செய்யப்படும் செலவு களைக் கண்காணிப்பதற்கு ஒரு தனிமுறை உண்டு. இங்கிலாந்திலுள்ள இந்திய ஹை-கமிஷனரும், தலைமைக் கணக்கு அதிகாரியும், இங்கிலாந்தில் செலவு செய்வதற்கு ஒதுக்கப்பட்ட நிதியையும், அது சம்பந்தமான செலவுப் போக்கையும் கவனித்து வருவார்கள். இது, தொகு நிதியில் சாட்டப்பட்ட செலவுகளுக்கும், சட்டசபையில் அனுமதியைப் பெறும் மற்றைய செலவுகளுக்கும் பொருந்தும். இந்தக் கண்காணிப்பு நன்முக அமைய, இந்தியாவிலுள்ள தலைமைச் செலவுக் கண்காணிப்பு அதிகாரிகள் எல்லோரும், பட்ஜெட்டில் ஒதுக்கப்பட்ட தொகைகளுக்கு மாற்றம் ஏற்படக்கூடிய விஷயங்களை எல்லாம், தாமத மின்றி ஹை-கமிஷனருக்கோ, அல்லது தலைமைக் கணக்கு அதிகாரிக்கோ, தெரிவிக்கவேண்டும். உதாரணமாக, ஓர் அதிகாரி, ஒரு நிதி ஆண்டில் ரஜாவில் போவார் என்று முன்னுல் எதிர்பார்க்கப்படாமல் இருக்கலாம்; ஆனுல், அவர் சில விசேஷ காரணங்களால், ரஜாவில் போக வேண்டுமென்றும், அது சம்பந்தமான ஊதியத்தை இங்கிலாந்தில் பெறும்படியும் ஆண்டு நடுவில் கோரலாம்; அல்லது, இங்கிலாந்திலுள்ள சாமான்கள் வழங்கும் துறையிடமிருந்து (India Stores Department) அதிகப்படியான சாமான்களைக் கோரியிருக்கலாம். இம்மாதிரியான

விசேஷ நிகழ்ச்சிகளைத் தாமதமின்றி அறிந்தால்தான், இங்கிலாந்தி லுள்ள ஹை-கமிஷனர் அல்லது தலைமைக் கணக்கு அதிகாரி, நிதி ஒதுக்கீடுகளையும் செலவுகளையும் சரியாக ஆராய்ந்து, என்ன மாற்றம் தேவை என்பதை மாநில அரசாங்கத்துக்குத் தெரிவிக்க முடியும்.

## பொதுப் பணித் துறையும் காட்டுவளத் துறையும்

சாதாரணமாக, அரசாங்கத்தின் எல்லாத் துறைகளிலும், அதிகாரி கள், தங்களுக்கு அவ்வப்போது தேவைப்படும் தொகைகளை கஜானு வுக்கோ அல்லது தலைமை நகரத்திலுள்ள முக்கியக் கணக்கு அலுவலகத்துக்கோ, முழு விவரங்களுடன் ஒரு பட்டியல் (Bill) தயாரித்து அனுப்பிப் பெறுவது வழக்கம். பொதுப் பணித் துறையிலும், காட்டுவளத் துறையிலும்கூட, இந்த முறை அமலில் உள்ளது. உதாரணமாக, அத்துறைத் தலைவர்கள், தங்கள் துறைப் பணியாளர்களின் ஊதியம், வேறு சிறிய செலவுகள், இவைகளுக்கு வேண்டிய தொகையை, சென்னை நகரிலேயே இம்முறையில் பெறு வார்கள். இவ்விதச் செலவுகளுக்கு, முன்னர் கூறப்பட்ட பொது முறைப்படி, கணக்கை மாதந்தோறும் தலைமைக் கணக்கு அதிகாரியோடு நேரில் சரிபார்த்துக் கொள்ளுவார்கள். சென்னை நகரத்திற்கு வெளியே மாவட்டங்களிலுள்ள, பொதுப் பணித்துறை அலுவலகங்களின் செலவுகள் விஷயமாக, அந்தந்த மேற்பார்வைப் பொறியாளர்கள் (Superintending Engineers) மாதந்தோறும், கணக்கு அறிக்கை களைத் தபால் மூலம் அனுப்பி, ஒத்துப்பார்த்துக்கொள்வார்கள். ஆனால், மேலே சொல்லப்பட்ட இரு துறைகளிலும், சில இனச் செலவு களுக்கு, விவரப் பட்டியல்களை அனுப்பாது, வேண்டிய தொகைகளை, மொத்தமாக கஜானுவுக்கு 'செக்' (Cheque) அனுப்பிப் பெறும் வசதி உண்டு. இந்த மாதிரிச் செலவுகளுக்கு, சம்பந்தப்பட்ட துறை அதிகாரிகள், முதலில் வைத்து இருக்கும் கணக்குகளை ஆதாரமாகக் கொண்டு, மாநிலம் முழுவதற்குமான கணக்கை, கணக்குத் தலைமை அதிகாரியே தொகுப்பார். ஆகவே, இவ்வினச் செலவுகளைக் கண்காணிப்பதற்கு, ஒரு விசேஷ முறை விதிக்கப்பட்டுள்ளது.

**(1) பொதுப் பணித் துறை :**—கண்காணிப்பு முறையின் சாரம் என்னவெனில், டிவிஷன் அதிகாரிகள் தங்கள் கணக்கைத் தொகுத்து மேற்பார்வை அதிகாரிக்கு (Superintending Engineer) அனுப்ப வேண்டும். அந்த மேல் அதிகாரி, பல டிவிஷன் அதிகாரிகளிடமிருந்து தனக்கு வந்த கணக்குகளைத் தொகுத்து, தலைமைப் பொறியாளருக்கு (Chief Engineer) அனுப்பவேண்டும். தலைமைப் பொறியாளர் இந்தக் கணக்கை, தலைமைக் கணக்கு அதிகாரியின் கணக்கோடு நேரில் ஒத்துப்பார்த்துச் சரி செய்வார். பின்னர், தனக்குக் கீழே யிருந்து வந்த கணக்குகளில் செய்ய வேண்டிய மாற்றங்களைத் தன்

துறையாளருக்கு அறிவிப்பார். மாநில முழுவதற்கும் பொதுப் பணித் துறையில் செலவைக் கண்காணிப்பது தலைமைப் பொறியாளரின் பொறுப்பாகும்.

**(2) காட்டுவளத் துறை :**—இத்துறையில், செலவைக் கண்காணித்துச் சரிபார்க்கும் பொறுப்பு முக்கியமாக ஒவ்வொரு 'கன்ஸெர்வேட்டர்' (Conservator of Forests) என்னும் அதிகாரியைச் சாரும். அவர் மாவட்ட அதிகாரிகளிடமிருந்தும் (District Forest Officers), செலவு அதிகாரிகளிடமிருந்தும், தலைமைக் கணக்கு அதிகாரியிடமிருந்தும், தனக்கு வரும் கணக்குகளைத் தொகுத்து ஒத்துப் பார்ப்பார். இந்த அதிகாரி (Conservator), காட்டுவளத் துறைத் தலைமை அதிகாரிக்கு (Chief Conservator of Forests), தன் பகுதிக் கணக்கை மாத மாதம் அனுப்புவார். இப்படித் தன் கீழ் உள்ள அதிகாரிகளிடமிருந்தெல்லாம் தனக்கு வந்த கணக்குகளைத் தொகுத்துத் தலைமைக் கணக்கு அதிகாரியின் கணக்கோடு ஒத்துப்பார்த்துச் சரிசெய்து, செலவின் போக்கைக் கண்காணிப்பது, துறைத் தலைமை அதிகாரியின் பொறுப்பாகும்.

# 10. நிதி ஒதுக்கு வகையும் மாற்றமும்

வினையால் வினையாக்கிக் கோடல்...................... —(குறள்)

முந்திய அத்தியாயத்தில், செலவின் போக்கைக் கண்காணிப்பதற்கான முறை விவரிக்கப்பட்டது. இத்தகைய கண்காணிப்பின் விளைவாக, மேல் என்ன செய்யவேண்டும் என்பதைத் தமிழ் நாட்டு அரசாங்க முறையில் இப்பொழுது ஆராயலாம். ஓர் ஆண்டின் நிதி ஒதுக்கமானது அந்த ஆண்டின் இறுதிக்குப்பின் செல்லாது; அதாவது, ஒதுக்கப்பட்ட தொகையில், ஏதாவது செலவாகாமல் எஞ்சியிருந்தால், அடுத்த ஆண்டின் செலவுக்கு அது பயன்படாது. இதை முக்கியமாகக் கருத்தில் கொண்டு, தக்க சமயத்தில் ஆவன செய்யவேண்டும்.

## நிதி ஒதுக்கத்தில் சேமிப்பு
## (Savings in Appropriation)

மாதந்தோறும் செலவைக் கண்காணித்து வரும்போது, விவரமான திட்ட மதிப்பீடுகளில் அடங்கியுள்ள பல நிதி ஒதுக்குக் கூறுகளுக்கான தொகைகளில் ஒரு பகுதி செலவாக மாட்டாது என்பது தெளிவாகலாம். முதலில் மதிப்பீடு செய்தபோது, சரியான கவனமின்றி, மிகவும் அதிகமான தொகையைக் கோரியிருப்பதால், இது நேரிடலாம்; அல்லது, ஏதாவது ஒரு விசேஷ காரணம் பற்றி, ஓரினச் செலவானது தள்ளிப் போடப்பட்டு இருக்கலாம்; அல்லது வேண்டுமென்றே செலவைக் குறைக்கும் திட்டம் அமலுக்கு வந்திருக்கலாம். நடைமுறையில், பல இன மானியங்கள், பாசன, பொதுப் பணி, மின்சார வேலைகள், கடன்கள், முன்தொகைகள் - இவை போன்றவைகளுக்கான நிதி ஒதுக்கங்களில், செலவு எதிர்பார்த்ததைவிடக் குறைவாவது இயல்பு. இதைக் கருத்திற் கொண்டு, விவரமான மதிப்பீடுகளில், முன் சொன்னபடி, மொத்தமாக ஓர் அளவுக்குத் தொகையைக் குறைப்பது உண்டு. அப்படிச் செய்யும்போது, ஓர் உறுதி அளித்ததாகக் கொள்ளப் படும்; அதாவது, நடைமுறையில், செலவு மேற்சொன்னபடி குறைக்கப் பட்ட தொகையைவிட அதிகமாகும் என்று தெரிந்து, அதிக நிதி

ஒதுக்கம் வேண்டுமென்று கேட்டால், அது அனுமதிக்கப்படும் என்பது தான். ஒரு தலைப்புக்காக உள்ள நிதி ஒதுக்கம், ஓர் அளவுக்குச் செலவாகாது நின்றுவிடும் என்று தமக்குத் தெரிந்தவுடன், ஒரு செலவு அதிகாரி அல்லது கண்காணிப்பு அதிகாரி, அது சம்பந்தப்பட்ட மேல் அதிகாரிகளின் மூலம், அரசாங்க நிதித் துறைக்குக் காரணத்துடன் தெரிவித்து, அந்த அதிகப்படியான தொகையை, வேறு வகையில் பயன்படுத்துமாறு சொல்லிவிடவேண்டும். வேறு தலைப்புகளில் செலவு அதிகமாகும், அதற்குள்ள நிதி ஒதுக்கம் போதாது, அல்லது அடுத்த ஆண்டில் சாதாரணமாக ஏற்கக்கூடிய செலவை நடைமுறை ஆண்டிலேயே செய்துவிடலாம், இதுபோன்ற காரணங்களை மனத்திற் கொண்டு, ஒரு குறிப்பிட்ட தலைப்பின்கீழ் எதிர்பார்க்கப்படும் மீதித் தொகையை, நிதித்துறைக்குத் தெரிவிக்காது, மற்றைய செலவுகளுக்குத் தாமே பயன்படுத்தலாம் என்று இருப்பது தவறு. நிதி ஒதுக்கங்களில் தேவைப்படாது என்று பிறரால் தனக்கு அறிவிக்கப்பட்ட தொகைகளை எல்லாம், நிதித் துறையானது தன் கணக்கில் வைத்துக்கொண்டதாக உத்தரவு பிறப்பிக்கும். இப்படித் தனியாக வைத்துக்கொள்ளப்பட்ட தொகைகள் எல்லாம், சம்பந்தப்பட்ட மானியக் கணக்குகளில் சேமிப் பாக இருப்பதாகக் (Reserve under each Grant) கருதப்படும். இதில், சாட்டப்பட்ட தொகையும், அப்படி அல்லாத தொகையும் தனித்தனியாகக் கணக்கிடப்படும். நிதித் துறைக்கு அறிவிக்கப்பட்ட சேமிப்புத் தொகைகள், முன்பு மதிப்பீடுகளில் மொத்தமாகக் குறைக்கப் பட்ட கணக்கிற்கு ஈடாக முதலில் பயன்படுத்தப்படும்.

## வரவுசெலவுத் திட்டத்தின் நிதி ஒதுக்கப்படாத செலவினங்கள்

பட்ஜெட் மதிப்பீடுகளில் அடங்கிய ஒவ்வொரு தொகையும், அந்த நிதி ஆண்டில் ஏற்படக்கூடிய செலவினம் முழுவதையும் எதிர்பார்த் தும், அரசாங்கத்தின் நிதி வசதிக்கும் ஏற்ப, நிர்ணயிக்கப்பட்டதாகக் கொள்ளவேண்டும். சாதாரணமாக, ஒவ்வொரு சிறு தலைப்புக்கும் ஒதுக்கப்பட்ட தொகைக்கு அதிகமாகச் செலவு செய்யக்கூடாது; ஆகவே, பட்ஜெட்டில் சேர்க்கப்படாத புதுச் செலவினங்களை அந்த ஆண்டின் நடுவில் அரசாங்கத்தின் யோசனைக்கு அனுப்பக்கூடாது என்று சொல்லப்பட்டது. ஆயினும், எதிர்பாராத காரணங்களால், அவசியமாக, பல தலைப்புகளுக்குக்கீழ் புதுச் செலவை ஏற்கவேண்டி நேரலாம். அல்லது, புதுவினப் பணி ஒன்றை மேற்கொள்ளும்படியும் இருக்கலாம் என்று விளக்கப்பட்டுள்ளது. அம்மாதிரி நேரும்போது, பின் பற்றப்பட வேண்டிய முறை இப்போது மேலும் விவரிக்கப்படுகின்றது.

சம்பந்தப்பட்ட மானியத்தில் வேறு தலைப்புகளின் கீழ்க் குறிக்கப் பட்டுள்ள நிதி ஒதுக்கத்தைச் சார்ந்த செலவைக் குறைத்தோ, அல்லது

தள்ளிப்போட்டோ, புதிதாக ஏற்கவேண்டிய செலவுகளுக்கு அதைப் பயன்படுத்த வசதி செய்யலாம். இப்படிச் செய்யமுடியுமா என்பதை ஒவ்வொரு செலவுக் கண்காணிப்பு அதிகாரியும், மிகவும் கவனத்துடன் பரிசீலனை செய்யவேண்டும். சாட்டப்பட்ட செலவினங்களுக்காக நிதி ஒதுக்கம் வேண்டியிருந்தால், அதிகத் தொகையை நிதித் துறையே அனுமதித்துவிடும்; ஆனால், அது ஒரு மானியத்திற்குள்ளே செய்யப் படவேண்டும்; அதாவது, ஒரு மானியத்துக்கு வேண்டிய அதிகத் தொகையை, இன்னொரு மானியத்தில் சேர்ந்த தொகையிலிருந்து மாற்றிக்கொள்ள முடியாது.

சாட்டப்படாத செலவினங்களுக்காக, அதிகத் தொகை வேண்டி யிருந்தால், அதற்கு முன்னர் கூறியபடி சட்டசபையில் துணைமானியம் பெறவேண்டும். புது இனப் பணிகளுக்கு வேண்டிய தொகையை உரிய மானியத்தில் அடங்கிய வேறு தலைப்புகளின் தொகைகளை மாற்றிப் பெற முடியுமானாலும், சட்டசபையின் அனுமதியைப் பெற வேண்டும் என்பதும் முன்னமே விளக்கப்பட்டது. புதிய இனச் செலவுக்கு வேண்டிய தொகை முழுவதையும் அந்த மானியத்தில் ஏற்கெனவே உள்ள தொகையிலிருந்து ஏற்க முடியுமானால், ஓர் அடை யாளமாக 100 ரூபாய் அதிகத் தொகை வேண்டுமென்று கோரிப் பொதுவான அனுமதி பெற்றால் போதும். புதுச் செலவின் ஒரு பகுதியை மட்டும், முன்னர் அனுமதிக்கப்பட்ட தொகையிலிருந்து ஏற்க முடியுமானால், ஏற்க முடியாத தொகையைக் குறித்து, துணைமானியம் பெறவேண்டும். தேவையான நிதி ஒதுக்கத்திற்கு, சட்டசபையில் அனுமதி பெற, காலதாமதம் நேரும்போல் இருந்தால், முன்னர் விளக்கியபடி, மாநில கவர்னரின் பொறுப்பில் உள்ள எதிர்பாராச் செலவு நிதியிலிருந்து ஒரு தொகையைப் பெறலாம். புது இனச் செலவு என்ற வகையில் சேராத சாதாரணச் செலவு ஒன்றை மேற் கொள்ள அரசாங்கத்தின் அனுமதியைக் கோரும்போது, அதற்குரிய நிதி ஒதுக்கு மாற்றத்திற்கும் அனுமதி கோரவேண்டும்; இவைகளைத் தனித் தனியாகக் கோரினால், செலவு ஏற்பதிலோ அல்லது நிதி ஒதுக்கத் திலோ தாமதமாகி, கணக்கு ஒழுங்கீனங்களுக்குக் காரணமாகும். சில சமயங்களில், அவசரமாக ஒரு புதுச் செலவை ஏற்கும்படி நேரும் போது, அதற்கு வேண்டிய அதிகத் தொகையை இன்னோர் இடத்தில் செலவுக் குறைவை எதிர்பார்த்துச் சரிசெய்யலாம் என்று முன் கூட்டியே சொல்ல முடியாமல் போகலாம். இத்தகைய சமயங் களில், வேண்டிய நிதி ஒதுக்கம் பின்னர் செய்யப்படும் என்ற உறுதியோடு செலவுகளை முன்னமே ஏற்க அனுமதி தரவேண்டும் என்று, சம்பந்தப்பட்ட அரசாங்கத் தலைமை அலுவலகத் துறைக் குத் தெரிவிக்கலாம். அப்போது அந்த விஷயம் நிதித்துறைக்கு அறிவிக்கப்பட்டு, அதன் சம்மதத்தின்பேரில், குறித்த செலவை

மேற்கொள்ள உத்தரவிடப்படும். அதே சமயத்தில், இந்தச் செலவுக்கு வேண்டிய தொகையை நடைமுறை ஆண்டின் இறுதிக்குள், நிதி ஒதுக்கு மாற்றத்தின் மூலமோ, அல்லது சட்டசபையில் ஒரு துணைமானியக் கோரிக்கையைச் சமர்ப்பித்தோ வகை செய்யப்படும் என்று ஓர் உறுதியை, நிர்வாகத் துறை, நிதித் துறையின் மூலம், தலைமைக் கணக்கு அதிகாரிக்கு அளிக்க வேண்டும். அவசியமானால், இம்மாதிரிச் செலவுக்குக்கூட, எதிர்பாராச் செலவு நிதியிலிருந்து முன்பணம் பெறலாம். ஆண்டு இறுதிக்குள், தேவையான நிதி ஒதுக்கத்திற்கு, உரிய அதிகாரி வகை செய்யும்படிப் பார்த்துக்கொள்ள வேண்டிய கடமை செலவுக் கண்காணிப்பு அதிகாரியுடையது ஆகும். அந்த அதிகாரியின் சிபாரிசின் பேரில், துணைமானியம் மூலமாகவோ அல்லது வேறு வகையிலோ அதிகத் தொகை பெறப்பட்ட பின்னர், அது முழுவதுமோ அல்லது ஒரு பகுதிமட்டுமோ செலவிடப்படாது எஞ்சினால், அதற்குச் சரியான காரணம் கூறும்படி அந்த அதிகாரி நிர்ப்பந்திக்கப்படுவார். ஆகவே, அதிக நிதி ஒதுக்கம் வேண்டுமென்று கோரும்போது, தேவையான தொகையை மிகுந்த கவனத்துடன் நிர்ணயிக்கவேண்டும்.

## நிதி ஒதுக்கு மாற்றங்கள்

நிதி ஒதுக்கு மாற்றங்கள் எவ்வாறு செய்யப்படலாம் என்பது பொதுவாக 6ஆம் அத்தியாயத்தில் குறிக்கப்பட்டது. ஒரு மானியத்திலிருந்து, இன்னொரு வகை மானியத்திற்கோ அல்லது சாட்டப்பட்ட வகையிலிருந்து அது அல்லாத வகைக்கோ, நிதி ஒதுக்க மாற்றங்கள் செய்யக்கூடாது என்பதும் தெளிவாக்கப்பட்டது. இதிலிருந்து மானியத்திற்குள் அடங்கிய நிதி ஒதுக்குச் சிறு கூறு ஒன்றிலிருந்து இன்னொன்றுக்குத் தொகையை மாற்றலாம் என்பது பொதுவாகப் பெறப்படும். ஆனால், இதற்கும் சில விதிவிலக்குகள் உண்டு :—

(1) ஏதாவது ஒரு நிதி ஒதுக்குச் சிறு கூறுக்கான தொகையிலிருந்து இயல்பாகச் செலவுக் குறைவு ஏற்படலாம் என்று, மதிப்பீட்டில், மொத்தமாக ஒரு தொகை கழிக்கப்படலாம் என்று மேலே கூறப்பட்டது. அம்மாதிரி செய்யப்பட்டு இருந்தால், அந்த அளவுக்குச் செலவுக் குறைவு எதிர்பார்க்கப்பட்டு, அந்தத் தொகை வேண்டாம் என்று நிதித்துறைக்கு அறிவிக்கப்படும் வரைக்கும், அந்த நிதிக் கூறுக்கான தொகையை வேறு கூறுக்கு மாற்றக்கூடாது.

(2) ஏற்கெனவே உள்ள பட்ஜெட் திட்டங்களில், கருதவேபடாத ஒரு புதுப் பணிக்கான செலவுக்காக—அது சாட்டப்பட்ட செலவாய் இருந்தாலும் சரி, அல்லது மற்றச் செலவாய் இருந்தாலும் சரி—நிதி ஒதுக்கு மாற்றம் செய்யவேண்டுமானால், அதற்கு முன்னர் மேலே

கூறப்பட்ட முறையில், சட்டபூர்வமாக அந்தப் புதுப் பணிக்கான செலவு அனுமதிக்கப்பட்டு இருக்கவேண்டும்.

(3) சில நிதி ஒதுக்குச் சிறு கூறுகளில், அரசாங்கம் முன் செலவு செய்து, பின் அதை முற்றிலும் அல்லது ஓர் அளவு வரைக்கும் திருப்பிப் பெறலாம் என்ற வகையில், செலவு குறைத்துக் காட்டப்பட்டிருக்கும். நடைமுறையில் இப்படித் திரும்பப் பெறும் தொகையானது (Recoveries) முதலில் எதிர்பார்த்து இருந்ததைவிட அதிகமானால், அதை ஆதாரமாகக் கொண்டு, வேறு கூறுகளைச் சார்ந்த செலவை அதிகப்படுத்துவதற்காக நிதி ஒதுக்கு மாற்றம் செய்யக் கூடாது. ஏனெனில், சட்டசபையில் சமர்ப்பிக்கப்படும் மானியக் கோரிக்கைகளும் துணைமானியக் கோரிக்கைகளும், செலவில் திரும்பிப் பெறும் தொகைகளைக் கணக்கிடாமல் மொத்தச் செலவை ஆதாரமாகக் கொண்டே பெறப்படுகின்றன என்று நாம் முன்னரே கண்டுள்ளோம். திரும்பிப் பெறும் செலவுப்பகுதி என்றால், அது வேறு அரசாங்கத்திலிருந்தோ அல்லது ஸ்தல ஸ்தாபனங்களிலிருந்தோ, அல்லது தனியார் நிறுவனங்களிலிருந்தோ பெறப்படும் தொகையாக இருக்கவேண்டுமென்பது இல்லை. ஒரு தலைப்பின்கீழ், இன்னொரு துறைக் கணக்கில் சேரக் கூடியதாகக் கணக்கில் காட்டப்பட்ட தொகைகளுக்கும், மேற்சொன்ன விதி பொருந்தும். இச் சந்தர்ப்பத்தில், மற்றொரு விஷயத்தையும் நாம் கவனிக்க வேண்டும். அதாவது, ஒருவிதச் செலவைப் பாகுபடுத்தி பட்ஜெட்டில் ஒரு தலைப்பில் சேர்த்திருந்தும், மறு ஆலோசனையின் விளைவாக, அதை வேறு இனத் தலைப்பில் சேர்ப்பது சிறப்புடையது ஆகும் என்று கருதப்படலாம்; ஆனால், இதன் விளைவாக, நிதி ஒதுக்கத்தில் தெளிவுக் குறைவு நேராமல் இருப்பது அவசியம். ஆகவே, பொதுவாக, இந்தக் கணக்குமுறை மாற்றங்கள் அடுத்த ஆண்டு பட்ஜெட்வரை ஒத்திப்போடப்படும்.

நிதி ஒதுக்கு மாற்றங்கள் ஒரு சிறு தலைப்புக் கூறிலிருந்து மற்றைய சிறு கூறுகளுக்கு இருக்கவேண்டுமென்றால், அந்தச் சிறு கூறுகளுக்கு விவரணமாக இருக்கும், கணக்குத் தலைப்புகளுக்குத் தனியாக நிதி ஒதுக்கு மாற்றம் வேண்டாம் என்பது தெளிவாகும். ஆயினும், ஏதாவது ஒரு குறிப்பிட்ட செலவின விஷயத்தில், விவரணத் தலைப்புகளைக்கூட நிதி ஒதுக்குச் சிறு தலைப்புகளாகக் கருத வேண்டுமென்ற நியதி இருந்தால், பொது விதி விலக்காக, அந்த விவரணத் தலைப்புகளுக்கும் நிதி ஒதுக்கு மாற்றம் செய்யப்படும். ஒரு தலைப்பின்கீழ், செலவுக் குறைவு நிச்சயமாக ஏற்படும் என்று தெரிந்தால் தான், அந்த அளவுக்கான தொகையை, அதிகச் செலவு ஏற்படும் என்று தோன்றுகிற இன்னொரு தலைப்புக்கு மாற்றலாம்; அதாவது, ஒரு தலைப்பின்கீழ் அதிகமாகத் தேவைப்படும் தொகையைப் பெறுவதற்காக மட்டும், இன்னொரு தலைப்பிலிருந்து தாற்காலிமாக மாற்றத்தைச்

செய்துவிட்டு, பின்னர் அதே தலைப்புக்கு வேறு இடங்களிலிருந்து வேண்டிய தொகையை மாற்றிக்கொள்ளலாம், அல்லது அது நேரும் போது எப்படியோ பார்த்துக்கொள்ளலாம் என்று செய்வது தவருகும். ஆனல், ஒரு தலைப்பின்கீழ், பொதுவாகவோ, அல்லது ஒரு காரணம் பற்றியோ செலவைக் குறைக்க வேண்டுமென்று கருதினல், அந்த அளவுக்கான தொகையை இன்னெரு தலைப்புக்கு மாற்றுவது முறை யாகும். நிதி ஒதுக்கு மாற்றங்களெல்லாம், 100 ரூபாய்க் கணக்கில் இருக்கவேண்டும். இங்கிலாந்தில் ஏற்கப்படும் செலவுகளுக்கு, நிதி மாற்றங்கள் இருநூறு ரூபாய் கணக்கில் (அதாவது 15 பவுன் ஸ்டெர்லிங் என்ற கணக்கில்) இருப்பது வழக்கம்.

அரசாங்கத் தலைமை அலுவலகத்திலுள்ள ஒவ்வொரு துறையும், அதன் நிர்வாகத்திலுள்ள துறைத் தலைமை அதிகாரிகளும், இன்னும் சிலரும், பொது விதிகளுக்கும், அவ்வப்போது சிறப்பாகச் செய்யப் படும் உத்தரவுகளுக்கும் இணங்க, சாட்டப்பட்ட செலவுக்காகவோ அல்லது மற்றைய செலவுக்காகவோ, நிதி ஒதுக்கு மாற்றங்களைச் செய்ய லாம் என்று நிதித் துறை அனுமதி கொடுத்துள்ளது.

இவை சம்பந்தமாக, சில முக்கிய நிபந்தனைகள் இருக்கின்றன. அவை பின்வருமாறு :—

(அ) ஒரு சிறு தலைப்புக்கு (Minor Head) உட்பட்ட நிதி ஒதுக்குக் கூறுகளிடையேதான் அதிகாரிகள் மாற்றம் செய்யலாம்.

(ஆ) எந்தத் துறையோ, ஒரு செலவுக்காக நிதிமாற்றம் செய்வதானல், அந்தச் செலவுக்குப் பொதுப் பொறுப்பை வகிக்க வேண்டும். அதாவது, தானே பொறுப்பு வகிக்காத செலவினங்களுக்கு, நிதி மாற்றம் செய்வதற்கு அதற்குத் தகுதியில்லை.

(இ) ஒரு நிதி ஒதுக்கு மாற்றத்தின் விளைவாக, வரும் ஆண்டு களிலும் அச்செலவைத் தொடர்ந்து ஏற்கவேண்டிய பொறுப்பு வருவதானல், அத்தகைய மாற்றம் செய்வதற்கு ஒரு அதிகாரிக்கும் தகுதி இல்லை. ஆனல், இம்மாதிரியான ஒரு பொறுப்பை ஏற்பதற்கு முன்னரே நிதித் துறையிட மிருந்து அனுமதி பெற்றிருந்தால், அதற்கு இணங்க, சம்பந்தப்பட்ட அதிகாரி நிதி மாற்றம் செய்யலாம்.

(ஈ) குறிப்பிட்ட செலவுக்காக, தொடக்க நிதி ஒதுக்குச் சட்டத் திலோ, அல்லது துணைமானியச் சட்டத்திலோ, தொகை ஒதுக்கப்படாமல் இருந்தால், அந்தச் செலவை ஏற்பதற் காகக் கீழ் அதிகாரிகள், நிதி மாற்றம் செய்யக்கூடாது.

ஆனால், இவ்விஷயத்தில் தனி அதிகாரம் உள்ள நிதித் துறையோ, அல்லது வேறு தலைமை அலுவலகத் துறையோ, அவ்வினச் செலவிற்கு, ஏற்கெனவே நிதி மாற்றம் செய்திருந்தால், அதனைத் தொடர்ந்து வேறு மாற்றங்களைக் கீழ் அதிகாரிகள் செய்யலாம். முந்திய ஆண்டிலேயே ஏற்கப்படலாம் என்று எதிர்பார்க்கப்பட்டு, அதற்கு வேண்டிய தொகையும் ஒதுக்கப்பட்டிருந்தும், யாது காரணம் பற்றியோ அந்தச் செலவு அவ்வாண்டில் நேராமல், நடைமுறை ஆண்டில் ஏற்கப்படுவதாக இருந்தால், அதற்கும் நிதிமாற்றம் செய்யலாம்.

சில குறிப்பிட்ட அதிகாரிகளின் விஷயத்தில், நிதி ஒதுக்கு மாற்றத்திற்கு இன்னும் சில நிபந்தனைகள் இருக்கும். உதாரணமாக:—

### இங்கிலாந்திலுள்ள இந்திய ஹை-கமிஷனர்

இவர் ஒவ்வொரு மானியத்தின் கீழும், 'இங்கிலாந்தில் செலவு' என்ற தலைப்பின் உட்பிரிவுகளுக்குள் மட்டும் நிதி ஒதுக்கு மாற்றம் செய்யலாம்.

### பொதுப் பணித் துறை மேற்பார்வைப் பொறியாளர்கள் (P. W. D. Superintending Engineers)

இவர்கள் பொதுவாக, ஒரு சிறு தலைப்புக்கு (Minor Head) உட்பட்ட எல்லா உட்பிரிவுகளுக்கும், தாங்கள் சம்பந்தப்பட்ட வரையில், நிதிமாற்றம் செய்யலாம். ஆயினும், '50. பொதுப் பணிகள்', '103. பொதுப் பணிகளின் மூலதனக் கணக்கு' என்ற பெருந் தலைப்புகள் சம்பந்தமாக, பின் குறிக்கப்படும் தலைப்புகளுக்கு மட்டுமே அவர்கள் நிதி ஒதுக்கு மாற்றம் செய்யலாம்:—'மூல வேலைகள் (Original Works) கட்டடங்கள்', 'மூல வேலைகள்—போக்கு வரத்து வசதிகள்'; 'மூலவேலைகள்–பலவகை'.

### நிர்வாகப் பொறியாளர்கள் (Executive Engineers)

இவர்கள் மேற்கூறப்பட்ட '50', '103' என்ற எண்ணுள்ள தலைப்புகளில், ஒரு பெரிய வேலைக்கும் இன்னொரு பெரிய வேலைக்குமான நிதி ஒதுக்குகளில் மாற்றம் செய்யலாம்.

### காட்டுவள வட்ட அதிகாரிகள் (Conservators of Forest)

இவர்கள் '70. காட்டுவளம்' என்ற தலைப்பின்கீழ்வரும் 'பணியாளர்கள்' என்ற சிறு தலைப்பைத் தவிர மற்றச் சிறு தலைப்புகளுக்குள் நிதி மாற்றம் செய்யலாம்.

**பொது நியதிகள் :**

பொதுவாக, பட்ஜெட்டில் முதலில் சேர்க்கப்படாத ஒரு புதிய வேலைக்காக, நிதி ஒதுக்கு மாற்றம் செய்யக்கூடாது என்று குறிக்கப் பட்டபோதிலும், இதற்குச் சில விதி விலக்குகள் உண்டு. ஒரு புதிய சிறு வேலைக்காகும் செலவு 2,500 ரூபாய்க்கு மேற்படாமல் இருந்தால், அதற்கான நிதி ஒதுக்கு மாற்றத்தைப் பொதுப் பணித் துறைப் பொறியாளர்களும், பாசனத் துறைப் பொறியாளர்களும் செய்யலாம் ; இந்தத் துறை அதிகாரிகளுக்கு இன்னும் சில நிபந்தனை களும் விதிக்கப்பட்டுள்ளன :—

(1) ஒரு குறிப்பிட்ட திட்டத்திற்குத் தேவையான நிர்வாக அனுமதி யும், தொழில்நுட்ப அனுமதியும் பெற்ற பின்னரே, நிதி ஒதுக்கு மாற்றம் செய்யலாம். இப்படி மாற்றம் செய்வதனுல், அந்தத் திட்டம் அல்லது வேலைக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள மதிப்பீட்டுத் தொகையை விட, செலவு அதிகமாகக்கூடாது.

(2) '50. பொதுப் பணிகள்' என்ற பெருந் தலைப்புக்குள் அடங்கிய ஒவ்வொரு சிறு தலைப்புக்கும் உள்ள மொத்த நிதி ஒதுக்கத்துக்கு மேல் போகும்படி மாற்றத்தை அனுமதிக்கக்கூடாது.

(3) ஒரு பெரிய வேலையிலிருந்தோ அவ்வேலைக்காகவோ நிதி ஒதுக்கு மாற்றம் செய்யும் தொகை ஒரு வரம்பை மீறக்கூடாது. தலைமைப் பொறியாளருக்கும் மற்ற மேற்பார்வைப் பொறியாளருக்கும் இந்த வரம்பு 10,000 ரூபாயாக இருக்கும் ; நிர்வாகப் பொறியாளர்கள் விஷயத்தில், 2,500 ரூபாயாக இருக்கும்.

(4) நீர்ப்பாசனம், வடிகால் முதலியவை சம்பந்தமாக உள்ள பெருந் தலைப்புகளில், ஒரு திட்டத்திலிருந்து இன்னொரு திட்டத்திற்கு நிதி ஒதுக்கு மாற்றத்தைத் தலைமைப் பொறியாளர் செய்வதானுல், அதன் அளவு 10,000 ரூபாய்க்கு மேற்படக்கூடாது ; அவருக்குக் கீழ் உள்ள மேற்பார்வைப் பொறியாளருக்கு ஒரு பாசனத் திட்டத்திலிருந்து இன்னொரு பாசனத் திட்டத்திற்கு நிதி ஒதுக்கு மாற்றம் செய்யத் தகுதி கிடையாது.

**குறிப்பு :—**

1. காட்டுவளம், பொதுப் பணி, பாசனம் முதலிய துறைகளைச் சார்ந்த செலவுக் கண்காணிப்பு அதிகாரிகள், தங்களுக்குக் கீழுள்ள அதிகாரிகள் நிதி ஒதுக்கு மாற்றம் செய்யும்போது, மேற்சொல்லப் பட்ட விதிகளை மீருமல் இருக்கிருர்களா என்று பார்த்துக்கொள்ள வேண்டும்.

2. ஓர் அதிகாரி, ஏதாவது ஒரு தலைப்புக்கான நிதி ஒதுக்கைக் குறைத்து இருந்தால், அந்தத் தலைப்பைச் சாரும் செலவை அந்த

அளவுக்குள்ளேயே வைத்துக் கொள்ளவேண்டும்; ஒரு கீழ்ப்பட்ட அதிகாரி மேல் அதிகாரியினுடைய அனுமதி இல்லாமல் தான் செய்யும் நிதி ஒதுக்கு மாற்றத்தால், குறிப்பிட்ட அளவை அதிகப்படுத்தக் கூடாது. முன்னர் நிதி ஒதுக்குத் தொகையை நிதித் துறையே குறைத்து இருந்தால், அதனை அதிகப்படுத்த, நிதித் துறையின் சம்மதத்தைச் சம்பந்தப்பட்ட நிர்வாகத் துறை மூலமாகக் கோர வேண்டும்.

## நிதி ஒதுக்கு மாற்ற அறிக்கைகள் சம்பந்தமான விதிகள்

துறைத் தலைமை அதிகாரிகளும் மற்ற அதிகாரிகளும் தாங்களே அனுமதிக்கமுடியாமல் இருக்கும்போது, தங்களுக்குத் தேவையான நிதி ஒதுக்கு மாற்றங்களைக் காட்டும் அறிக்கைகளைத் தயாரித்து, இரண்டு பிரதிகளை அரசாங்கத் தலைமை அலுவலகத்திற்கு அனுப்ப வேண்டும். சம்பந்தப்பட்ட தலைமை அலுவலகத் துறை, தனக்குத் தகுதி இருந்தால், அந்த யோசனைகளை அனுமதித்து உத்தரவிடும்; இல்லாது போனால், அவ்வறிக்கைகளை நிதித் துறையின் அனுமதிக்கு அனுப்பிவிடும்.

ஓர் அதிகாரி தனக்குத் தகுதி இருந்து, ஒரு நிதி ஒதுக்கு மாற்றத்தை அனுமதித்து உத்தரவு இட்டால், அந்த உத்தரவு பின்கண்ட *பட்டியல் முறையில் இருக்கவேண்டும்; அதன் ஒரு பிரதியை நேராகத் தலைமைக் கணக்கு அதிகாரிக்கும், இன்னொரு பிரதியை உரிய அரசாங்கத் தலைமை அலுவலகத் துறைக்கும் அனுப்பவேண்டும்; அந்தத் துறை அப்பிரதியை நிதித் துறைக்கு அனுப்பிவிடும்; நிதி மாற்றத்தை அனுமதிக்கும் அதிகாரி, அத்துறைத் தலைமை அதிகாரி யாக இல்லாவிட்டால், தன் உத்தரவின் பிரதிகளை, தலைமை அதிகாரி மூலம் அரசாங்கத்திற்கு அனுப்பவேண்டும்.

ஒரு நிதி ஒதுக்கு மாற்றத்தை அனுமதிக்குமாறு அரசாங்கத் திற்குச் செய்யும் கோரிக்கையும், ஏறக்குறைய மேலே உள்ள முறையில்

*** உத்தரவுப் பட்டியல்**

1. விவர எண்.
2. பெருந் தலைப்பு; சிறு தலைப்பு, நிதி ஒதுக்குச் சிறு கூறு அதிகமாக்கப் படும் கணக்குத் தலைப்புகள் / குறைக்கப்படும் கணக்குத் தலைப்புகள்.
3. அமலில் உள்ள நிதி ஒதுக்கு ரூ.
4. அதுவரையிலான செலவு ரூ.
5. தற்போது அனுமதிக்கப்படும் மாற்றம் ரூ. [(+) அதிகம் (−) குறைப்பு].

குறிப்பு :—செய்யப்படும் மாற்றங்களுக்குக் காரணம் தனியாக விளக்கப்பட வேண்டும் (இதற்குப் பட்டியலின் பின்புறம் பயன்படும்).

இருக்கும். சாதாரணமாக, இம்மாதிரியான கோரிக்கைகள் நேராக அரசாங்கத் தலைமை அலுவலகத்திற்கு அனுப்பப்படலாம். ஆனால், '50. பொதுப் பணிகள்—பணியாளர்கள்' என்ற தலைப்பு சம்பந்தமாக இருந்தாலும், அல்லது ஏற்கெனவே அமலில் உள்ள ஓர் உட்பிரிவுக்குச் சம்பந்தம் இல்லாமல் இருந்தாலும், கோரிக்கைகள் தலைமைக் கணக்கு அதிகாரிக்கு அனுப்பப்பட்டு, அவரால் பின்னர் அரசாங்கத்திற்கு அனுப்பப்படும். கோரப்படும் மாற்றத்தை எந்த உட்பிரிவில் செய்ய லாம் என்னும் விஷயமாக, தலைமைக் கணக்கு அதிகாரி தன் அபிப்பிராயத்தைக் கூறுவார்.

சாட்டப்பட்ட செலவு சம்பந்தமான அறிக்கைகளும், மற்றச் செலவு களுக்கான அறிக்கைகளும் தனித்தனியாக இருக்கவேண்டும். ஒரு தலைமைக் கணக்கு அதிகாரி, பல மானியங்களைச் சார்ந்த செலவுக்குப் பொறுப்பு வகித்தால், அவர் ஒவ்வொரு மானியத்திற்கும் தனித்தனியே நிதி ஒதுக்கு சம்பந்தமான அறிக்கைகளை அனுப்பவேண்டும். கோரிக்கைகளுக்குரிய காரணங்களை அனுமதிகோரும் பட்டியலின் பின் புறத்திலேயோ, தனிக் கடிதத்திலேயோ எழுதலாம்.

ஒரு தனி நிதி ஒதுக்கு என்று கொள்ளப்படாத விவரணங்களைச் சார்ந்த தொகைகளை மாற்றினால், அது சம்பந்தமான உத்தரவுகளை, தலைமைக் கணக்கு அதிகாரிக்கோ, அரசாங்கத் தலைமை அலுவலகத் திற்கோ, அல்லது நிதித் துறைக்கோ அனுப்பவேண்டியதில்லை. இம் மாதிரியான கணக்கு மாற்றங்களை ஒவ்வொரு துறைத் தலைமை அதிகாரியும் அனுமதிக்கலாம்; ஆனால், தகுதியுள்ள அதிகாரி, அது சம்பந்தமான அதிகச் செலவை முன்பே அனுமதித்து இருக்க வேண்டும்.

## துணை மானியங்கள்

சட்டசபையால் அனுமதிக்கப்பட்டுள்ள மொத்த மானியத் தொகையை அதிகப்படுத்தவேண்டியிருந்தால், 6ஆம் அத்தியாயத்தில் விளக்கப்பட்ட முறையைப் பின்பற்றவேண்டும். எந்தெந்த சமயத் தில், துணை மானிய அறிக்கைகளைச் சமர்ப்பிக்கவேண்டும் என்பதும் முன்னரே கூறப்பட்டது. சில சமயங்களில் நடைமுறை ஆண்டில் ஆகக்கூடிய செலவு, மிகவும் கொஞ்சமாக இருந்தாலும், அல்லது செலவு இல்லாமலே போயினும், வரும் ஆண்டுகளில் அதிகமான செலவு ஏற்கப்படவேண்டிய பெரிய திட்டங்களுக்கு, சட்டசபையின் பொது அனுமதியை முன்னரே பெறுவதற்காக, ஒரு சிறு தொகையைக் கோரி துணைமானியம் சமர்ப்பிப்பதுண்டு. துணைமானியங்கள் சம்பந்தமாக, முழுப் பொறுப்பும் தலைமைக் கண்காணிப்பு அதிகாரியைச் சாரும் என்று ஏற்கெனவே குறிக்கப்பட்டுள்ளது. ஒரு துணைமானியத்தைக்

கோரும்போது, எதற்காக அது தேவைப்படுகிறது என்று விளக்கினுல் மட்டும் போதாது; முதன்முதலில் பட்ஜெட்டுக்கான மதிப்பீடுகளை அனுப்பியபோது, இந்தத் தேவையை எதிர்பார்த்து இருக்க முடியாது என்பதையும் விளக்கவேண்டும். ஒரு துணைமானியத்தை அனுமதிக்காது போனுல், நிர்வாகத்தில் பெரும் அசௌகரியங்கள் ஏற்படும் என்று நிச்சயமானுலன்றி, அரசாங்கம் துணைமானியங்களைச் சட்டசபையில் சமர்ப்பிக்காது. ஆகவே, தன் யோசனை நிராகரிக்கப்பட்டால் என்ன அசௌகரியங்கள் நேரும் என்பதையும் தலைமைக் கண்காணிப்பு அதிகாரி விளக்க வேண்டும். துணைமானியம் பெறுவதற்கு, விரிவான முறைகளைப் பின்பற்ற வேண்டியிருப்பதாலும், அதிக காலம் வேண்டியிருப்பதாலும், அனுவசியமாக ஒரு துணைமானியம் வேண்டப்பட்டிருந்தால், அது ஒரு பெரிய தவருகக் கொள்ளப்படும். தலைமைக் கணக்கு அதிகாரி, தன்னுடைய ஆண்டுத் தணிக்கை அறிக்கையில் இம்மாதிரியான தவறுகளையெல்லாம் தனியாக எடுத்துக் காட்டி, சட்டசபையின் கவனத்திற்கு வரும்படிச் செய்வார். அவைகளைப் பரிசீலனை செய்யுமாறு பொதுக் கணக்குக் கமிட்டியையும் தூண்டுவார்.

நிதி ஒதுக்கத்தை அதிகப்படுத்த வேண்டும் என்று எதிர்பார்த்தவுடன், அதனை, உரிய அரசாங்கத் தலைமை அலுவலகத் துறைக்கு அறிவிக்கவேண்டும்; அதாவது காலதாமதம் செய்துவிட்டு, பல யோசனைகளை ஒன்று சேர்த்து அனுப்பக்கூடாது. இங்கிலாந்தில் ஏற்கப்படும் செலவு விஷயமாக, தேவைப்படும் அதிக மானியங்களுக்கு, இந்திய ஹை–கமிஷனர் அல்லது அங்கிருக்கும் தலைமைக் கணக்கு அதிகாரி, யோசனைகளை மாநில நிதித் துறைக்கு நேரே அனுப்புவார். மற்றச் செலவுகள் விஷயமாக, தங்களுக்கு அறிவிக்கப்பட்ட அதிக மானிய யோசனைகளை, ஒவ்வோர் அரசாங்கத் துறையும், பரிசீலனை செய்து, தன் சிபாரிசுகளுடன் அவைகளை நிதித் துறைக்கு அனுப்ப வேண்டும். ஏதாவது ஒரு யோசனை நிதித் துறைக்கு நேரில் அனுப்பப்பட்டால், நிதித் துறை அதனை, சம்பந்தப்பட்ட நிர்வாகத் துறையின் சிபாரிசுக்காக அனுப்பும்; முன்னரே தலைமைக் கண்காணிப்பு அதிகாரியினுடைய அபிப்பிராயம் கோரப்பட்டிராவிட்டால், வந்துள்ள யோசனையை அனுமதிக்கலாமா என்பதைப்பற்றி அவருடைய அபிப்பிராயத்தையும் கேட்கலாம். ஓர் அதிக மானியம் கோரப்படும்போது, அது முதலிலே குறைவாக நிதி ஒதுக்கப்பட்டதன் காரணமாகவே தேவைப்படுகிறது என்று தெளிவாகலாம்; அப்போது, சம்பந்தப்பட்ட மானியத்தின்கீழ் ஏற்கெனவே சில சேமிப்புகளை நிதித்துறை தன் பொறுப்பில் வைத்திருந்தால், உண்மையாகவே தேவைப்படும் அதிக மானியங்களை, நிதி ஒதுக்கு மாற்ற முறையில் நிதித் துறை அனுமதிக்கும்; இம்மாதிரி நிதித் துறையிடம் தனிச் சேமிப்பு இல்லாது போனுல், சட்டசபையில் துணைமானியங்களைச் சமர்ப்பிக்கும் முறை பின்பற்றப்

படும். நிதித் துறை, தான் அளிக்கும் எல்லா அனுமதிகளுக்கும், சட்டசபையில் அனுமதிக்கப்படும் நிதிச் சட்டங்களுக்கும், பிரதிகளைத் தயாரித்து, அவைகளைத் தலைமைக் கணக்கு அதிகாரிக்கும், அரசாங்கத் தலைமை அலுவலகத் துறைக்கும், தலைமைச் செலவுக் கண்காணிப்பு அதிகாரிக்கும் அனுப்பும். இங்கிலாந்தில் ஏற்கப்படும் செலவு சம்பந்தமான அனுமதிகள், இந்திய ஹை-கமிஷனருக்கும், அங்குள்ள தலைமைக் கணக்கு அதிகாரிக்கும், கணக்குகளைத் தணிக்கை செய்யும் அதிகாரிக்கும் அனுப்பப்படும். சேமிப்பாக எடுத்துக்கொள்ளக்கூடிய நிதித் தொகைகள், நிதி ஒதுக்கு மாற்றங்கள், துணைமானியங்கள்—இவைகளைச் சார்ந்த உத்தரவுகளை நிதி ஆண்டின் கடைசி நாள்வரை பிறப்பிக்கலாம்; நிதி ஆண்டு முடிந்த பிறகு, எக்காரணம் பற்றியும், அத்தகைய உத்தரவுகளைப் பிறப்பிக்கக்கூடாது. இதைக் கருதி, அரசாங்கத்தினுடைய அனுமதி தேவைப்படும் யோசனைகளுக்கு, சில காலவரையறைகள் விதிக்கப்பட்டிருக்கும். உதாரணமாக:—

(1) இங்கிலாந்திலுள்ள இந்திய ஹை-கமிஷனர், அங்குள்ள தலைமைக் கணக்கு அதிகாரி—இவர்களால் அனுப்பப்படும் யோசனைகள், அரசாங்க நிதித் துறைக்கு, ஜனவரி 25ஆம் தேதிக்குள் வந்து சேர வேண்டும். அதற்குப் பின்னர் தேவைப்படும் மாற்றங்களை, அவசரமாக (தந்தி மூலமாக) பிப்ரவரி 25ஆம் தேதிக்குள் அறிவிக்கவேண்டும்.

(2) மற்றைய கண்காணிப்பு அதிகாரிகளிடமிருந்து வரக்கூடிய யோசனைகள், அரசாங்கத் தலைமை அலுவலகத் துறைக்கு, பிப்ரவரி மாதம் 15ஆம் தேதிக்குள் அனுப்பப்படவேண்டும்; ஸ்தன ஸ்தாபனங்களிலிருந்து வரக்கூடிய இம்மாதிரியான யோசனைகளுக்கும் இவ்வரம்பு பொருந்தும்.

(3) தலைமை அலுவலகத்திலுள்ள நிர்வாகத் துறைகளிலிருந்து அனுப்பப்படும் யோசனைகள், நிதித் துறைக்கு பிப்ரவரி 25ஆம் தேதிக்குள் வந்து சேரவேண்டும்.

(4) சில விசேஷ இனங்கள் விஷயத்தில், நிதி ஒதுக்கில் வரக்கூடிய சேமிப்புகளை முன்கூட்டியே அறிய முடியாமல் இருக்கலாம். (நில ஆர்ஜிதம் சம்பந்தமான செலவுகள், பிறரிடம் இருந்து பெறப்படும் சாமான்களுக்கான செலவுகள், உதவியாகக் கொடுக்கப்படும் மானியச் செலவுகள்–இவை போன்றவை இவ்வினத்தில் சேரும்.) இவை விஷயத்தில், நிதி ஒதுக்கில் நேரும் சேமிப்புகளை, நிதித் துறைக்கு மார்ச்சு மாதம் 20ஆம் தேதிவரை அறிவிக்கலாம்; ஆனால், இப்படி அறிவிக்கப்படும் தொகை அப்பொழுது அமலில் உள்ள மொத்த நிதி ஒதுக்கில் 10 சதவிகிதத்திற்கு அதிகமாகவும், பத்தாயிரம் ரூபாய்க்கு மேற்பட்டும் இருக்கவேண்டும்.

(5) சில அசாதாரண சமயங்களில், ஆண்டின் இறுதி நாளான மார்ச்சு 31ஆம் தேதி வரைகூட, சேமிப்புகளை அறிவிக்கலாம். இப்படிச் செய்வதானல், சம்பந்தப்பட்ட நிதி ஒதுக்குக் கூறு ஒன்றின் தொகை யானது ஓர் இலட்ச ரூபாய்க்கு மேற்பட்டும், இறுதியாக உள்ள நிதி ஒதுக்கத்தின் 10 சதவிகிதத்துக்கு அதிகமாகவும் இருக்கவேண்டும்.

தாமதித்து, மார்ச்சு மாதத்தில் அறிவிக்கப்படும் ஒவ்வொரு சேமிப்பு விஷயமாகவும் ஏன் அதனை முன்னமேயே எதிர்பார்க்க முடியவில்லை என்பதற்கு விளக்கம் தரவேண்டும். சரியான காரணங்களைக் கூறி ஞலும்கூட, மிகவும் கால தாமதமாகி வருகிற யோசனைகளை, சில சம யங்களில் நிதித் துறை அனுமதிக்காமல் விட்டுவிடும்; ஏனெனில், எல்லா உத்தரவுகளையும் ஆண்டின் இறுதி நாளைக்குள் பிறப்பிப்பது, நடைமுறையில் இயலாது போகலாம். ஆகவே, இம்மாதிரியான சேமிப்பு அறிக்கைகளை, அவ்வப்போது அனுப்பிக்கொண்டிருப்பதுதான் நல்ல முறையாகும். கால தாமதம் ஏற்பட்டு, அதனல் உத்தரவுகள் பிறப்பிக்கப்படாமல் போனல், அதற்கான பொறுப்பு அந்த யோசனை களை அனுப்புவோரைத்தான் சாரும். இது தவிர, சாதாரணமாகக் குறிக்கப்பட்ட கால வரம்புக்குப் பிறகு பெறப்படுகிற யோசனைகளையும் நிதித் துறை தள்ளிவிடலாம்.

குறிப்பு :—பாசனத் துறைத் தலைமைப் பொறியாளர், ஒவ்வோர் ஆண்டிலும், பிப்ரவரி மாதம் 25ஆம் தேதிக்குள், அத்துறை சம்பந்த மான மூலதனச் செலவு அந்த ஆண்டில் எவ்வளவு ஆகும் என்பதைப் பற்றி ஒரு தனி அறிக்கை அனுப்ப வேண்டும்.

## ஓர் ஆண்டின் இறுதி நிதி ஒதுக்கைச் சார்ந்த சேமிப்பு அல்லது அதிகச் செலவு

பிப்ரவரி மாதம் 15ஆம் தேதிக்குள், செலவுக் கண்காணிப்பு அதிகாரிகள் நிதி ஒதுக்கில் எதிர்பார்க்கப்படும் சேமிப்புகளையும், தேவைப்படும் நிதி ஒதுக்கு மாற்றங்களையும், துணைமானியங்களையும் அரசாங்கத்துக்கு அறிவிக்கவேண்டும் என்ற விதி உள்ளது. ஒரு துறை, இன்னெரு துறையின் உபயோகத்துக்காக, சில பொருள்களை வழங்கினல், அதற்கான தொகையைப் பெறும் வகையில், கணக்கு களில் பதிவு ஆகும்படிப் பார்த்துக்கொள்வது, வழங்கும் துறையின் பொறுப்பாக இருந்தாலும், தலைமைச் செலவுக் கண்காணிப்பு அதிகாரி யும், அம்மாதிரியான கணக்குப் பதிவுகள் தாமதமின்றி ஏற்படுவதற்கு ஆவன செய்யவேண்டும். உதாரணமாக, இந்த விஷயத்தை அவர் வழங்கு துறைக்கு அவ்வப்போது நினைவுபடுத்தலாம். எக்காரண மாகவோ, தாமதம் ஏற்பட்டால், அந்த ஆண்டிற்கென ஒதுக்கப்

பட்டுள்ள நிதியானது, செலவிடப்படாமல் வீணுகப் போய்விடும். மேலே குறிக்கப்பட்டுள்ள காலவரைக்குள், சம்பந்தப்பட்ட அதிகாரிகள், நிதியாண்டின் முதல் 9, 10 மாதங்களிலான செலவுகளைக் கணித்தும், எஞ்சியுள்ள மாதங்களில் ஆகக்கூடிய செலவுகளை எதிர்பார்த்தும், ஒருவாருக ஆண்டின் இறுதி நிலையை நிர்ணயிக்கலாம். ஓர் ஆண்டு முடியும்போது, சரியாக நிதி மாற்றம் செய்யப்படாமல், சேமிப்போ அல்லது அதிகச் செலவோ ஏற்படுவது மிகமிக அரிதாக இருக்க வேண்டும். எதிர்பார்த்திருக்க முடியாத ஓர் அவசரச் செலவோ அல்லது தள்ளிப் போடமுடியாத செலவோ நேர்ந்தால், அதற்குத் தக்க நிதி மாற்றம் உரிய காலத்திற்குள் செய்ய முடியாமல் போகலாம்; இம்மாதிரி சந்தர்ப்பங்களில் தவிர மற்ற நிலைகளில், செலவுக்குத் தக்க படி இறுதி நிதி ஒதுக்கு இல்லாமற்போனுல், அது ஒழுங்கீனமாகக் கருதப்படும். இவ்விஷயத்தில், ஒன்றை முக்கியமாக மனத்தில் கொள்ளவேண்டும்—சரியான நிதி ஒதுக்கு இல்லை என்ற ஒரே காரணத் திற்காக, அவசியமாய் ஏற்கக்கூடிய செலவை அடுத்த ஆண்டுக்குத் தள்ளிப்போடுவது முறையாகாது.

ஒவ்வொரு தனி மானியத்தைச் சார்ந்த நிதி ஒதுக்குக் கூறுகளின் கீழும், இறுதியாய் ஒதுக்கப்பட்ட தொகையையும் நடைமுறையிலான செலவையும் ஒரு சேரக் காட்டும் விவரமான அறிக்கையை, ஆண்டு தோறும், தலைமைக் கணக்கு அதிகாரி அவ்வாண்டு முடிந்தபின் தயா ரிப்பார் என்று முன்னமேயே குறிக்கப்பட்டது. இந்த அறிக்கையில், நிதி ஒதுக்குக்கும் செலவுக்கும் உள்ள வித்தியாசங்களுக்கு, கண் காணிப்பு அதிகாரியால் கொடுக்கப்பட்ட விளக்கம் சேர்க்கப் பட்டிருக்கும். தலைமைக் கணக்கு அதிகாரி எல்லா விவரங்களையும் விமர்சித்தபின் பொதுவாயும் முக்கியமாயும் உள்ள சில நிலைகளை, தன்னுடைய பொது அறிக்கையில் தனியே குறிப்பிடுவார். ஒவ்வொரு மானிய விவாதத்தின் இறுதியில் சாட்டிய இனத்திலும் மற்றையச் செல விலும் நேர்ந்துள்ள மொத்தச் சேமிப்பு அல்லது அதிகச் செலவு எவ்வளவு என்றும் காட்டுவார்.

தலைமைக் கண்காணிப்பு அதிகாரிகள் எல்லோரும், முதலில் பட்ஜெட்டில் இருந்த நிதி ஒதுக்கிற்கும் இறுதியாக மாற்றப்பட்டுள்ள ஒதுக்கிற்கும் உள்ள வேறுபாடுகளுக்கு விளக்கத்தையும், அதே மாதிரி இறுதி ஒதுக்கத்திற்கும் செலவுக்கும் உள்ள வேறுபாட்டுக்கான விளக் கத்தையும், முன்னரே தயாரித்து வைத்திருக்கவேண்டும். இப்படிச் செய்திருந்தால், தலைமைக் கணக்கு அதிகாரி விவரமான கணக்குகளை அவர்களுக்கு அனுப்பி விளக்கம் வேண்டும்போது, தாமதமின்றிப் பரிசீலனை செய்து திருப்பி அனுப்புவதற்கு வசதியாக இருக்கும். தலைமைக் கணக்கு அதிகாரிக்கு எல்லாவிதமான வேறுபாடுகளுக்கும்—அவைகளின் தொகை எவ்வளவு சிறிதாயிருந்தாலும்—விளக்கம் தர

வேண்டியது அவசியம்; ஆனல், இம்மாதிரியான விளக்கங்களை யெல்லாம், தலைமைக் கணக்கு அதிகாரி தன்னுடைய இறுதி அறிக்கை யில் சேர்க்கவேண்டுமென்பதில்லை. நிதி ஒதுக்கத்திற்கும் செலவுக்கும் உள்ள வேறுபாடுகளைப் பற்றி விளக்கங்கள் தயாரித்து, தலைமைக் கணக்கு அதிகாரிக்கு அனுப்பும்போது, பின்வரும் விதிகளை நன்கு கவனிக்கவேண்டும் :—

(i) விளக்கங்கள், சுருக்கமாகவும், தெளிவாகவும், சரியாகவும் இருக்கவேண்டும். குறிப்பிட்ட வேறுபாடு தவிர்க்க முடியாததாக இருந்தது—அதை எதிர்பார்த்திருக்க முடியாது—என்பதற்குப் போதிய விவரமும் இருக்கவேண்டும்.

(ii) முதலில் ஒதுக்கப்பட்ட தொகை தேவைக்குக் குறைவாக இருந்தது, அல்லது அதிகமாக இருந்தது, வேறுபாடு செலவின் போக்கைக் கருதிச் செய்யப்பட்டது என்று பொது விளக்கங்கள் தருவ தால், ஒருவிதப் பயனும் இல்லை; ஆகவே, அவை தவிர்க்கப்பட வேண்டும்.

(iii) எந்தக் காரணத்தால், முதலில் ஒதுக்கப்பட்ட தொகை, தேவைக்குக் குறைவாகவோ அல்லது அதிகமாகவோ ஆயிற்று, ஏன் மதிப்பீடுகளுக்கு ஒத்து, செலவு இல்லை என்பவைகளுக்குச் சரியான விளக்கம் கூறப்படவேண்டும்.

(iv) ஒரு வேறுபாட்டுக்குப் பல காரணங்கள் இருந்தால், ஒவ்வொரு காரணத்தாலும் எந்த அளவுக்கு அந்த வேறுபாடு நேர்ந்தது என்பதையும் குறிப்பிடவேண்டும்.

முன்னர் கூறியபடி, தலைமைக் கணக்கு அதிகாரியின் தணிக்கை அறிக்கையில் குறிக்கப்பட்டுள்ள வேறுபாடுகளைப் பொதுக் கணக்குக் கமிட்டி பரிசீலனை செய்யும். இதற்கு உதவும்படி, சம்பந்தப்பட்ட நிர்வாகத்துறை அதிகாரிகளிடமிருந்து, முழு விளக்கங்கள் பெறப்படும். இவ்விளக்கங்கள் சரியாகவும், தெளிவாகவும், முழுமையாகவும் இருக்கும் படித் தயாரிக்க, நிதித் துறை உதவும். அச்சமயத்தில் புலனாகும் மதிப் பீட்டுக் குறைகளையும் கண்காணிப்புத் தவறுகளையும், சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு உடனே எடுத்துக் காட்டி, அம்மாதிரியான குறைகளும் தவறுகளும் மீண்டும் நேராதவாறு பார்த்துக்கொள்ளும்படி நிதித்துறை எச்சரிக்கலாம். பொதுக் கணக்குக் கமிட்டி விளக்க அறிக்கைகளைப் பரிசீலனை செய்து, தன் சிபாரிசுகளை வழங்கும்.

ஒரு நிதி ஆண்டில் இறுதியான நிதி ஒதுக்குக்கு அதிகமாகச் செய்யப்பட்ட செலவுகளுக்கெல்லாம் பொதுக் கணக்குக் கமிட்டியின் சிபாரிசுக்கிணங்க, சட்டசபையில் ஓர் அதிகமானிய அறிக்கையைச் சமர்ப்பித்து அனுமதி பெறவேண்டும் என்று முன்னமே விளக்கப் பட்டுள்ளது.

## 11. மத்திய அரசாங்கத்தின் சார்பாக மாநில அரசாங்கம் ஏற்கும் பொறுப்பு

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு
எய்த உணர்ந்த செயல். —(குறள்)

ஒவ்வொரு மாநில அரசாங்கமும், மத்திய அரசாங்கத்தின் சார்பாக சில மதிப்பீடுகளைத் தயாரிக்கும் பொறுப்பை ஏற்கின்றது. எந்தெந்த விஷயங்களுக்கு, பொறுப்பு ஏற்கவேண்டும் என்பதை மத்திய அரசாங்கம் அவ்வப்போது நிர்ணயிக்கும். இது சம்பந்தமாக, சில பொது நியதிகளையும், முறைகளையும் மத்திய அரசாங்கம் ஏற்படுத்தியுள்ளது. அவைகளின் சாரம் பின்வருமாறு உள்ளது :—

(1) மாநில அரசாங்க பட்ஜெட்டைப் போல், மத்திய அரசாங்கத்திற்குரிய மதிப்பீடுகளையும், இரு பகுதிகளாகத் தயாரிக்கவேண்டும் ; புதுச் செலவுகள் எல்லாம் இரண்டாவது பகுதியிலும், மற்றைச் செலவுகள் முதல் பகுதியிலும் சேரும். 8ஆம் அத்தியாயத்தில் மாநில அரசாங்க மதிப்பீடுகளுக்காக விவரிக்கப்பட்ட முறை, மத்திய அரசாங்க மதிப்பீடுகளுக்கும் பொதுவாகப் பொருந்தும்.

(2) முதற்பகுதி :—'பொதுப் பணி' சம்பந்தமான மதிப்பீடுகளைத் தவிர மற்றைய மதிப்பீடுகளை எல்லாம், பொறுப்புள்ள அதிகாரி, மாநிலத் தலைமைக் கணக்கு அதிகாரிக்கு அனுப்பவேண்டும். தலைமைக் கணக்கு அதிகாரி, இந்த மதிப்பீடுகளைப் பரிசீலனை செய்து, தன்னுடைய அபிப்பிராயத்தோடு, அந்த மதிப்பீடுகளை, சம்பந்தப்பட்ட நிர்வாகத் தலைமை அலுவலகத் துறைக்கும், நிதித் துறைக்கும் அனுப்புவார். நிர்வாகத் துறையினர், தாம் பெற்ற மதிப்பீடுகளைத் தம்முடைய அபிப்பிராயத்தோடு, நிதித் துறைக்கு அனுப்பவேண்டும். 'பொதுப் பணித் துறை' சம்பந்தமான மதிப்பீடுகளைத் தலைமைப் பொறியர் தயாரித்து நேராக, அரசாங்கத் தலைமை அலுவலகத்திற்கு அனுப்பி விடுவார். அதனைப் பெறும் அரசாங்கத்துறை, அதனைப் பரிசீலனை செய்து, தலைமைக் கணக்கு அதிகாரியின் அபிப்பிராயத்தையும் பெற்று,

எல்லாவற்றையும் நிதித் துறைக்கு அனுப்பும். ஒவ்வொரு மதிப்பீடும், ஒரு காலவரைக்குள், குறிப்பிட்ட அதிகாரிக்குப் போய்ச் சேரவேண்டு மென்று நிர்ணயம் உண்டு. நிதித் துறை தனக்கு வரும் மதிப்பீடு களைப் பரிசீலனை செய்து, தன்னுடைய அபிப்பிராயத்தோடு, மதிப்பீடு களை நிர்வாகத் துறைக்குத் திருப்பி அனுப்பிவிடும். சில சந்தர்ப்பங் களில், நிதித் துறையே நிர்வாகத் துறையாகவும் பணியாற்றும். ஒவ்வொரு நிர்வாகத் துறையும், மதிப்பீடுகள் சம்பந்தமான தங்களு டைய இறுதி உத்தரவுகளைத் தலைமைக் கணக்கு அதிகாரிக்குத் தெரி விக்கும். தலைமைக் கணக்கு அதிகாரி வருவாய் சம்பந்தமான மதிப் பீடுகளைத் தொகுத்து, மத்திய அரசாங்கத்தின் நிதித் துறைக்கு, குறிப் பிட்ட காலவரைக்குள் அனுப்புவார். செலவு சம்பந்தமான மதிப்பீடுகள், மத்திய அரசாங்கத்தின் நிர்வாகத் துறைக்கு அனுப்பப்படும். பணி யாளர்களின் ஒய்வு உபகார நிதி சம்பந்தமான மதிப்பீடுகள், மத்திய அரசாங்கத்தின் நிதித் துறைக்கே அனுப்பப்படும்.

(3) **இரண்டாம் பகுதி** :—புதுச் செலவுக்கான யோசனைகளை, ஒவ் வொரு மதிப்பீட்டு அதிகாரியும், நேராக அரசாங்கத் தலைமை அலுவலக நிர்வாகத் துறைக்கு, அவ்வப்போதே அனுப்பவேண்டும்; அதாவது எல்லாவற்றையும் சேர்த்து, இறுதியில் ஒரு மொத்த அறிக்கையாக அனுப்பி வைக்கலாம் என்று இருக்கக்கூடாது. இவைகளைக்கூடப் பொதுவாக, முதல் பகுதி மதிப்பீடுகளுக்காகக் குறிக்கப்பட்ட கால வரைக்குள்ளேயே கணக்கு அதிகாரிக்கு அனுப்பவேண்டும்; இதற்கு விதிவிலக்கும் உண்டு. பட்ஜெட்டின் இரண்டாவது பகுதியில் சேரக் கூடிய மதிப்பீடுகளையெல்லாம், நிர்வாகத் துறை, நிதித் துறையோடு கலந்து பரிசீலனை செய்து, உசிதமான மாற்றங்களுடன், மத்திய அரசாங்கத்தின் நிர்வாக அமைச்சுத் துறைக்கு அனுப்பவேண்டும்.

(4) ஒவ்வோர் ஆண்டும் பட்ஜெட்டை, பார்லிமென்ட் அங்கீகரித்த வுடன், செலவு இனங்களுக்கான மதிப்பீட்டு உதிரித் தாள்களை மத்திய அரசாங்க நிதித் துறையானது மாநில அரசாங்கத்தின் நிதித் துறைக்கு அனுப்பும். இவைகளில், புது இனச் செலவுகளுக்குரிய தொகையும் சேர்ந்திருக்கும். மாநில நிதித் துறை தனக்கு வரும் தாள்களை மற்றத் துறைகளுக்கு அனுப்பி, அவைகளுக்குப் பொறுப்பேற்கும் மற்றைய அதிகாரிகளுக்கும் தெரிவிக்குமாறு செய்யும். வருவாய் சம்பந்தமான பட்ஜெட் தாள்கள் மத்திய அரசாங்கத்தால் நேராக, மாநிலக் கணக்கு அதிகாரிக்கு அனுப்பப்படும்; அவைகளை அவர் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு அனுப்புவார்.

## செலவுக் கண்காணிப்பு

'அதிகாரிகளின் ஊதியம்', 'பணியாளர்களின் ஊதியம்'—இவை போன்ற நிதி ஒதுக்குக் கூறுகளுக்கு உள்ள தொகையை, செலவுக் கண்

காணிப்புக்கு ஆதாரமாகக் கொள்ளவேண்டுமென்று மத்திய அரசாங்கம் பொதுவாக நிர்ணயம் செய்துள்ளது. ஆனால், சில சமயங்களில் இந்த ஆதாரக் கூறுகளை மேலும் பகுத்து, அப்பகுதிகளைத் தனித்தனியே ஆதாரமாகக் கொள்ளவேண்டுமென்று சொல்லுவதும் உண்டு. உதாரணமாக, 'பொதுப் பணிகள்' என்ற தலைப்பைச் சார்ந்த 'மூல வேலைகள்' என்னும் ஆதாரக் கூறு, 'பெரிய வேலைகள்', 'சிறு வேலைகள்' என்று, இரண்டு சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பெரிய வேலை ஒவ்வொன்றுக்கும் ஒதுக்கப்பட்டுள்ள தொகை தனி ஆதாரமாகக் கொள்ளப்படும்; சிறிய வேலைகளைச் சேர்ந்த தொகை மொத்தமாக ஓர் ஆதாரமாக இருக்கும். சாதாரணமாக, பகுக்கப்பட்ட ஆதாரத் தலைப்பைச் சேர்ந்த நிதித் தொகையைவிட, செலவு அதிக மாகக்கூடாது. 'பொது நிர்வாகம்', 'ஓய்வு உபகாரச் சம்பளங்கள்', 'பலவகைகள்', 'மத்திய மாநில அரசாங்கங்களிடையே உள்ள பல ஏற்பாடுகள்'—இம்மாதிரியான சில குறிப்பிட்ட இனங்களுக்கு, தலைமைக் கணக்கு அதிகாரியே செலவுக் கண்காணிப்புப் பொறுப்பை வகிப்பார். மற்றைய தலைப்புகள் விஷயமான பொறுப்பு, மாநில அரசாங்கத்தைச் சேரும். சில மதிப்பீட்டு அதிகாரிகள் அல்லது வேறு அதிகாரிகள், இவ்விஷயத்தில் பொறுப்பு உள்ளவர்கள் என்று மத்திய அரசாங்கத்தினல் குறிப்பிடப்படலாம்; அவர்கள் செலவின் போக்கை யும், ஏற்கவேண்டிய பொறுப்புகளையும் இடையருது கவனித்து, செலவு அதிகமாகிவிடாதபடிப் பார்த்துக்கொள்ளவேண்டும். அவர்கள் தங்க ளிடம் வைக்கப்பட்டுள்ள தொகையை, தங்களுடைய கீழ் அதிகாரி களோடு பகிர்ந்துகொண்டால், அவ்வதிகாரிகளையும் செலவின் போக்கை நன்கு கவனிக்குமாறு செய்யவேண்டும்.

செலவின் கண்காணிப்பு விஷயமாக, ஒவ்வோர் அதிகாரியும் எந்த முறை பயன் உடையதாக இருக்குமோ, அம்முறையைப் பின்பற்ற லாம். சில குறிப்பிட்ட தலைப்புகளுக்கு, தலைமைக் கணக்கு அதிகாரி யிடமிருந்துவரும் கணக்குகளைத் துணைகொண்டு, ஓர் அரசாங்கத் துறை அல்லது அதிகாரி பொறுப்பு ஏற்க வேண்டுமென்ற விதிகளும் உண்டு. 'பொதுப் பணிகளை'ச் சார்ந்த 'மூல வேலைகள்—பெரிய வேலைகள்' என்ற ஆதாரப் பகுதியின் விஷயமாக, வட்ட அதிகாரி களுக்குக் கீழ்க்கண்டபடி பொறுப்பு இருக்கும் :—

(i) முந்திய ஆண்டில் தொடங்கப்பட்டு முடிவுருத ஒரு வேலைக்கு, 500/—ரூபாய்க்கு மேற்படாமல் செலவு செய்து நடைமுறை ஆண்டில் முடிப்பதாய் இருந்தால், அதற்குத் தனி நிதி ஒதுக்கு இல்லாமற் போனலும், செலவு செய்யலாம். மற்றைய வேலைகள் சம்பந்தமாக, இம்மாதிரி, தனி நிதி ஒதுக்கு இல்லாமல் ஒரு செலவை யும் ஏற்கக்கூடாது.

(ii) இதுபோல, ஒவ்வொரு மூலப் பெரிய வேலைக்கும் செய்யும் செலவு, அதற்கு என்று ஒதுக்கப்பட்ட நிதித் தொகையைவிட அதிகமாகக் கூடாது; ஆயினும், தவிர்க்க முடியாத காரணம் இருந்தால், 500 ரூபாய் வரையில் அதிகச் செலவு ஆகலாம்; அதற்கு மேல் ஆகுமானால், அவ்விஷயத்தில், உடனடியாக அதிக நிதி ஒதுக்கைக் கேட்டுப் பெறவேண்டும்.

(iii) ஒரு வட்டத்தைச் சார்ந்த எல்லா மூலப் பெரிய வேலைகளுக்குமான மொத்தச் செலவு, ஒவ்வோர் ஆதாரப் பகுதியின் கீழும் அதற்கென ஒதுக்கப்பட்ட மொத்தத் தொகையை விட அதிகமாகக் கூடாது.

'சிறு வேலைகள்' என்ற பகுதியைச் சார்ந்த விஷயமாகவும், மற்றப் பகுதிகள் விஷயமாகவும்,.பொதுவாகத் தம்மிடம் ஒப்படைக்கப் பட்ட தொகைக்குள் செலவு அடங்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டியதும் வட்ட அதிகாரியின் பொறுப்பாகும்.

ஒரு மாதத்தின் கணக்கு இறுதியாக்கப்பட்டவுடன், தலைமைக் கணக்கு அதிகாரி ஒவ்வொரு செலவுக் கண்காணிப்பு அதிகாரிக்கும், அவருக்குச் சம்பந்தப்பட்ட செலவுகளுக்கு, ஒரு முழு அறிக்கையை அனுப்புவார். நிர்வாகத் துறையிலும் தனிக்கணக்கு வைக்கப் பட்டிருந்தால், செலவுக் கண்காணிப்பு அதிகாரி, அந்தக் கணக்கை, தலைமைக் கணக்கு அதிகாரியிடமிருந்து வந்த அறிக்கையோடு ஒத்துப் பார்த்து, புலன் ஆகும் வேறுபாடுகளைத் தலைமைக் கணக்கு அதிகாரிக்குத் தெரியப்படுத்தி, ஒவ்வொரு மாத முடிவிலும் சரிசெய்து கொள்ளவேண்டும். இம்மாதிரி, ஒரு வேறுபாட்டையும், கண்காணிப்பு அதிகாரி தலைமைக் கணக்கு அதிகாரிக்குத் தெரியப்படுத்தாது போனால், கணக்கு அதிகாரியின் புள்ளிகள் சரியென்று கருதப்படும்.

## சேமிப்புகள்

ஓர் ஆதாரப் பகுதிக்கு ஒதுக்கப்பட்ட தொகை, முழுவதும் செலவாகாது 'என்று எதிர்பார்க்கப்பட்டவுடன், அவ்விஷயத்தை, சம்பந்தப்பட்ட அரசாங்க நிர்வாகத் துறைக்கு, தலைமைக் கணக்கு அதிகாரி மூலமாகத் தெரிவிக்கவேண்டும். ஆனால், அதேசமயத்தில் வேறு பகுதிகளுக்கு, செலவு அதிகமாகும், அதற்கு அதிக நிதி ஒதுக்குத் தேவைப்படும் என்று நிச்சயமாகத் தெரிந்தால், சேமிப்பை அதற்குப் பயன்படுத்த வைத்துக்கொள்ளலாம். மாநில அரசாங்கத்தைச் சேர்ந்த ஒவ்வொரு நிர்வாகத் துறையும், மத்திய அரசாங்கத்தைச் சேர்ந்த அமைச்சுத் துறைக்கு, இதற்காகக் குறிப்பிட்ட காலத்திற்குள் ஏற்றுக்கொள்ளப்படும் சேமிப்புகளை எல்லாம் தெரிவித்துவிடவேண்டும்.

## துணை மானியங்கள்

ஒரு துணை மானியம் வேண்டுமெனக் கோருவதற்குமுன் எதிர்பார்க்கப்படும் அதிகச் செலவை, வேறு சேமிப்புகளிலிருந்தோ, அல்லது செலவை ஒரு குறிப்பிட்ட அளவுக்குக் குறைத்துக்கொண்டோ, ஏற்க முடியாதா என்பதை நன்கு ஆராயவேண்டும். எதிர்பார்க்கப்படும் அதிகச் செலவை, முன்னமேயே திட்டமிட்டிருக்க முடியாது, அல்லது நிதி ஒதுக்கில் தனியே உள்ள வேறொரு செலவை அதற்காகத் தள்ளி வைக்கவும் முடியாது என்ற உறுதி ஏற்பட்டால் ஒழிய, மத்திய அரசாங்கம் துணை மானியக் கோரிக்கைகளைச் சாதாரணமாக அனுமதிக்காது. இம்மாதிரி செய்யப்படும் கோரிக்கைகளை, அவ்வப்போது தேவைப்பட்டவுடன், முழு விளக்கத்தோடு அனுப்பவேண்டும். துணை மானியக் கோரிக்கை, சாதாரணமாக ஒவ்வொரு துறையின் நடைமுறைச் செலவுக்கு வேண்டியுள்ள அதிகச் செலவைப் பற்றித்தான் இருக்கும். 'புதுப் பணிகள்' என்ற வகையைச் சேரும் செலவையும், தனியே நிதி ஒதுக்கப்பட்டிராத கட்டடங்கள், பொதுப் பணிகள் போன்றவைகளுக்கான செலவையும், ஓர் ஆண்டின் நடுவில் ஏற்கக் கூடாது என்பது பொதுவிதி. அம்மாதிரியான ஒரு செலவை அவசியம் ஏற்கவேண்டுமானல், அதை ஏன் முன்னமேயே எதிர்பார்த்து இருக்க முடியாது என்பதையும், தள்ளி வைக்க முடியாது என்பதையும் விளக்கி, மத்திய அரசாங்கத்திற்குக் கோரிக்கை அனுப்பவேண்டும். மிகவும் அவசியம் என்று உறுதியானலன்றி ஒரு மானியத்தில் உள்ள சேமிப்புகளிலிருந்து ஏற்க முடியாத செலவை, மத்திய அரசாங்கம் அனுமதிப்பதில்லை. ஆயினும், ஒரு புதுச் செலவின் விளைவாக, அரசாங்கத்தின் வருவாய் அதிகமாகும், அல்லது, ஏற்கெனவேயுள்ள வருவாய்களின் நஷ்டம் தவிர்க்கப்படும் என்று தோன்றினல், அச்செலவை மத்திய அரசாங்கம் அனுமதிக்கும்.

## நிதி ஒதுக்கு மாற்றம்

ஒரு மாநில அரசாங்கத்தின் கீழ் உள்ள அதிகாரி எவருக்கும் மத்திய அரசாங்கம் சம்பந்தமான நிதி ஒதுக்கு மாற்றம் செய்யத் தகுதியில்லை. மாநில அரசாங்கத்தின் தலைமை அலுவலகத்தைச் சார்ந்த ஒவ்வொரு நிர்வாகத் துறையும், தனக்குச் சம்பந்தமான வரையில் ஓர் ஆதாரப் பகுதியிலிருந்து (Primary Unit) இன்னொரு ஆதாரப் பகுதிக்கு நிதி ஒதுக்கு மாற்றம் செய்யலாம். அப்படிச் செய்யும்போது, கீழ்க்கண்ட விதிகள் பின்பற்றப்பட வேண்டும் :—

(a) ஒரு மானியத்திலிருந்து இன்னொரு மானியத்திற்கு மாற்றம் செய்யக் கூடாது ;

(b) சாட்டப்பட்ட செலவிற்கு ஒதுக்கிய தொகையை, மற்றைய இனச் செலவுக்காக மாற்றக்கூடாது; இதுபோல, சாட்டப்பட்ட

செலவுக்காக, மற்ற இனங்களின் ஒதுக்குத் தொகையை மாற்றக் கூடாது;

(c) வரும் ஆண்டுகளிலும், செலவு ஏற்கப்படும்படி இருந்தால், அது சம்பத்தமாக, நிதி ஒதுக்கு மாற்றம் செய்யக்கூடாது ;

(d) 'அதிகாரிகளின் ஊதியம்' என்ற தலைப்பைச் சார்ந்த ஆதாரப் பகுதிகளிலிருந்து, இன்னொரு தலைப்பைச் சார்ந்த ஆதாரப் பகுதிக்கு, மாற்றம் செய்யக்கூடாது.

'பொதுப் பணிகள்' என்ற தலைப்பைச் சாரும் விஷயத்தில், கீழ்க் கண்ட வேறு நியதிகளும் உண்டு :—

(1) 'பெரிய வேலைகள்', 'சிறு வேலைகள்', 'பழுது பார்த்தல்'— இந்த ஆதாரப் பகுதிகளிலிருந்தோ, அல்லது இந்த ஆதாரப் பகுதி களுக்கோ, ஒருவிதமான நிதி மாற்றமும் செய்யக்கூடாது.

(2) ஒரு புது மூல வேலைக்காக ஒதுக்கப்பட்ட தொகையை, வேறு வேலைக்காகவோ அல்லது வேறு செலவுக்காகவோ பயன்படுத்தக் கூடாது.

(3) நடந்துவரும் ஒரு மூலப் பெரிய வேலைக்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகையை அதே இனத்தைச் சார்ந்த ஒரு வேலை அல்லது வேலைகளுக் காகவே மாற்றலாம்.

பொதுவாக, சிக்கனம் காரணமாகவும், அல்லது ஒரு செலவை வேண்டு மென்றே தள்ளிப் போட்டதன் காரணமாகவும், விளைந்த சேமிப்புகளை, மாநில அரசாங்கம் நிதி ஒதுக்கு மாற்றத்திற்குப் பயன் படுத்தக்கூடாது. ஆனால், ஓர் எதிர்பாராத நிர்ப்பந்தச் செலவை ஏற்ப தற்காக, குறிப்பிட்ட ஒரு சிக்கனம் வேண்டுமென்றே மேற்கொள்ளப் பட்டிருந்தால், அதனால் விளையும் சேமிப்பை, அச்செலவுக்குப் பயன் படுத்தலாம். ஓர் ஆதாரப் பகுதியிலிருந்து இன்னொரு பகுதிக்கு மாற்றப்படும் தொகையும், அல்லது தேவையில்லை என்று மத்திய அரசாங்கத்திற்குத் திருப்பிக் கொடுக்கப்படும் தொகையும், அது இந்நாட்டிலுள்ள செலவைப் பற்றியதாக இருந்தால், 100 ரூபாய்க் கணக்கில் இருக்கவேண்டும் ; இங்கிலாந்தைப் பற்றிய செலவாக இந்தால், 200 ரூபாய்க் கணக்கில் (15 பவுன் ஸ்டெர்லிங்) இருக்க வேண்டும்.

## பகுதி 3

# சிறப்பியல்

## 12. அரசாங்க வரவு-செலவுப் பெருக்கம்—ஒரு பொது நோக்கு

1. அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
   தீதின்றி வந்த பொருள்.

2. தொட்டனைத் தூறும் மணற்கேணி......... —(குறள்)

நம் நாடு குடியரசானபின்தான், பல துறைகளிலும் திட்டமிட்டு, பொது நலனைப் பேணும் முறை தொடங்கியது. இதன் விளைவாக, எல்லா அரசாங்கங்களின் வரவும் செலவும் பெருகிக்கொண்டு வருகின்றன. இவைகளின் பொதுப் போக்கைச் சில புள்ளிகளின் துணை கொண்டு ஆராயலாம். மத்திய அரசாங்கத்தின் ஆண்டு வெளியீடான 'நிதி நிலைக் குறிப்பு' (Explanatory Memorandum on the Budget), ரிஸர்வ் பாங்கின் ஆண்டு வெளியீடான 'செலாவணி-நிதி அறிக்கை'' (Report on Currency and Finance) இவைகளை ஆதாரமாகக்கொண்ட புள்ளிகள் இவ்வத்தியாயத்தில் தரப்படுகின்றன.

**மத்திய அரசாங்கம்—ரெவின்யூ கணக்கு-வருவாய்***

| விவரம் | முதல் ஐந்தாண்டுத் திட்டத்துக்கு முந்தியது | முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதி | இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதி | மூன்ரும் ஐந்தாண்டுத் திட்ட காலம் | |
|---|---|---|---|---|---|
| | 1950–51 | 1955–56 | 1960–61 | 1961–62 | 1962–63 |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | | |
| **I.** வருமானத்தின் மீதும் செலவின் மீதும் விதிக்கப்படும் வரிகள் (வருமான வரி, கார்ப்பரேஷன் வரி, செலவு வரி) மொத்த வருவாய் ... | 173 | 168 | 279 | 323 | 407 |
| **கழிக்கவும்** | | | | | |
| வருமான வரியில் மாநில அரசாங்கங்களின் பங்கு ... | –47 | –55 | –87 | –94 | –95 |
| நிகர வருவாய் ... | 126 | 113 | 192 | 229 | 312 |
| **II.** சொத்து மீதும் மூலதன இனங்களின் மீதும் விதிக்கப்படும் வரிகள் (சொத்து வரி, செல்வ வரி, கொடை வரி, முத்திரைத் தாள்கள், பத்திரப் பதிவுக் கட்டணம், நிலவரி) மொத்த வருவாய் ... | 4 | 5 | 16 | 18 | 20 |
| **கழிக்கவும்** | | | | | |
| சொத்து வரியில் மாநில அரசாங்கங்களின் பங்கு ... | ... | –2 | –3 | –4 | –4 |
| நிகர வருவாய் ... | 4 | 3 | 13 | 14 | 16 |
| **III.** பொருள்கள் மீதும் சேவைகள் மீதும் விதிக்கப்படும் வரிகள், தீர்வைகள், (சுங்கம், ஆயத் தீர்வைகள், ரயில்வே பிரயாண வரி, வேறு வரிகள், தீர்வைகள்) மொத்த வருவாய் ... | 227 | 312 | 614 | 713 | 858 |

* இணைப்பு 1ஐயும் காண்க.

| விவரம் | முதல் ஐந்தாண்டுத் திட்டத்துக்கு முந்தியது | முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதி | இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதி | மூன்றும் ஐந்தாண்டுத் திட்ட காலம் | |
|---|---|---|---|---|---|
| | 1950-51 | 1955–56 | 1960–61 | 1961–62 | 1962–63 |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| **கழிக்கவும்** | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | | |
| ஆயத் தீர்வை, பிரயாண வரி (1960–61) இவைகளில் மாநில அரசாங்கங்களின் பங்கு ... | ...... | – 17 | – 89 | – 81 | – 125 |
| நிகர வருவாய் ... | 227 | 295 | 525 | 632 | 733 |
| IV. நிகர வரி வருவாய் (I + II + III) ... | 357 | 411 | 730 | 875 | 1,061 |
| V. அரசாங்கத் தொழில் நிறுவனங்களிலிருந்து நிகர வருவாய் (1) (ரெயில்வே, தபால்தந்தி, செலாவணி, நாணயம் முதலிய துறைகள்) ... | 23 | 29 | 53 | 66 | 56 |
| VI. நிர்வாகத் துறைகளின் வருவாயும் இதர வருவாயும் ... | 26 | 41 | 94 | 96 | 311(2) |
| VII. மொத்த வருவாய் (3) (IV + V + VI) ... | 406 | 481 | 877 | 1,037 | 1,428 |
| (வரி வசூலிக்கும் செலவு) | (10) | (13) | (22) | (21) | (23) |

குறிப்பு :—

(1) தொழில் நிறுவனங்களின் வருவாயிலிருந்து செலவு கழிக்கப்பட்டு நிகர வருவாய் மட்டும் இங்குக் கொடுக்கப்பட்டுள்ளது. பார்லிமெண்டுக்குச் சமர்ப்பிக்கப்படும் பட்ஜெட்டில், செலவு இப்படிக் கழிக்கப்படாது, தனியாக, செலவுக் கணக்கில் காட்டப்பட்டிருக்கும்.

(2) மாநில அரசாங்கங்கள், அரசாங்கத் தொழில் நிறுவனங்கள் இவைகளுக்கு அளித்த கடனுக்கு வட்டியாக மத்திய அரசாங்கம் பெற்ற வருவாயானது, 1961–62 வரை மத்திய அரசாங்கம் பிறருக்குக்

கொடுக்கவேண்டியிருந்த 'வட்டிச் செலவுக்கு, ஒரு பகுதி ஈடாகச் செலவில் கழித்துக் காண்பிக்கப்பட்டது. 1962–63 ஆண்டிலிருந்து இம்முறை மாற்றப்பட்டு, மத்திய அரசாங்கம் பெறும் வட்டித் தொகை வருவாய் இனத்தில் நேராகக் காட்டப்படுகிறது. இதுதான் 1962–63-ல் காட்டப்பட்டுள்ள அதிக வருவாய்க்கு முக்கிய காரணம். மேலும், 1962–63 ஆண்டில் அசாதாரண வருவாய் இனத்தில் பெற்ற தொகை மிகவும் அதிகம். (1960–61 ரூ. 4 கோடி; 1961–62 ரூ. 14 கோடி; 1962–63 ரூ. 74 கோடி) இதில் அமெரிக்க உதவியும், சீன நெருக்கடி சம்பந்தப்பட்ட வேறு வருவாயும் சேர்ந்துள்ளது.

(3) (i) யூனியன் ஆயத் தீர்வைகளில் மாநில அரசாங்கங்களுக்கு அளிக்கப்படும் பங்கு பார்லிமெண்டுக்குச் சமர்ப்பிக்கப்படும் பட்ஜெட்டில் செலவுக் கணக்கில் காண்பிக்கப்படுகிறது. இங்கே, அப்பங்கு வருவாய் இனத்தில் கழித்துக் காட்டப்பட்டிருக்கிறது. புள்ளிகள் விவரம் பின்வருமாறு :—

| | | | | |
|---|---|---|---|---|
| ...... | 17 | 75 | 81 | 125 |

(ii) மேலே குறிப்பிட்ட கணக்கு முறை மாற்றங்கள் தவிர, அவ்வப்போது, வேறு மாற்றங்களும் செய்யப்பட்டுள்ளன. முக்கியமாக, 1961–62 ஆண்டிலிருந்து பெரிய மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆகவே, முந்தைய ஆண்டுகளின் புள்ளிகளோடு ஒத்துப் பார்ப்பதில் சிரமம் உள்ளது.

பார்லிமெண்டுக்குச் சமர்ப்பிக்கப்படும் பட்ஜெட்டில், விவரங்கள் கொடுக்கப்படும் விதத்தைக் காட்ட, 1964–65 ஆண்டின் பட்ஜெட் சுருக்கம் கீழே தரப்படுகிறது.

## மத்திய அரசாங்கம்—வருவாய்

| விவரம் (1) | 1962–63 (கணக்கு) (2) | 1963-64 (திருத்த மதிப்பீடு) (3) | 1964–65 (திட்ட மதிப்பீடு) (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 1. வரிகள், தீர்வைகள், மற்ற வருமானங்கள்—மொத்த வருவாய் ... | 1,285 | 1,570 | 1,663 +40* |
| கழிக்கவும் | | | |
| மாநிலங்களுக்குக் கொடுக்கப்படும் பங்கு (ஆயத் தீர்வைப் பங்கு நீங்கலாக) ... | –99 | –124 | –113 |
| மத்திய அரசாங்கத்தின் நிகர வருவாய் ... | 1,186 | 1,446 | 1,550 +40* |
| 2. வட்டியாகக் கிடைக்கும் தொகை... | 153 | 221 | 252 |
| 3. செலாவணி — நாணயத் துறையிலிருந்து பெறப்படும் மொத்த வருவாய் (செலவு கழிக்காமல்) ... | 54 | 57 | 54 |
| 4. ரெயில், தபால்–தந்தித் துறைகளிலிருந்து பொது நிதிக்குச் சேர்க்கப்படும் நிகரத் தொகை ... | 21 | 25 | 26 |
| 5. அசாதாரண வருமானம் ... | 74 | 95 | 143 |
| 6. இதர வருமானங்கள் ... | 97 | 70 | 70 |
| மொத்த வருவாய் ... | 1,585 | 1,914 | 2,095 +40* |

* புதுவரி யோசனைகளால் கிடைக்கக்கூடிய வருமானத்தில், மாநிலங்களின் பங்கு கழிக்கப்பட்டபின், நிகரமாய் மத்திய அரசாங்கம் பெறக்கூடிய தொகை, தனியே குறிக்கப்பட்டுள்ளது.

ஐந்தாண்டுத் திட்டங்களின் தொடக்கத்திற்கு முன்பு, மத்திய அரசாங்கத்தின் மொத்த வருவாய் (மாநில அரசாங்கங்களுக்குக் கொடுத்த பகுதி உட்பட) சுமார் 453 கோடி ரூபாயாக இருந்தது; இது முதல் திட்டத்தின் இறுதியில், 555 கோடி ரூபாயாக உயர்ந்தது; இரண்டாம் திட்டத்தின் இறுதியில், 1,056 கோடி ரூபாயளவில் நின்றது; மூன்றும் திட்டத்தின் நடுவில், இது 1,650 கோடி ரூபாய் அளவையும் தாண்டிவிட்டது. (முக்கிய கணக்கு முறை மாற்றத்தைத் தவிர்த்துப் பார்த்தால், இது சுமார் 1,500 கோடி அளவாகும்.) இந்த வருவாய்த் தொகையில், வரிகள் மூலமாகப்பெற்ற தொகை, முறையே ரூபாய் 404 கோடி, 485 கோடி, 909 கோடி, 1,285 கோடி ஆகும். அதாவது, ஐந்தாண்டுத் திட்டங்களின் காலமான 12 ஆண்டுகளில், மத்திய அரசாங்கத்தின் மொத்த வருவாயும், வரியின வருவாயும் மூன்று மடங்குக்கும் அதிகமாக உயர்ந்தன. வரிகளை வசூலிக்கும் செலவும் சுமார் 10 கோடி ரூபாயிலிருந்து, 23 கோடி ரூபாயாக உயர்ந்தது. அதாவது, சுமார் இரண்டரை மடங்காக ஆயிற்று. அரசாங்கத் தொழில் துறைகளிலிருந்து பெற்ற நிகர வருவாய், இதே காலத்தில் 23 கோடி ரூபாயிலிருந்து 50 கோடி ரூபாய்க்குமேல் உயர்ந்தது. (இவை முக்கியமாக ரெயில்வே துறையிலிருந்தும், செலாவணி நாணயத் துறையிலிருந்தும் பெறப்பட்டன). மற்றத் துறைகளிலிருந்து பெற்ற வருமானம், (அசாதாரண வருவாய், வட்டி வருமானம் நீங்கலாக) சுமார் 25 கோடி ரூபாயிலிருந்து சுமார் 80 கோடி ரூபாய்க்கு அதிகமாக உயர்ந்தது. அசாதாரண இன வருவாயும் முன்னர் கூறிய விசேஷ காரணங்களால் மூன்றுவது திட்ட காலத்தில் மிகவும் அதிகமாக உயர்ந்து வருகிறது; இந்த வகைச் செலவினமும் பெருகுகிறது. எல்லா முக்கிய வருவாய் இனங்களின் இயல்பையும் வளர்ச்சியையும் பற்றிப் பின்னர் விரிவாக ஆராய்வோம். இப்பொழுது, இதே காலத்தில் ஏற்கப்பட்ட செலவுகளின் போக்கைக் காணலாம்.

## மத்திய அரசாங்கம்–ரெவின்யூ கணக்கு—செலவினங்கள்

| விவரம் (1) | 1950–51 (2) | 1955–56 (3) | 1960–61 (4) | 1961–62 (5) | 1962–63 (6) |
|---|---|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | | |
| I. நாட்டு காப்புத் துறை (நிகரம்) ... | 164 | 172 | 248 | 290 | 425 |
| II. சமூகத் துறை—அபிவிருத்தி சேவைகள்* ... | 40 | 82 | 236 | 176 | 188 |
| III. கடனுக்கான செலவுகள் ... | 37 | 43 | 77 | 83 | 245† |
| IV. மத்திய அரசாங்கத்துக்கும் மாநில அரசாங்கத்துக்கும் உள்ள ஏற்பாடுகள்·(மானியம் முதலியன ; ஆயத் தீர்வையின் பங்கு சேராமல்) ... | 16 | 36 | 49 | 198 | 198 |
| V. நிர்வாகச் செலவு (பென்ஷன் போன்ற செலவுகள் உட்பட) ... | 28 | 43 | 69 | 69 | 86 |
| VI. அசாதாரண செலவுகள் ... | ... | ... | 4 | 14 | 64 |
| VII. வரி, தீர்வை முதலியவைகளின் வசூல் செலவு ... | 10 | 13 | 22 | 21 | 23 |
| VIII. இதர இனச் செலவுகள் ... | 52 | 52 | 121 | 61 | 86 |
| IX. மொத்தச் செலவு ... | 347 | 441 | 826 | 912 | 1,315 |
| X. உபரி வருவாய் (+) ... | +59 | +40 | +51 | +125 | +113 |

* கணக்கு முறையில் மாற்றம் ஏற்பட்டுள்ளதால், இவ்வினச் செலவை அடுத்து வரும் IV என்ற எண்ணுள்ள இனச் செலவோடு சேர்த்துப் பார்க்கவேண்டும்.

† கணக்கு முறை மாற்றம் இந்த அதிகத் தொகைக்கு முக்கிய காரணம். மேலே வருவாய்ப் புள்ளிகளுக்குக் கொடுக்கப்பட்டுள்ள குறிப்பைப் பார்க்கவும்.

மத்திய அரசாங்கத்தின் செலவு ஐந்தாண்டுத் திட்டங்கள் தொடங்கு வதற்கு முன் சுமார் 350 கோடி ரூபாய் அளவில் இருந்தது; முதல் ஐந்தாண்டின் இறுதியில், இது சுமார் 440 கோடி ரூபாயாக உயர்ந்தது; இது இரண்டாவது திட்டத்தின் இறுதியில், 820 கோடி ரூபாய் அளவுக்கு மேல் ஆயிற்று; மூன்ருவது திட்ட நடுவில், 1,300 கோடி ரூபாய் அளவுக்கு மேல் ஆகிவிட்டது; வட்டிக் கணக்கு முறை மாற்றத்தைத் தவிர்த்துப் பார்த்தால், இது சுமார் 1,150 கோடி ரூபாய் அளவாகும். செலவு உயர்வு, முக்கியமாக புதுத் திட்டங்களினுல் ஏற்பட்டதுதான்; இதில் மத்திய அரசாங்கம் நேரே மேற்கொண்ட செலவும், மாநில அர சாங்கங்களுக்கு மானியமாக அளித்த செலவும் சேர்ந்துள்ளன. காப்புத் துறைச் செலவும் அதிகமாகிக்கொண்டே வந்திருக்கிறது; மூன்ருவது திட்ட கால நடுவில் மிகவும் பெருகிவிட்டது; சீன ஆக்கிரமிப்பினுல் ஏற்பட்ட நெருக்கடிதான் இதன் முக்கிய காரணம்.

மேலே குறிப்பிட்ட 12 ஆண்டு காலத்தில், முக்கியப் பொருள்க்ளின் விலைவாசிகள் சிறிது அளவு உயர்ந்தன. (பொதுக் குறியெண்கள் :— 1950–51→111·8 ; 1952–53→100 ; 1955–56→93 ; 1960–61→124·9 ; 1961–62→125·1 ; 1962–63→127·9.) இதன் காரணமாக, அரசாங்கப் பணியாளர்களுக்கு, கிராக்கிப்படி போன்றவைகளை உயர்த்தவேண்டிய தாயிற்று; ஆயினும், மொத்தச் செலவில், இதன் பங்கு மிகச் சிறியதே. ஆகவே, மத்திய அரசாங்கத்தின் மொத்த வருவாயும் செலவும் உயர்ந்து கொண்டே வந்திருப்பதற்குக் காரணம் விலைவாசிகளின் உயர்வு அன்று; ஏற்றுக்கொண்ட திட்டங்களும், அவைகளுக்காக விதிக்கப்பட்டுள்ள வரிகளுமே முக்கிய காரணம். 1962–63 ஆண்டு நடுவில் நேர்ந்த சீன ஆக்கிரமிப்புக் காரணமாக, காப்புத் துறைச் செலவு முதலியவைகளைத் திடீரென்று பெருக்கவேண்டியதாயிற்று; இதன் விளைவாக, விலைவாசிகள் 1963–64 ஆண்டில் மளமளவென உயரத் தொடங்கின; அவ்வாண்டின் இறுதியில் பொதுக் குறியெண் சுமார் 140 வரை உயர்ந்தது. பார்லி மென்டில் சமர்ப்பிக்கப்பட்ட 1964–65 ஆண்டு பட்ஜெட்டில் செலவு விவரம் கீழ்க்கண்டவாறு இருந்தது.

மத்திய அரசாங்கம்—ரெவின்யூ கணக்கு—செலவு

| விவரம் (1) | 1962–63 (கணக்கு) (2) | 1963–64 (திருத்த மதிப்பீடு) (3) | 1964–65 (திட்ட மதிப்பீடு) (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 1. நாட்டுக் காப்புத்துறை (நிகரம்) ... | 425 | 693 | 718 |
| 2. சமூகத் துறை அபிவிருத்தி சேவைகள் (நீர்ப்பாசனம், பொதுப் பணிகள், சாலைகள் உட்பட) ... | 188 | 179 | 200 |
| 3. கடனுக்கான செலவுகள் ... | 245 | 282 | 318 |
| 4. உதவித் தொகைகளும் பல வகை ஏற்பாடுகளும் (ஆயத் தீர்வையில் மாநிலங்களின் பங்கு உட்பட) ... | 323 | 375 | 434 |
| 5. நிர்வாகச் செலவு (பென்ஷன் போன்ற செலவுகள் உட்பட) ... | 86 | 91 | 93 |
| 6. அசாதாரணச் செலவுகள் ... | 64 | 84 | 148 |
| 7. வரி, தீர்வை முதலியவை களின் வசூல் செலவு ... | 23 | 24 | 25 |
| 8. செலாவணி, நாணயத் துறைச் செலவு ... | 22 | 17 | 17 |
| 9. இதர இனச் செலவுகள் ... | 96 | 81 | 88 |
| 10. மொத்தச் செலவு ... | 1,472 | 1,826 | 2,041 |
| 11. உபரி வருவாய் (+) ... | +113 | +88 | +94 |

மாநிலங்களுக்கு உதவிச் செலவு, கடனுக்காக செலவு, இவை தவிர, நாட்டுக் காப்புத் துறைச் செலவு, அசாதாரணச் செலவு—இவை திடீரென்று மிகவும் பெருகியிருப்பதை மேற்கண்ட புள்ளிகள் விளக்கும்.

மத்திய அரசாங்கத்தின் ரெவின்யூ கணக்கைச் சேர்ந்த நிதி நிலைப் போக்கை நாம் ஒருவாறு கண்டோம். இனி மற்றைய கணக்குகளின் நிலையை ஆராய்வோம். அதற்கான புள்ளிகள் ரிசர்வ் பாங்கு வெளியீட்டில் கண்டபடி கீழே தரப்படுகின்றன.

**மத்திய அரசாங்கம்—ரெவின்யூ கணக்கு அல்லாத மூலதனக் கணக்கு (Capital Budget) ***

| விவரம் (1) | 1950-51 (2) | 1955-56 (3) | 1960-61 (4) | 1961-62 (5) | 1962-63 (6) |
|---|---|---|---|---|---|
| **வரவு** | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | | |
| I கடன் மூலமாகப் பெற்றது ... | 38 | 106 | 449 | 520 | 622 |
| II பரிசுப் பத்திரங்களும் தங்கப் பத்திரமும் (1962-1963) ... | ... | ... | 16 | 3 | 8 |
| III சிறு சேமிப்புத் திட்டம் (நிகரம்) ... | 34 | 67 | 104 | 88 | 74 |
| IV மற்றைய நிதியிடாக் கடன் (நிகரம்) ... | 8 | 17 | 44 | 40 | 42 |
| V அமெரிக்க உதவி சம்பந்தமான வைப்புத் தொகைகள் முதலீடு ... | ... | ... | 240 | 54 | 48 |
| VI கடன் குறைப்பு அல்லது தீர்வுக்கான நிதி ஒதுக்கு ... | 5 | 5 | 5 | 5 | 5 |
| VI1 மாநில அரசாங்கங்கள் கடன் திருப்பிக் கொடுத்த வகையில் ... | 8 | 25 | 95 | 134 | 145 |
| VIII சிறப்பு அபிவிருத்தி நிதி ... | ... | 41 | 105 | 106 | 156 |
| IX இதர இனங்கள் (நிகரம்) ... | 12 | 20 | 69 | 7 | 104 |
| X மொத்த வருவாய் (கஜானு உண்டியல்கள் மூலம் பெற்ற தொகை நீங்கலாக) ... | 105 | 281 | 1,127 | 957 | 1,204 |

* இணைப்பு 3ஐயும் காண்க.

| விவரம் (1) | 1950–51 (2) | 1955–56 (3) | 1960–61 (4) | 1961–62 (5) | 1962–63 (6) |
|---|---|---|---|---|---|
| **பற்று** | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | | |
| 1. மூலதனச் செலவு—அபிவிருத்தித் திட்டங்களில் சேராதது (காப்புத்துறை, அரசாங்க வாணிபத் திட்டங்கள், செலாவணி, நாணயத்துறை முதலியவை) ... | 14 | –9 | 136 | 85 | 110 |
| 2. அபிவிருத்தித் திட்டங்கள் (மாநில அரசாங்கங்களுக்கு அளித்த உதவி உட்பட) ... | 57 | 136 | 270 | 351 | 502 |
| 3. மொத்தம் மூலதனச் செலவு (1+2) ... | 71 | 127 | 406 | 436 | 612 |
| 4. கடன் திருப்பிக் கொடுத்தது ... | 46 | 73 | 128 | 205 | 229 |
| 5. மாநிலங்களுக்குக் கடன் கொடுத்தது (சிறப்பு அபிவிருத்தி நிதியிலிருந்து கொடுத்தது உட்பட) ... | 62 | 247 | 339 | 452 | 511 |
| 6. வேறு வகையில் கொடுத்த கடன் முதலியன ... | 4 | 24 | 128 | 78 | 102 |
| 7. மொத்தப் பற்று (3 to 6) ... | 183 | 471 | 1,001 | 1,171 | 1,454 |
| மூலதனக்கணக்கில் உபரி (+) அல்லது பற்றுக் குறை (–) [(x)–(7)] ... | –78 | –190 | +126 | –214 | –250 |
| பல இனங்கள் (நிகரம்)... | +15 | –10 | –60 | –26 | –19 |
| ரெவின்யூ கணக்கில் கண்ட உபரி வருவாய் (+) ... | +59 | +40 | +51 | +125 | +113 |
| எல்லாக் கணக்கிலும் நிகர உபரித் தொகை (+) அல்லது பற்றுக்குறை (–) ... | –4 | –160 | +117 | –115 | –156 |

ஒவ்வோர் ஆண்டிலும் நிதி நிலை சந்தர்ப்பத்திற்கு ஏற்ப மிகவும் மாறி வருவதையும், அநேகமாக மொத்தக் கணக்கில் பற்றுக்குறையே இருந்து வந்திருப்பதையும் புள்ளிகள் காட்டுகின்றன. தேவைப்படும் தொகையை ரிசர்வ் பாங்கில் கஜானு உண்டியல் முறையில் மத்திய அரசாங்கம் பெற்று, எல்லா ஆண்டின் முடிவிலும் சுமார் 50 கோடி ரூபாய் அல்லது அதற்கு அதிகமாகவோ அரசாங்க ரொக்கக் கணக்கில் இருக்குமாறு செய்யும்.

## கடன் நிலை

திட்டச் செலவுகளையும் மற்றைய அவசியச் செலவுகளையும் அதிக அளவில் ஏற்பதற்காக மத்திய அரசாங்கம் ஆண்டுதோறும் கடன் வாங்கும் நிலை ஏற்படுகிறது. முன்னர் வாங்கிய கடன்களுக்காக வட்டியும், முதலில் ஒரு பகுதியோ அல்லது முழுவதையுமோ கொடுக்கவும் வேண்டியிருக்கிறது. ஐந்தாண்டுத் திட்ட காலத்தில், மத்திய அரசாங்கத்தின் கடன் சுமை எப்படி ஏறிக்கொண்டே வந்திருக்கிறது என்பதை விளக்கக் கீழே சில புள்ளிகள் தரப்படுகின்றன.

**மத்திய அரசாங்கம்**

| ஆண்டு (இறுதி) (1) | நாட்டுக்குள்ளேயே வாங்கிய கடன்களில் எஞ்சி நிற்கும் பகுதி (நெடுங்காலக் கடன், குறுகிய காலக் கடன், சிறு சேமிப்புத் தொகைகள், வேறு வகைகள்) (2) | வெளிநாட்டில் வாங்கிய கடன்கள் (எஞ்சி நிற்கும் பகுதி) (3) | மொத்தக் கடன் (எஞ்சி நிற்பது) (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 1950–51 | 2,468 | 32 | 2,500 |
| 1955–56 | 3,079 | 113 | 3,192 |
| 1960–61 | 5,486 | 846 | 6,247. |
| 1961–62 | 5,856 | 1,111 | 6,967 |
| 1962–63 | 6,313 | 1,379 | 7,692* |

ஐந்தாண்டுத் திட்டங்களை ஏற்பதற்குமுன் மத்திய அரசாங்கம் சுமார் 2,500 கோடி ரூபாய் கடன் வகையில் கொடுக்க வேண்டியிருந்தது. மூன்ருவது திட்ட நடுவில், அதாவது 12 ஆண்டுகளில், இது சுமார்

* இத்தொகை 1964 மார்ச்சு இறுதியில் 8,722 கோடி ரூபாயாக உயர்ந்தது. மேலும் 1965 மார்ச்சு இறுதியில் 9,601 கோடி ரூபாயாக உயர்ந்தது.

ரூபாய் 7,700 கோடியாக உயர்ந்துள்ளது. இப்படி அரசாங்கம் கடன் சுமையைப் பெருக்கிக் கொண்டே போனால், இறுதி விளைவு என்ன ஆகும் என்று பொதுமக்கள் ஐயமுறுவது இயல்பு. இதற்கு ஒரு பதில், கடன் வாங்கிச் செலவழித்தது எல்லாம் பயன் தரும் திட்டங்களுக்காகவே பெரும்பாலும் இருந்ததால், நாளடைவில் அரசாங்கத்தின் நிதி நிலை உயர்ந்து கடன்களைப் படிப்படியாகத் தீர்ப்பதற்கு உதவும் என்பது; இதையே, இன்னொரு விதமாகச் சொன்னால், மக்கள் நலத்திற்காக மக்களை நம்பித் தான் இந்தக் கடன்கள் வாங்கப்படுகின்றன; ஆகவே, பொதுமக்களின் பொருள்நிலை உயர்ந்துகொண்டே போனால், அரசாங்கம் நாட்டுக் கடனைத் தீர்ப்பதற்கு மக்களையே நம்பியிருக்கலாம் என்பது தான். மேலும், அரசாங்கத்தின் சொத்து என்ற முறையில் உள்ளவை, கடன்களுக்கு ஈடாகக் காட்டக்கூடியவை. இதை விளக்கும் புள்ளிகள் கீழே தரப்படுகின்றன.

**மத்திய அரசாங்கம்**

| சொத்து விவரம் | 1962-63 இறுதியில் |
|---|---|
| **வட்டி தருபவை** | (ரூபாய் கோடிக் கணக்கில்) |
| 1. ரெயில்வேக்களுக்குக் கொடுத்த மூல தனம் ... | 1,886 |
| 2. இதர அரசாங்கத் தொழில் நிறுவனங்களுக்குக் கொடுத்த மூலதனமும் பங்கும் ... | 951 |
| 3. மாநில அரசாங்கங்கள் முதலியவைகளுக்குக் கொடுத்த கடன் ... | 3,341 |
| 4. பாகிஸ்தானிலிருந்து வசூலிக்க வேண்டிய கடன் ... | 300 |
| 5. ஸ்டெர்லிங் பென்ஷனுக்காக முன் பணமாகக் கொடுத்து இருப்பது | 18 |
| **வட்டி தராதவை** ... | |
| 6. கஜானுக் கணக்கில் இருந்த ரொக்கத் தொகை ... | 102 |
| சொத்து—மொத்தம் | 6,598 |
| 7. கடன் தொகைக்கு ஈடு காட்டப் படாதது ... | 1,094 |
| 8. மொத்தக் கடன் (முன்பு குறித்தபடி) [(6)+(7)] ... | 7,692 |

ஆண்டுதோறும் வருவாய் தரக்கூடிய சொத்தினங்கள்தாம் மேலே காட்டப்பட்டுள்ளன. இது தவிர, அரசாங்கத்திற்கு வேறு ஏராளமான சொத்துக்கள் (அலுவலகக் கட்டடங்கள், தட்டுமுட்டுச் சாமான்கள் போன்றவை) இருக்கின்றன ; அவை இங்கே குறிக்கப்படவில்லை. இந்தியத் தொகு நிதியின் ஜாமீன்பேரில்தான் கடன்கள் பெறப் படுகின்றன. மத்திய அரசாங்கம் வாங்கும் கடனுக்குச் சட்ட ரீதியாக ஒரு வரம்பை ஏற்படுத்தலாம் என்று அரசியல் அமைப்பில் விதியுள்ளது (பிரிவு 292). ஆனுல் 1964–65 ஆண்டுவரை அம்மாதிரியான வரம்பு ஏற்படுத்தப்படவில்லை. அவ்வப்போது பட்ஜெட் சம்பந்தமாகத்தான் அரசாங்கம் கடன் வாங்குவதற்கு பார்லிமென்டின் அனுமதி பெறப்படு கிறது. வரம்புச் சட்டம் வரவேண்டும் என்று ஒரு சாரார் வற்புறுத்தி வருகின்றனர்.

நேர்முகமாக வாங்கிய கடனுக்குப் பொறுப்பு இருப்பது தவிர, மத்திய அரசாங்கம், பிற நிறுவனங்கள் வாங்கிய கடனுக்கும் உத்தரவாதம் அளித்து வருகிறது. இதன்படிப் பலதரப்பட்ட கூட் டுறவுச் சங்கங்கள், அரசாங்க சம்பந்தமான தொழில் நிறுவனங்கள் (ஹிந்துஸ்தான் விமானக் கம்பெனி, இந்திய விமானக் கார்ப்பரேஷன், இந்தியத் தொழில் நிறுவன—பணவசதி—முதலீடு—கார்ப்பரெஷன், மாநில மின்சார போர்டுகள், வேளாண்மை நிதி வசதிக் கார்ப்பரேஷன், தேசீயத் தொழில் அபிவிருத்திக் கார்ப்பரேஷன், சிறு கைத்தொழில் கார்ப்பரேஷன், அரசாங்க வாணிபக் கார்ப்பரேஷன், இந்திய எண்ணெய்க் கம்பெனி, இந்திய எஃகு கம்பெனி, கப்பல் துறைக் கம்பெனிகள் முதலியன) போன்றவை வாங்கும் கடனை உரிய காலத்தில் வட்டியும் முதலுமாகக் கொடுக்கத் தவறினுல், அரசாங்கம் அந்தப் பொறுப்பை ஏற்கும். இந்தப் பொறுப்பும் பெரிய அளவினதே. ஆண்டுதோறும் இவ்விதத்தில் தீர்க்கப்படாமல் இருக்கும் பொறுப்பு களுக்கு முழுவிவரம் நிதி நிலைக் குறிப்பில் கொடுக்கப்படுகிறது. அரசியல் அமைப்பின்படி இந்தப் பொறுப்புக்கும் சட்ட ரீதியாக ஒரு வரம்பு அமைக்கலாம்.

மத்திய அரசாங்கம் மாநிலங்களுக்கு ஐந்தாண்டுத் திட்ட காலத்தில்,பெருமளவில் உதவி அளித்து வருவதை மேலே குறிப் பிட்டோம். வருவாயில் ஒரு பகுதியை ஒதுக்கியும், நேர்முகமாக மானியங்கள் , கடன்கள் இவைகளை அளித்தும் உதவி செய்துள்ளதற்கு விவரம் பின்வருமாறு :—

மத்திய அரசாங்கம் மாநில அரசாங்கங்களுக்கு
அளித்த உதவி விவரம்

| விவரம் | முதல் ஐந்தாண்டுத் திட்ட காலம் | இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலம் | மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலம் 1961–62 | மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலம் 1962–63 |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| I. வரிகளும், தீர்வைகளும் | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | |
| (i) பகிர்ந்து கொள்ளும் வரிகள், தீர்வைகளில் பங்கு : | | | | |
| 1. வருமான வரி ... | 278 | 375 | 94 | 95 |
| 2. யூனியன் ஆயத் தீர்வைகள் ... | 46 | 153 | 41 | 79 |
| (ii) முழுவதும் மாநில அரசாங்கங்களையே சாரும் வரிகளும் தீர்வைகளும் : | | | | |
| 1. விற்பனை வரிக்குப் பதிலாக விதிக்கப்பட்டுள்ள அதிக ஆயத் தீர்வைகள் ... | ... | 128 | 39 | 46 |
| 2. ரெயில் பிரயாண வரி ... | ... | 42 | ... | ... |
| 3. சொத்து வரி ... | 3 | 13 | 4 | 4 |
| மொத்தம்–I ... | 327 | 711 | 178 | 224 |
| | 1,440 | | | |

| விவரம் | முதல் ஐந்தாண்டுத் திட்ட காலம் | இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலம் | மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலம் | |
|---|---|---|---|---|
| | | | 1961-62 | 1962-63 |
| (1) | (2) | (3) | (4) | (5) |
| **II. ரெவின்யூ கணக்கைச் சேர்ந்த மானியங்கள்** | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | |
| (A) அரசியல் அமைப்புக் கிணங்க அளித்த மானியங்கள் : | | | | |
| 1. 273 பிரிவின்படி (சணல், சணற் பொருள்கள் ஏற்று மதித் தீர்வைகளுக்குப் பதிலாக) ... | 14 | 13 | ... | ... |
| 2. 275 (1) பிரிவின் முக்கிய விதிப்படி (தேவைக்கேற்ப மானியம்) ... | 27 | 153 | 40 | 61 |
| 3. 275 (1) பிரிவின் ஷரத்துப் படி (பழங்குடி மக்கள், மலைப் பகுதிகள் இவை களின் நலனுக்காக) ... | 13 | 34 | 4 | 7 |
| 4. 278 பிரிவின்படி (சில ராஜ்ய நிதி உடன்படிக் கைப்படி) ... | 50 | ... | ... | ... |
| 5. மாநில மறு அமைப்புச் சட்டத்தின்படி ... | ... | 7 | ... | ... |
| மொத்தம்–A ... | 104 | 207 | 44 | 68 |
| | | | 423 | |
| (B) வேறு மானியங்கள் (கல்வி, மருத்துவம், சுகாதாரம், வேளாண்மை, கைத் தொழில் முதலிய அபி விருத்தித் திட்டங் களுக்கு) ... | 144 | 461 | 155 | 132 |
| | | | 892 | |
| மொத்தம்–II ... | 248 | 668 | 199 | 200 |
| | | | 1,315 | |

| விவரம் | முதல் ஐந்தாண்டுத் திட்ட காலம் | இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலம் | மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட காலம் | |
|---|---|---|---|---|
| | | | 1961–62 | 1962–63 |
| (1) | (2) | (3) | (4) | (5) |
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | |
| III. மத்திய சாலை நிதியிலிருந்து அளிக்கப்பட்டது... | 16 | 19 | 2 | 3 |
| | 40 | | | |
| IV. மூலதனக் கணக்கைச் சார்ந்த மானியங்கள் | | | | |
| 1. அபிவிருத்தித் திட்டங்களுக்காக ... | 13 | 19 | 4 | 4 |
| 2. தொழிலாளிகள் குடியிருப்புத் திட்டங்களுக்கும், சேரிகள் ஒழிப்புத் திட்டத்திற்கும் ... | 5 | 12 | 3 | 4 |
| 3. பஞ்சாப் அரசாங்கத் தலைநகர் நிறுவ ... | ... | 1 | ... | ... |
| 4. பொருளாதார முக்கியத்துவம் வாய்ந்த அல்லது பல மாநிலங்களைச் சார்ந்த சாலைகளுக்கு ... | 4 | 17 | 3 | 4 |
| 5. எல்லைப்புறச் சாலைகளுக்காக ... | ... | ... | 5 | 6 |
| 6. தேசீயக் குடிநீர்த் திட்டங்களுக்கும் சுகாதாரத் திட்டங்களுக்கும் ... | 2 | 8 | 1 | 1 |
| 7. இதர வகைகள் ... | ... | 2 | ... | ... |
| மொத்தம்–IV ... | 24 | 59 | 16 | 19 |
| | 118 | | | |
| V. கடன் உதவிகள் | | | | |
| 1. நீர்ப்பாசனத் திட்டங்கள் பல்நோக்கு நதித் திட்டங்கள் ... | 252 | 310 | 71 | 77 |
| 2. பலவகையான அபிவிருத்தித் திட்டங்கள் ... | 171 | 259 | 115 | 175 |

| விவரம் (1) | முதல் ஐந்தாண்டுத் திட்ட காலம் (2) | இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலம் (3) | மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலம் 1961–62 (4) | 1962–63 (5) |
|---|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | |
| 3. வேளாண்மை (விளைச்சல் பெருக்கம்), விலங்கினப் பராமரிப்பு, பால்பண்ணை, மீன்வளம், காட்டுவளம், மண்வளம் முதலிய திட்டங்கள் ... | 110 | 173 | 49 | 71 |
| 4. புனர்வாழ்வுத் திட்டங்கள் ... | 48 | 29 | 3 | 4 |
| 5. தொழிலாளிகள் குடியிருப்புத் திட்டங்கள் (நில ஆர்ஜிதத் திட்டங்கள் உட்பட) ... | 20 | 58 | 14 | 11 |
| 6. சமூக நல அபிவிருத்தித் திட்டங்கள், தேசீய சேவை விஸ்தரிப்புத் திட்டங்கள் ... | 14 | 48 | 16 | 16 |
| 7. இயற்கை உற்பாதங்கள் நிவாரணம் ... | 2 | 13 | 7 | 8 |
| 8. வறட்சிப் பகுதிகளின் நிரந்தர அபிவிருத்தி ... | 27 | 12 | ... | ... |
| 9. கைத்தறி, சிறு கைத்தொழில்கள், விசைத் தறிகள் போன்ற திட்டங்கள்... | ... | 39 | 8 | 11 |
| 10. வெள்ளக் கட்டுப்பாட்டுத் திட்டங்கள்.. } ... | 154 | 48 | 3 | 4 |
| 11. நகர குடிநீர்த் திட்டங்கள் ... } | | 18 | 1 | 3 |
| 12. சிறு சேமிப்புத் தொகையில் பங்கு ... | ... | 230 | 61 | 47 |
| 13. இதர இனங்கள் ... | ... | 174 | 104 | 97 |
| மொத்தம்–V ... | 798 | 1,411 | 452 | 524 |
| | | 3,185 | | |
| பெரு மொத்தம்–I to V ... | 1,413 | 2,868 | 847 | 970 |
| | | 6,098 | | |

மத்திய அரசாங்கம், மாநிலங்களுக்கு முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் அளித்த மொத்த உதவி சுமார் 1,400 கோடி ரூபாய் அளவுக்கு இருந்தது; அடுத்த ஐந்தாண்டில் இது இரண்டு மடங்குக்குமேல் ஆகிவிட்டது; மூன்றுவது திட்ட காலத்தில் உதவி இன்னும் அதிக மாகிக்கொண்டு வருகிறது; இறுதியில் இரண்டாவது திட்ட கால உதவியைப் போல் கிட்டத்தட்ட இருமடங்கு அளவையும் எட்டிவிடலாம்; அதாவது, மூன்று ஐந்தாண்டுத் திட்ட காலத்திலும் மொத்த உதவி சுமார் 10,000 கோடி ரூபாய் அளவினதாகும். மத்திய அரசாங்கத்தின் மொத்த வருமானத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால், உதவியின் விகிதமும் நிலையும் மேலும் தெளிவாகும்.

| விவரம் | இரண்டாவது திட்டகாலம் | மூன்றுவது திட்டகாலம் | |
|---|---|---|---|
| | 1956–57—1960–61 | 1961–62 | 1962–63 |
| (1) | (2) | (3) | (4) |
| **ரெவின்யூ கணக்கு** | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 1. மத்திய அரசாங்க வரி வருவாய் (வசூல் செலவு கழிந்தபின்) | 3,612 | 1,033 | 1,262 |
| 2. மாநிலங்களுக்கு அளித்த வரிப் பங்கு—தொகையும் (வரி வருவாயின் சதவிகிதமும்) | 711 (20%) | 178 (17%) | 224 (18%) |
| 3. மத்திய அரசாங்கத்தின் மொத்த வருவாய் (வசூல் செலவும் மாநிலப் பங்கும் கழிக்காமல்) | 4,767 | 1,215 | 1,652 |
| 4. மாநிலங்களுக்கு அளித்த வரிப் பங்கு—மொத்த வருவாயில் சத விகிதம் | (15%) | (15%) | (14%)* |
| 5. மாநிலங்களுக்கு அளித்த மானியங்கள் (மத்திய சாலை நிதியிலிருந்து கொடுத்தது உட்பட)—தொகையும் (மொத்த வருவாயில் சதவிகிதமும்) | 687 (14%) | 201 (16%) | 203 (12%)* |

*1962–63ஆம் ஆண்டில் மாநிலங்களுக்கு அளித்த உதவியின் சதவிகிதம் குறைந்திருப்பதுபோல் தோன்றுவதற்குக் காரணம், முன்னர் கூறியபடி, வட்டிக் கணக்கு முறை மாற்றத்தாலும், அசாதாரண வருமானத்தின் ஏற்றத்தாலும் மொத்த வருவாய் அதிகரித்திருப்பதுதான்.

| விவரம் | இரண்டாவது திட்ட காலம் | மூன்ருவது திட்ட காலம் | |
|---|---|---|---|
| | 1956–57—1960–61 | 1961–62 | 1962–63 |
| (1) | (2) | (3) | (4) |
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 6. மாநிலங்களின் வரிப் பங்கும், மானியமும்—மொத்த வருவாயில் சதவிகிதம் [(4) + (5)] | (29%) | (31%) | (26%) |
| மூலதனக் கணக்கு | | | |
| 7. மாநிலங்களுக்கு அளித்த மானியம்—தொகையும் (மேற்கண்ட மொத்த வருவாயின் சதவிகிதமும்) | 59 (1%) | 16 (1%) | 19 (1%) |
| 8. மாநிலங்களுக்கு மொத்த உதவி (கடன்வகை தவிர)—(மொத்த வருவாயில் சதவிகிதம்) [(6) + (7)] | (30%) | (32%) | (27%)* |

சராசரியில், மத்திய அரசாங்க மொத்த வருவாயில் சுமார் 30 சதவிகிதம் மாநில அரசாங்கங்களுக்கு உதவியாகச் செலவிடப்பட்டு வருகின்றது. இது தவிர, கணிசமான அளவில் கடன் வசதியும் செய்யப்பட்டு வருகிறது. மூன்று திட்ட காலமான 12 ஆண்டுகளில், மத்திய அரசாங்கத்தின் கடன் சுமை நிகரத்தில் சுமார் 5,200 கோடி அளவு உயர்ந்தது. இதில் சுமார் 2,400 கோடி ரூபாய் அல்லது 47 சதவிகிதம், மாநிலங்களின் பொறுப்பாயிருந்தது. (மாநில அரசாங்கங்கள் தாங்களே வேறு கடனும் வாங்கியுள்ளன. இதன் விவரத்தைப் பின்னர் காணலாம்.)

## ரெயில்வே நிதிக் கணக்கு

மத்திய அரசாங்கத்தின் பொதுப் பட்ஜெட்டினின்று வேருக, ரெயில்வே துறைக்கான பட்ஜெட் சமர்ப்பிக்கப்படுகின்றது என்று முன்னர் கூறப்பட்டது. இதற்கிணங்க, ரெயில்வே நிதிக் கணக்கைச் சார்ந்த சில புள்ளிகள் இப்பொழுது தனியே தரப்படுகின்றன.*

*இணைப்பு 4ஐயும் காண்க.

| விவரம் (1) | 1950-51 (2) | 1955-56 (3) | 1960-61 (4) | 1961-62 (5) | 1962-63 (6) |
|---|---|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | | |
| I. மூலதனக் கணக்கில் கூடிய தொகை ... | 827 | 969 | 1,521 | 1,683 | 1,897 |
| II. மொத்தமான போக்கு வரத்து வருவாய் | | | | | |
| (a) பிரயாணிகள் ... | 98 | 108 | 132 | 151 | 169 |
| (b) சாமான்கள் ... | 143 | 180 | 286 | 307 | 350 |
| (c) இதர இனங்கள் ... | 22 | 28 | 39 | 43 | 48 |
| | 263 | 316 | 457 | 501 | 567 |
| III. செலவுகள் | | | | | |
| (1) சாதாரண பராமரிப்புச் செலவு ... | 180 | 213 | 313 | 325 | 363 |
| (2) தேய்மானம் (Depreciation) ... | 30 | 45 | 45 | 65 | 67 |
| (3) பலவகைச் செலவுகள் ... | 5 | 8 | 11 | 11 | 14 |
| | 215 | 266 | 369 | 401 | 444 |
| IV. நிகர வருமானம் (II-III) ... | 48 | 50 | 88 | 100 | 123 |
| V. அரசாங்கப் பொது வருமானத்துக்கு மாற்றப் பட்ட தொகை (ஈவு) ... | 33 | 36 | 56 | 63 | 68 |
| VI. ரெயில்வே பிரயாண வரிக்குப் பதிலாக அரசாங்கப் பொது வருமானத்துக்குச் செலுத்திய தொகை ... | ... | ... | ... | 13 | 13 |
| VII. மொத்த மாற்றம் (V+VI) ... | 33 | 36 | 56 | 76 | 81 |
| VIII. உபரி வருமானம் (IV—VII) (பெரும்பாலும் அபிவிருத்தி நிதியில் சேர்க்கப்பட்டது) ... | 15 | 14 | 32 | 24 | 42 |

ரெயில்வே துறை லாபகரமாகவே நடந்துவந்திருக்கிறது என்பதை மேலே கண்ட புள்ளிகளால் தெளியலாம். ரெயில்வே பிரயாணிகளுக்கு இன்னும் வசதிகள் செய்யப்படவேண்டும் என்றும், பிரயாணக் கட்டணங்களையும் குறைக்க வேண்டும் என்றும் ஒரு சாரார் வற்புறுத்தி வருகிறார்கள். இவையெல்லாம் நிதி நிலைக்கு ஏற்பத்தான் அமலாக முடியும்.

## நிதி நிலை—பொருளாதாரப் பாகுபாடு

ஆண்டுதோறும், மத்திய அரசாங்கத்தின் நிதி நிலையை, பொருளாதார முறையில் பாகுபடுத்தி விளக்கும் ஒரு வெளியீடு, பட்ஜெட்டோடு வருகிறது என்று முன்னர்க் குறிப்பிடப்பட்டது. இம்முறையில் விளக்கப்படுவது என்ன என்று தெரிந்துகொள்ள, மத்திய அரசாங்கம் பார்லிமென்டுக்குச் சமர்ப்பித்த 1964–65 ஆண்டு பட்ஜெட்டின் புள்ளிகளை ஆதாரமாகக் கொண்ட பாகுபாட்டை உதாரணமாக ஆராயலாம்.

### (1) நடைமுறை நிர்வாகக் கணக்கு

| விவரம் | 1962–63 கணக்கு | 1963–64 திருத்த மதிப்பீடு | 1964–65 திட்ட மதிப்பீடு |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| A. வருவாய் | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| I. பட்ஜெட்டில் ரெவின்யூ கணக்கில் காட்டியபடி (ரெயில்வே—தபால் தந்தி—காப்புத்துறை நீங்கலாக, மொத்த வருவாய் ... | 1,585 | 1,914 | 2,135 |
| II. கூட்டவும் | | | |
| காப்புத் துறை வருவாய்... | 20 | 21 | 18 |
| மொத்தம் (I+II) | 1,605 | 1,935 | 2,153 |

| விவரம் | 1962–63 கணக்கு | 1963–64 திருத்த மதிப்பீடு | 1964–65 திட்ட மதிப்பீடு |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| III. கழிக்கவும் | | | |
| அரசாங்க வாணிப நிறுவனங்களிலிருந்து பெற்ற வருமானமும் வட்டித்தொகையும்; நாணயத்துறை வருமானம்; ஆயத் தீர்வையில் மாநிலங்களின் பங்கு; மூலதனக் கணக்குக்கு மாற்றப்பட்ட சொத்து வரி, கொடை வரி; ஒரு கணக்கிலிருந்து இன்னொன்றுக்கு மாற்றும் ஏற்பாடுகள் ... | –266 | –299 | –398 |
| IV. கூட்டவும் | | | |
| அரசாங்க, வாணிப இலாபக் கணக்கு முதலிய ஏற்பாடுகள் ... | 12 | 10 | 9 |
| A. அரசாங்க நடைமுறை நிர்வாகத்தைச் சார்ந்த நிகர வருவாய் ... | 1,351 | 1,646 | 1,764 |

மேற்கண்ட நிர்வாக நடைமுறை வருவாய்த் தொகைக்கு நேர்முகமான பொருளாதார முறைப் பாகுபாடு :—

| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
|---|---|---|---|
| 1. வரி வருவாய்—(வருமான வரி, செல்வ வரி, பொருள் மீது வரி, செலவு வரி முதலியவை) ... | 1,060 | 1,309 | 1,446 |
| 2. அரசாங்கச் சொத்து, தொழில் முதலியவைகளிலிருந்து வருவாய் (வாணிபத்துறை இலாபம், ரிசர்வ் பாங்கு இலாபம், வட்டி, இதர இனம்) ... | 209 | 247 | 258 |
| 3. கட்டணங்களும் பலவகை வருமானமும் ... | 82 | 90 | 60 |
| A. மொத்த வருவாய் ... | 1,351 | 1,646 | 1,764 |

| விவரம் (1) | 1962–63 கணக்கு (2) | 1963–64 திருத்த மதிப்பீடு (3) | 1964–65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| B. செலவு | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 1. பட்ஜெட்டில் ரெவின்யூ கணக்கில் காட்டியபடி மொத்தச் செலவு (ரெயில்வே, தபால் தந்தி நீங்கலாக) ... | 1,472 | 1,825 | 2,041 |
| 2. கூட்டவும் | | | |
| காப்புத்துறை வருவாயைச் செலவில் கழித்த வகையில்... | 20 | 21 | 18 |
| மொத்தம் (1+2) ... | 1,492 | 1,846 | 2,059 |
| 3. கழிக்கவும் | | | |
| அரசாங்க வாணிப நிறுவனங்களைச் சார்ந்த வட்டிச் செலவும், மற்றைய நிர்வாகச் செலவும்; கடன் தீர்க்க, ஒதுக்கிய தொகை; மாநில அரசாங்கங்களுக்கு ஆயத் தீர்வையில் பங்கு; மூலதனக் கணக்கில் சேர வேண்டிய தொகையும், மாற்றங்களும். | –350 | –381 | –461 |
| 4. கூட்டவும் | | | |
| காப்புத்துறை மூலதனச் செலவு, இன்னும் ரெவின்யூ கணக்கில் சேர வேண்டியவையும் ... | 55 | 117 | 134 |
| B. அரசாங்க நடைமுறை நிர்வாகத்தைச் சார்ந்த நிகரச் செலவு ... | 1,197 | 1,582 | 1,732 |

மேற்கண்ட நிர்வாக நடைமுறைச் செலவுத் தொகைக்கு நேர்முக மான பொருளாதார முறைப் பாகுபாடு :

| விவரம் (1) | 1962–63 கணக்கு (2) | 1963–64 திருத்த மதிப்பீடு (3) | 1964–65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 1. நேர்ப் பலனளிக்காத உப யோகத்திற்கான செலவு (Consumption Expenditure) (பணியாளர்களின் ஊதியம், கூலி, பொருள்கள், சேவைகள்) ... | 683 | 1,021 | 1,079 |
| 2. மற்ற நிறுவனங்கள், மாநிலங்கள் முதலியவைகளுக்கு உதவும் வகையில் கணக்கு மாற்றச் செலவு (Transfer Payments) | | | |
| (i) மாநிலங்களுக்கு மானியம். | 189 | 220 | 271 |
| (ii) ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் மற்றவைகளுக்கும் மானியம் ... | 81 | 88 | 101 |
| (iii) வேறு இனங்கள் (வட்டி உதவித் தொகைகள் பென்ஷன்கள் முதலியன) | 244 | 253 | 281 |
| | 514 | 561 | 653 |
| B. மொத்தச் செலவு ... | 1,197 | 1,582 | 1,732 |
| C. நடைமுறைக் கணக்கில் உபரி வருவாய் (A–B) ... | 154 | 64 | 32 |

## (2) அரசாங்க வாணிப நிறுவனங்களின் நடைமுறை நிர்வாகக் கணக்கு

| விவரம் (1) | 1962–63 கணக்கு (2) | 1963–64 திருத்த மதிப்பீடு (3) | 1964–65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| (i) ரெயில்வே, தபால் தந்தித் துறை முதலியவைகளின் வருவாய் ... | 690 | 763 | 823 |
| (ii) செலவு (வட்டி, தேய்மானம் உட்பட) ... | 605 | 668 | 716 |
| (iii) இலாபம் ... | 85 | 95 | 107 |
| (iv) இலாபத்தில் அரசாங்கப் பொது நிர்வாகத்துக்குக் கொடுத்தது ... | 21 | 23 | 25 |
| (v) நிறுவனத் துறையில் எஞ்சிய இலாபம் (iii—iv) ... | 64 | 72 | 82 |

## (3) மூலதனக் கணக்கு

| | | | |
|---|---|---|---|
| செலவு | | | |
| 1. பட்ஜெட்டில் காட்டியபடி மூலதனச் செலவு ... | 612 | 830 | 970 |
| 2. கழிக்கவும் | | | |
| காப்புத்துறை மூலதனச் செலவு; தொழில் நிறுவனப் பங்குகளில் முதலீடு செய்தது; அமெரிக்க உதவிக் கணக்கு மாற்றம்; ரெவின்யூ கணக்கில் சேர்க்கப்பட்டவை முதலியன ... | –286 | –372 | –484 |

| விவரம் (1) | 1962-63 கணக்கு (2) | 1963-64 திருத்த மதிப்பீடு (3) | 1964-65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 3. கூட்டவும் ரெயில்வே வருமானத்திலிருந்து செய்த மூலதனச் செலவு; தபால்—தந்தித் துறை வருமானத்திலிருந்த மூலதனச் செலவு; வேறு வகையில் ரெவின்யூ கணக்கில் மூலதனக் கணக்குக் குரியது; செலவில் ஒரு பகுதி திருப்பிப் பெற்ற வகை, முதலிய ஏற்பாடுகள்.. | 208 | 208 | 224 |
| 4. நிகரம் மூலதனக் கணக்குச் செலவு ... | 534 | 666 | 710 |

மேற்கண்ட மூலதனச் செலவுத் தொகைக்கு நேர்முகமான பொருளாதார முறைப் பாகுபாடு:—

| | | | |
|---|---|---|---|
| 1. நிலையான மூலதன அமைப்பு மொத்தம் (Gross Capital Formation) | | | |
| (i) கட்டடங்கள் முதலியன | 227 | 302 | 324 |
| (a) புதுச் செலவு ... | | | |
| (b) பழையனவற்றைப் புதுப்பித்தலும் மாற்றலும் ... | 55 | 54 | 57 |
| (ii) யந்திரங்களும், பிற சாதனங்களும் | 113 | 136 | 148 |
| (a) புதுச் செலவு ... | | | |
| (b) பழையனவற்றைப் புதுப்பித்தலும் மாற்றலும் ... | 22 | 19 | 20 |
| | 417 | 511 | 549 |

| விவரம் (1) | 1962–63 கணக்கு (2) | 1963–64 திருத்த மதிப்பீடு (3) | 1964–65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 2. சேமிப்புச் சாமான்கள் பெருக்கம் (Increase in Inventories) | | | |
| (i) பணிகளுக்கான சாமான்கள் ... | 27 | 21 | 10 |
| (ii) உணவுப் பொருள்கள் முதலியன ... | 2 | 46 | 48 |
| | 29 | 67 | 58 |
| 3. மூலதன மாற்றங்கள் (Capital Transfers) | | | |
| (i) மூலதன அமைப்புக்கு மானியம் | | | |
| (a) மாநிலங்களுக்கு ... | 29 | 34 | 42 |
| (b) அரசாங்கத் துறையில் இல்லாத வாணிபத் திட்டங்கள் ... | 30 | 34 | 39 |
| (c) ஸ்தல ஸ்தாபனங்களுக்கு ... | 2 | 2 | 1 |
| (d) மற்றவைகளுக்கு ... | 5 | 6 | 9 |
| (ii) உதவித் தொகைகள் முதலியன ... | 22 | 12 | 12 |
| | 88 | 88 | 103 |
| மொத்தம்-மூலதனச் செலவு... | 534 | 666 | 710 |

மேலே கண்ட மூலதனக் கணக்குச் செலவுக்குப் பின்வருமாறு வழி செய்யப்பட்டது :

| விவரம் (1) | 1962–63 கணக்கு (2) | 1963–64 திருத்த மதிப்பீடு (3) | 1964–65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| (i) அரசாங்க நிர்வாக நடைமுறைக் கணக்கில் உபரி வருவாய் (மேலே காட்டிய படி) ... | 154 | 64 | 32 |
| (ii) அரசாங்க வாணிப நிறுவனக் கணக்கில் எஞ்சிய இலாபம் (மேலே காட்டிய படி) ... | 64 | 72 | 82 |
| (iii) தேய்மான நிதி ... | 80 | 93 | 98 |
| (iv) அயல்நாட்டு உதவி ... | 65 | 72 | 147 |
| (v) கொடை வரி, சொத்து வரி ... | 1 | 1 | 3 |
| மொத்தம் ... | 364 | 302 | 362 |
| (vi) மூலதனப் பற்றுக்குறை ... | 170 | 364 | 348 |

(4) நிதி வகையைச் சார்ந்த சொத்துக்கள் மதிப்பின் மாற்றம்

(அரசாங்க நிர்வாகத்துறை, வாணிபத்துறை உட்பட)

| | | | |
|---|---|---|---|
| I. பற்று | | | |
| 1. நிறுவனங்களில் முதலீடு செய்த வகையில் (பெரும்பாலும் அரசாங்கத் துறையில்) ... | 141 | 173 | 167 |
| 2. மாநில அரசாங்கங்கள், ஸ்தல ஸ்தாபனங்கள், அரசாங்க நிர்வாகத் துறையில் சேராத வாணிப நிறுவனங்கள் முதலியவைகளுக்கு, மூலதனமாகக் கொடுத்த கடன் ... | 537 | 730 | 764 |

| விவரம் (1) | 1962–63 கணக்கு (2) | 1963–64 திருத்த மதிப்பீடு (3) | 1964–65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 3. வேறு கடன் கொடுத்த வகையில் (மாநில அரசாங்கங்கள், அன்னிய அரசாங்கங்கள் முதலியன) ... | 129 | 87 | 96 |
| 4. இதர இனங்கள் (தங்கம் வாங்கியது உட்பட) ... | 10 | 12 | 6 |
| I. மொத்தம்–பற்று ... | 817 | 1,002 | 1,033 |
| II. வரவு—கொடுத்த கடனைத் திருப்பிப் பெற்ற வகையில் ... | 170 | 228 | 287 |
| III. நிதி வகைச் சொத்தின் நிகரப் பெருக்கம் (I–II) ... | 647 | 774 | 746 |
| மூலதனப் பற்றுக்குறையோடு, நிதிவகைச்சொத்துப் பெருக்கத்தையும் சேர்த்தால் வரும் மொத்தப் பற்றுக் குறை ... | 817 | 1,138 | 1,094 |

(5) நிதிவகையைச் சார்ந்த பொறுப்புக்களின் மாற்றம்

(அரசாங்க நிர்வாகத்துறை, வாணிபத்துறை உட்பட)

| | | | |
|---|---|---|---|
| I. வரவு | | | |
| 1. புதுக்கடன் (உள்நாட்டில்) ... | 287 | 377 | 300 |
| 2. புதுக் கடன் (வெளி நாடுகளில்) ... | 365 | 503 | 697 |
| 3. சிறு சேமிப்பு (நிகரம்) ... | 74 | 115 | 125 |
| 4. மற்ற நிதியிடாக் கடன் (நிகரம்) ... | 42 | 65 | 123 |
| 5. கஜானா உண்டியல்கள் ... | 186 | 135 | 86 |
| 6. அமெரிக்க உதவித்தொகை முதலீடு ... | 48 | 65 | (–) 84 |

| விவரம் (1) | 1962–63 கணக்கு (2) | 1963–64 திருத்த மதிப்பீடு (3) | 1964–65 திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 7. வேறு கடன் முதலிய இனங்கள் (நிகரம்) தேசீய காப்பு நிதி, பத்திரங்கள் விற்பனை உட்பட) ... | 58 | 95 | 101 |
| 8. ஒரு ரூபாய் நோட்டுகள் விநியோகம் ... | 5 | 5 | 5 |
| I. மொத்த வரவு ... | 1,065 | 1,360 | 1,353 |
| II. பற்று—கடன் திருப்பிக் கொடுத்தது-உள்நாடு ... | 182 | 178 | 192 |
| வெளிநாடு ... | 48 | 62 | 67 |
| II. மொத்தம் ... | 230 | 240 | 259 |
| III. நிதிவகைப் பொறுப்பில் பெருக்கம் (I–II) ... | 835 | 1,120 | 1,094 |

(6) மேற்கண்ட எல்லாக் கணக்குகளின் சரிக்கட்டு

| | | | |
|---|---|---|---|
| பற்று | | | |
| 1. மூலதனக் கணக்கில் காட்டிய பற்றுக்குறை ... | 170 | 364 | 348 |
| 2. நிதிவகைச் சொத்தில் பெருக்கம் ... | 647 | 774 | 746 |
| 3. ரொக்கத் தொகையில் சேர்த்தது ... | 18 | ... | ... |
| மொத்தம் ... | 835 | 1,138 | 1,094 |
| வரவு | | | |
| 1. நிதிவகைப் பொறுப்பில் பெருக்கம் ... | 835 | 1,120 | 1,094 |
| 2. ரொக்கத் தொகையில் எடுத்தது ... | ... | 18 | ... |
| மொத்தம் ... | 835 | 1,138 | 1,094 |

மேற்கண்ட கணக்குகளின்படி மத்திய அரசாங்கம் தன் பற்றுக் குறையைத் தீர்க்க ரிஸர்வ் பாங்கினிடமிருந்து கடன் பெற்றது அல்லது வாங்க உத்தேசிக்கிறது என்பது புலனுகும். அதன் தொகை :

1962–63 ... 186 கோடி ரூபாய்
1963–64 (திருத்த மதிப்பீடு) ... 135 ,, ,,
1964–65 (திட்ட மதிப்பீடு) ... 86 ,, ,,

ரூபாய் நோட்டுகளைப் புதிதாக அச்சடித்ததையும், ரொக்கத்திலிருந்து எடுத்ததையும் சேர்த்துக்கொண்டால், பற்றுக்குறை முறையில் பெற்றது அல்லது பெற உத்தேசித்திருப்பது (Deficit Financing) மொத்தம் :

1962–63 ... 173 கோடி ரூபாய்
1963–64 ... 158 ,, ,,
1964–65 ... 91 ,, ,,

பாகுபாட்டுக் கணக்குகளிலிருந்து வேறு விளக்கங்களும் பெறப்படுகின்றன :—

**மொத்தச் செலவு :**

மத்திய அரசாங்கத் துறை வாணிப நிறுவனங்களின் நிர்வாகச் செலவுகளை நீக்கிவிட்டால், மொத்தச் செலவு அளவு பின்வருமாறு இருக்கும் :—

| விவரம் (1) | 1962–63 (கணக்கு) (2) | 1963–64 (திருத்த மதிப்பீடு) (3) | 1964–65 (திட்ட மதிப்பீடு) (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 1. இறுதியான செலவு :— | | | |
| (a) நேர் பலனில்லாத உபயோகச் செலவு [கணக்கு (1)] ... | 683 | 1,021 | 1,079 |
| (b) மொத்த மூலதன அமைப்பு [நிலையான மூலதனம் ; சேமிப்பு சாமான்கள்—கணக்கு (3)] ... | 446 | 578 | 607 |
| | 1,129 | 1,599 | 1,686 |

| விவரம் (1) | 1962-63 (கணக்கு) (2) | 1963-64 (திருத்த மதிப்பீடு) (3) | 1964-65 (திட்ட மதிப்பீடு) (4) |
|---|---|---|---|
| 2. கணக்கு மாற்றங்கள் :— | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| (a) நடைமுறை மாற்றங்கள் [கணக்கு (1)] ... | 514 | 561 | 653 |
| (b) மூலதன மாற்றங்கள் [கணக்கு (3)] ... | 88 | 88 | 103 |
| | 602 | 649 | 756 |
| 3. நிதி முதலீடுகளும் கடன்களும் (நிகரம்) [கணக்கு (4)] ... | 647 | 774 | 746 |
| 4. மொத்தச்செலவு (1+2+3)... | 2,378 | 3,022 | 3,188 |

மேற்கண்ட மூன்று ஆண்டிலும், இறுதியான செலவு எனக் கொள்ளக்கூடியது, மொத்தச் செலவில், முறையே 47, 53, 53 சத விகிதம் ஆகின்றது. இது மத்திய அரசாங்க நிர்வாகத்துக்குத் தேவைப் படும் பொருள்கள், சேவைகள், அந்த அந்த அரசாங்கத்தின் மூலதன அமைப்பு—இவைகளின் அளவாகும். எஞ்சிய பகுதி மாநில அரசாங் கங்கள், அரசாங்கத் துறையல்லாத வாணிப நிறுவனங்கள் போன்றவை களுக்குத் தேவைப்படுவது ஆகும்.

**மூலதன அமைப்பு**

இறுதியான செலவில், மூலதனச் செலவின் பங்கு, முறையே 39, 36, 36 சதவிகிதம் ஆகும். மொத்த மூலதனச் செலவில் நிலையான சொத்துக்கள், சேமிப்புச் சாமான்கள், இவைகளுக்கான பகுதி சுமார் 83 முதல் 87 சதவிகிதம் எனலாம். எஞ்சிய பகுதி பழைய சொத்துக் களைப் புதிப்பிக்கவும், மாற்றவும் ஆன செலவின் அளவாகும்.

கணக்குகள் (3), (4)-ல் கண்ட விவரங்களிலிருந்து மாநிலங்களுக் கும், மத்திய அரசாங்கத்துறை சம்பந்தமில்லாத நிறுவனங்கள், ஸ்தல ஸ்தாபனங்கள் போன்றவைக்கு உதவியாகக் கொடுத்த தொகை முறையே ரூபாய் 746 கோடி (1962-63), 978 கோடி (1963-64), 1,022 கோடி (1964-65) ஆகும். மத்திய அரசாங்கத்துக்கான மூலதனச்

செலவையும் சேர்த்தால், நிகர மூலதன அமைப்புச் செலவு முறையே ரூபாய் 1,115 கோடி, 1,483 கோடி, 1,552 கோடியாகும்.

**வருமான உற்பத்தி**

நிர்வாகம், கட்டடம் முதலிய பணிகள், இவைகளைச் சார்ந்த பணி யாளர்களின் ஊதியம், கூலியென்ற வகையிலும், அரசாங்கத்துறை வாணிப நிறுவனங்களின் உற்பத்தி என்ற வகையிலும், மொத்தம் பொது வருமான உற்பத்திற்கு வழிசெய்த அளவு மூன்று ஆண்டுகளி லும் முறையே ரூபாய் 836 கோடி, 1,011 கோடி, 1,109 கோடி எனலாம்.

**மூன்றாவது திட்டத்தின் கீழ்ச் செலவு**

இதன் அளவு பின்வருமாறு :—

| விவரம் (1) | 1962–63 (கணக்கு) (2) | 1963–64 (திருத்த மதிப்பீடு) (3) | 1964–65 (திட்ட மதிப்பீடு) (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 1. நேர் பலனில்லாத உபயோகச் செலவு ... | 152 | 182 | 238 |
| 2 நிகர மூலதன அமைப்பு ... | 325 | 397 | 426 |
| 3. பிறர் திட்ட முயற்சிக்கு அளிக்கும் உதவி (மாநிலங்கள் முதலியன) ... | 655 | 755 | 882 |
| மொத்தம் ... | 1,132 | 1,334 | 1,546 |

## மாநில அரசாங்கங்களின் நிதி நிலை

மத்திய அரசாங்கத்தின் நிதி நிலைப் போக்கைப் பல கோணங்களில் ஆராய்ந்தோம். இனி மாநில அரசாங்கங்களின் நிதி நிலையை ரிசர்வ் பாங்கு வெளியீட்டு முறையைப் பின்பற்றிப் பரிசீலிக்கலாம்.

## ரெவின்யூ கணக்கு—தொகுப்பு வருவாய் (1), (3)

| விவரம் (1) | 1951–52 (2) | 1955–56 (3) | 1960–61 (4) | 1961–62 (5) | 1962–63 (6) |
|---|---|---|---|---|---|
| **வரி வருவாய்** | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | | |
| I. வருமானத்தின் மீது வரி (வருமான வரி ; விவசாய வரி ; தொழில் வரி.) ... | 57 | 63 | 101 | 104 | 106 |
| II. சொத்துக்களின் மீதும், மூலதனங்களின் மீதும் வரி (சொத்து வரி; நிலவரி; முத்திரைத் தாள்கள் ; பத்திரப் பதிவுக் கட்டணங்கள் ; நகர ஸ்தாவர சொத்து வரி.) ... | 75 | 111 | 144 | 149 | 179 |
| III. பொருள்கள், சேவைகள்—இவை மீது வரி, (யூனியன் ஆயத் தீர்வையில் பகுதி ; மாநில ஆயத் தீர்வை ; பொது விற்பனை வரி ; மோட்டார் எண்ணெய் விற்பனை வரி ; மோட்டார் வண்டிகள் வரி ; ரெயில்வே பிரயாணிகள் வரி ; கேளிக்கை வரி ; மின்சாரத் தீர்வைகள், இதர வரிகளும் தீர்வைகளும்) ... | 149 | 182 | 380 | 409 | 509 |
| IV. மொத்த வரி வருமானம் (I + II + III) ... | 281 | 356 | 625 | 662 | 794 |
| **வரி அல்லாத வருமானம்** | | | | | |
| V. நிர்வாக வருமானம் (2) ... | 38 | 62 | 140 | 85 | 93 |

| விவரம் (1 | 1951–52 (2) | 1955–56 (3) | 1960–61 (4) | 1961–62 (5) | 1962–63 (6) |
|---|---|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | | |
| VI. அரசாங்கத் தொழில் நிறுவனங்களிலிருந்து வருமானம் (நிகரம்) (காட்டு வளம், பாசனம், மின்சாரத் திட்டங்கள், சாலைத் திட்டங்கள், தொழில்கள் முதலியன) ... | 25 | 31 | 47 | 47 | 57 |
| VII. மானியங்களும் வேறு உதவிகளும் (2) ... | 25 | 53 | 122 | 195 | 210 |
| VIII. இதர இனங்கள் ... | 27 | 52 | 78 | 84 | 130 |
| IX. மொத்த வரி அல்லாத வருமானம் (V, VI, VII, & VIII) ... | 115 | 198 | 387 | 411 | 490 |
| மொத்த வருவாய் (IV + IX) ... | 396 | 554 | 1,012 | 1,073 | 1,284 |

குறிப்பு :—

1. 1960–61 முதல்தான் காஷ்மீரின் வருவாயும் செலவும் தொகுப்பு அறிக்கையில் சேர்க்கப்பட்டுள்ளன.

2. மத்திய அரசாங்கத்திலிருந்து பெற்ற மானியங்கள் 1960–61 முடிய ‘நிர்வாக வருவாய்’ என்ற தலைப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. 1961–62 முதல், இவை ‘மானியங்களும் வேறு உதவிகளும்’ என்ற தலைப்பில் சேர்க்கப்பட்டுள்ளன.

3. 1963–64, 1964–65, 1965–66 ஆண்டுகளின் புள்ளிகள் இணைப்பு 5இல் கொடுக்கப்பட்டுள்ளன.

மாநில அரசாங்கங்கள் எல்லாமாக முதல் திட்டத் தொடக்க ஆண்டில் வரி இனத்தில் சுமார் 280 கோடி ரூபாய் பெற்றன. முதல் திட்ட கால இறுதியில் இது சுமார் 350 கோடி ரூபாய்க்குமேல் உயர்ந்தது. இரண்டாவது திட்டத்தின் இறுதியில் இது சுமார் 625 கோடி ரூபாயளவுக்கு, மேலும் உயர்ந்தது. மூன்ருவது திட்ட நடுவில் இது கிட்டத்தட்ட 800 கோடி ரூபாயாகப் பெருகியது. ஆகவே, ஐந்தாண்டுத் திட்டக் காலமான 12 ஆண்டுகளில், மொத்த வரி

வருமானம் ஏறக்குறைய மூன்று மடங்காக உயர்ந்தது. (இந்த உயர்வு விகிதம் மத்திய அரசாங்கத்தின் உயர்வு விகிதத்தைவிடக் கொஞ்சம் குறைவு.) வரி அல்லாத வருமான வகையில், எல்லா மாநிலங்களும் முதல் திட்டத் தொடக்கத்தில், சுமார் 115 கோடி ரூபாய் பெற்றன. இது மூன்றுவது திட்ட நடுவில், கிட்டத்தட்ட 500 கோடி ரூபாயாக உயர்ந்து விட்டது; அதாவது நான்கு மடங்குக்கு அதிகமான உயர்வு. இந்த உயர்வுக்கு முக்கிய காரணம், திட்டங்களுக்காக மத்திய அரசாங்கத்தி லிருந்து பெற்ற மானியங்களும், வேறு உதவிகளுமே.

### மாநில அரசாங்கங்கள் (தொகுப்பு)

### ரெவின்யூ கணக்கு–செலவு (3)

| விவரம் (1) | 1951–52 (2) | 1955–56 (3) | 1960–61 (4) | 1961–62 (5) | 1962–63 (6) |
|---|---|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | | |
| I. சமூக — அபிவிருத்தி சேவைகள் ... | 196 | 338 | 570 | 660 | 720 |
| II. அபிவிருத்தி வகையில் சேராத செலவு :— | | | | | |
| வரி, தீர்வை – இவைகளை வசூலிக்க ஏற்ற செலவு ... | 27 | 46 | 66 | 62 | 59 |
| கடன் சம்பந்தமான செலவுகள் ... | 8 | 19 | 84 | 100 | 153 |
| இதர செலவினங்கள் ... | 161 | 201 | 268 | 299 | 329 |
| மொத்தம் (II) ... | 196 | 266 | 418 | 461 | 541 |
| மொத்தச்செலவு(I + II) . | 392 | 604 | 988 | 1,121 | 1,261 |
| உபரி வருமானம் (+) பற்றுக்குறை (–) ... | +4 | –50 | +24 | –48 | +23 |

குறிப்பு :—

1. அபிவிருத்தி இனச் செலவு, அவ்வகையில் சேராத செலவு என்ற பாகுபாடு பொதுவாக கணக்குப் பெருந் தலைப்புகளைப்பற்றிச் செய்யப்பட்டுள்ளது.

2. முந்திய ஆண்டுகளில், மற்றைய அரசாங்கத் தொழில் நிறுவனங்களிலிருந்து வட்டி என்ற வகையில் பெற்ற தொகைகள் அரசாங்க வட்டிச் செலவுகளினின்று கழிக்கப்பட்டன; ஆனால், 1962–63-லிருந்து இப்படிக் கழிக்கப்படுவதில்லை. ஆகவே, மேற்கண்ட புள்ளிகளில் 1962–63 ஆண்டில் மட்டும் கடன் சம்பந்தமான செலவின் முழுப்பகுதியும் சேர்க்கப்பட்டுள்ளது.

3. 1963–64, 1964–65, 1965–66 ஆண்டுகளின் புள்ளிகள் இணைப்பு 6-ல் கொடுக்கப்பட்டுள்ளன.

## மாநில அரசாங்கங்கள் (தொகுப்பு)

## ரெவின்யூ க்ணக்கு அல்லாத மற்றைய கணக்குகள்* (Capital Budget)

| விவரம் (1) | 1951–52 (2) | 1955–56 (3) | 1960–61 (4) | 1961–62 (5) | 1962–63 (6) |
|---|---|---|---|---|---|
| வரவு | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | | |
| 1. மத்திய அரசாங்கத்திலிருந்து பெற்ற கடன் ... | 74 | 262 | 346 | 451 | 526 |
| 2. மற்றைய கடன்கள் ... | 16 | 74 | 121 | 118 | 98 |
| 3. நிதியிடாக் கடன் ... | 3 | 9 | 16 | 14 | 14 |
| 4. மாநில அரசாங்கங்களுக்குள் கடன் தீர்க்கும் வகையில் வந்த வரவு ... | 24 | 27 | 48 | 54 | 62 |
| 5. வைப்புத் தொகைகள், முன் பணங்கள் போன்றவை (நிகரம்) ... | 18 | 10 | 49 | 63 | 78 |
| மொத்த வருவாய் (1 to 5). | 135 | 382 | 580 | 700 | 778 |

* 1963–64, 1964–65, 1965–66 ஆண்டுகளின் புள்ளிகள் இணைப்பு 7-ல் தரப்பட்டுள்ளன.

| விவரம் (1) | 1951–52 (2) | 1955–56 (3) | 1960–61 (4) | 1961–62 (5) | 1962–63 (6) |
|---|---|---|---|---|---|
| **பற்று** | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | | | |
| 1. மூலதனச் செலவு—அபிவிருத்தித் திட்டங்கள் ... | 100 | 206 | 294 | 315 | 330 |
| 2. வேறு இனச் செலவு (அரசாங்க வானிபம் ; ஜமீந்தாரி ஒழிப்பு சம்பந்தமான செலவு, முதலியன (நிகரம்) ... | 27 | –7 | 24 | 5 | 24 |
| 3. மொத்த மூலதனச் செலவு (1 + 2) ... | 127 | 199 | 318 | 320 | 354 |
| 4. மத்திய அரசாங்கத்திற்குத் திருப்பிக் கொடுத்த கடன் ... | 12 | 25 | 114 | 149 | 163 |
| 5. மற்றைய கடன்களைத் திருப்பிக் கொடுத்தல் ... | 1 | 15 | 21 | 20 | 27 |
| 6. மாநில அரசாங்கங்கள் பல இனங்களில் கடன் கொடுத்த வகையில் பற்று ... | 49 | 97 | 180 | 180 | 205 |
| மொத்தப் பற்று(3to6)... | 189 | 336 | 633 | 669 | 749 |
| உபரி (+) அல்லது பற்றுக்குறை (–) ... | –54 | +46 | –53 | +31 | +29 |

## மாநில அரசாங்கங்கள் (தொகுப்பு)

### கடன் நிலை*

| ஆண்டு (இறுதி) | நெடுங் காலக் கடன் | குறுகிய காலக் கடன் | மத்திய அரசாங் கத்திலிருந்து பெற்ற கடன் | வேறு இனக் கடன்கள் | நிதியிடாக் கடன் | மொத்தக் கடன் |
|---|---|---|---|---|---|---|
| | (எஞ்சி நிற்கும் பகுதி—ரூபாய் கோடிக் கணக்கில்) | | | | | |
| 1951–52 | 134 | 16 | 238 | ... | 57 | 445 |
| 1955–56 | 265 | 8 | 876 | ... | 83 | 1,232 |
| 1960–61 | 493 | 42 | 2,016 | 51 | 135 | 2,737 |
| 1961–62 | 570 | 50 | 2,314 | 64 | 150 | 3,148 |
| 1962–63 | 654 | 25 | 2,677 | 77 | 163 | 3,595 |

மத்திய அரசாங்கத்தின் கடன் சுமை, திட்ட காலமான 12 ஆண்டுகளில் சுமார் 5,200 கோடி ரூபாய் அளவுக்குப் பெருகியது என்று கண்டோம். அதே சமயத்தில், மாநில அரசாங்கங்களின் கடன் சுமை, சுமார் 3,150 கோடி ரூபாய் அளவுக்கு ஏறியது. இதில் மத்திய அரசாங்கத்திலிருந்து பெற்ற கடன் பாக்கி சுமார் 2,439 கோடி ரூபாய் (77 சதவிகிதம்). மத்திய அரசாங்கத்துக்கு இருப்பதுபோல் மாநில அரசாங்கங்களுக்கும் அதிக அளவில் சொத்து இருக்கின்றது; (புள்ளி விவரம் தொகுப்பாய் இல்லை) இது கடனுக்கு ஈடாகும். மாநில அரசாங்கங்கள் தங்கள் தொகு நிதியின் பேரில் வாங்கும் கடனுக்கும் சட்டபூர்வமாக ஒரு வரம்பு அமைக்கலாம் என்று அரசியல் அமைப்பில் விதியுள்ளது; ஆனால், அத்தகைய வரம்பு 1964–65 ஆண்டு இறுதிவரை ஏற்படவில்லை; மாநில அரசாங்கங்கள் மத்திய அரசாங்கத்திற்குக் கடன்பட்டிருக்கும் வரையில், வேறு கடன் வாங்குவதற்கு, மத்திய அரசாங்கத்தின் அனுமதியைப் பெறவேண்டும்.

* 1963–64, 1964–65 ஆண்டுகளுக்கான புள்ளி விவரங்களை இணைப்பு 8-ல் காணலாம்.

# 13. வரவு செலவினங்கள் – தனி இயல்

நூலினைப் பகுத்து உணர் —(பாரதி)

முந்திய அத்தியாயத்தில், அரசாங்க வரவுசெலவுப் பெருக்கத்தை ஒரு பொது நோக்காக ஆய்ந்தோம். இப்பொழுது, முக்கியமான வரவு செலவு இனங்களின் இயல்பை, தனியாகவும் சற்று விரிவாகவும் நோக்குவோம்.

## சுங்க வரி

மத்திய அரசாங்கத்தில் வருவாயினங்களில் 'சுங்க வரி' என்பது ஒரு முக்கியமான பகுதியாகவே இருந்து வந்திருக்கிறது. ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்கு முன்பு, அரசாங்கத்தின் மொத்த வரி வருமானத்தில், சுமார் மூன்றில் ஒருபங்கு இந்த இனத்தில் கிடைத்தது. பின்னர் இவ்வினத்தில் வருவாய் பெருகிக் கொண்டே வந்துள்ள போதிலும், மொத்த வரி வருமானத்தில் அதன் பங்கு குறைந்துள்ளது. மூன்ருவது திட்ட கால இறுதியில், அப்பங்கு சுமார் 20 சதவிகிதமாக இருந்தது. இதற்கு மாருக ஆயத் தீர்வைகளால் கிடைத்த வருவாய் மொத்த வரி வருமானத்தில் 15 சத விகிதத்தி லிருந்து 40 சதவிகிதத்துக்கு உயர்ந்து உள்ளது; அதாவது, சுங்க வரியாலும், ஆயத் தீர்வைகளாலும் பெறப்படும் மொத்த வருமானம், மத்திய அரசாங்கத்தின் வரி வருமானத்தில் சுமார் 50 சதவிகிதம் அல்லது அதற்கு அதிகமாக இருந்து வந்துள்ளது.

சுங்க வரியில் பெரும்பாகம், கடல் மார்க்கமாக வெளிநாடுகளி லிருந்து நம் நாட்டுக்கு இறக்குமதியாகும் பொருள்களின் மீது விதிக்கப் படும் தீர்வைகளால் பெறப்படுகின்றது. இறக்குமதி வரிகளுக்கு ஒரு பட்டியல் உள்ளது; இது அடிக்கடி மாற்றப்படும். இப்பட்டியலில், பலவிதப் பொருள்களைத் தனியே குறிப்பிட்டு, அவைகளுக்கு எந்த தரத்தில் வரி விதிக்கப்படவேண்டும் என்று காட்டப்பட்டிருக்கும். மூன்ருவது திட்ட கால நடுவில், இறக்குமதி வரியானது பொதுவாக

60 சதவிகிதத்தில் இருந்தது. அவசியமாக வேண்டுவன அல்ல என்று எண்ணப்படும் சில பொருள்களுக்கு, அவைகளை உபயோகிப்போர் அதிக விலை கொடுக்கலாம் ; ஆகவே, அவைகளுக்கு இறக்குமதி வரி அதிகம். தேவைக்கு வேண்டிய அளவுக்கு, நம் நாட்டிலேயே ஒரு பொருள் உற்பத்தி செய்யப்பட்டால், அத்தகைய பொருளை வெளிநாடு களிலிருந்து இறக்குமதி செய்தால், அவைகளுக்குச் சாதாரணமாக, அதிகப்படியான வரி விதிக்கப்படும். நம் நாட்டில் உற்பத்தி பெருக, அனுகூலமாக இருக்கக்கூடிய இயந்திரங்கள், கச்சாப் பொருள்கள் முதலியவைகளை வெளிநாடுகளிலிருந்து வரவழைத்தால், அவைகளுக் குத் தீர்வை குறைந்த விகிதத்தில் இருக்கும்.

ஆகவே, இறக்குமதியாகும் பொருள்கள்மீது விதிக்கப்படும் வரி களை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம்—(1) வருவாய் வேண்டும் என்கிற முக்கிய நோக்கத்தில் விதிக்கப்படும் தீர்வைகள் (Revenue Duties), (2) காப்புத் தீர்வைகள் (Protective Duties).

முதற் பகுதியில் சேரும் இனங்களிலிருந்து, மூன்ருவது திட்ட கால இறுதியில் (1965–66 ஆண்டு திட்ட மதிப்பீட்டில்) ஆண்டு வருமான மாக சுமார் 374 கோடி ரூபாய் எதிர்பார்க்கப்பட்டது. இந்த இனங் களில் மிகவும் அதிகமான தீர்வைக்கு உட்படுத்தப்பட்ட பொருள்கள் பின்வருமாறு :—

வாசனைக் காரச்சாமான்கள் (Spices), புகையிலை சேர்ந்த பொருள் கள், மது வகைகள், செயற்கைப் பட்டுப் பொருள்கள், தங்க முலாம் பூசிய பொருள்கள், இரும்புச் சாமான்கள், பொன், வெள்ளி முதலியவை களாலான பொருள்கள், மோட்டார் வண்டிகள், கடிகாரம் முதலியன.

காப்புத் தீர்வை விதிக்கப்படும் பொருள்களில், மோட்டார் வண்டிப் பகுதிகள், இரசாயனப் பொருள்கள், சில சாயப் பொருள்கள், சில இயந்திரப் பகுதிகள்—இவை அடங்கியுள்ளன. இந்தத் தீர்வைகள், எவ்வளவு காலத்திற்கு எந்த விகிதத்தில் விதிக்கப்பட வேண்டு மென்பதற்கு, அவ்வப்போது அரசாங்கத்திற்கு ஆலோசனை கூற ஒரு தீர்வைக் கமிஷன் (Tariff Commission) உள்ளது. சாதாரணமாக, உணவுப் பொருள்கள், தொழிலுக்கு வேண்டிய கச்சாப் பொருள்கள், இவைகள் எல்லாம் தீர்வை இல்லாமல் இறக்குமதி செய்யப்படும். எரிபொருளாக உபயோகிக்கப்படும் எண்ணெய்க்கும், சில இயந்திரப் பகுதிகளுக்கும் வரி விகிதம் குறைவாக இருக்கும். நாட்டிலே உற்பத்தி செய்யப்படும் சில பொருள்களுக்கு ஆயத் தீர்வை விதிக்கப் பட்டால், அவ்வுற்பத்தி நலனைக் கருதி, இறக்குமதி செய்யப்படும் அவ்வகைப் பொருள்களுக்கு, சுங்க வரி விதிக்கப்படும். சாதாரணமாக வும் பொதுவாகவும் உள்ள இறக்குமதி வரி விகிதத்திற்கு மேல்,

அவ்வப்போது அரசாங்கத்தின் தேவைக்குச் சேர உபரி வரியும் விதிக்கப் படுவது உண்டு.

இறக்குமதியான பொருள்களிலிருந்து, காப்பு வரி இனத்தில், மத்திய அரசாங்கத்திற்கு 1965–66 ஆண்டு திட்ட மதிப்பீட்டில் சுமார் 36 கோடி ரூபாய் ஆண்டு வருமானமாக எதிர்பார்க்கப்பட்டது. ஆகவே, இறக்குமதிப் பொருள்களின் மீது விதிக்கப்பட்ட இருவகை வரிகளால், மூன்றாவது திட்ட காலத்தில் அரசாங்கத்திற்கு மொத்தமாக ஆண்டுக்கு 400 கோடி ரூபாய்க்குமேல் வருமானம் எதிர்பார்க்கப் பட்டது.

நம் நாட்டிலிருந்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் பொருள்கள் மீதுகூட, சுங்க வரி விதிப்பது உண்டு. நாட்டில் ஏற்று மதியை அதிகப்படுத்துவது பொருளாதார வகையில் நலமாவதால், இவ்வரிகளுக்கு உட்படுத்தப்படும் பொருள்கள் வரவரக் குறைந்தே வந்திருக்கின்றன. மூன்றாவது திட்ட கால இறுதியில், பருத்தி, தேயிலை, சில வேளாண்மைப் பொருள்கள், அரக்கு (lac), அப்ரகம் (mica), கச்சா சணல் முதலியவைகளின் சம்பந்தமாக விதிக்கப்பட்ட ஏற்றுமதி வரிகளால் அரசாங்கத்திற்கு வருவாய் 2 கோடி ரூபாய் அளவில்தான் கிடைக்கும் என எதிர்பார்க்கப்பட்டது. கடல் மார்க்க மாக அல்லாது, தரை மார்க்கமாகவும், ஆகாய மார்க்கமாகவும் வரும் பொருள்கள்மீதும் சுங்க வரி விதிக்கப்படும். சுங்க வரிகளால் பெறப் படும் வருவாய் முழுவதும், மத்திய அரசாங்கத்துக்கே உரியது.

## யூனியன் ஆயத் தீர்வைகள்

ஐந்தாண்டுத் திட்ட காலங்களுக்குமுன், ஆயத் தீர்வைகளால் மத்திய அரசாங்கத்திற்குக் கிடைத்த வருமானம் சுமார் 67 கோடி ரூபாயாக இருந்தது. இது, அக்காலத்தில் கிடைத்த மொத்த வரி வருமானத்தில், சுமார் 20 சதவிகிதத்திற்குச் சற்றுக் குறைவாக இருந்தது. அந்தக் காலத்தில், இந்த வருவாயிலிருந்து ஒரு பகுதியும் மாநிலங்களுக்கு அளிக்கப்படவில்லை. நாட்டில் உற்பத்தி பெருகப் பெருக, வெளிநாட்டு இறக்குமதி குறைந்துகொண்டே வருகின்றது. இதன் விளைவாக, அரசாங்க வருமானத்தில் சுங்க வரிப்பகுதி அருகிக் கொண்டே வருவதைக் கண்டோம். ஆகவே, நாட்டு உற்பத்திப் பொருள்கள் மீது ஆயத் தீர்வைகள் பரவலாக விதிக்கும் முறை வந்துள் ளது; இந்த இனத்தில், மத்திய அரசாங்கத்திற்குக் கிடைத்த ஆண்டு வருமானம், 800 கோடி ரூபாய்க்கும் அதிகமாக இருக்கும் என எதிர் பார்க்கப்பட்டது. அரசாங்கத்தின் மொத்த வரி வருமானமும் பெருகிக் கொண்டே வந்துள்ள போதிலும், ஆயத் தீர்வைகளால் மட்டும் பெறப் படும் வருமானம், மொத்த வரி வருமானத்தில் சுமார் 40 சதவிகிதமாகப்

பெருகி வந்துள்ளது. நிதிக் கமிஷன்களின் சிபாரிசுக்கு இணங்க, ஆயத் தீர்வை வருவாயை எல்லா மாநிலங்களுக்கும் பகிர்ந்து அளிக்கும் முறையும் வளர்ந்து வந்துள்ளது. 1965–66 ஆண்டு திட்ட மதிப்பீட்டின்படி இந்த இன மொத்த வருவாயில், ஆறில் ஒரு பங்குக்கு மேல் மாநிலங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்பட்டது. ஆகவே, இந்த இன வருவாய், மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்கும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. இந்தத் தீர்வைகளை மூன்று விதமாகப் பிரித்து ஆராயலாம் :

(1) ஆதாரத் தீர்வைகள் (Basic Excise Duties)
(2) விசேஷத் தீர்வைகள் (Special Duties of Excise)
(3) உபரித் தீர்வைகள் (Additional Duties of Excise)

### ஆதாரத் தீர்வைகள்

ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்கு முன், ஆதாரத் தீர்வையானது சுமார் ஒரு டஜன் பொருள்கள்மீதுதான் விதிக்கப்பட்டது. இவைகளில் முக்கியமானவை :

(1) புகையிலை
(2) பருத்தி உடைகள்
(3) நெருப்புப் பெட்டிகள்
(4) சர்க்கரை
(5) மோட்டார் டயர்கள்–குழாய்கள்
(6) தேயிலை
(7) மோட்டார் எண்ணெய்
(8) தாவரப் பொருள்கள்

மூன்றாவது திட்ட காலத்தில், இந்தத் தீர்வை இன்னும் பல பொருள்களின் மீது விதிக்கப்பட்டது. இதன் விளைவாக, ஆதாரத் தீர்வைகளிலிருந்து மட்டும் மத்திய அரசாங்கத்திற்குக் கிடைத்த மொத்த வருமானம் சுமார் 780 கோடி ரூபாய் ஆகியுள்ளது. பார்லிமென்டில் சமர்ப்பிக்கப்பட்ட 1965–1966 ஆண்டிற்கான முதல் பட்ஜெட்டில், முக்கியமான பொருள்களின் வருவாய் மதிப்பீடு பின்வருமாறு விவரிக்கப்பட்டது :—

| பொருள்கள் | வருவாய் ரூபாய் - கோடிக்கணக்கில் |
|---|---|
| மோட்டார் எண்ணெய் ... ... | 68 |
| மண்ணெண்ணெய் ... ... ... | 45 |
| சர்க்கரை ... ... ... | 54 |
| நெருப்புப் பெட்டிகள் ... ... ... | 24 |
| மோட்டார் டயர்கள்—குழாய்கள் ... ... | 22 |
| புகையிலை ... ... ... | 74 |
| தாவரப் பொருள்கள் ... ... ... | 13 |
| காப்பியும் தேயிலையும் ... ... | 16 |

| பொருள்கள் | (ரூபாய் - கோடிக்கணக்கில்) வருவாய் |
|---|---|
| பருத்தி ஆடைகள் ... ... ... | 59 |
| சிமிட்டி ... ... ... | 22 |
| காகிதம் ... ... ... | 17 |
| டீசல் எண்ணெய், தொழிற்சாலை எரிபொருள் முதலியவை ... ... ... | 102 |
| பருத்தி நூல்கள் ... ... ... | 23 |
| இரும்பு, எஃகுப் பொருள்கள் ... ... | 49 |

மாநிலங்களுக்குப் பகிர்ந்து கொடுப்பதற்காக, கணக்கில் எடுத்துக் கொள்ளப்படும் பொருள்கள், நிதிக் கமிஷன்களின் சிபாரிசுகளால் பெருகிக்கொண்டே வந்திருக்கின்றன. 1965–66 ஆண்டில், இந்தப் பொருள்களின் எண்ணிக்கை 35 ஆகவும், பகிர்ந்து கொடுக்கவேண்டிய தொகை 20 சதவிகிதமாகவும் இருந்தன. மாநிலம் ஒவ்வொன்றுக்கும் அளிக்கப்படவேண்டிய விகிதத்தை, ஜனத்தொகை, பொருளாதார வளர்ச்சி முதலியவற்றைக் கருத்திற் கொண்டு மூன்றுவது திட்டக் கமிஷன் நிர்ணயித்தது; இதன்படி மாநிலங்களின் பகுதி பின் வருமாறு:—

| மாநிலம் | சதவிகிதம் |
|---|---|
| ஆந்திரப் பிரதேசம் ... ... | 8·23 |
| அஸ்ஸாம் ... ... ... | 4·23 |
| பீஹார் ... ... ... | 11·56 |
| குஜராத் ... ... ... | 6·45 |
| காஷ்மீர் ... ... ... | 2·02 |
| கேரளா ... ... ... | 5·46 |
| மத்தியப்பிரதேசம் ... ... | 8·46 |
| தமிழ் நாடு ... ... ... | 6·08 |
| மகாராஷ்டிரம் ... ... ... | 5·73 |
| மைசூர் ... ... ... | 5·82 |
| ஒரிஸ்ஸா ... ... ... | 7·07 |
| பஞ்சாப் ... ... ... | 6·71 |
| ராஜஸ்தான் ... ... ... | 5·93 |
| உத்தரப் பிரதேசம் ... ... | 10·68 |
| மேற்கு வங்காளம் ... ... | 5·07 |
| மொத்தம் ... | 100·00 |

பார்லிமென்டில் சமர்ப்பிக்கப்பட்ட 1965–66 ஆண்டிற்கான முதல் பட்ஜெட்டில், பகிர்ந்து கொடுக்கப்படும் பொருள்களிலிருந்து மட்டும்

பெறக்கூடிய மொத்த நிகர வருவாய், சுமார் 474 கோடி ரூபாய் என்றும், மாநிலங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கும் தொகை சுமார் 95 கோடி ரூபாய் என்றும் மதிப்பிடப்பட்டிருந்தது. மோட்டார் எண்ணெய் மீது விதிக்கும் தீர்வையிலிருந்து பெறும் வருவாய், மாநிலங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்படாது, மத்திய அரசாங்கத்துக்கே உரியதாகிறது. இது போல், 1960–61 ஆண்டின் ஒவ்வோர் இனத்திலும் 50 இலட்ச ரூபாய்க்குக் குறைவாக வருவாய் வந்தவைகளும் பகிர்ந்துகொள்ளும் கணக்கில் சேரவில்லை.

குறிப்பு : ஆயத் தீர்வை வருமானத்தைப் பகிர்ந்து கொடுக்கும் முறை அரசியல் அமைப்பின் 272ஆம் பிரிவில் பொதுவாகக் கூறப்பட்டுள்ளது. நாலாவது திட்டக் கமிஷன், மாநிலங்களுக்கு இவ்வின வருமானத்தைப் பகிர்ந்து கொடுப்பதற்கு, எல்லாப் பொருள்களையும் கணக்கில் எடுத்துக்கொள்ளவேண்டும் எனச் சிபாரிசு செய்துள்ளது.

**விசேஷத் தீர்வைகள்**

புகையிலை, மோட்டார் எண்ணெய், டீசல் எண்ணெய், சிமிட்டி மோட்டார் டயர்கள்—குழாய்கள், மோட்டார் வண்டிகள், காகிதம்–இவை போன்ற சில பொருள்களுக்கு ஆதாரத் தீர்வை தவிர, விசேஷத் தீர்வையும் 1963ஆம் ஆண்டில் விதிக்கப்பட்டு, நீடித்து வருகிறது. இந்த விசேஷத் தீர்வையானது, ஆதாரத் தீர்வையில் பத்தில் ஒன்றிலிருந்து, மூன்றில் ஒரு பங்குவரை இருந்தது. இதனல் பெறப்படும் வருமானம் முழுவதும் மத்திய அரசாங்கத்தையே சேருகிறது ; அதாவது, இந்த விசேஷ வருமானத்தில் ஒரு பகுதியும் மாநிலங்களுக்கு அளிக்கப்படுவதில்லை. 1965–66 ஆண்டு திட்ட மதிப்பீட்டில், இதனல் பெறக்கூடிய ஆண்டு வருமானம் சுமார் 63 கோடி ரூபாய் என்று குறிக்கப்பட்டது.

**உபரித் தீர்வைகள்**

சர்க்கரை, புகையிலை, பருத்தி ஆடைகள், பட்டு ஆடைகள், கம்பளி ஆடைகள், செயற்கைப் பட்டுகள் போன்ற சில முக்கியப் பொருள்களுக்கு 1957ஆம் ஆண்டிலிருந்து, உபரித் தீர்வைகள் விதிக்கப்பட்டு வருகின்றன. மாநில அரசாங்கங்களின் உடன்பாட்டுடன் இதற்கான சட்டம் நிறைவேற்றப்பட்டது ; அதன்படி, உபரித் தீர்வைக்கு உட்பட்ட பொருள்களுக்கு, மாநில அரசாங்கம் விற்பனை வரி விதிக்கக்கூடாது. இது நாட்டின் பொது நலத்தைக் கருதிச் செய்யப்பட்ட ஏற்பாடு ஆகும். மூன்ருவது திட்டகால இறுதி ஆண்டில் (1965–66), இந்த உபரித் தீர்வைகளால் பெறக்கூடிய நிகர ஆண்டு வருவாய் சுமார் 47 கோடி ரூபாய் என்று மதிப்பிடப்பட்டது.

இந்தத் தீர்வைகளால் கிடைக்கும் நிகரத் தொகை முழுவதும், மாநிலங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்படுகிறது. பகிர்ந்து கொடுக்கும்

முறை சட்ட ரீதியாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. 1965–66 ஆம் ஆண்டில் அமலிலிருந்த முறைப்படி, காஷ்மீருக்கு நிகர வருவாயில் 1·50 சதவிகிதமும், நாகாலாந்துக்கு 0·05 சதவிகிதமும் பகிர்ந்து கொடுக்கப் படும். அரசாங்கம் முன் விதித்திருந்த விற்பனை வரி தவிர்க்கப்பட்ட தால் உண்டான நஷ்டத்திற்கு ஈடு செய்யும் வகையில், ஒரு குறிப்பிட்ட தொகை மற்றைய மாநில அரசாங்கம் ஒவ்வொன்றுக்கும் உத்தரவாத மாக அளிக்கப்படும்.

நிகர வருவாய், உத்தரவாதமாக அளிக்கப்படவேண்டிய தொகைக்கு மேல் இருந்தால், அந்த உபரித் தொகையும் குறிப்பிட்ட சதவிகிதத்தில் மாநில அரசாங்கங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்படும். மத்திய அரசாங் கத்தின் 1965–66 ஆண்டு பட்ஜெட்டில் பின்வரும் புள்ளிகள் கொடுக்கப் பட்டுள்ளன :—

| மாநில அரசாங்கம் | உத்தரவாதமாக அளிக்கப்படும் தொகை (ரூபாய்-இலட்சக் கணக்கில்) | உபரி வருமா னத்தில் பங்கு |
|---|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | 2,35 | 7·75% |
| அஸ்ஸாம் | 85 | 2·50% |
| பீஹார் | 1,30 | 10·00% |
| குஜராத் | 3,24 | 5·40% |
| கேரளா | 95 | 4·25% |
| மத்தியப் பிரதேசம் | 1,55 | 7·00% |
| தமிழ்நாடு | 2,85 | 9·00% |
| மகாராஷ்டிரம் | 6,38 | 10·60% |
| மைசூர் | 1,00 | 5·25% |
| ஒரிஸ்ஸா | 85 | 4·50% |
| பஞ்சாப் | 1,75 | 5·25% |
| ராஜஸ்தான் | 90 | 4·00% |
| உத்தரப் பிரதேசம் | 5,76 | 15·50% |
| மேற்கு வங்காளம் | 2,81 | 9·00% |
| | 32,54 | 100·00 |

குறிப்பு :—யூனியன் ஆயத் தீர்வைகளிலிருந்து மாநில அரசாங் கங்கள்பெறும் தொகை, அந்தந்த அரசாங்கத்தின் பட்ஜெட்டில் ‘மத்திய ஆயத்தீர்வையில் மாநிலப் பங்கு’ என்ற ஒரு தனித் தலைப்பின் கீழ்ப் பதிவு செய்யப்படுகிறது. தமிழ் நாட்டு அரசாங்கத்தின் 1965–66 ஆண்டிற்கான பட்ஜெட்டில், இந்த இனத்தில் 10·90 கோடி அல்லது சுமார் 11 கோடி ரூபாய் வருமானமாக மதிப்பிடப்பட்டது.

## வருமான வரி

இந்த வரியில் இரு முக்கியப் பிரிவுகள் உண்டு: (1) கார்ப்பொரேஷன் வரி (2) மற்ற வருமான வரி. மூன்ருவது திட்ட இறுதி ஆண்டு 1965–66க்கான மத்திய அரசாங்க பட்ஜெட்டில், இந்த இனத்தில் பெறக் கூடிய வருமானத்திற்குப் பின்வருமாறு மதிப்பீடு செய்யப்பட்டது :—

| விவரம் | (ரூபாய் கோடிக் கணக்கில்) |
|---|---|
| **1. கார்ப்பொரேஷன் வரி** | |
| அ. சாதாரண வருமானம் ... ... | 369 |
| ஆ. அமித லாப வரி (Super Profits Tax) ... | 2 |
| இ. உபரி வரி (Sur Tax) ... ... | 15 |
| மொத்தம் ... | 386 |
| **2. மற்ற வருமான வரி** | |
| அ. சாதாரண வருமானம் ... ... | 283 |
| ஆ. உபரி வரி (மத்திய அரசாங்கம்—Sur-charge - Central) ... ... | 8 |
| இ. உபரி வரி (சிறப்பு - Special) ... | 1 |
| ஈ. அதிக உபரி வரி (Additional Sur-charge—யூனியன்) ... ... | 2 |
| மொத்தம் ... | 294 |
| பெரு மொத்தம் ... | 680 |

அரசியல் அமைப்பு 270 ஆம் பிரிவின்படி, கார்ப்பொரேஷன் வரி அல்லாத மற்றைய வருமான வரியிலிருந்து பெறும் வருவாய் மாநிலங்களோடு பகிர்ந்து கொள்ளப்படுகிறது. ஆகவே, இந்த இனத்தில் வரும் வருவாயைப் பற்றி, மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்கும் பெரும் அளவில் அக்கறை உண்டு. வரி விகிதங்களில் அடிக்கடி மாற்றம் செய்யப்படுவதால், இந்த இனத்து வருமானம் மாறிக்கொண்டே வரும். கார்ப்பொரேஷன் வரி அல்லாத மற்ற இனத்தில் பெறப்படும் நிகர 'வருவாயில், மத்திய அரசாங்க ஊழியர்களின் ஊதியத்தின்மீது விதிக்கப்பட்ட வகையிலும், மத்திய அரசாங்கத்தின் நிர்வாகத்துக்குட்பட்ட பிரதேசங்களிலிருந்து பெறப்பட்ட வகையிலும், தனியாக மத்திய அரசாங்கத்தின் தேவைக்கு என்று விதிக்கப்பட்டுள்ள உபரி வரிகள் மூலமும் பெறப்படும் பகுதி, மத்திய அரசாங்கத்துக்கே உரியது; மீதமுள்ள வருவாய், சட்டத்தில் நிர்ணயிக்கப்பட்டபடி மாநிலங்களுக்குப்

பகிர்ந்து அளிக்கப்படுகிறது. நிதிக் கமிஷன்கள் இவ்விஷயத்தில் மாநிலங்களுக்கு அதிகத் தொகை கிடைக்கும்படிச் சிபாரிசுகள் செய்து கொண்டே வந்து உள்ளன. நாலாவது நிதிக் கமிஷனும் இதனை மேலும் உயர்த்த சிபாரிசு செய்துள்ளது. 1965–66 ஆண்டு முதல் பட்ஜெட் சமயத்தில் அமலிலிருந்த முறைப்படி, பகிர்ந்து கொடுக்கக் கூடிய வருமானத்தில் மாநிலங்களின் பங்கு பின்வரும் சதவிகிதத்தில் இருந்தது :—

| மாநிலஅரசாங்கம் | | | விகிதம் |
|---|---|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | ... | ... | 7·71% |
| அஸ்ஸாம் | ... | ... | 2·44% |
| பீஹார் | ... | ... | 9·33% |
| குஜராத் | ... | ... | 4·78% |
| காஷ்மீர் | ... | ... | 0·70% |
| கேரளா | ... | ... | 3·55% |
| மத்தியப் பிரதேசம் | ... | ... | 6·41% |
| தமிழ் நாடு | ... | ... | 8·13% |
| மகாராஷ்டிரம் | ... | ... | 13·41% |
| மைசூர் | ... | ... | 5·13% |
| ஒரிஸ்ஸா | ... | ... | 3·44% |
| பஞ்சாப் | ... | ... | 4·49% |
| ராஜஸ்தான் | ... | ... | 3·97% |
| உத்தரப் பிரதேசம் | ... | ... | 14·42% |
| மேற்கு வங்காளம் | ... | ... | 12·09% |
| | | | 100·00 |

பார்லிமென்டில், 1965–66 ஆண்டிற்காகச் சமர்ப்பிக்கப்பட்ட முதல் பட்ஜெட்டின்படி, மாநிலங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கவேண்டிய மொத்த வருவாய் சுமார் 123 கோடி ரூபாய் என்று மதிப்பிடப்பட்டது. தமிழ்நாட்டு அரசாங்கப் பட்ஜெட்டில், இந்த இனத்தில் சுமார் 10 கோடி ரூபாய் பெறப்படும் என்று எதிர்பார்க்கப்பட்டது.

## வேளாண்மை வருமான வரி

மேலே சொல்லப்பட்ட வருமான வரியில், வேளாண்மை வரி என்பது சேர்க்கப்படவில்லை. அத்தகைய வரியினால் பெறப்படும் வருமானம் மாநில அரசாங்கங்களையே சார்கின்றது. மாநில அரசாங்கங்களில், இந்த வரியானது வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு முறையில் அமலுக்குக் கொண்டு வரப்பட்டது. எல்லா மாநில அரசாங்கங்களுக்கும் உரிய வருவாயைத் தொகுத்துப் பார்க்கும்போது, ஐந்தாண்டுத் திட்ட

காலஆரம்பத்தில் சுமார் 4 கோடி ரூபாய் தான் இந்த இனத்தில் பெறப் பட்டது. இது நாளடைவில் பெருகியுள்ளது. மூன்ருவது திட்ட காலத் தில், மொத்த வருமானம் 10 கோடி ரூபாய்க்கும் அதிகமென மதிப்பிடப் பட்டது. தமிழ்நாட்டில், வேளாண்மை வருமான வரி, முதன் முதலாக 1955–56வது ஆண்டின் தொடக்கத்திலிருந்து அமலுக்குக் கொண்டு வரப்பட்டது. அப்பொழுது, காப்பி, தேயிலை, ரப்பர், ஏலக்காய், சின் கோனு ஆகிய மலைத் தோட்டப் பயிர்கள் சம்பந்தமாகத்தான் இந்த வரி விதிக்கப்பட்டது. 1958–ஆம் ஆண்டில், இந்த வரியை மற்றப் பயிர்களுக்கும் விஸ்தரிக்கும் வகையில் சட்டம் திருத்தப்பட்டது. இந்த வரியின் விகிதத்தையும் முறைகளையும் பற்றிய விவரங்களை, தமிழ் நாட்டு நிதி நிலைக் குறிப்பில் காணலாம். இந்த இனத்தில், 1965-66 ஆண்டில், சுமார் 130 லட்சம் ரூபாய் கிடைக்கும் என்று மதிப்பிடப் பட்டது.

## சொத்து வரி

இந்த வரி இரண்டு விதமாகும்: (1) வேளாண்மை நிலத்தின் மீது விதிப்பது; (2) வேளாண்மை நிலம் அல்லாத மற்றச் சொத்துக் கள் மீது விதிப்பது. வேளாண்மை நிலத்தின் மீது விதிக்கப்படும் வரி யானது அந்தந்த மாநில அரசாங்கத்துக்குரியதாகும். சொத்து வரிச் சட்டத்தின் கீழ் மத்திய அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டுள்ள பணி யாளர்கள், இந்த வரியை வசூலித்து, வசூல் செய்யவதற்கு ஆன செலவைப் பிடித்துக்கொண்டு, எஞ்சிய தொகையை அதற்குரிய மாநில அரசாங்கத்திடம் கொடுத்து விடுகின்றனர்.

மற்றைய சொத்துக்கள் மீது விதிக்கப்படும் வரி விஷயத்தில், நிகர வருவாயில், சுமார் ஒரு சதவிகிதம் யூனியன் பிரதேசங்களுக்குச் சார்ந்ததென்று ஒதுக்கப்பட்டு விடுகிறது; எஞ்சிய தொகை, இதற்கான சட்டப்படி, மாநில அரசாங்கங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்படுகிறது. ஸ்தாவர சொத்தின் மீது விதிக்கப்படும் வரியானது, ஒவ்வொரு மாநிலத்திலுமுள்ள ஸ்தாவர சொத்தின் மொத்த மதிப்பீட்டுக்கு இணங் கப் பகிர்ந்து கொடுக்கப்படுகிறது. மற்ற இன வருவாய், கீழ்க்கண்ட விகிதத்தில் பகிர்ந்து கொடுக்கப்படுகிறது (1965-66 ஆண்டு முதல் பட் ஜெட்டில் காட்டியபடி) :—

| மாநிலம் | | | விகிதம் |
|---|---|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | ... | ... | 8·34% |
| அஸ்ஸாம் | ... | ... | 2·75% |
| பீஹார் | ... | ... | 10·78% |
| குஜராத் | ... | ... | 4·78% |
| காஷ்மீர் | ... | ... | 0·83% |

| மாநிலம் | | | விகிதம் |
|---|---|---|---|
| கேரளா | ... | ... | 3·92% |
| மத்தியப் பிரதேசம் | ... | ... | 7·51% |
| தமிழ் நாடு | ... | ... | 7·80% |
| மகாராஷ்டிரம் | ... | ... | 9·16% |
| மைசூர் | ... | ... | 5·46% |
| ஒரிஸ்ஸா | ... | ... | 4·08% |
| பஞ்சாப் | ... | ... | 4·71% |
| ராஜஸ்தான் | ... | ... | 4·67% |
| உத்தரப் பிரதேசம் | ... | ... | 17·10% |
| மேற்கு வங்காளம் | ... | ... | 8·11% |
| | | | 100·00 |

பார்லிமென்டில் சமர்ப்பிக்கப்பட்ட 1965–66 க்கான முதல் பட்ஜெட்டில் சொத்து வரியிலிருந்து மொத்த வருமானம் 740 இலட்சம் ரூபாய் கிடைக்கும் என்றும், மாநிலங்களுக்குக் கொடுக்கவேண்டிய மொத்தத் தொகை 717 இலட்சம் ரூபாய் என்றும் மதிப்பிடப்பட்டிருந்தது. தமிழ் நாட்டு பட்ஜெட்டில் (1965–66), இந்த இனத்தில் மொத்தமாக 63 இலட்சம் ரூபாய் பெறலாம் என்று மதிப்பிடப்பட்டது.

குறிப்பு :—வேளாண்மை நிலம் அல்லாத மற்றச் சொத்தின் மீது விதிக்கப்படும் வரியானது, இந்திய அரசியல் அமைப்பின் 269ஆம் பிரிவின் விதிப்படி வசூலிக்கப்படுகிறது. அந்த வருவாயை மாநில அரசாங்கங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கும் முறை, பார்லிமென்டால் செய்யப்படும் சட்டத்தின் கீழ் நிர்ணயிக்கப்படுகிறது. நிதிக் கமிஷன்களும் இந்த விஷயத்தில் சிபாரிசு செய்து வந்துள்ளன.

## செல்வ வரி

பார்லிமென்டால் 1957-ல் செய்யப்பட்ட சட்டத்தின்படி, இந்த வரி விதிக்கப்படுகிறது. ஒவ்வொரு நபருக்கும் அல்லது பாகம் ஆகாத (அவிபக்த) ஹிந்து குடும்பம் ஒவ்வொன்றுக்கும், சொந்தமாயுள்ள நிகர செல்வத்தின் மீது, குறிப்பிட்ட சதவிகிதத்தில் இந்த வரி நிர்ணயிக்கப்படுகிறது. 1964–65 ஆண்டில் அமலில் இருந்த முறைப்படி ஒவ்வொரு 'தனி நபருடைய செல்வத்தில், முதல் ஒரு லட்ச ரூபாய்க்கு இந்த வரி இல்லை. அதற்கு மேலுள்ள தொகைக்கு, படிப்படியாக ½ சதவிகிதத்திலிருந்து 2½ சதவிகிதம் வரைக்கும், அவ்வரி விதிக்கப்படும். பாகம் ஆகாத ஒரு ஹிந்து குடும்பத்தின் விஷயத்தில், முதல்

2 இலட்ச ரூபாய்க்கு வரி இல்லை. எஞ்சிய தொகைக்கு, படிப்படியாக ½ சதவிகிதத்திலிருந்து 2½ சதவிகிதம் வரைக்கும் வரி விதிக்கப்படும். 1965–66ஆம் ஆண்டிற்கான பட்ஜெட்டில், இந்த இனத்தில், மத்திய அரசாங்கத்திற்கு, சுமார் 12 கோடி ரூபாய் வருவாய் கிடைக்கும் என்று மதிப்பிடப்பட்டது. இதில் மாநில அரசாங்கங்களுக்குப் பங்கு இல்லை.

## செலவு வரி

இந்த வரி, முதன் முதலில் பார்லிமெண்ட் சட்டத்தின்படி 1957ஆம் ஆண்டில் அமலுக்கு வந்தது; அது பின்னர் திருத்தப்பட்டது. நடுவில், இரண்டு ஆண்டுகளுக்கு (1962,1963) இந்த வரி விதிப்பு, தாற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டது; 1964-லிருந்து இது மீண்டும் விதிக்கப்படுகிறது. ஒவ்வொரு நிதி ஆண்டிலும், அதற்கு முந்திய ஆண்டில், வரி கொடுக்க வேண்டியவர்களாலும் அவர்களைச் சார்ந்தவர்களாலும், செலவழிக்கப்பட்ட மொத்தத் தொகையைக் கணக்கிட்டு, ஒரு விகிதாசாரப்படி இந்த வரி வசூலிக்கப்படுகிறது. மொத்தச் செலவில், 36 ஆயிரம் ரூபாய் வரையில், இந்த வரி இல்லை; அதற்கு மேற்பட்ட செலவுத் தொகைக்குப் படிப்படியாக, 5 சதவிகிதத்திலிருந்து 20 சதவிகிதம் வரையில் வரி நிர்ணயிக்கப்படுகிறது. 1965-66ஆம் ஆண்டுக்கான பட்ஜெட்டில், இந்த வரியிலிருந்து சுமார் 155 இலட்சம் ரூபாய் மத்திய அரசாங்கத்துக்குக் கிடைக்கும் என்று மதிப்பிடப்பட்டது. இதில் மாநில அரசாங்கங்களுக்குப் பங்கு இல்லை.

## கொடை வரி

1958ஆம் ஆண்டில், பார்லிமெண்டால் செய்யப்பட்ட தனிச் சட்டத்தின் கீழ் இந்த வரி விதிக்கப்பட்டு வருகிறது. ஒவ்வொரு நிதியாண்டிலும், கொடுக்க வேண்டிய வரி அதற்கு முந்திய ஆண்டில் அளிக்கப்பட்ட கொடைத் தொகையின் மீது கணக்கிடப்படுகிறது. 1964ஆம் ஆண்டு நிதிச் சட்டத்தின்படி, இந்த வரியின் விகிதம், 4 முதல் 50 சதவிகிதம் வரைக்கும் இருந்தது. 1965–1966ஆம் ஆண்டு முதல் பட்ஜெட்டில் இந்த வரியிலிருந்து, மத்திய அரசாங்கத்திற்கு சுமார் 310 இலட்சம் ரூபாய் கிடைக்கும் என்று மதிப்பிடப்பட்டது. இந்த வரியிலும், மாநிலங்களுக்குப் பங்கு இல்லை.

## நில வரி

நெடுநாளாக, மாநில அரசாங்கங்களின் வருவாயில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது நிலவரி; விற்பனை வரி போன்ற மற்ற வரிகள் விதிக்கப்பட்டபின், இதன் முக்கியத்துவம் குறைந்து விட்டபோதிலும், மொத்தத் தொகை கணிசமாகவே இருந்து வருகிறது. மூன்றுவது திட்ட ஆரம்பத்தில், நிலவரி இனத்தில் எல்லா மாநிலங்களின் தொகுப்பு

ஆண்டு வருவாய் சுமார் 48 கோடி ரூபாயாக இருந்தது; மூன்ருவது திட்ட காலத்தில், இது சுமார் 120 கோடியாக உயர்ந்திருந்தது. 1965–66ஆம் ஆண்டு பட்ஜெட்டில் தமிழ்நாட்டு அரசாங்கத்திற்கு இந்த இனத்தில், மொத்தமாக 870 இலட்ச ரூபாய் கிடைக்கும் என்று மதிப்பிடப்பட்டது; இதில், பாசனத்திற்குரிய பகுதியும் (390 இலட்ச ரூபாய்) அடங்கும்.

நிலவரி என்னும் தலைப்பில் பதிவு செய்யப்படும் வருவாயில் பெரும் பகுதி சாதாரண வருவாய் என்ற இனத்தில் வருகிறது. 1965–66ஆம் ஆண்டு பட்ஜெட்டில் தமிழ் நாட்டு அரசாங்கத்திற்கு இந்த இனத்தில், 791 இலட்ச ரூபாய்க்கு மேல் கிடைக்கும் என்று மதிப்பிடப்பட்டது. இந்தத் தலைப்பின் கீழ்ச் சேரும் முக்கியமான இனங்கள் பின் வருமாறு :—

(i) ரயத்துவாரி முறையில் உள்ள நிலத்தின் மீது வரி விதிப்பு; [இதில் பாசன நீர் வழங்குவதற்கான தீர்வையும், ஒரு போக நன்செய் நிலத்தில் இரண்டாவது போகம் செய்தால், அதற்கான வரி விதிப்பும், அனுமதியின்றிப் பாசனம் செய்து கொண்டால் அதற்கான தண்டத் தீர்வையும், புன்செய் நிலத்தின் மீது விதிக்கப்படுகிற தண்ணீர்த் தீர்வையும் அடங்கும்.]

(ii) தமிழ் நாட்டிலும் மற்ற மாநிலங்களிலும், ஜமீன்தாரி முறையிலிருந்த நிலங்கள் பெரும்பாலும் அரசாங்கத்தால் மேற்கொள்ளப் பட்டுள்ளபோதிலும், அப்படி மேற்கொள்ளப் படாது எஞ்சிய சில நில உடைமைகளிலிருந்து 'பேஷ்கஷ்' என்ற முறையில் கிடைக்கும் தொகை; மேற்கண்ட நில உடைமைகளிலிருந்து முந்திய காலத்தில் பாக்கி என்ற வகையில் பெறப்பட வேண்டிய 'பேஷ்கஷ்'; அனுகூல உரிமை முறைப்படி உள்ள இனும் முதலிய கிராமங்கள் மீது விதிக்கப் படும் 'விடு–வரி' (Quit Rent).

(iii) சில இனும்கள் மீது 'விடு–வரி' போன்ற பலவின வருமானங்கள்; பட்டா அளிக்கப்படாமலேயே அல்லது புறம்போக்காக உள்ள நிலங்களில் சாகுபடி செய்தால், அதற்காக பெறப்படும் வருவாய்; நகரப் பகுதிகளில் 'மனை வரியும்', ஆற்று நடுவேயுள்ள தீவுகளிலிருந்து கிடைக்கும் வருவாயும்;

(iv) ரெவின்யூ துறையால், மற்ற நிறுவனங்களின் சார்பாக வசூலிக்கப்படுகிற வரி வருவாய்; மாவட்டக் கழக நிதி ஆதாரங்களுக்காக வசூலிக்கப்படுகிற நிலத் தீர்வை; நிலத் தீர்வைக்கு உபரியாக விதிக்கப் படுகிற தொடக்கக் கல்வி வரி.

**குறிப்பு :**—வேறு நிறுவனங்களின் சார்பாக வசூலிக்கப்பட்ட வருவாயானது, முதலில் 'சாதாரண வருவாய்' என்ற தலைப்பின் கீழ் அரசாங்கக் கணக்கில் வரவு எழுதப்பட்டு, பின்னர் உரிய நிறுவனங்களுக்குக் கொடுக்கப்படும்போது, முன் வரவில் குறைத்துக் காட்டப்படுகிறது. விசேஷ வரிகளின் விவரங்களை அரசாங்க நிதிநிலைக் குறிப்பில் காணலாம்.

தமிழ்நாட்டில், நிலவரியின் மீது உபரி வரியும், சில ஆண்டுகளில் விதிக்கப்பட்டது. அதன்படி, நில வரியாக, பசலி ஒன்றுக்கு 500 ரூபாய்க்கு மேல் செலுத்துகிற நிலச் சொந்தக்காரர் ஒவ்வொருவரிடமிருந்தும் ஒரு குறிப்பிட்ட உபரித்தொகை வசூலிக்கப்பட்டது. இம் முறை 1958ஆம் ஆண்டில் ரத்துச் செய்யப்பட்டது; ஆனால், முன்னர் அமலில் இருந்தபோது கொடுக்கப்படவேண்டிய பாக்கிகள் இன்னும் வசூலிக்கப்பட்டு இந்தத் தலைப்பில் சேர்க்கப்படுகின்றன.

முன்னாள் ஜமீன் சொத்துக்களை அரசாங்கம் மேற்கொண்டு நிர்வகிப்பதாலும், வருவாய் பெறப்படுகிறது; இது ஒரு தனிச் சிறு தலைப்பின்கீழ்ப் பதிவு செய்யப்படுகிறது. 1965–66ஆம் ஆண்டு பட்ஜெட்டில் தமிழ் நாட்டு அரசாங்கத்திற்கு, இந்த வகையில் சுமார் 35 இலட்சம் ரூபாய் கிடைக்கும் என்று மதிப்பிடப்பட்டது.

சில சமயங்களில் அரசாங்கத்தின் வசமுள்ள நிலங்களை விற்க நேரிடலாம்; இந்த வகையில் கிடைக்கும் தொகையும், நிலவரி செலுத்தாத காரணமாக நிலத்தைக் கைப்பற்றி விற்பதால் நிலவரிப் பாக்கிக்குமேல் வரும் தொகையும், அரசாங்கத்திற்குத் தனி வருவாய் ஆகும். இது தவிர, ஸ்தல ஸ்தாபனங்கள் போன்ற நிறுவனங்களுக்காக நில அளவை முதலிய காரியங்களைச் செய்வதற்காக, குறிப்பிட்ட முறைப்படி, ஒரு தொகை வசூலிக்கப்படுகிறது. இதே மாதிரி வேறு பணிகளுக்காகவும், தொகை வசூலிக்கப்படுகிறது. நிலவரி என்பது அன்றி, கட்டட வாடகை, கனிப்பொருள்கள் மூலமாகக் கிடைக்கும் வருவாய், மர வரி, பட்டுப்போன மரங்கள் போன்றவைகளை விற்பதால் கிடைக்கும் தொகை, ரெவின்யூ நீதி மன்றம் விதிக்கும் அபராதம்—இப்படிப் பலவகையிலும் அரசாங்கத்திற்குக் கிடைக்கும் வருவாயும், 'நிலவரி' என்ற பொதுத் தலைப்பில் சேர்க்கப்படுகிறது.

ஸ்தல ஸ்தாபனங்களின் சார்பில், பாசிக் குத்தகை முதலியவை அரசாங்கத்தால் வசூலிக்கப்பட்டு ஒரு தனி சிறு தலைப்பின் கீழ் வரவு வைக்கப்படுகிறது. பின்னர் ஸ்தல ஸ்தாபனங்களுக்குக் கொடுக்கப்படும் தொகையானது, அரசாங்கத்தின் செலவாக வேறு ஒரு பெரும்

தலைப்பில் ('76.பலவகை உதவித் தொகைகளும் ஒதுக்கி வைப்பும்') காட்டப்படுகிறது.

**குறிப்பு :**—நிலவரி என்பது மாநிலங்களுக்கே உரிய வருவாயினமாக இருந்தபோதிலும், மத்திய அரசாங்கத்தின் நேர் நிர்வாகத்திலுள்ள சில பிரதேசங்களிலிருந்து கிடைக்கும் இவ்வின வருவாய், மத்திய அரசாங்கப் பட்ஜெட்டில் இத்தலைப்பில் தனியே காட்டப்படுகிறது.

## மாநில ஆயத் தீர்வைகள்

மதுவகை சம்பந்தமாக விதிக்கப்படும் ஆயத் தீர்வையும் மற்ற வரிகளும் மாநில அரசாங்கங்களுக்குரியவை. ஆகவே, இவ்வருவாய், யூனியன் ஆயத் தீர்வைகள் என்ற தலைப்பின் கீழ் சேர்க்கப்படாது, தனியாக, 'மாநில ஆயத் தீர்வைகள்' என்ற பெருந் தலைப்பில் சேர்க்கப்படுகிறது. (வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் மது வகைகள்மீது, மத்திய அரசாங்கம் விதிக்கும் சுங்கத் தீர்வை இதில் அடங்காது.) மத்திய அரசாங்கத்தின் நேர் நிர்வாகத்துக்குட்பட்ட சில பிரதேசங்கள், மாநிலம் போன்றவையானபடியால், அங்கும் இந்த இன வருவாய் பெறப்படும்; அது 'மாநில ஆயத் தீர்வைகள்' என்ற தலைப்பின் கீழேயே, மத்திய அரசாங்க பட்ஜெட்டிலும் கணக்குகளிலும் காட்டப்படும்.

மது விலக்கு முறை அமலுக்கு வராத பழைய காலத்தில், இந்த இன வருமானம் மாநில அரசாங்கங்களுக்கு, மிகவும் முக்கியமானதாக இருந்தது. ஒரு சமயத்தில், இந்த வருமானமே மற்றைய இனங்களை விட அதிகமாகவும் இருந்தது. ஆனால், மதுவிலக்கு முறை அங்குமிங்கும் அமலுக்கு வந்தபின், இந்த வருமானம் குறைந்து கொண்டே வந்துள்ளது. முழுவதும் மதுவிலக்கு இல்லாததால், இந்த இனத்தில், மூன்றுவது திட்ட காலத்தில் ஆண்டுக்குச் சுமார் 70 கோடி ரூபாய்க்கு மேல் மாநில அரசாங்கங்களின் தொகுப்பு வருவாயாகப் பெறப்பட்டது.

1965–66ஆம் ஆண்டு பட்ஜெட்டில் தமிழ்நாட்டு அரசாங்கத்திற்கு சுமார் 40 இலட்ச ரூபாய்தான் இந்த இனத்தில் கிடைக்குமென்று மதிப்பிடப்பட்டது. தமிழ்நாட்டில் 1948ஆம் ஆண்டு அக்டோபர் 2ஆம் தேதி முழு மதுவிலக்கு அமலுக்கு வந்தது. ஆகவே, இப்பொழுது கிடைக்கும் சிறிய வருமானம் பின்கண்ட வகையில் வருகிறது :—

(1) மதுவிலக்குப் பகுதிகளில் அபின் உபயோகிப்பவர்கள் என்று பதிவு செய்யப்பட்டவர்களுக்கும், மற்ற அரசாங்கங்களுக்கும் அபின் விற்பனை செய்வதால் வரும் தொகை.

(2) மது, அபின் முதலியவை அடங்கிய மருத்துவ-அலங்கார, தயாரிப்புகள் மீது விதிக்கப்படும் தீர்வைகள்.

(3) அனுமதிச் சீட்டுப் பெற்றவர்களுக்கு, வெளிநாட்டு மது வகையை விற்கும்போது கிடைக்கும் விற்பனை வரி.

(4) மதுவிலக்குக் குற்றங்களுக்காக வசூலித்த அபராதங்களும் செய்த பறிமுதல்களும்.

மதுவிலக்கு முறைகள் எல்லா மாநில அரசாங்கங்களிலும் ஒரே மாதிரியாக இல்லை; ஆகவே, இந்த இன வருவாயில் அதிக வேற்றுமை யுள்ளது.

## வண்டி வரிகள்

இந்தப் பெருந் தலைப்பின் கீழ், இந்திய மோட்டார் வண்டிச் சட்டத்தின் கீழ்க் கிடைக்கும் வருவாயும், மாநில மோட்டார் வண்டி வரி விதிப்புச் சட்டத்தின் கீழ்க் கிடைக்கும் வருவாயும், இவைகளைச் சேர்ந்த இதர வருவாயும், பதிவு செய்யப்படுகின்றன. எல்லா மாநில அரசாங்கங்களுக்கும், இந்த இனத்தில் மூன்றாவது திட்ட காலத்தில் கிடைத்த தொகுப்பு ஆண்டு வருவாய், சுமார் 55 கோடி ரூபாய் அளவில் இருந்தது.

இந்தியச் சட்டத்தின் கீழ், பெறப்படும் வருவாயின் முக்கிய இனங்கள் பின் வருமாறு :—

மோட்டார் வண்டிகளைப் பதிவு செய்வதற்கும், அவைகளின் உரிமை அல்லது சுவாதீன மாற்றத்துக்கும் வசூலிக்கப்படும் கட்டணங்கள்; தயாரிப்பாளர்கள், வியாபாரிகள், செப்பனிடுவோர்—இவர்களுக்கு வியாபாரச் சான்றிதழ் கொடுப்பதற்காக விதிக்கப்படும் கட்டணங்கள்; மோட்டார் ஓட்டுவதில் பயிற்சி பெறுவதற்கு வேண்டிய லைசென்சுக்குரிய கட்டணங்கள்; வண்டி ஓட்டுபவர்களுக்கு வேண்டிய லைசென்சுகளுக்கும், வில்லைகளுக்கும் உரிய கட்டணங்கள்; போக்குவரத்து வண்டிகளுக்கு வேண்டிய அனுமதிச் சீட்டுகளுக்குரிய கட்டணங்கள்; பஸ்களில் கண்டக்டர்களுக்குக் கொடுக்கப்படுகிற சான்றிதழ்கள், வில்லைகள், இவற்றிற்குரிய கட்டணங்கள்; போக்குவரத்து வண்டிகள் நல்ல நிலையில் இருப்பதாக உறுதி கூறுவதற்குரிய கட்டணங்கள்; மோட்டார் வண்டி இன்ஸ்பெக்டர்கள் பதவிக்கு விண்ணப்பித்துக் கொள்பவர்களிடமிருந்து வாங்கப்படும் கட்டணங்கள்; மோட்டார் வண்டிப் பதிவேடுகளிலிருந்து வர்த்தக நிறுவனங்களுக்குப் பகுதிகள் எடுத்தெழுதிக் கொடுப்பதற்குரிய கட்டணங்கள்.

மாநில மோட்டார் வண்டிச் சட்டங்களின் கீழ்க் கிடைக்கும் வருவாய், மாநிலங்களில் அமலில் உள்ள முறைகளுக்கேற்ப இருக்கும்.

தமிழ்நாட்டில் இருக்கும் முறையைப் பற்றிய விளக்கத்தை, இந்த அரசாங்கத்தின் நிதி நிலைக் குறிப்பில் காணலாம். முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியது என்னவெனில், ஸ்தல ஸ்தாபனங்கள் முந்திய காலத்தில் மோட்டார் வண்டிகளின் மீது விதித்து வந்த வரிகளுக்குப் பதிலாக, மாநில வரி முறையில் சட்டப்படி இப்போது வசூலிக்கப்படுகிறது. இதனால் ஏற்பட்ட நஷ்டத்துக்கு ஈடு செய்யும் வகையில், ஸ்தல ஸ்தாபனங்களுக்கு அரசாங்கத்தால் ஆண்டுதோறும் மானியம் அளிக்கப்படுகிறது. அது அரசாங்கத்தின் செலவாக, ஒரு தனிப் பெருந் தலைப்பில் ('76–பலவகை உதவித் தொகைகளும், ஒதுக்கி வைப்பும்') பதிவு செய்யப்படுகிறது. மோட்டார் வண்டிகளுக்கு உரிமம் வழங்குவதற்காக வசூலிக்கப்பட்டு வந்த கட்டணங்கள் கூட, மாநில அரசாங்கத்து வரி விதிப்பில் அடங்கியிருக்கிறது. உரிய ஸ்தல ஸ்தாபனங்களுக்கு இவ்வினத்திலும் நஷ்ட ஈடு செய்யப்படுகிறது.

1952ஆம் ஆண்டிலிருந்து, தமிழ் நாட்டில் இன்னொரு தனி வரி விதிக்கப்படுகிறது. இதன்படி, இந்த மாநிலத்தில் பஸ்களிலும் லாரிகளிலும் ஏற்றிச் செல்லப்படுகிற பிரயாணிகளின்மீதும், சரக்குகளின் மீதும் வரி விதிக்கப்படுகிறது. மூன்றாவது திட்ட காலத்தில், இது சாதாரணமாக, பஸ்களை நடத்துபவர்கள் வசூலிக்கும் கட்டணங்களில் 10 சதவிகிதம் ஆகவும், லாரி நடத்துபவர்கள் வசூலிக்கும் கட்டணங்களில் 5 சதவிகிதமாகவும் இருந்தது. இப்படிக் கணக்கிட்டு வரி கொடுப்பதற்குப் பதிலாக, ஒரு மொத்தமான தொகையைக் கட்டணமாகச் செலுத்துவதற்கும் வழியுள்ளது. அரசாங்கம் வைத்துள்ள எடை போடும் யந்திரங்களில் தனியார் மோட்டார் வண்டிகளை எடை போடுவதற்காக வசூலிக்கும் கட்டணம் மற்றச் சில்லறை வருவாயில் ஒரு முக்கிய இனமாகும்.

குறிப்பு :—மத்திய அரசாங்கத்தின் நேர் நிர்வாகத்திலுள்ள பிரதேசங்களில், மேற்கண்ட இனங்களில் கிடைக்கும் வருவாயும், மத்திய அரசாங்கக் கணக்குகளில் இந்தத் தலைப்பில் சேர்க்கப்படுகிறது.

## விற்பனை வரி

'விற்பனை வரி' என்பது தற்காலத்தில் மிகவும் முக்கியத்துவம் வகிக்கிறது. மூன்றாவது திட்ட காலத்தில், பொது விற்பனை வரியால் எல்லா மாநில அரசாங்கங்களுக்கும் தொகுப்பாக ஆண்டுக்கு சுமார் 280 கோடி ரூபாய்க்கு மேல் வருவாய் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. 1965–66ஆம் ஆண்டு பட்ஜெட்டில் தமிழ்நாட்டு அரசாங்கத்திற்கு, இந்த வகையில் சுமார் 35 கோடி ரூபாய் கிடைக்கும் என்று மதிப்பிடப்பட்டது. (தில்லிப் பிரதேசத்திலிருந்து மட்டும், மத்திய அரசாங்

கத்திற்கு, 1965–66 ஆண்டில் சுமார் 12 கோடி ரூபாய் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது.)

'விற்பனே வரி' என்ற பெருந் தலைப்பில், மத்திய விற்பனே வரிச் சட்டத்தின் கீழ் விதிக்கப்படும் வரிகளும், மாநில விற்பனே வரிச் சட்டத்தின் கீழ் விதிக்கப்படும் வரிகளும் சேர்க்கப்படுகின்றன. இவை தவிர, உரிமம் வழங்க வசூலிக்கப்படும் கட்டணங்களும், பலவகைச் சில்லறை வருவாய்களும் இதில் அடங்கும்.

**மத்திய விற்பனே வரி**

மாநிலங்களுக்கிடையே வர்த்தகம் அல்லது வாணிகம் நடைபெறுகையில் ஏற்படும் விற்பனேமீது மத்திய விற்பனே வரிச் சட்டத்தில், குறைந்த விகிதத்தில் வரி நிர்ணயிக்கப்பட்டுள்ளது. பதிவு செய்து கொண்ட ஒரு வியாபாரி, மாநிலங்களுக்கிடையே செய்யும் விற்பனேயின் பேரில், விற்பனே விலேயில் இரண்டு சதவிகிதம் வரி செலுத்தவேண்டுமென்பது பொதுவான முறை. ஆனல், இந்த விகித வரி, சிலவகை விற்பனேகளுக்குத்தான் பொருந்தும்; முக்கியமாக, குறித்த பொருள்கள் மீண்டும் விற்பனே செய்யப்படுவதாக இருக்கவேண்டும்: அல்லது, வேறு விற்பனேப் பொருள்களேத் தயாரிப்பது அல்லது சித்தப்படுத்துவதில் உபயோகமாகவேண்டும்; அல்லது, கனிப்பொருள் எடுப்பது, மின்சாரம் போன்ற சக்திகளே உற்பத்தி செய்வது அல்லது வினியோகிப்பது – அவைகளுக்கு, உபயோகம் உள்ளதாக இருக்கவேண்டும். இந்த வகைகளில் சேராவிட்டால், சாதாரணமாக மாநிலங்களுக்குள் ஏற்படும் விற்பனேகள் விஷயத்தில், நிர்ணயிக்கப்பட்ட விகிதப்படி வரி வசூலிக்கப்படும். மத்திய அரசாங்கத்திடம் பதிவு செய்து கொள்ளாத வியாபாரிகளுக்கு, எல்லா விற்பனேகளுக்கும் அதிக விகித வரி முறை பொருந்தும். எந்தெந்த முறை எப்பொருள்களுக்குப் பொருந்தும் என்பதை விளக்கும் தனி அறிவிப்பும் உண்டு. மற்றப் பொருள்களின் விஷயத்தில் விதிக்கப்படும் வரி, குறைந்தது 10 சத விகிதமாக இருக்கும். மாநிலங்களில், சில பொருள்களின் விற்பனேக்குச் சலுகைகள் வழங்கப்பட்டால், அவைகளுக்கு வரி விலக்கோ அல்லது வேறு சலுகையோ மத்திய விற்பனே வரிச் சட்டத்தின்கீழும் கிடைக்கும். பொதுவாக, அரசாங்கங்களுக்கு விற்கப்படும் பொருள்களுக்கு 2 சத விகித்ம்தான் வரி விதிக்கப்படும். மத்திய அரசாங்கச் சட்டத்தின்கீழ் விதிக்கப்படும் வரித் தொகைகளேயும் சௌகரியத்தை உத்தேசித்து மாநில அரசாங்கங்களே வசூலிக்கின்றன. வசூல் செலவு போக, எஞ்சிய நிகர வருவாயும் அந்தந்த மாநிலங்களுக்கே கொடுக்கப்படுகின்றது. (மாநிலங்களுக்கிடையே ஏற்படும் விற்பனேக் கொள்முதல் மீது, மத்தியச் சட்டப்படி வரி விதிக்கும் முறை 1957ஆம் ஆண்டு, ஜூலே மாதம் முதல் தேதியிலிருந்து அமலுக்கு வந்தது. இந்த விஷ

யத்திற்கான தனி விதிகள் அரசியல் அமைப்பின் 284ஆம் பிரிவில் உள்ளன).

மாநில அரசாங்கங்கள், தனியாகப் பொது விற்பனை வரிச் சட்டங்களை இயற்றி உள்ளன ; மோட்டார் எண்ணெய் விற்பனைக்காக வேறு சட்டமும் செய்துள்ளன. இவைகளால் பெறப்படும் வருவாய், மாநில அரசாங்கங்களைச் சேருகிறது. (தமிழ்நாட்டு அரசாங்கத்தில், இவ்வினத்தில் விதிக்கப்படும் வரிகளுக்கு விரிவான விளக்கத்தை நிதிநிலைக் குறிப்பில் காணலாம்.) இந்த விற்பனை வரி, சில பொருள்களுக்கு, ஒரு முனை விதிப்பாகவும், மற்றப் பொருள்களுக்குப் பலமுனை விதிப்பாகவும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. சில பொருள்களுக்கு, சலுகை முறையில் வரி விதிப்பும், இன்னும் சில பொருள்களுக்கு முழு வரி விலக்கும் அளிக்கப்படுகிறது.

1958ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் முதல் தேதியிலிருந்து, இரும்பு, உருக்கு, நிலக்கரி, சணல், எண்ணெய்-வித்துக்கள், பருத்தி, பருத்தி நூல்கள், ஆட்டுத்தோல், மாட்டுத்தோல் ஆகிய பொருள்கள், மாநிலங்களுக்கிடையே உள்ள வியாபாரம் அல்லது வாணிகத்தில், விசேஷ முக்கியத்துவம் வாய்ந்தவையென மத்திய அரசாங்கத்தால் அறிவிக்கப்பட்டன. இவைகளின் மீது ஒரு மாநில அரசாங்கமும், ஒரு குறிப்பிட்ட விகிதத்திற்குமேற்பட்டு (சாதாரணமாக 2 சதவிகிதம்) வரி விதிக்கலாகாது ; வரியும் ஒரு முனை முறையில்தான் இருக்கவேண்டும்.

மோட்டார் எண்ணெய் விற்பனைவரிச் சட்டத்தின்படி விதிக்கப்படும் வரியின் விகிதம், அவ்வப்போது மாற்றப்படலாம். பொதுவாக, டீசல் எண்ணெய்க்கு வரி விகிதம் உயர்வாக இருக்கும்.

குறிப்பு :—மொத்த வியாபாரக் கொள்முதல் ஓர் அளவுக்குமேல் இருந்தால், வியாபாரிகள் தங்களைப் பதிவு செய்துகொள்ள வேண்டுமென்ற விதி உள்ளது ; இதற்காக ஒரு கட்டணம் வசூலிக்கப்படுகிறது ; இந்த இனத்தில் கிடைக்கிற வருவாயும், 'விற்பனை வரி' என்ற தலைப்பில் பதிவு செய்யப்படுகிறது.

## இதர வரிகளும் தீர்வைகளும்

இந்தத் தலைப்பில் சேரும் வரிகளும் தீர்வைகளும் பலதரப்பட்டவை. கேளிக்கை வரி, குதிரைப் பந்தய வரி, மின்சாரத் தீர்வை, பரிசுப் போட்டி வரி, நகர நிலவரி ஆகியவை முக்கியமானவை. மூன்றாவது திட்ட காலத்தில், இந்த இனத்தில், மாநிலங்களின் தொகுப்பு வருவாய் ஆண்டுக்கு சுமார் 100 கோடி ரூபாயாக இருந்தது. தமிழ்நாட்டு அரசாங்கத்து 1965–66ஆம் ஆண்டு பட்ஜெட்டில் இந்த இனத்

தில், சுமார் 9 கோடி ரூபாய்க்குமேல் கிடைக்குமென எதிர்பார்க்கப் பட்டது.

**கேளிக்கை வரி**

இதன் விவரத்தை அரசாங்க நிதிநிலைக் குறிப்பில் காணலாம். முன் காலத்தில், ஸ்தலஸ்தாபனங்கள் கேளிக்கை வரி விதித்து வந்தன. பிறகு, தமிழ்நாட்டிலும் வேறு மாநிலங்களிலும், இது ரத்து செய்யப் பட்டு, மாநில ரீதியில் தனியாக அரசாங்கத்தார் வரி விதிக்கும் முறை அமலுக்கு வந்தது. முதலில் இந்த மாற்றத்தினுல் ஏற்பட்ட நஷ்டத் திற்கு ஈடாக ஒரு குறிப்பிட்ட தொகை ஸ்தல ஸ்தாபனங்களுக்குக் கொடுக்கப்பட்டு வந்தது. பின்னர், எந்தெந்த ஸ்தல ஸ்தாபனங்களின் அதிகார வரம்புக்குள் இந்த வரி வசூலிக்கப்படுகின்றதோ, அந்த ஸ்தாபனத்திற்கு, முழுவருவாயும் (வசூல் செலவுக்காக 10 சதவிகிதம் கழித்துக் கொண்டு) அளிக்கப்பட்டு வருகிறது. (பஞ்சாயத்து யூனியன் களுக்கு மாநிலக் கேளிக்கை வரி மீது, ஓர் உபரி வரி விதிக்க அதிகாரம் உள்ளது.) தமிழ்நாட்டில், 1958–59 ஆண்டு முதல், இந்தக் கேளிக்கை வரியானது சினிமாக் காட்சிகளுக்கும், குதிரைப் பந்தயங்களுக்கும் மட்டுமே விதிக்கப்பட்டு வருகிறது; மற்ற வகையான கேளிக்கைக்கு முன்னர் விதிக்கப்பட்ட வரிகள் எல்லாம் ரத்து செய்யப்பட்டுவிட்டன. வரி விகிதங்கள் அவ்வப்போது மாற்றப்படலாம்.

**குதிரைப் பந்தய வரி**

குதிரைப் பந்தயங்களை அரசாங்கம் அனுமதிக்கலாமா என்ற விஷ யத்தில், அபிப்பிராய பேதம் இருந்துவருகிறது; நல்ல ஜாதிக் குதிரை களை நாட்டில் பெருக்குவதற்கு கேளிக்கைப் பந்தயங்கள் துணை செய் கின்றன என்ற காரணத்தால், அப்பந்தயங்கள் ஆங்காங்கு அனுமதிக் கப்பட்டு வருகின்றன. இப்பந்தயத்திற்கு விதிக்கப்படும் வரி இரு வகையாக இருக்கிறது:—(1) பந்தயத்துக்கான யந்திரத்தில் கட்டிய பணம் முழுவதற்கும், பந்தயம் கட்டியவர்களிடமிருந்து (Backers) வசூலிக்கப்படும் வரி; (2) குதிரைப் பந்தய மைதானத்திற்குள் கட்டிய பந்தயத்தின் விளைவாக, பந்தயம் பிடிப்பவர்கள் (Backers) கொடுத்த, அல்லது கொடுக்க ஒப்புக்கொண்ட, எல்லாத் தொகை விஷயமாக வும் பந்தயத்தை ஏற்பாடு செய்பவர்களிடமிருந்து (Book Makers) வசூலிக்கும் வரி.

வரியின் வகிதம் அவ்வப்போது மாறலாம்.

**மின்சாரத் தீர்வை**

இந்திய மின்சாரச் சட்டத்தின் கீழ், மின்சார மீட்டர்களைச் சோதித்துப் பார்க்கவும், விவகாரங்களுக்கு மத்தியஸ்தம் செய்து வைக்

கவும், ஸ்தல ஸ்தாபனங்களுக்குத் தொழில் நுட்ப ஆலோசனை கூறவும், கட்டணங்கள் வசூலிக்கப்படுகின்றன. இது தவிர, உரிமம் வழங்குவ தற்காகவும், சினிமா, மின்சார ஏற்பாடுகளை மேற்பார்வையிடுவதற் காகவும் கட்டணங்கள் உண்டு. இவையெல்லாம் இத்தலைப்பின் கீழ் வரவு வைக்கப்படுகின்றன. எல்லா மாநிலங்களுக்கும் பொதுவான இவ் விதிப்பு முறை தவிர, மாநிலங்களில் தனியாக மின்சாரத் தீர்வை சட்டங்கள் அமலில் உள்ளன. இதன்படி, மின்சாரம் வழங்குதற்கு உரிமை பெற்றவர்கள், செலவான ஒவ்வொரு யூனிட் ஒன்றுக்கும், ஒரு குறிப்பிட்ட வீதப்படி அரசாங்கத்திற்குத் தீர்வை கட்டவேண்டும். மத்திய அரசாங்கத்திற்கு வழங்கப்படும் மின்சாரம் விஷயமாக, சில சலுகைகள் உண்டு. இந்த இனத்தில் கிடைக்கும் வருவாய், மின்சார உபயோகம் பெருகுவதால், உயர்ந்துகொண்டே வருகிறது.

### புகையிலைத் தீர்வை

1957ஆம் ஆண்டு இறுதி முதல், விற்பனை வரிக்குப் பதிலாக, பக்குவப்படுத்தப்பட்ட இலை உட்பட, புகையிலைப் பொருள்கள் மீது கூடுதலான ஆயத் தீர்வை ஒன்றை மத்திய அரசாங்கம் விதித்து வரு கின்றது; இதன் விளைவாக, முன்னுளில் மாநிலங்களில் அமலில் இருந்த புகையிலை விற்பனை 'வரி விதிப்பு - பதிவு சட்டம் ரத்து ஆகிவிட்டது.

### பரிசுப் போட்டி

மாநில அரசாங்கங்கள், பரிசுப் போட்டி விஷயத்தில், தனித் தனியே விதிகள் செய்துள்ளன; ஒவ்வொரு மாநிலத்திலும் கிடைக்கும் வருவாயில் அதிக வேற்றுமை உண்டு. தமிழ் நாட்டில், இவ்வினத்தில் பெறப்படும் வருவாய் மிகவும் குறைவு.

### நகர நிலவரி

நகரங்களில் உள்ள ஸ்தாவர சொத்துக்களின் மீதும் தனியாக அரசாங்கத்தால் வரி விதிக்கப்பட்டு வருகிறது. தமிழ்நாட்டில், இந்த வகை வரியானது, 1964–65 ஆண்டிலிருந்து தான் அமலுக்கு வந்தது. இதன் மூலம், 1965–66 ஆண்டில், சுமார் 45 இலட்ச ரூபாய் கிடைக்கும் என்று தமிழ்நாட்டு அரசாங்கத்தால் எதிர்பார்க்கப்பட்டது.

## முத்திரைத் தாள்களும் பத்திரப் பதிவும்—வருவாய்

அநேக விதமான பத்திரங்களுக்கும், நீதி ஸ்தலங்களில் தொடுக்கப் படும் வழக்குகள் சம்பந்தமாகவும் முத்திரைத் தாள்கள் உபயோகப் படுத்தப்படுகின்றன. இதனுல், மாநில அரசாங்கங்களுக்குப் பெருவாரி யான வருவாய் கிடைக்கின்றது. பத்திரப் பதிவுக்காக வசூலிக்கப்படும்

கட்டணங்கள் இதனுடன் தொடர்புடையவை. இந்த இரண்டு இனங்களி லுமாக, எல்லா மாநில அரசாங்கங்களுக்கும் தொகுப்பாக மூன்ருவது திட்டகாலத்தில் ஓர் ஆண்டுக்கு, 60 கோடி ரூபாய்க்குமேல் வருவாய் கிடைக்கும் என மதிப்பிடப்பட்டது. தமிழ்நாட்டு அரசாங்கத்துக்கு மட்டும், 1965–66ஆம் ஆண்டில் சுமார் 9 கோடி ரூபாய் கிடைக்கு மென்று பட்ஜெட்டில் எதிர்பார்க்கப்பட்டது. ஸ்தல ஸ்தாபனங்கள், தங்கள் வரம்புக்குட்பட்ட பிரதேசங்களில் ஏற்படும் சொத்து மாற்றங் களுக்கு ஒரு தனிக் கட்டணத்தை விதித்துள்ளன; இவைகளையும் மாநில அரசாங்கமே வசூலித்து, நிகரத் தொகையை உரிய ஸ்தாப னங்களுக்குக் கொடுக்கின்றது. தமிழ்நாட்டில், இந்த வகையில் சுமார் $3\frac{1}{2}$ கோடி ரூபாய் 1965–66ஆம் ஆண்டில் பெறப்படும் என்று எதிர்பார்க்கப்பட்டது ; இந்தத் தொகை மேற்கண்ட அரசாங்க மொத்த வருவாயில் சேர்க்கப்படவில்லை.

வர்த்தக சம்பந்தமான சில பத்திரங்கள் விஷயத்தில் செலுத்த வேண்டிய கட்டணத்தை, மத்திய அரசாங்கம் பார்லிமெண்டுச் சட்ட மூலம் நிர்ணயிக்கிறது; இதனுல் பெறப்படும் வருவாயும், மாநில அர சாங்கங்களுக்கே உரியதாகிறது; இவை நீதித் துறைக்குச் சம்பந்தம் இல்லாதவை. இது போன்ற மற்றப் பத்திரங்களுக்கு ஒட்டும்படி யாகவோ, அல்லது பொறிக்கப்பட்டோ உள்ள முத்திரைத் தாள்கள் உள்ளன. சில பத்திரங்களுக்குத் தனியாக முத்திரைபோடப்படு கிறது ; இதற்கு ஒரு குறிப்பிட்ட முறையில் கட்டணம் வசூலிக்கப்படும். முத்திரைத் தாள் விற்பனையால் தான், மாநில வருவாயில் பெரும் பகுதி பெறப்படுகிறது. ஸ்தல ஸ்தாபனங்களுக்குக் கொடுக்கப்படும் தொகை யைச் சேர்க்காமல் இந்த இனத்தில் தமிழ்நாட்டு அரசாங்கத்திற்கு, 1965–66ஆம் ஆண்டில் சுமார் $5\frac{1}{2}$ கோடி ரூபாய் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. நீதிமன்றங்களில் வழக்காடும்போது, வழக்கு களின் தரம்பற்றி, கட்டணங்கள் எவ்வளவு செலுத்தப்படவேண்டு மென்று நிர்ணயிக்கச் சட்டங்கள் உண்டு. மேலே கூறியபடி, இந்தக் கட்டணங்களும், முத்திரைத் தாள்கள் மூலமாகவே செலுத்தப்படுகின் றன. தமிழ்நாட்டு அரசாங்கத்திற்கு 1965–66ஆம் ஆண்டில், இம் முறையில் சுமார் $1\frac{1}{2}$ கோடி ரூபாய் வருமென்று மதிப்பிடப்பட்டது. மேலே சொன்ன வகைகளில் தவிர, அபராதங்கள், தண்டனைகள் முதலிய பலவகைகளிலும், சிறிதளவுக்கு வருவாய் கிடைக்கிறது.

ஸ்தல ஸ்தாபனங்களின் சார்பில், சொத்து மாற்று விஷயமாக வசூலிக்கக்கப்படும் தொகையானது, பத்திரப் பதிவுத் துறை மூலம் அரசாங்கத்தால் வசூலிக்கப்படுகிறது. இந்தத் தொகையில் ஒரு சிறு பங்கு வசூல் செலவாகக் கணக்கிடப்பட்டு, ‘பத்திரப் பதிவு’ என்ற தலைப்பில் வரவு வைக்கப்படுகிறது. எஞ்சிய தொகையானது,

'முத்திரைத் தாள்கள்' என்ற தலைப்பின்கீழ், வரவுக் குறைவாகப் பதிவு செய்யப்பட்டு, ஸ்தல ஸ்தாபனங்களுக்குக் கொடுக்கப் படுகிறது.

பெட்ரோலியம், வெடிமருந்து—இவைகள் சம்பந்தமாக உள்ள இந்திய சட்டங்களின் விதிகளுக்கு இணங்க, உரிமம், அனுமதிச் சீட்டு கள் முதலியவை மாநில அரசாங்க அதிகாரிகளால் வழங்கப்படுகின்றன. அதற்குரிய கட்டணங்கள், நீதித் துறைச் சார்பு இல்லாத சாதாரண முத்திரைத் தாள்கள் மூலமாகவே பெறப்படுகின்றன. இந்த இன வருவாய் மத்திய அரசாங்கத்துக்கு உரியதாகும்; இந்தக் கட்டணங்களை வசூல் செய்வதற்காக, மத்திய அரசாங்கம் மாநில அரசாங்கத்திற்கு ஒரு தொகை கொடுக்க வேண்டியுள்ளது; சுலபமாகக் கணக்கிடுவதை உத்தேசித்து, முத்திரைத் தாள்கள் மூலம் பெறப்படும் முழு வருவாயையும் வசூல் செலவுக்கீடாக மாநில அரசாங்கம் வைத்துக் கொள்ளலாம் என்று மத்திய அரசாங்கம் தீர்மானித்துள்ளது. ஆனாலும், கணக்கு முறைக்கு இணங்க, இந்த இனத்தில் பெறப்படும் நிகரத் தொகை 'முத்திரைத் 'தாள்கள்' என்ற தலைப்புக் கணக்கில் கழிக்கப்பட்டு, 'மத்திய மாநில அரசாங்கங்களுக்கிடையே பலவகை ஏற்பாடுகள்' என்ற தனித் தலைப்பின்கீழ் வரவாக எழுதப்படுகின்றது. மத்திய அரசாங்கக் கணக்கிலும், 'பலவகை சமூகப் பணிகள்' என்ற தலைப்பின் கீழ் இதே தொகை வரவும் பற்றுமாக எழுதப்படுகிறது.

இந்திய பத்திரப் பதிவுச்சட்டத்தின் கீழ்ச் சில பத்திரங்கள் கட்டாய மாகப் பதிவு செய்யப்பட வேண்டுமென்றும், வேறு சில பத்திரங்களைப் பதிவு செய்வது சம்பந்தப்பட்டவர்களின் விருப்பத்தைப் பொறுத்தது என்றும் விதி செய்யப்பட்டுள்ளது. பொதுவாக, ஸ்தாவர சொத்து சம்பந்தமாக உள்ள பத்திரங்களும், சுவீகார சம்பந்தமான பத்திரங் களும், கட்டாயமாகப் பதிவு செய்யப்படவேண்டும். பதிவுக் கட்டணங் களாக வசூலிக்கும் தொகையே பத்திரப் பதிவுத் துறைக்கு முக்கிய வருவாயாகிறது. மேலும், பத்திரங்களுக்குப் பிரதி செய்து கொடுப்ப தற்காகவும், சான்றுகள் வழங்குவதற்காகவும், பழைய ஏடுகளைத் தேடிப் பார்ப்பதற்காகவும், இன்னும் இதுபோன்ற பணிகளுக்கும் கட்ட ணங்கள் வசூலிக்கப்படுகின்றன. பொது நலனைக் கருதி, சில பத்திரங் களுக்கு முழுமையாகவோ அல்லது ஓர் அளவுக்கோ கட்டண விலக்கு அரசாங்கத்தால் அளிக்கப்படுகிறது. கூட்டுறவு நிறுவனங்களுக்கு, சலுகையளிக்கும் வகையில், பத்திரப் பதிவுத் துறைக்கு வருவாய் குறைவதை, கணக்கு முறையில் ஈடு செய்யவேண்டும் என்று கருதப் படுகிறது. அதற்கான தொகை, 'கூட்டுறவு—மானியங்கள்' என்ற தலைப்பின் கீழ் அரசாங்கச் செலவாக எழுதப்பட்டு, 'பத்திரப் பதிவுக் கட்டணங்கள்' என்ற தலைப்பில் வரவு வைக்கப்படும்.

குறிப்பு : மத்திய அரசாங்கத்தின் நேர் நிர்வாகத்தில் உள்ள பிரதேசங்களிலும் மாநிலங்களைப் போல, முத்திரைத் தாள்களாலும், பத்திரப் பதிவுக் கட்டணங்களாலும் வருவாய் பெறப்பட்டு, மத்திய அரசாங்கக் கணக்கில், தனியே காட்டப்படுகிறது.

## வட்டி வருவாய்

மத்திய அரசாங்கம், மாநில அரசாங்கங்களுக்கும், மத்திய வாணிபத் துறைகளுக்கும், வேறு நிறுவனங்களுக்கும், அரசாங்கப் பணியாளர்களுக்கும் பல காரணம் பற்றி, அவ்வப்போது கடன் கொடுக்கின்றது. இவைகளுக்காகப் பெறப்படும் வட்டி, மத்திய அரசாங்கத்தின் வருவாயாகப் பதிவு செய்யப்படுகிறது. இம்மாதிரியே மாநில அரசாங்கங்களும் கடன் கொடுக்கின்றன. அந்தக் கடன்களுக்காகக் கிடைக்கும் வட்டி அந்தந்த அரசாங்கத்தின் வருவாயாகும். ஒவ்வோர் அரசாங்கமும் இம்மாதிரி கடன் கொடுப்பதற்காகவும், வேறு மூலதனச் செலவை ஏற்பதற்காகவும், பொது மக்களிடம் இருந்தும், வேறு வகையிலும் தாங்களே கடன் பெறுவது வழக்கம். இக்கடன்கள் சம்பந்தமாக, ஒவ்வோர் அரசாங்கத்தாலும் கொடுக்கப்பட வேண்டிய வட்டி முதலிய செலவுகள், தனியாக அரசாங்கச் செலவினத்தில் காட்டப்படுகின்றன. (இக்கணக்கு முறையில், அண்மையில் ஏற்பட்ட ஒரு மாற்றம், முன்னரே 12ஆம் அத்தியாயத்தில் குறிக்கப்பட்டுள்ளது.)

மத்திய அரசாங்கத்திற்கு, 1965–66ஆம் ஆண்டில் சுமார் 3 கோடி ரூபாய் வட்டி வருவாயாகக் கிடைக்கும் என்று முதல் பட்ஜெட்டில் எதிர் பார்க்கப்பட்டது.

அரசாங்கத் துறைகளிலிருந்து பெறப்படுவதாக பொது வருவாய்த் தலைப்பில் பதிவு செய்யப்படுகிற வட்டித் தொகையானது, அந்தந்தத் துறையின் செலவாகவும் காட்டப்படும். வாணிகத் துறைகளால் கொடுக்கப்பட வேண்டிய வட்டி விகிதம், அரசாங்கத்தால் அத்துறைகளில் ஈடுபடுத்தப்பட்ட மூலதனச் செலவின் கால அளவுக்கேற்ப பலதரப்பட்டதாக நிர்ணயிக்கப்பட்டிருக்கும். ஓர் ஆண்டில் சில மாதங்களுக்கு மாத்திரமே செலவிடப்பட்ட தொகைக்கு, அவ்வாண்டு முழுவதற்கும் வட்டி விதிப்பது முறையாகாது என்று கருதப்படுகிறது; ஆகவே, ஆண்டுத் தொடக்கத்தில் சேர்ந்து வந்துள்ள முதலீடு முழுவதுக்கும் அந்த ஆண்டில் செய்யப்பட்ட முதலீட்டில் பாதிக்கும், குறிப்பிட்ட விகிதங்களின்படி, வட்டி கணக்கிடப்படுகிறது; இதிலிருந்து, ஆண்டுத் தொடக்கத்திலும் இறுதியிலும் உள்ள முதலீட்டில் சராசரித் தொகையின்மீதே வட்டி கணக்கிடப்படுகிறது என்பது விளங்கும்.

அரசாங்க வாணிகத் துறைகளுக்காக அன்றி, வேறு வகையில் அரசாங்கம் கொடுக்கும் கடன்களையும் முன்பணங்களையும், முதலுக்கும்

வட்டிக்குமாகச் சேர்த்து, குறிப்பிட்ட சம தவணைகள் மூலம் செலுத்த வேண்டிய முறை பின்பற்றப்படுகிறது; அப்படிச் செலுத்தப்படும் மொத்தத் தவணைத் தொகையில், அசலுக்குரிய வட்டி மட்டும் கணக்கிடப்பட்டு, 'வட்டி' என்ற அரசாங்க வருவாய்த் தலைப்பில் வரவு வைக்கப்படும்; எஞ்சியுள்ள தொகையானது, 'அரசாங்கம் கொடுக்கும் கடன்களும் முன்பணங்களும்' என்ற பெருந் தலைப்பின் கீழ், முதலுக்கான வரவாகப் பதிவு செய்யப்படும். ஒவ்வொரு தவணைத் தொகை செலுத்தியதும் அசல் தொகை குறையும்; அந்த அசல் தொகைக்கே, பின்னர் வட்டி கணக்கிடப்படும். ஆகவே, சாதாரணமாக அரசாங்கத்திற்குக் கிடைக்கும் வட்டி வருவாய் குறைந்து கொண்டே வரவேண்டும். ஆனால், ஆண்டுதோறும் கொடுக்கப்படுகிற புதுக் கடன்களுக்கு வட்டி சேருவதால், எல்லா அரசாங்கங்களுக்கும் இந்த வருவாய், குறைவதற்குப் பதிலாக, அதிகமாகிக் கொண்டே வருகிறது.

அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய நிலவரி, ஆயத் தீர்வை முதலியவை தாமதித்துச் செலுத்தப்பட்டால், அவைகளுக்காகப் பெறப்படும் வட்டித் தொகையும் 'வட்டி' என்னும் பொதுத் தலைப்பிலேயே சேர்க்கப்படுகிறது. நீதிமன்றங்களில், அரசாங்கத்தால் தொடரப்பட்ட வழக்குகளில், அரசாங்கத்துக்குக் கொடுக்க வேண்டியவை என்று தீர்மானிக்கப்பட்ட தொகைகளுக்கு அனுமதிக்கப்படும் வட்டியும், இம்மாதிரி பதிவு செய்யப்படுகின்றது.

ஒவ்வோர் அரசாங்கத்திற்கும், ஒவ்வொரு சமயத்தில், செலவுத் தேவைக்கு அதிகமாக, கையிருப்பு இருக்கலாம். அத்தொகையைச் சிறிய கால அளவில் வட்டிக்குப் போடுவதால் பயன் உண்டு; சௌகரியப்பட்டால், நீண்ட கால முதலீட்டுக்கும் கையிருப்பை உபயோகிக்கலாம். பொதுவாக, மாநில அரசாங்கங்கள், தங்களிடம் உள்ள அதிகக் கையிருப்பை மத்திய அரசாங்கக் கடன் பத்திரங்களில் முதலீடு செய்வது பெரு வழக்கு. இம்மாதிரியான முதலீடுகளிலிருந்து கிடைக்கிற வட்டியும், தேவைப்படும்போது ஈட்டுப் பத்திரங்களை விற்பதால் கிடைக்கிற லாபமும், 'வட்டி' என்ற பெருந் தலைப்பின் கீழேயே வரவு வைக்கப்படுகின்றன.

## நிர்வாக, சமூக அபிவிருத்திப் பணிகள்—வருவாய்

ஒவ்வோர் அரசாங்கமும், மக்களுக்காகப் பல துறைகளில் பணிகள் புரிகின்றன. இத்துறைகள் வருமான நோக்கத்தோடு செயற்படாவிடினும், சில வகைகளில், வருவாய் பெறுகின்றன. நீதி நிர்வாகம், சிறைச்சாலைகள், போலீஸ், கல்வி, மருத்துவம், பொதுச் சுகாதாரம், வேளாண்மை, விலங்கினப் பராமரிப்பு, கூட்டுறவு, தொழில்கள்,

சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள்—இவை போன்ற பணித் துறைகளில் கிடைக்கும் வருவாய், தனித்தனியே, பெருந் தலைப்புகளின் கீழ் வரவு வைக்கப்படுகின்றது. நிர்வாகத் துறைகள், சமூக அபிவிருத்திப் பணிகள் என்ற இனங்களில், மத்திய அரசாங்கத்திற்கு மூன்ருவது திட்ட காலத்தில் ஆண்டுக்கு 40 கோடி ரூபாய் அளவில் வரவாகப் எதிர்பார்க்கப்பட்டது. இதே துறைகளுக்காக, செலவுக் கணக்கில் சுமார் 250 கோடி ரூபாய் காட்டப்பட்டது. (இதில் ரெவின்யூ கணக்கு மட்டும் தான் அடங்கியுள்ளது.) ஆகவே, இத்துறையில் செலவே அதிகம் என்பது நன்கு விளங்கும். இந்நிலை, மாநில அரசாங்கங்களுக்கும் பெரிதும் பொருந்தும். உதாரணமாக, தமிழ்நாட்டு அரசாங்கத்திற்கு 1965–66ஆம் ஆண்டில், இவ்வினங்களில் வரவு சுமார் 13 கோடி ரூபாய் ஆகவும், செலவு சுமார் 34 கோடி ரூபாய் ஆகவும் மதிப்பிடப்பட்டது. இந்த இன வருவாய் சம்பந்தமாக, சில முக்கியக் குறிப்புகள் மட்டும் கீழே தரப்படுகின்றன.

**நீதி நிர்வாகம்**

வழக்குகள் சம்பந்தமாக, முத்திரைத் தாள்கள் மூலமாக அன்றி, ரொக்கக் கட்டணங்கள் வசூலிக்கப்பட்டால், அவை இந்தத் தலைப்பில் வரவு வைக்கப்படுகின்றன. குற்ற இயல் வழக்குகளில் விதிக்கப்படும் அபராதமே நீதி நிர்வாகத் துறையின் முக்கிய வருவாய் ஆகின்றது. சில அபராதங்கள் விஷயமாக, ஸ்தலஸ்தாபனங்களுக்கு மானியம் அளிக்கப்படுகிறது ; இந்த இனத் தொகைகள் கணக்கில் தனியே வரவு வைக்கப்பட்டு, மானியங்களாய்க் கொடுக்கப்படும்போது, செலவுக் கணக்கில் ('நீதி நிர்வாகம்—மாநில மாஜிஸ்டிரேட் நீதி மன்றங்களும், குற்ற இயல் நீதி மன்றங்களும்' என்ற தலைப்பில்) பற்று எழுதப் படுகின்றன.

**சிறைச்சாலைகள்**

சிறைச்சாலைகளில், சில தொழில்கள் நடத்தப்படுகின்றன. அவைகள் சம்பந்தமாக, பெறப்படும் தொகையே இந்தத் துறைக்கு முக்கிய வருவாய் ஆகின்றது.

**போலீஸ்**

மாநில அரசாங்கங்களால் ரெயில்வே துறைக்கும், வேறு நிறுவனங்களுக்கும், சில சந்தர்ப்பங்களில் பொது மக்களுக்கும், போலீஸ் உதவி அளிப்பதற்காகப் பெறப்படும் தொகைகளே இந்தத் துறையில் முக்கிய வருவாய் ஆகும்.

**கல்வி**

அரசாங்கத்தின் நேரடி நிர்வாகத்திலுள்ள கல்லூரிகள், உயர்தரப் பள்ளிகள், சிறப்புப் பள்ளிகள்—இவைகளில் வசூலிக்கப்படும் சம்பளமே

கல்வித் துறைக்கு முக்கிய வருவாயினமாகும். பொது மக்களிடம் இருந்தோ, மத்திய அரசாங்கத்திடமிருந்தோ, பெறப்படும் உதவித் தொகையும், தேர்வுகளுக்காக வசூலிக்கப்படும் தனிக் கட்டணங்களும் இந்தத் துறையின் பொது வருவாயில் சேர்க்கப்படும்.

### மருத்துவம்

அரசாங்க மருத்துவ மனைகளில் பல பணிகளுக்காகப் பெறப்படும் தொகைகளும், அரசாங்க மருத்துவக் கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் வசூலிக்கப்படும் சம்பளங்களும், மருந்துப் பொருள்களின் சட்டத்தின் கீழ்ப்பெறப்படும் கட்டணங்களும், தொழிலாளர்களின் பாதுகாப்புத் திட்டத்தின் கீழ், அதற்கான தனி நிறுவனத்திலிருந்து பெறப்படும் தொகைகளும், மருத்துவத் துறையின் முக்கியமான வருவாயினங்களாகின்றன.

### பொதுச் சுகாதாரம்

ஊன்நீர், அம்மைப்பால், முதலியவைகளை நாட்டாண்மை நகராட்சி மருத்துவமனைகளுக்கும், தனிப்பட்ட கழகங்களுக்கும், மற்றவர்களுக்கும், வழங்குவதற்காக வசூலிக்கப்படும் கட்டணங்களும், சுகாதார அதிகாரிகளின் பணிகளுக்காக ஸ்தல ஸ்தாபனங்களிடமிருந்து வசூல் செய்யப்படும் தொகைகளும், இன்னும் பலவகைகளில் கிடைக்கும் தொகையும், இத்துறைக்கு வருவாய் ஆகின்றன.

### வேளாண்மை

இத்தலைப்பில் வேளாண்மைத் துறை, மீன்வளத் துறை—இவை சம்பந்தமான வருவாய் சேர்க்கப்படுகின்றது. வேளாண்மை ஆராய்ச்சி நிலையங்களிலும், அரசாங்கப் பண்ணைகளில் உற்பத்தி செய்யப்படும் அல்லது சேகரித்து வைக்கப்படும் பொருளை (உரம், விதைகள், கருவிகள் உட்பட) விற்பனை செய்வதால் கிடைக்கும் தொகையும், கரும்புத் தீர்வையெனப் பெறப்படும் தொகையும், எண்ணெய் என்ஜின்கள், குழாய்த் தொகுதிகள், குழாய்கள், டிராக்டர்கள் முதலியவைகளை வாடகைக்கு விடுவது அல்லது விற்பனை செய்வது என்ற முறையில் பெறப்படும் தொகைகளும், அரசாங்க நிர்வாகத்திலுள்ள வேளாண்மைக் கல்லூரிகளின் கட்டணங்களும், இன்னும் பலவகை வரவுகளும் வேளாண்மைத் துறைக்கு வருவாய் ஆகும்.

மீன்வளத்துறையில், 'முத்துக் குளித்தல், சங்குகள் எடுத்தல்—இவைகளால் பெறப்படும் தொகை, தமிழ்நாடு போன்ற சில மாநிலங்களுக்கு முக்கிய வருவாய் ஆகின்றது. இவை தவிர, அரசாங்க நிர்வாகத்தில் உள்ள நீர்த் தேக்கங்களில் வளர்க்கப்பட்ட மீன்களைப் பிடிப்ப

தற்காக வசூலிக்கப்படும் தொகைகளாலும், மீன் சம்பந்தமான சில பொருள்களைத் தயாரித்து விற்பதாலும், வருவாய் பெறப்படுகிறது.

**விலங்கினப் பராமரிப்பு**

ஆடு மாடுகள் போன்ற பிராணிகளை வளர்த்து விற்பதாலும், அவைகளிலிருந்து கிடைக்கும் பொருள்களை விற்பதாலும், இத் துறைக்கு வருவாய் கிடைக்கின்றது.

**கூட்டுறவு**

அரசாங்கம், சில பணியாளர்களையும், அதிகாரிகளையும் கூட்டுறவு நிறுவனங்களில் வேலைகளைப் பார்ப்பதற்காக ஏற்பாடு செய்யும்போது, அவர்களின் செலவுக்காக, குறித்த முறையில் உரிய ஸ்தாபனங்களிலிருந்து கட்டணங்கள் வசூலிக்கிறது; இதுவே இந்தத் துறையின் முக்கிய வருவாயினம்.

**தொழில்கள்**

அரசாங்கத் தொழில் துறையினர் நடத்தும் பலவகைத் தொழில் நுட்பப் பணிகள் அல்லது வேறு தொழில் பணிகள் சம்பந்தமாக வசூலிக்கப்படும் கட்டணங்களும், தயாரிக்கிற பொருள்களின் விற்பனைத் தொகையும், அரசாங்கத்திற்குச் சொந்தமான குடிசைத் தொழில்கள், சிறு தொழில் பிரிவுகள்—இவைகளிலிருந்து உற்பத்தியாகும் பொருள்களின் விற்றுமுதல் தொகையும், மலைத் தோட்டங்கள் போல அரசாங்கத்திற்குச் சொந்தமான இடங்களில் பயிராகும் மூலப் பொருள்களையும், அவைகளிலிருந்து தயாராகும் மற்றச் சரக்குகளையும் விற்பதால் கிடைக்கும் தொகையும், ‘தொழில்கள்’ என்ற வருவாய்த் தலைப்பில் சேருகின்றன. தமிழ்நாட்டில், அரசாங்கக் கொய்னுத் தொழிற்சாலையில் உற்பத்தியாகும் பொருள்களிலிருந்து பெறப்படும் வருவாய் முக்கியமானது. பொதுவாகப் பார்க்கும்போது, எல்லா அரசாங்கங்களிலும் தொழில் துறையில் ஆகும் செலவு அத்துறையில் பெறப்படும் வருவாயைவிட மிக அதிகம். உதாரணமாக, தமிழ்நாட்டு அரசாங்கத்திற்கு, 1965–66ஆம் ஆண்டில், இவ்வினத்தில் செலவு சுமார் 670 லட்சம் ரூபாய் என்றும், வருவாய் 448 இலட்ச ரூபாய் என்றும் மதிப்பிடப் பட்டது.

குறிப்பு :—கைவினைப் பயிற்சித் திட்டங்கள் சம்பந்தப்பட்ட வரவுகள் ‘பலவகைச் சமூக அபிவிருத்தி ஸ்தாபனங்கள்’ என்ற தலைப்பின் கீழ், தனியே பதிவு செய்யப்படுகின்றன.

**ஒலிபரப்பு**

இது மத்திய அரசாங்கத்தைச் சார்ந்த தலைப்பு ஆகும். வானொலி நிலையங்கள் சம்பந்தமாகக் கிடைக்கும் வருவாய், இதில் வரவு வைக்கப்

படுகிறது. மூன்ருவது திட்ட காலத்தில், மத்திய அரசாங்கத்திற்கு, இந்த இனத்தில் மொத்த வருவாய் ஆண்டுக்கு சுமார் $4\frac{1}{2}$ கோடி ரூபாயாகவும், செலவு சுமார் $5\frac{1}{2}$ கோடி ரூபாயாகவும் மதிப்பிடப்பட்டது.

**சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள் முதலியன**

முன்னர், மாநில அரசாங்கங்களின் கணக்கில், மத்திய அரசாங்கத்திடமிருந்து பெறப்படும் மானியத் தொகையும் சாதனங்களின் மதிப்புத் தொகையும், இதே தலைப்பில், வரவு வைக்கப்பட்டன. சமீபகாலமாக, மத்திய அரசாங்கம் அளிக்கும் மானியங்கள் எல்லாம் 'மத்திய அரசினர் உதவி மானியங்கள்' என்ற தனிப் பெருந் தலைப்பின் கீழ் மாநிலக் கணக்கில் வரவு வைக்கப்படுகின்றன. சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள், தேசீய வளர்ச்சிப் பணித் திட்டங்கள், ஸ்தல அபிவிருத்திப் பணிகள் முதலியவைகளின் விவரத்தை அரசாங்க நிதி நிலைக் குறிப்பில் காணலாம்.

**பலவகைச் சமூக அபிவிருத்தி ஸ்தாபனங்கள்**

மத்திய அரசாங்கக் கணக்கில், அணுசக்தி உற்பத்தித் துறை, இந்தியச் சுரங்கக் கழகம், அரசாங்க சினிமாத் துறை, புதைபொருள் ஆராய்ச்சித் துறை, கண்காட்சிகள், நிலப்பரப்பு அளவுத்துறை, முதலிய பல துறைகளில் கிடைக்கும் வருவாய், இந்தத் தலைப்பில் சேருகிறது.

மாநிலக் கணக்கில், தொழிலாளர் துறையில் கிடைக்கும் வருவாயும், தேசீய வேலை வாய்ப்பு ஸ்தாபனத்தில் கிடைக்கும் வருவாயும், இத்தலைப்பில் சேர்க்கப்படுகின்றன. முன்னர் கூறியபடி, கைவினை வளர்ச்சித் திட்டங்களுக்கு மத்திய அரசாங்கத்திடமிருந்து பெறும் மானியங்களும், தொழிற்சாலைப் பணியாளர்களுக்கான சலுகைகள், வீட்டுவசதி—திட்டங்கள் காரணமாகப் பெறும் தொகைகளும், நீராவிக் கொதிகலன்களைப் பார்வையிடுவதற்கான கட்டணங்கள், தொழிற்சங்கங்களைப் பதிவு செய்வதற்கான கட்டணங்கள் இவை போன்ற பல சில்லறை வருவாய்களும், இத்தலைப்பின்கீழ் வரவு வைக்கப்படுகின்றன. மாநிலத் தேசீய வேலை வாய்ப்பு ஸ்தாபனத்திற்கு, மத்திய அரசாங்கத்திடமிருந்து கிடைக்கும் உதவித் தொகை, 'மத்திய அரசினர் உதவி மானியங்கள்' என்ற தனிப்பெருந் தலைப்பில் காட்டப்படுகின்றது.

## பல நோக்கு நதித் திட்டங்களும், பாசன, மின்சக்தித் திட்டங்களும்—வருவாய்

இவ்வேலைகள், 'வாணிபம் சம்பந்தமானவை' என்றும், 'வாணிபம் சம்பந்தமில்லாதவை' என்றும், இருவிதமாகப் பகுக்கப்பட்டு,

தனித்தனிப் பெருந் தலைப்புகளில் வரவும் செலவும் பதிவு செய்யப்படுகின்றன. இவை மாநிலங்களுக்கு முக்கியமானவையாகும். வாணிப சம்பந்தமான பாசனத் திட்டங்களே 'இலாபகரமானவை' என்றும் 'இலாபகரம் அல்லாதவை' என்றும் வகைப்படுத்தப்படுகின்றன. நீர்வழிப் போக்குவரத்து வேலை, (Navigation Works), கரை உயர்த்தல் 'வேலை (Embankment Works), வடிகால் வேலை (Drainage Works) ஆகிய வேலைகள், சாதாரணமாக இலாபகரம் அல்லாதவை. மேற்சொன்ன வேலைகளிலிருந்து, வருவாய் நேரிடையாகவும், மறைமுகமாகவும் கிடைக்கும். பாசனம் காரணமாக வசூலிக்கப்படும் நில வரியும், பாசனத் திட்டங்களினால் பயன் அடைவோரிடமிருந்து வசூலிக்கப்படும் நன்கொடைத் தொகையும், மறைமுக வருவாய் இனத்தில் சேரும்.

பெரும்பாலும், மின்சாரம் சம்பந்தமான உற்பத்தி, வினியோக வேலைகள் தனி நிறுவனங்களின் பொறுப்புக்கு மாற்றப்பட்டு விட்டதால், மின்சக்தித் துறை வருவாய், மாநிலக் கணக்குகளில், மேற்கண்ட தலைப்பில் தற்போது சேர்க்கப்படுவதில்லை.

## பொதுப் பணிகள் – வருவாய்

பொதுப் பணித் துறை, நெடுஞ்சாலை—கிராம அபிவிருத்தித் துறை ஆகியவைகளின் சம்பந்தமாகப் பெறப்படும் வருவாய், இந்தத் தலைப்பில் பதிவு செய்யப்படும். இத்துறைகளுக்குச் சொந்தமாக உள்ள கட்டடங்களை வாடகைக்கு விடுவதால் கிடைக்கும் தொகையும், சில சாலைகளில், சுங்கமாக வசூல் செய்யும் தொகையும், அரசாங்கத்தின் நிர்வாகத்திலுள்ள தொழிற்சாலைகளில் கிடைக்கும் வருவாயும், மாநில அரசாங்கங்களுக்கு மத்திய சாலை நிதியிலிருந்து கிடைக்கும் மானியங்களும், இத்தலைப்பில் சேரும் முக்கிய வருவாயினங்கள்.

## மோட்டார் – நீர்வழிப் போக்குவரத்துத் திட்டங்கள் – வருவாய்

அரசாங்கம் போக்குவரத்துப் பணிகளை மேற்கொண்டால், அதனால் பெறப்படும் மொத்த வருவாய், இத்தலைப்பில் தனியாகக் காட்டப்படுகிறது. இந்தப் பணிகள் சம்பந்தமாக நிறுவப்பட்ட தேய்மான, சேம நிதிகளை முதலீடு செய்வதால் பெறப்படும் வட்டித் தொகையும், இதே தலைப்பில் சேர்க்கப்படுகிறது.

## செலாவணித்துறை – நாணயச் சாலைகள் – வருவாய்

இத்துறை மத்திய அரசாங்கத்தைச் சார்ந்தது. கோலார் தங்கச் சுரங்கம் சம்பந்தமான வருவாயும் இவ்வினத்தில் சேர்க்கப்படுகிறது.

## பலவகை வருவாய்

ஒய்வு உதவித் தொகைகள், எழுதுபொருள்—அச்சுத்துறை, காட்டுவளம் இவை சம்பந்தமாக அரசாங்கம் பெறும் வருவாய்கள், 'பலவகை' என்ற பொது இனத்தின் கீழ், தனித்தனிப் பெரும் தலைப்புகளில் பதிவு செய்யப்படுகின்றன. மத்திய அரசாங்கத்திற்கு, அபினி சம்பந்தமாக, பெரும் அளவில் வருவாய் கிடைக்கிறது; அதுவும் இந்த இனத்தின் கீழ், தனித் தலைப்பில் பதிவு செய்யப்படுகிறது. மாநில அரசாங்கங்களுக்கு காட்டு வளமான பொருள்களின் விற்பனையால் கிடைக்கும் தொகை முக்கியமானது. ஒரு துறைக்கும் நேரிடையான சம்பந்தம் இல்லாத பல இனங்களில் அரசாங்கத்திற்குக் கிடைக்கும் வருவாய் 'பலவகை' என்ற பெயருள்ள ஒரு பெருந் தலைப்பின் கீழ் பதிவு செய்யப்படுகின்றது. இந்த வருவாய்த் தலைப்பை, செலவுக் கணக்கில் உள்ள, 'பொது நிர்வாகம்', 'பலவகை' என்ற தலைப்புகளுக்கு நிகராகக் கொள்ளலாம். ஒருவராலும் உரிமை கோரப்படாத வைப்புத் தொகைகள், பழைய சாமான்கள்—பொருள்களின் விற்பனை, நிலங்கள், வீடுகள்—இவைகள் விற்பனை, பலவிதக் கட்டணங்கள், அபராதங்கள், பறிமுதல்கள், தேர்தல் சம்பந்தமான வருவாய், புதையல்கள்—இவை போன்றவை இத்தலைப்பில் அடங்கும். பல்கலைக் கழகங்கள், ஸ்தலஸ்தாபனங்கள், அறநிலையங்கள் இவை போன்ற பல நிறுவனங்களின் கணக்குகளை, அரசாங்கத்துறை ஒன்று தணிக்கை செய்கிறது; இது சம்பந்தமாக வசூலிக்கப்படும் தொகையும் இந்தத் தலைப்பில் பதிவு செய்யப்படுகிறது.

## உதவித் தொகைகளும், பலவகைச் சரிக்கட்டல்களும்–வருவாய்

மத்திய அரசாங்கக் கணக்கில், ரெயில்வே, தபால்–தந்தி இந்தத் துறைகளிலிருந்து பொது நிதிக்கு அளிக்கப்படும் தொகைகளும், மாநில அரசாங்கங்கள், வேறு பிரதேசங்கள்–இவைகளோடு செய்துள்ள ஏற்பாடுகளால் பெறப்படும் தொகையும், தொழில் சம்பந்தமான நிறுவனங்களிலிருந்து பெறப்படும் இலாபத் தொகையும், இந்த இன வருவாயில் சேர்க்கப்பட்டு, தனிப் பெருந் தலைப்புகளில் காட்டப்படுகின்றன. இதுபோல, மாநில அரசாங்கக் கணக்கில், யூனியன் ஆயத் தீர்வைகளில் கிடைக்கும் பங்கும், பல பணிகளுக்காக மத்திய அரசாங்கத்திடமிருந்து பெறும் உதவி மானியங்களும், தனித்தனியே இரு பெருந் தலைப்புகளில் காட்டப்படுகின்றன; இந்த முறை அண்மையில் தான் அமலுக்கு வந்தது.

## சிறப்பினங்கள்

மத்திய அரசாங்கக் கணக்கிலும், மாநில அரசாங்கக் கணக்கிலும், ஆண்டுதோறும் இல்லாது, சில சந்தர்ப்பங்களில் மட்டும் கிடைக்கும்

வரவினங்கள், தனியாக இத்தலைப்பில் காட்டப்படுகின்றன. தேசீய நெருக்கடி சம்பந்தமான வருவாய், வெளிநாட்டு உதவி—இவைகள் உதாரணம் ஆகும்.

## வரிகள், தீர்வைகள் மற்ற முக்கிய வருவாய்கள்—இவைகளின் வசூல் செலவு

அரசாங்க முக்கிய வருவாயினங்களை வசூலிப்பதற்காக நியமிக்கப் படும் அதிகாரிகள், பணியாளர்கள்—இவர்களின் சம்பளம், படி முதலிய செலவுகள் தனித்தனியே பெரும் தலைப்புகளில் பதிவு செய்யப்படு கின்றன. இந்த முறை சம்பந்தமாக, சில குறிப்புகள் மட்டும் கீழே தரப்படுகின்றன.

### வருமான வரிகள் முதலியன—வசூல்

மத்திய அரசாங்க வருமான வரித் துறையே, கார்ப்பரேஷன் வரி, வருமான வரி, சொத்து வரி, செல்வ வரி, செலவு வரி, கொடை வரி ஆகிய எல்லாவற்றையும் வசூல் செய்கின்றது; ஆகவே, மொத்தச் செல வானது, ஒரு குறிப்பிட்ட முறையில் பகுக்கப்பட்டு, அந்தந்த வரிகளுக் காகும் வசூல் செலவாகக் கணக்கில் பதிவுசெய்யப்படுகிறது.

### நிலவரி வசூல்

தமிழ்நாட்டில், நிலவரியை வசூலிக்கவும், இத்துறையை நிர்வகிக்க வும் ஆகும் செலவின் பெரும்பாகம் 'நிலவரி'யென்னும் செலவுத் தலைப் பின் கீழ் பற்றுக எழுதப்படவில்லை. இந்த வேலையை ரெவின்யூ துறை யின் மாவட்டப் பணியாளர்கள் செய்வதால், அந்தச் செலவு, 'பொது நிர்வாகம்—மாவட்ட நிர்வாகம்'' என்னும் தலைப்பின் கீழ் பற்றுக எழுதப் படுகிறது. ஆகவே, நிலவரித் துறை சம்பந்தமாகத் தனியாக ஏற்கப் படும் செலவு மட்டும் 'நிலவரி' என்னும் செலவுத் தலைப்பின்கீழ் பதிவு செய்யப்படுகிறது. இப்படிப் பதிவு செய்யப்படும் செலவுகளில் முக்கியமானவை பின்வருமாறு:—நிலங்களை அளந்து, வரியைத் திட்டம் செய்து, பதிவு செய்யும் வேலை சம்பந்தமான செலவு, நிலப் பதிவுக் கட்டுக்களை வைப்பதற்கான செலவு, மத்திய நில அளவை அலுவலகத் தின் உபயோகத்துக்காக வெளிநாடுகளில் வாங்கும் பொருள்களுக்கான செலவு, நிலங்களைப் பொதுவாக மீண்டும் சர்வே செய்வதற்கான செலவு.

### பத்திரப் பதிவுத் துறைச் செலவு

தமிழ்நாட்டில், இந்தத் துறையின் தலைமை அதிகாரி, பத்திரப் பதிவு சம்பந்தமான வேலை தவிர, இந்தியக் கூட்டு வாணிக சட்டத்தின் தலைமை நிர்வாக அதிகாரியாகவும், பிறப்பு-இறப்பு-திருமணங்கள் ஆகியவைகளின் பதிவாளராகவும் கடமையாற்றுகிறார். பத்திரப் பதிவு

சம்பந்தம் அல்லாத வேலைகளின் செலவு, ஒரு குறிப்பிட்ட முறையில் கணக்கிடப்பட்டு, 'பலவகைத் துறைகள்' என்ற பெருந் தலைப்பில் பற்ருக எழுதப் படுகிறது. ஆகவே, பத்திரப்பதிவுக்கான செலவுகள் மட்டுமே இங்குப் பதிவு ஆகின்றன.

## கடனுக்குரிய வட்டி முதலிய செலவுகள்

அரசாங்கம் வாங்கும் கடன் சம்பந்தமான செலவு இரண்டு பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்படுகிறது: (1) சாதாரணக் கடன் சம்பந்தமானது (2) நிதி இடாக் கடன் சம்பந்தமானது.

மாநில அரசாங்கங்கள் சம்பந்தப்பட்ட வரையில், மத்திய அரசாங் கத்திலிருந்தும், பொது மக்களிடமிருந்தும் பெறப்படும் கடன்களும், ரிசர்வ் பாங்கிலிருந்தோ அல்லது மத்திய அரசாங்கத்திலிருந்தோ தாற்காலிகமாகப் பெறப்படும் முன்பணங்களும், சாதாரணக் கடன் என்ற வகையில் சேரும். மத்திய அரசாங்கக் கணக்குகளில், உள்நாட் டில் பெற்ற கடன், வெளிநாட்டில் பெற்ற கடன்–இவை சம்பந்தமான செலவுகளில் தனித்தனியே காட்டப்படும்.

'நிதி இடாக் கடன்' என்பதில், மிகப்பழமையானவையாய், திருப்பிக் கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் இல்லாத, சில விசேஷக் கடன்களும், சேமிப்பு பாங்கு வைப்புத் தொகைகளும், அரசாங்க ஊழியர்களின் சேமிப்பு நிதித் தொகையும் அடங்கும்.

ஓர் ஆண்டுக்கு மேற்பட்ட கால அளவில் திருப்பிக்கொடுப்பதாகப் பொது மக்களிடமிருந்து வாங்கப்படும் கடன்கள் "நிரந்தரக் கடன்கள்" (Permanent Loans) என்று சொல்லப்படும். ஓர் ஆண்டுக் காலத் துக்குள் திருப்பிக் கொடுப்பதாகப் பெறப்படும் கடன்கள், 'தாற்காலி கக் கடன்கள்' (Floating Loans) எனப்படும். இவைகள் சாதாரண மாக, கருவூல ஊண்டியல்களை விற்பதாலும், ரிசர்வ் பாங்கியிலிருந்தும் சில சந்தர்ப்பங்களில் வர்த்தக பாங்குகளிலிருந்தும் பெறப்படும்.

மேலே சொல்லப்பட்ட கடன்கள் சம்பந்தமான வட்டித் தொகையும், கழிவுத் தொகையும், அரசாங்கத்தின் பொதுக் கடனை நிர்வகிப்பதற்காக ரிசர்ங் பாங்குக்குக் கொடுக்கப்படும் ஊதியம், கமிஷன் முதலிய செலவு களும், 'கடன்கள், இதரப் பொறுப்புகள்–இவை மீது வட்டி' 'என்ற பெருந் தலைப்பின் கீழ்ப் பதிவு செய்யப்படும்.

சில ஸ்தலஸ்தாபனங்களும், விசேஷ நிறுவனங்களும் (மின்சார போர்டு, வீட்டு வசதி போர்டு போன்றவை) கையிருப்புகளை அரசாங்கத் திடம் வைத்துவிடுகின்றன; இவைகளுக்காக அரசர்ங்கம் கொடுக்கும்

வட்டியும் இப்பெருந் தலைப்பில் சேர்க்கப்படுகிறது. ஒவ்வொரு வகையான கடனுக்கும் கொடுக்கப்படவேண்டிய வட்டி விகிதமும், கடன் வாங்கும்போது சொன்ன முறைப்படியும், அவ்வப்போது அறிவிக்கப் படும் விதமாகவும் இருக்கும்.

அரசாங்கம் வாங்கும் கடனுக்குரிய வட்டியானது, ஆண்டுதோறும் கொடுக்கப்படும்; அசல் தொகையானது குறிப்பிட்ட காலத்தில் திருப்பிக் கொடுக்கப்படும்; கொடுக்க வேண்டிய காலம் வரும்போது, எப்படியோ அதற்கு ஏற்பாடு செய்து விடலாம் என்று இருப்பது சரியான முறை ஆகாது. ஆகவே, வேண்டும்போது கடனைத் திருப்பிக் கொடுப்பதற்காக, ஒவ்வொரு கடனுக்கும் ஒரு குறிப்பிட்ட விகிதத்தில், இரு வகையான நிதிகள் ஏற்படுத்தப்பட்டு, அவைகளுக்கு ஆண்டுதோறும் பொது வருமானத்திலிருந்து தொகை சேர்க்கப்படுகிறது. இவைகளில் ஒன்றுக்கு 'தேய்மான நிதி' (Depreciation Fund) என்று பெயர்; இதில் சேர்க்கப்பட வேண்டிய ஆண்டுத் தொகை, கடனின் மொத்த மதிப்பில் ஒரு சிறு சதவிகிதமாகக் கணக்கிடப்படும். இந்த நிலையில் சேர்ந்த தொகையிலிருந்து, அரசாங்கம் கடன் பத்திரங்களைப் பொது மக்களிடமிருந்து திருப்பி வாங்கி, அவைகளை ரத்து செய்வதற்கு உபயோகப்படுத்தும்; முக்கியமாக, பங்கு மார்க்கெட்டில் அரசாங்கப் பத்திரங்களின் மதிப்புக் குறையாமல் இருப்பதற்காக, இந்த முறை மேற்கொள்ளப்படும். 'தேய்மான நிதி' தவிர, 'பொதுக் கடன் கரைப்பு நிதி' என்று இன்னொன்றும் உண்டு; கொஞ்சம் கொஞ்சமாகத் தொகையைச் சேர்த்து, குறிப்பிட்ட காலத்தில் எஞ்சியிருக்கும் கடன் முழுவதையும் திருப்பிக் கொடுப்பதற்கு வசதி செய்வதே இதன் நோக்கம்; ஆண்டுதோறும் இந்த நிதிக்கு ஒதுக்கப்படும் தொகையை, வட்டி கிடைக்கும்படி, வேறு இனங்களில் முதலீடு செய்வதும் உண்டு. இப்படி முதலும் வட்டியுமாகச் சேரும் தொகை, சம்பந்தப்பட்ட கடனின் கால அளவின் முடிவில் முழுவதும் திருப்பிக் கொடுக்கப் போதுமானதாக இருக்கவேண்டுமென்ற கோட்பாடுக்கிணங்கவோ, அல்லது ஓர் அளவுக்கு இருந்தால் போதுமானது என்ற நோக்கத்துடனே அமைக்கப்படலாம்.

இத்தனி நிதிகள் சம்பந்தமாக ஒதுக்கப்படும் தொகைகள் அரசாங்கக் கணக்கில் "கடன் குறைப்பு அல்லது தவிர்ப்புத் தொகை ஒதுக்கம்" என்ற பெருந் தலைப்பில் காட்டப்படும்.

## நிர்வாகப் பணிகள்

மத்திய அரசாங்கம், அதன் நிர்வாகத்திலுள்ள பிரதேசங்கள், மாநில அரசாங்கங்கள் – இவைகளுடைய அன்றாட நிர்வாகத்தைச் சேர்ந்த பணிகளுக்கும் அவைகளோடு தொடர்புடைய மற்றவை

களுக்கும் ஆகும் செலவு, ‘நிர்வாகப் பணிகள்’ என்ற பொது இனத்தில் சேர்க்கப்படும். சட்டசபைகள், அரசாங்கப் பொது நிர்வாகம், தணிக்கை, நீதி நிர்வாகம், சிறைச்சாலைகள், போலீஸ், வெளிநாட்டுத் துறை, வழங்கு-கழிப்புத் துறை, இன்னும் சில சில்லறைத் துறைகள் – இவைகளைச் சார்ந்த செலவுகள், தனித்தனிப் பெருந் தலைப்புகளில் காட்டப்படுகின்றன.

குறிப்பு :—வரிகள், தீர்வைகள் மற்ற முக்கிய வருவாய்கள் – இவைகளை வசூலிக்க ஆகும் செலவுகள் தனியினமாகக் காட்டப்படுவதால், அவைகள் இந்த இனத்தில் சேருவதில்லை.

### சட்டசபைகள்

பார்லிமெண்ட், மாநில சட்டசபைகள், தேர்தல்கள் – இவைகளுக்கான செலவுகளை, ‘பொது நிர்வாகம்’ என்ற பெருந் தலைப்பில் சேர்ப்பது முந்தைய வழக்கம். சமீபகாலத்தில், இம்முறை மாற்றப்பட்டு, செலவுகள் ‘பார்லிமெண்டும், மாநிலச் சட்டசபைகளும்’ என்ற தனிப் பெருந் தலைப்பில் பதிவு செய்யப்படுகின்றன. சில மாநிலங்களில், இன்னொரு மாறுதலும் அண்மையில் அமலுக்கு வந்துள்ளது; இதன்படி, தேர்தல்கள் சம்பந்தமான செலவானது ஒரு தனிக் கோரிக்கையாக சட்டசபையில் சமர்ப்பிக்கப்படுகிறது; சட்டசபைகள் சம்பந்தமான மற்றைய செலவுகள், வேறு ஒரு கோரிக்கையில் சேர்க்கப்படுகின்றன. தேர்தல் செலவில், தனது பங்காக, மத்திய அரசாங்கம் மாநில அரசாங்கத்திற்குக் கொடுக்கும் தொகை, செலவு ஏற்பட்ட ஆண்டிலேயே வசூல் செய்யப்பட்டால், ‘யூனியன் அரசாங்கத்திடமிருந்து வசூல்கள்’ என்ற தலைப்பில் பதிவு செய்யப்படும்; இது காரணமாக, அத்தொகை மொத்தச் செலவில் கழிக்கப்பட்டு, நிகரத் தொகை மட்டும் மாநிலத்தின் செலவாகக் காட்டப்படுகிறது.

### பொது நிர்வாகம்

வேறு ஒரு பெருந் தலைப்புக்குக் கீழ், பதிவு செய்ய முடியாத செலவுகள் எல்லாம், ‘பொது நிர்வாகம்’ என்ற பெருந் தலைப்பின் கீழ்ப் பற்று எழுதப்படுகின்றன. இச்செலவினம் மிகப் பெரியதாகவும், பல்வேறு செலவுகளைப் பற்றியதாகவும் இருப்பதால், எளிதில் பகுத்து அறியும் பொருட்டு, அது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கோரிக்கைகளில் சேர்க்கப்படுகிறது என்பதை முன்னரே கண்டுள்ளோம். இந்தச் செலவினத்தில் ‘அரசாங்கத் தலைவர்’, ‘அமைச்சர்கள்’, ‘தலைமைச் செயலகமும் அதைச் சேர்ந்த அலுவலகங்களும்’, ‘மாவட்ட நிர்வாகம்’, ‘பலவகை’ என்பன முக்கியப் பகுதிகளாகும்.

தமிழ் நாட்டில் ' தலைமைச் செயலகமும், அதைச் சார்ந்த அலுவலகங்களும் ' என்ற இனத்தில், அரசாங்கப் பணியாளர்கள் தேர்வுக் கழகம் (Public Service Commission) ரெவின்யூ போர்டு, நாட்டாண்மை (ஸ்தல ஸ்தாபன) நிதித் தணிக்கைத் துறை (Local Fund Audit Department)– இவைகளுக்கான செலவுகளும் அடங்கும்.

மாவட்ட நிர்வாகம் சம்பந்தமான செலவு, அந்தந்த மாநிலத்தி லுள்ள நிர்வாக முறைக்குத் தக்கபடி, பலவகையில் பிரித்துக் காட்டப் படுகிறது. இவ்விஷயத்தில் ஒரு பொதுக் கோட்பாடு உள்ளது; அதாவது, ஒரு தனிப்பட்ட முக்கியமான தலைப்பைச் சார்ந்த வேலைக்காக மட்டும் செலவிடப்படும் தொகையை, அந்த முக்கியத் தலைப்பின் கீழே பற்றுக எழுதவேண்டும்; இப்படி அல்லாமல், இரண்டு அல்லது அதற்குமேற்பட்ட முக்கியத் தலைப்புகளுக்குச் சம்பந்தப்பட்ட வேலை விஷயமாகச் செலவிடப்படும் தொகை, ' மாவட்ட நிர்வாகம் ' என்ற தலைப்பில் சேர்க்கப்படுகிறது. தமிழ் நாட்டில், (1) மாவட்டக் கலெக்டர்களும் அவர்களுடைய பணியாளர்களும், (2) சப்–கலெக் டர்கள், உதவிக் கலெக்டர்கள், துணைக் கலெக்டர்கள்–இவர்களும், இவர் களுடைய பணியாள்ர்களும், (3) தாலூகாப் பணியாளர்கள் என்ற முறையில் செலவு பகுக்கப்பட்டு, தனித்தனியே சிறு தலைப்புகளில் பதிவு செய்யப்படுகிறது.

**தணிக்கை**

இந்தியாவின் தலைமைக் கணக்கு – தணிக்கை அதிகாரியும், அவருடைய பணியாளர்களையும் சார்ந்த செலவுகள், மத்திய அரசாங்கக் கணக்கில் ' தணிக்கை ' என்ற பெருந் தலைப்பில் பதிவு செய்யப்படு கின்றன.

**நீதி நிர்வாகம்**

இந்தத் தலைப்பில் முக்கியமான பிரிவுகள் ஆவன :– உயர் நீதிமன் றங்கள், குற்ற இயல் நீதிமன்றங்கள், சிவில்–செஷன்ஸ் நீதிமன்றங்கள், சிறு வழக்கு நீதிமன்றங்கள், சட்ட அலுவலர்கள்.

**சிறைச்சாலைகள்**

சிறைச்சாலைகளின் நிர்வாகத்தைச் சேர்ந்த செலவு தவிர, அவை களில் சில பொருள்களை உற்பத்தி செய்யும் வகையில் உள்ள தொழில் களுக்கான செலவுகளும், இத்தலைப்பில் சேர்க்கப்படுகின்றன.

**போலீஸ்**

சில மாநிலங்களில் இந்தப் பெருந்தலைப்பின் கீழ்ப் பற்றுக எழுதப் படும் செலவினம், போலீஸ் துறைக்கு ஆகும் செலவு முழுவதையும்

குறிப்பதில்லை. உதாரணமாக, தமிழ்நாட்டில் கிராமப் போலீஸ் சம்பந்தமான வேலைகளை, கிராமத் தலையாரிகள் பல இடங்களில் செய்கின்றனர். இந்த இனத்தில் ஏற்படுகிற செலவுகள், 'பொது நிர்வாகம் – மாவட்ட நிர்வாகம்' என்ற தலைப்பின் கீழ் சேர்க்கப்படுகின்றன. மற்ற இனச் செலவுகளே, 'போலீஸ்' என்ற தனித் தலைப்பில் பதிவு செய்யப்படுகின்றன. பொதுவாக, தலைநகரப் போலீஸ் செலவு, மற்ற மாநிலப் போலீஸ் செலவுகளிலிருந்து பிரித்துக் காட்டப்படுகிறது. போலீஸ் பயிற்சிப் பள்ளிகள், ரெயில்வே துறைப் போலீஸ், ரயில் பாதைகளைக் காவல் புரிவதற்காக அமர்த்தப்படும் தலையாரிகளுக்கும் வெட்டியான்களுக்கும் கொடுக்கப்படும் படிகள், குற்ற விசாரணைத் துறை, சிறப்புப் போலீஸ் முதலிய இனச் செலவுகளும் இத்தலைப்பில் அடங்கும். முன்னரே கூறியபடி, மத்திய அரசாங்கத்திலிருந்து மாநில அரசாங்கம் காவல் பணிக்காகப் பெறும் தொகை, மாநிலக் கணக்குகளில் வருவாயாகப் பதிவு செய்யப்படுகிறது.

**வெளிநாட்டுத் துறை ; வழங்கு–கழிப்புத் துறை**

இவை மத்திய அரசாங்க சம்பந்தமானவை.

**பலவகைத் துறைகள்**

மத்திய அரசாங்கத்தில், தேசீய சேமிப்புத் திட்டத்துறை, அந்நியச் செலாவணிக் கட்டுப்பாட்டுத் துறை, கம்பெனி நிர்வாகத் துறை, பத்திரிகை செய்தித் துறை முதலிய பல இனச் செலவுகள் இத் தலைப்பில் பதிவாகின்றன.

மாநில அரசாங்கங்களில் தீ அணைக்கும் படை, அறநிலையக் காவல் துறை, தேர்வுகள், சீட்டுமுறை நிதிச் சட்டங்கள் இவை போன்ற பல இனச் செலவுகளும் இத்தலைப்பில் சேர்க்கப்படுகின்றன.

**கல்வி**

கல்வி சம்பந்தமான செலவுகள், பல பெரும் தலைப்புகளில் சேர்க்கப்படுகின்றன. வேளாண்மைத் துறைக் கல்வி, மருத்துவத் துறைக் கல்வி, விலங்கின மருத்துவக் கல்வி, கூட்டுறவுக் கல்வி, காட்டுவளக் கல்வி, பின்தங்கிய அல்லது தாழ்நிலையிலுள்ளவர்களின் கல்விக்காக அளிக்கப்படும் தனி உதவி– இவை போன்ற செலவுகள், அந்தந்தத் துறையின் செலவிலே சேர்க்கப்படுகின்றன என்பதை முன்னரே கண்டோம். இது போல், அரசாங்கப் பணியாளர்களின் சம்பந்தமாக நடத்தப்படும் விசேஷத் தேர்வுகளுக்கான செலவுகள், 'பலவகைத் துறை' என்ற தலைப்பில் சேர்க்கப்படுகின்றன. பொதுவாக, பொருட்காட்சி சாலைகள், விஞ்ஞானக் கழகங்கள்–நிலையங்கள்–இவைகளுக்கு அளிக்கும் உதவித் தொகைகளும், பொது நூல் நிலையங்களைப் பற்றிய செலவுகளும்,

'விஞ்ஞானத் துறைகள்' என்ற தலைப்பில் சேர்க்கப்படுகின்றன. மத்திய அரசாங்கக் கணக்கில் அணுசக்தி ஆராய்ச்சி, நிலஇயல்ஆராய்ச்சி (Geological Survey), சீதோஷ்ணநிலை ஆராய்ச்சி, புதைபொருள் ஆராய்ச்சி, சுரங்கக் கழகம், தாவர விலங்கின ஆராய்ச்சித் துறை, தேசப்படத் துறை முதலியவைகளுக்கான செலவு இத்தலைப்பில் சேரும். கல்வித் துறையின் நிர்வாகத்தில் உள்ளவையும், பொதுவானவையும், தொழில் நுட்பக் கல்விகளைப் பற்றியவையுமான செலவுகளே 'கல்வி' என்ற பெருந் தலைப்பில் சேர்க்கப்படுகின்றன.

'கல்வி' என்னும் பெருந் தலைப்பில், பல்கலைக் கழகக் கல்வி, இடைக்காலக் கல்வி, ஆரம்பக் கல்வி, சிறப்புக் கல்வி, தொழில் நுட்பக் கல்வி, பொது விவகாரம் என்று பல துணைப்பெருந்தலைப்புகள் உள்ளன. பல்கலைக் கழகங்கள், அரசாங்கத்தின் நேரிடையான நிர்வாகத்துக்கு உட்படாமல் இயங்குகின்றன; அவைகளுக்கு அரசாங்கங்கள் பலவிதமான மானியங்கள் அளிக்கின்றன; இந்த வகைச் செலவுகளும் 'கல்வி' என்ற தலைப்பில் பதிவு செய்யப்படுகின்றன. அரசாங்கமே நேராக நடத்தும் சட்டக் கல்லூரிகள், பொறி இயல் கல்லூரிகள், ஆசிரியர் போதனைக் கல்லூரிகள், வேறு கல்லூரிகள், பள்ளிகள் இவைகள் சம்பந்தமான செலவுகளும் இத்தலைப்பில் சேரும். ஆனால், பெருவாரியான செலவு, தனியார் துறையிலுள்ள கல்லூரிகளுக்கும் பள்ளிகளுக்கும் பலவகையில் அரசாங்கம் அளிக்கும் மானியங்கள் என்ற முறையில்தான் ஏற்கப்படுகின்றது; இதில், சில ஸ்தல ஸ்தாபனங்களில் நடத்தப்படும் பள்ளிகளும் அடங்கும். ஆரம்பப் பள்ளிகள் பெரும்பாலும், தனியார் துறையிலும், ஸ்தல ஸ்தாபனங்களின் நிர்வாகத்திலும் நடத்தப்படுகின்றன.

### மருத்துவம்

மேலே சொன்னபடி, மருத்துவக் கல்லூரிகள், பள்ளிகள் சம்பந்தமான செலவுகள் இந்தத் தலைப்பில் சேர்க்கப்படுகின்றன. இவைதவிர, மருத்துவத்துறைப் பணியாளர்கள், மருத்துவ மனைகள் (மனநோய் மருத்துவ மனைகள் உட்பட), மருந்தகங்கள், தொழிலாளர் இன்ஷ்யூரன்ஸ் திட்டம், ரசாயன ஆய்வுக்கூடங்கள்—இவைகளின் செலவுகளும் இத்தலைப்பில் அடங்கும்.

### பொதுச் சுகாதாரம்

பொதுச் சுகாதார அதிகாரிகள், பணியாளர்கள், ஸ்தல ஸ்தாபனங்களால் ஏற்கப்படும் குடிநீர்த் திட்டங்களை மேற்பார்வை செய்வதற்காக நியமிக்கப்படும் தொழில் நுட்ப வல்லுநர், நகர அமைப்புத் திட்ட நெறியாளர், தாய் சேய் நல நிலையங்கள், ஊட்டச்சத்து, சுகாதாரப் பணி

யாளர்களுக்காகவும் மேற்பார்வையாளருக்காகவும் நடத்தப்படும் பயிற்சிப் பள்ளிகள், மருத்துவ-பொதுச் சுகாதாரக் கூட்டு நிலையங்கள், ஆதாரச் சுகாதார நிலையங்கள் - இவை சம்பந்தமான செலவுகள் இந்தத் தலைப்பில் சேர்க்கப்படுகின்றன. நகராட்சி மன்றங்களுக்கும், ஸ்தல ஸ்தாபனங்களுக்கும், தண்ணீர் வழங்கு - திட்டங்கள், தொத்து நோய் தடுப்புத் திட்டங்கள், சுகாதாரச் சேய் நல விடுதிகள் - இவைகளுக்காகக் கொடுக்கப்படும் மானியங்களும் இத்தலைப்பில் பதிவு செய்யப்படுகின்றன. தமிழ்நாட்டில், ஒரு சிறப்பான செலவு, நுண் கிருமி ஆய்வுக் கூடம் சம்பந்தமானது.

### வேளாண்மை

வேளாண்மை சம்பந்தமான நிர்வாகம், கல்வி, பொறியியல், சோதனைப் பண்ணைகள், கண்காட்சிகள், தோட்டங்கள், விளைபொருள்கள் - ஆகியவை சம்பந்தமான பலதரப்பட்ட செலவுகளும் இத்தலைப்பில் பதிவு செய்யப்படுகின்றன. வேளாண்மை என்ற பெருந் தலைப்பில், ஒரு முக்கியப் பகுதி மீன் வளத்தைப் பற்றியது. அண்மையில் இது மிகவும் பெருகி முக்கியத்துவம் அடைந்து விட்டதால், தமிழ்நாட்டில், அதற்காக ஒரு தனி மானியக் கோரிக்கை சமர்ப்பிக்கப்படுகின்றது.

### விலங்கினப் பராமரிப்பு

விலங்கினப் பராமரிப்புத் துறையின் நிர்வாகம், அதனுல் நடத்தப்படும் மருத்துவ மனைகள், .மருந்தகங்கள், கல்வி, ஆராய்ச்சிக்கூடங்கள், இனப் பெருக்க வேலைகள் முதலிய செலவுகள் இத்தலைப்பில் சேர்க்கப்படுகின்றன.

### தொழில்கள்

இந்தப் பெருந் தலைப்பில், தொழில் துறை, சின்கோனுத் துறை, கதர் - கிராமத் தொழில் துறை ஆகியவைகளின் செலவுகள் சேர்க்கப்படுகின்றன. ஆயினும், தமிழ்நாட்டில் ஒவ்வொரு துறைக்கும் தனித்தனி மானியக் கோரிக்கைகள் சமர்ப்பிக்கப்படுகின்றன. தொழில் துறைச் செலவில், அதிகாரிகள் - பணியாளர்களின் சம்பளங்கள் படிகள் தவிர, சித்திரக்கலை - கைத்தொழில் - இவைகளுக்கான கல்லூரிகள், பள்ளிகள், தொழில் கூட்டுறவுகள், நூல் துணி - இவைகளின் உற்பத்தி, கட்டுப்பாடு, பலவகைப் பரிசோதனைகள், தொழிற்பேட்டைகள், விசேஷ சாதனங்களின் தயாரிப்பு, குடிசைத் தொழில், சிறு ரகத் தொழில்கள் - இவை சம்பந்தமான செலவுகளும் அடங்கும்.

சின்கோனு மலைத் தோட்டங்கள், அங்கு உற்பத்தி செய்யப்படும் சிறப்புப் பொருள்கள் - இவைகளுக்கான செலவு, சில மாநில அரசாங்

கங்களுக்கு முக்கியம் ஆகின்றது. இத்தகைய தோட்டங்களும் பிற தொழில் நிறுவனங்களும் வாணிக நிறுவனங்களாகக் கருதப்பட்டு, அவைகளுக்குச் சாதாரண முறைக் கணக்குத் தவிர, இலாப நஷ்ட அறிக்கைகள் உள்ளிட்ட வாணிக முறைக் கணக்குகளும் வைக்கப்படு கின்றன.

### சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள் முதலிய வேலைகள்

இவைகளின் விவரங்களை அந்தந்த அரசாங்கத்தின் நிதி நிலைக் குறிப்பில் காணலாம்.

### தொழிலாளரும் வேலை வாய்ப்பும்

தொழிலாளர் துறையின் நிர்வாகம், தொழிற்சாலைகளின் மேற் பார்வையாளர்கள், வேலை வாய்ப்புக்கும் பயிற்சிக்குமான திட்டங்கள், நீராவிக் கொதிக்கலன் சோதனைகள் - இவைகள் சம்பந்தமான செலவுகள் இத் தலைப்பில் சேர்க்கப்படுகின்றன.

### பலவகை, சமூக, அபிவிருத்தி ஸ்தாபனங்கள் முதலியன

மாநிலங்களில் இந்தப் பெருந் தலைப்பில் ஹரிஜன நலத் துறை, புள்ளி விவரத் துறை, புராதனக் கையெழுத்துப் பிரதிகளின் பாதுகாப் புத் துறை, மொழிபெயர்ப்புத் துறை, மகளிர் நலத் துறை (சமூகத் தில் வீழ்ந்த பெண்களின் நலத் துறை உள்பட) இவை போன்ற பல வினச் செலவுகள் சேர்க்கப்படுகின்றன. மத்திய அரசாங்கக் கணக்கு களில், அரசாங்கச் சினிமாக் காட்சித் துறை, விளம்பரத் துறை, மத்திய நீர் மின்சக்தி திட்ட நிறுவனம், வெளிநாடுகளிலிருந்து வரும் பிரயாணிகளுக்கான நிறுவனங்கள், மக்கட் தொகைக் கணக்குத் துறை, மத்திய நூலகங்கள், பால்பண்ணை ஆராய்ச்சித் திட்டங்கள் போன்ற இனங்களும் இத் தலைப்பில் சேருகின்றன. ஆனால், முன்னரே விளக் கியபடி, இந்தச் செலவுகள் ஒவ்வொன்றின் முக்கியத்துவம் கருதி, வெவ் வேறு மானியக் கோரிக்கைகளில் சேர்க்கப்படுகின்றன.

### தொழில் அபிவிருத்தி—ரெவின்யூ கணக்குகளில் பதிவு செய்யப் படும் மூலதனச் செலவு

சில சமயங்களில், மூலதனச் செலவுகள், சில காரணம் பற்றி, ரெவின்யூ கணக்குகளிலே சேர்க்கப்படுகின்றன. உதாரணமாக, மத்திய அரசாங்கத்தில் உப்பளத் துறைப் பணியாளர் குடியிருப்புக் காகக் கட்டப்படும் வீடுகள், மற்ற வசதிகள் - இவைகளுக்காகும் செலவு இம்முறையில், இத் தலைப்பில் பதிவு செய்யப்படுகின்றது.

## பல நோக்கு நதித் திட்டங்கள் - பாசன மின்சக்தித் திட்டங்கள்

பல நோக்கு நதித் திட்டங்கள் சாதாரணமாக மத்திய அரசாங்கத்தினாலேயே ஏற்கப்படுகின்றன. மத்திய அரசாங்கத்தால் நிறுவப்பட்டுள்ள நீர் மின்சக்தி ஆராய்ச்சிக்கூடங்கள், வெள்ளத் தடுப்பு நிறுவனங்கள், தொழில் நுட்பப் பயிற்சிக் கூடங்கள், நதித் திட்டங்களின் ஆய்வுக் குழாம் - ஆகியவைகளின் செலவும் மேற்கண்ட தலைப்பில் சேர்க்கப்படுகின்றது.

மின்சக்தித் திட்டங்கள் பெரும்பாலும் தனி நிறுவனங்களின் பொறுப்புக்கு மாற்றப்பட்டுவிட்டபடியால், அவைகளுக்கான செலவு அரசாங்கக் கணக்குகளில் அரிதாகவே காணப்படும். மத்திய அரசாங்கம் சில நீர் மின்சக்தித் திட்டங்களுக்கு நேரிடையான பொறுப்பு வகிக்கின்றது. அவைகளுக்கான செலவு, 'மின்சக்தித் திட்டங்கள்' என்ற தனித் தலைப்பில் பதிவு செய்யப்படுகின்றது.

### பாசனம்

நீர்ப்பாசனம், நீர்வழிப் போக்குவரத்து வசதி, நீர் நிலைகளின் கரைகளை உயர்த்தல், வடிகால் வசதி - இவை சம்பந்தமான பணிகளை, சுருக்கமாக 'பாசன வேலை' என்று குறிப்பிடுவது வழக்கம். இச் செலவு இரு பெரிய பிரிவுகளாகக் காட்டப்படுகின்றது :—(1) மூலதனக் கணக்கும், ரெவின்யூ கணக்கும் வைக்கப்படுகின்ற திட்டங்கள் (இவைகள் முன் கூறியபடி இலாபகரமானவை, இலாபகரம் இல்லாதவை என்று பிரிக்கப்படும்; இவைகள் ஏறக்குறைய வாணிகத் தரம் உள்ளவையாகக் கருதப்படுகின்றன); (2) மூலதனக் கணக்கோ அல்லது ரெவின்யூ கணக்கோ வைக்கப்படாத பணிகள் (இவை வருவாய் நோக்கம் இல்லாது மேற்கொள்ளப்பட்ட திட்டங்களாகவோ, அல்லது மிகவும் சிறிய அளவுத் திட்டங்களாகவோ இருக்கும்).

#### மூலதனக் கணக்கும் ரெவின்யூ கணக்கும்

சாதாரணமாக, ஒரு திட்டத்திற்கு ஆகும் செலவு 50 ஆயிரம் ரூபாய்க்கு மேல் இருந்தால், அதற்கு மூலதனக் கணக்கும், ரெவின்யூ கணக்கும் வைக்கப்படும். முதன் முதலாக ஒரு திட்டத்தை நிறுவ ஆகும் செலவும், சில பகுதிகளின் வேலை முடிந்த போதிலும் அவை தனியே நடைமுறை உபயோகத்திற்கு வராதபோது, அவைகளின் பராமரிப்புக்கான செலவும், இம்முறையில் மூலதனக் கணக்கில் சேரும்.

**குறிப்பு :– 1.** ஒரு திட்டத்தை நிறுவும் செலவுக்கான கணக்கு இறுதியாக்கப்பட்ட பின், அதை விஸ்தரிப்பதற்கு அல்லது அபிவிருத்தி

செய்ய ஏற்கப்படும் செலவு, பின்கண்ட நிலைகளில் ஒவ்வோர் இனத்தி லும் 1000/- ரூபாய்க்கு மேல் இருந்தால், மூலதனக் கணக்கில் சேர்க்கப்படும்.

(அ) ஏற்கப்படும் பணிகள் நேரே இலாபகரமானவையாக இருக்கவேண்டும். (உதாரணம் :- புதிய கிளைக் கால்வாய்கள், அல்லது ஏற்கெனவே உள்ள கால்வாய்களில் நீர்ப்போக்குப் பெருகும் படி தொடங்கும் வேலைகள்.) அப்படித் தனியே இலாபகரமானவை யாக இல்லாத போதிலும், அப்பணிகள், ஆதாரத் திட்டத்தின் முழு வளர்ச்சிக்கு அவசியமானவையாக இருக்கவேண்டும்.

(ஆ) ஒரு திட்டத்திற்குட்பட்ட பணிகளை அவ்வப்போது பழுதுபார்க்கவோ, அல்லது புதுப்பிக்கவோ, அவசியம் நேரிடும். அப்படிச் செய்யும்போது, முதலில் அப்பணிகளுக்கான செலவுகளைவிட, புதிதாக ஏற்கப்படும் செலவு, ஆயிர ரூபாய்க்கு மேல் ஆனுல், அந்த அதிகப்படிச் செலவு மட்டும் மூலதனக் கணக்கில் சேர்க்கப்படும்.

குறிப்பு :—2. நடைமுறையில் பழுதுபார்க்கவும், பராமரிக்கவும் ஏற்கப்படும் செலவுகளும், மேலே சொன்னபடி மூலதனக் கணக்கில் சேர்க்கப்படாத, விஸ்தரிப்பு - அபிவிருத்தித் திட்டச் செலவுகளும், புதுப்பிக்கும் செலவுகளும், அன்ருடச் செலவாக, ரெவின்யூ கணக்கில் பதிவு செய்யப்படும்.

(1) பொதுவாக, புதிய திட்டங்களும், ஏற்கெனவேயுள்ள திட்டங் களின் விஸ்தரிப்பு அல்லது அபிவிருத்திக்கான வேலைகளும், தனித் தனியாக இலாபகரமானவை என்று கருதப்பட்டால், அவ்வேலைகளுக் கான செலவும், (2) ஏற்கெனவேயுள்ள இலாபகரமான திட்டங்களின் பகுதியாக ஏற்கப்படும் வேலைகளுக்கான செலவும், (3) இலாபகர மல்லாத புதுத் திட்டங்களுக்கான செலவும், (4) ஏற்கெனவேயுள்ள இலாபகரமில்லாத திட்டங்கள் சம்பந்தமான வேலைகளுக்கான செலவும், மூலதனக் கணக்கில் சேர்க்கக் கூடியவை.

குறிப்பு :—ஒரு வேலையைச்சார்ந்த மூலதனக் கணக்கில் பதிவு செய்யப்பட்ட மொத்த முதலீட்டுத் தொகை மீது, ஒரு குறிப்பிட்ட வட்டி விகிதத்தில் கணக்கிடப்பட்ட தொகைக்குச் சமமாகவோ அல்லது அதற்கு அதிகமாகவோ, ஆண்டுதோறும் நிகர வருவாய் தரக்கூடிய திட்டங்களுக்கு, 'இலாபகரமான' திட்டங்கள் என்று பெயர். இதற்கான வட்டி விகிதமானது, பொதுவாக அரசாங்கம் ஒரு பரவலான கால அளவில் கடன் வாங்குவதாலுல், அதற்காகக்

கொடுக்க வேண்டியிருக்கும் வட்டி விகிதத்தின் அடிப்படையில், அவ்வப்போது நிர்ணயிக்கப்படும். இந்த அளவுக்கு வருவாய் தர முடியாத திட்டங்களோ, வேலைகளோ, 'இலாபகரம் அல்லாதவை' என்று கருதப்படும்.

மேலே குறிப்பிடப்பட்ட முதல் வகைச் செலவை, நடைமுதல் வருமானத்திலிருந்து அல்லாமல், அரசாங்கத்திடம் சேர்ந்துள்ள கையிருப்பிலிருந்தும், கடன்கள் வாங்கியும் ஏற்கலாம். இரண்டாவது வகைச் செலவு சம்பந்தமாகவும் இந்த முறையைப் பின்பற்றலாம்; ஆனால், அப்படிச் செய்வதானால், சம்பந்தப்பட்ட ஒவ்வொரு வேலையும் இலாபகரமாகவும், ஏற்கப்பட வேண்டிய செலவு ஓர் அளவுக்குக் குறையாமலும் இருக்கவேண்டுமென்ற நிபந்தனை உண்டு. ஏற்கெனவே உள்ள ஓர் இலாபகரமான திட்டம் சம்பந்தமாக ஏற்கப்படும் புதிய வேலைகள் தனியே இலாபகரமாக இருக்கும் என்று கருதப்படாவிட்டால், அச் செலவை, சாதாரணமாக நடைமுதல் வருமானத்தில் இருந்தே ஏற்பது முறையாகும்; சில சமயங்களில், இந்த வேலைகள் விஷயத்திலும், மொத்தச் செலவானது ஓர் அளவுக்கு மேல் இருந்தால், நடைமுதல் அல்லாத வருமானத்திலிருந்தும் ஏற்கலாம் என்று விதிகள் செய்யப்பட்டுள்ளன. மற்ற இருவகைச் செலவுகளையும், நடைமுதல் வருமானத்திலிருந்தே செய்வது முறையாகும்; ஆனால், இதற்கும் விதி விலக்குகள் உள்ளன:– (1) ஏற்கப்பட வேண்டிய செலவு, மிகவும் பெரிதாக இருந்தால், அச்செலவு முழுவதையும் நடைமுதல் வருமானத்திலிருந்து ஏற்பது, மிகவும் அசௌகரியமாக இருக்கலாம்; இந்நிலையில், அச் செலவை நடைமுதல் வருமானம் அல்லாத கணக்கிலிருந்து ஏற்கலாம். (2) பஞ்ச நிலைத் தடுப்பு அல்லது நிவாரணம் என்ற வகையில், வேலைகள் ஏற்கப்படவேண்டிருந்தால், அவைகளுக்கான செலவுத் தொகையை, அது எவ்வளவு குறைவாகவிருந்தாலும், பஞ்ச நிவாரண நிதிக் கணக்கிலிருந்து பெறலாம்; ஆனால், அந்த நிதியில் ஓரளவுக்குக் குறையாமல் கையிருப்பு இருக்க வேண்டுமென்ற நிபந்தனை உண்டு.

**பாசன மானியக் கோரிக்கைகள்**

முன்னரே விளக்கியபடி, ரெவின்யூ கணக்கில் சேரும் பாசனச் செலவுகளுக்கும் மூலதனக் கணக்கில் சேரும் அவ்வினச் செலவுகளுக்கும் தனித்தனி மானியக் கோரிக்கைகள் சமர்ப்பிப்பது வழக்கம். இங்கு ஒன்று அறிய வேண்டியதாக உள்ளது – இம்மானியங்களின் தொகையில் அடங்கிய செலவானது, பாசனத் துறையின் முழுச் செலவையும் காட்டுவதில்லை. தமிழ் நாட்டிலும், இன்னும் சில மாநிலங்களிலும், பொதுப் பணித் துறையைச் சேர்ந்த பணியாளர்கள்,

கருவிகள், சாதனங்கள் – இவைகளுக்காகும் செலவு, முதலில் '50. பொதுப் பணிகள்' என்ற தலைப்பில் பதிவு செய்யப்படுகின்றது; ஒரு குறிப்பிட்ட பாசன வேலைக்காகவே, தனியாக நியமிக்கப்படும் பணியாளர்கள், அல்லது பெறப்படும் கருவிகள், சாதனங்கள் – இவைகளுக்கான செலவு மட்டும் முதலிலேயே அந்தக் குறிப்பிட்ட வேலையின் செலவோடு சேர்த்து எழுதப்படும். 'பொதுப் பணிகள்' என்ற தலைப்பில் சேர்க்கப்பட்ட பணியாளர்களுக்கும், கருவிகள் முதலியவைகளுக்குமான செலவுத் தொகை ஒவ்வோர் ஆண்டின் இறுதியிலும், பாசனத் தலைப்புகள், பொதுப் பணிக்குரிய தலைப்புகள், சம்பந்தப்பட்ட வேறு தலைப்புகள் இவைகளிடையே ஒரு குறிப்பிட்ட முறையில் பகுக்கப்பட்டு, அந்தந்தத் தலைப்புக் கணக்கில் சேர்க்கப்படுகிறது. ஆயினும், மானியக் கோரிக்கைகள் விஷயத்தில், எளிமையைக் கருதி, 'பொதுப் பணிகள்' என்ற தலைப்பில் முதலில் சேர்க்கப்பட்டு, பின்னர் பகுக்கப்படும் செலவுகள் எல்லாவற்றுக்குமே, ஒரு தனி மானியக் கோரிக்கை சமர்ப்பிப்பது உண்டு.

### நடைமுதல் செலவுகள்

இந்த வகைச் செலவுகளை, அந்தந்தத் திட்டங்களிலிருந்து பெறப்படும் வருவாய்க்குக் கழிப்பாக, அரசாங்கக் கணக்கில் காட்டுவது வெகு காலமாகப் பின்பற்றப்பட்டமுறை; இந்த முறைப்படி, பாசனங்கள் முதலிய திட்டங்களின் செலவு போக எஞ்சியுள்ள நிகர வருவாய் மட்டும், வருவாய்க் கணக்கில் காட்டப்பட்டு வந்தது. சமீப காலமாக, இந்த முறை மாற்றப்பட்டு, நடைமுதல் செலவுகள், மற்றச் செலவினங்கள் போல், தனியாக ஒரு பெருந் தலைப்பில், செலவுக் கணக்கிலேயே காட்டப்படுகின்றன. விஸ்தரிப்பு, அபிவிருத்தி, பராமரிப்பு, பழுதுபார்த்தல், மராமத்துக்காக உள்ள தனிப் பணியாளர்கள், கருவிகள், சாதனங்கள் – இவைகளுக்கான குறிப்பிட்ட செலவுகள் நடைமுதல் செலவுகள் எனப்படும்.

### பாசனவட்டிச் செலவு

மூலதனக் கணக்கும் – ரெவின்யூ கணக்கும் வைக்கப்பட்டுள்ள திட்டங்கள், ஏறக்குறைய வாணிப முறையில் உள்ளனவாகக் கருதப்படுகின்றன. இவைகளுக்கும் முழு வாணிப வகையில் சேர்ந்தவை என்பவைகளுக்கும், வியாபார முறையில் இலாப நஷ்டக் கணக்குகள் தயாரிக்கப்படும். இத்திட்டங்களுக்கான மூலதனச் செலவு, பலவகையாகப் பெறப்பட்டிருக்கலாம்; ஆனாலும், ஒவ்வொரு திட்டமும் இலாபகரமாக இயங்குகிறதா என்பதைக் கணக்கிடுவதற்காக, மூலதனச் செலவின் மொத்தத் தொகை மீது முன்னரே குறிப்பிட்டபடி வட்டித்தொகை கணக்கிடப்பட்டு, பாசனத் துறையிலோ அல்லது மற்ற சம்பந்தப்பட்ட துறையிலோ, செலவினமாக எழுதப்

படுகிறது; இத்தொகைக்கு ஏற்ப, அரசாங்கக் கணக்கில் வேறு இடத்தில் வரவும் வைக்கப்படும். சமீப காலம் வரையில், அரசாங்கம் பொதுவாக வாங்கிய கடன்களுக்கும், ஏற்ற பொறுப்புகளுக்குமாக கொடுக்கவேண்டிய வட்டித் தொகைச் செலவில் கழிப்பாக, இந்த வரவு வைக்கப்பட்டது; ஆனால், அண்மையில் இம்முறை மாற்றப் பட்டு, வாணிபத் துறைகளிலிருந்து வட்டியாகப் பெறும் தொகையும், 'வட்டி வருவாய்' என்கிற பெரும் தலைப்பில், ஒரு சாதாரண வருவாய் இனமாக, பதிவு செய்யப்படுகிறது என்பது ஏற்கெனவே விளக்கப்பட்டது. வாணிபத் துறைகளிலிருந்து வட்டியாகப்பெற வேண்டிய வட்டித்தொகையானது ஒவ்வோர் ஆண்டிலும் ஆனதாகக் கொள்ளப்படும் மூலதனச் செலவுமீது, அந்தந்த ஆண்டுக்கு என்று நிர்ணயிக்கப்பட்ட வட்டி விகிதத்தில் கணக்கிடப்படுகிறது; அதாவது, ஒவ்வோர் ஆண்டிலுமான மூலதனச் செலவுக்கு இந்த விகிதத்தில் வட்டி கணக்கிட வேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்ட பின், அது மாற்றப் படுவதேயில்லை; ஆகவே, பல ஆண்டுகளில் ஏற்படும் மூலதனச் செலவுகள் மீது, வெவ்வேறு விகிதத்தில் வட்டித்தொகை கணக்கிடப் படலாம்.

குறிப்பு :—வாணிபத் துறையில் சேராத பாசனம் முதலிய வேலை என்பதில், "சிறு பாசனவேலைகள்" (Minor Irrigation) ஒரு முக்கிய மான பகுதி; இவை பெரும்பாலும், ரெவின்யூ துறையின் பொறுப்பாக இருக்கும். மற்ற வேலைகள், பொதுப் பணித் துறையின் பொறுப்பாக இருக்கும்.

## பொதுப் பணிகள்

மத்திய அரசாங்கத்தால் நாட்டுக் காப்புக்காக ஏற்கப்பட்ட பணிகள், 'காப்புத் துறை வேலைகள்' (Defence Works) எனவும், மற்றப் பொதுப் பணிகள், 'காப்புத் துறையைச் சேராத வேலைகள்' (Civil Works) எனவும் முன்னர் கூறப்பட்டு வந்தன. தற்காலத்தில், நாட்டுக் காப்புத் துறை சம்பந்தமில்லாத வேலைகள் எல்லாம் 'பொதுப் பணிகள்' என்றே கூறப்படுகின்றன. பொதுப் பணித் துறையில் ஏற்கப்படும் வேலைகள், கட்டடங்கள், சாலைகள், பாலங்கள் முதலிவைகளைப் பற்றியனவாகும். ஸ்தல ஸ்தாபனங் களாலும் இவ்வகையான வேலைகள் ஏற்கப்பட்டு, அவைகளுக்கு அரசாங்கத்திலிருந்து மானியம் கொடுக்கப்பட்டால், அவைகளும் 'பொதுப் பணிகள்' என்ற தலைப்பில் சேர்க்கப்படுகின்றன. தேர்ச்சியுள்ள தொழிலாளர் வேண்டாமலும், நுட்பமான மேற்பார்வை தேவைப்படாமலும் செய்யப்படுகின்ற வேலைகள், 'சிறு இன வேலைகள்' (Petty Construction and Repairs) என்ற வகையில் சேர்க்கப்படும்; சம்பந்தப்பட்ட துறையினரே அவைகளுக்கும்

பொறுப்பு ஏற்பார்கள்; அதாவது, அம்மாதிரியான வேலைகளை, பொதுப் பணித் துறை ஏற்காது. காட்டுவளத் துறை போன்ற சில துறைகளில், தனியான பொறியியல் பணியாளர்கள் இருப்பார்கள். மாநில ஆயத் துறை, கதர்த்துறை, வேளாண்மைத் துறை இவை போன்ற சில துறைகளில், செய்யப்படவேண்டிய வேலைகள் ஒதுக்குப் புறமான இடங்களில் இருக்கலாம்; அக்காரணம் பற்றி அவ்வேலைகளில், பொதுப் பணித் துறையை ஈடுபடுத்த முடியாமல் போகலாம்; இம் மாதிரியான சந்தர்ப்பங்களில், அந்தந்தத் துறைகளே, தங்கள் வசதிக்கான வேலைகளைச் செய்து, செலவைத் தங்கள் துறைச் செலவாகவே எழுதிக்கொள்ளும். போலீஸ் துறையில், சில கட்டடங்கள் அந்தத் துறையைச் சார்ந்தனவாகவே கணக்குகளில் பதிவு செய்யப்பட்டு இருக்கும்; இருந்தாலும், இவை சம்பந்தமாக வேலைகளை ஓர் அளவு தேர்ச்சி பெற்றவர்களே செய்ய வேண்டியிருந்தால், அதற்கான பொறுப்பைப் பொதுப் பணித்துறை ஏற்கும்; இந்நிலையில், செலவுத் தொகை போலீஸ் துறையின் கணக்கிலேயே எழுதப்படும்; பொதுப் பணித்துறை, அவ்வேலைகளைச் செய்வதற்காக, ஓர் அதிகப்படியான தொகையையும், போலீஸ் துறையிலிருந்து வசூலிக்கும்; இப்படி அதிகமாக வசூலிக்கப்படும் தொகை, பொதுப் பணித் துறைப் பணியாளர்களின் செலவில் கழிக்கப்படும். மத்திய அரசாங்கக் கணக்குகளில், எண்ணெய் சம்பந்தமான சுங்கவரி, ஆயத் தீர்வைகள் இவைமூலம் பெறப்படும் வருவாயில் ஒருபகுதி, மத்திய சாலை நிதிக்கு மாற்றப்படுகிறது. அப்படி மாற்றப்படும் தொகை மத்திய அரசாங்கப் பொதுப் பணித்துறையின் செலவாக எழுதப்படுகிறது.

### மானியக் கோரிக்கைகள்

பொதுப் பணித்துறை சம்பந்தமான செலவுகளுக்குப் பல மானியக் கோரிக்கைகள் இருக்கலாம் என்று முன்னரே விளக்கப்பட்டது. தமிழ் நாட்டில், கட்டடங்கள், சாலைகள், இவைகளைப் பழுது பார்த்தல் முதலிய வேலைகள் சம்பந்தமான செலவை ஒரு தனிக் கோரிக்கையிலும்; பணியாளர்கள், கருவிகள், சாதனங்கள் இவைகள் சம்பந்தமான செலவை இன்னொரு கோரிக்கையிலும்; ஸ்தல ஸ்தாபனங்கள் சம்பந்தமான சாலைகள், பாலங்கள், குடி நீர் வழங்கு திட்டங்கள், வடிகால் திட்டங்கள், சேரி ஒழிப்புத் திட்டங்கள் முதலியவைகளுக்குக் கொடுக்கப்படும் மானியங்களை மற்றொரு கோரிக்கையிலும்; மூலதனச் செலவைப் பிறிதொரு கோரிக்கையிலும் காட்டுவது வழக்கம்.

### மூல வேலைகள்

பொதுப்பணிகளில், மூல வேலைகள் (Original Works) என்றும், மராமத்து வேலைகள் (Repairs) என்றும் இரண்டு முக்கியப் பிரிவுகள் உண்டு.

மூல வேலைகள் என்பன கட்டடங்கள், போக்குவரத்து வசதிகள் மற்ற ஆக்கப் பணிகள் – இவைகளைச் சார்ந்தனவாக இருக்கும். கட்டட மூலவேலைச் செலவு என்பதில் தனியார் கட்டடங்கள் ஆர்ஜிதம் செய்வதற்காகவும், புதிய கட்டடங்களை நிர்மாணிக்கவும், பழைய கட்டடங்களை மாற்றி அமைக்கவும் அல்லது விஸ்தரிக்கவும், சில விசேஷ மராமத்துக்களுக்காவும் செய்யப்படும் செலவு சேரும். ஒருவகையிலுள்ள கட்டடத்தின் பயனை அதிகரிப்பதற்காகவோ, அல்லது, அதன் நிரந்தரமான மதிப்பை உயர்த்துவதற்காகவோ, செய்யப்படும் மாற்று வேலைகளும், ‘மூல வேலை’ என்பதில் அடங்கும். சில சமயங்களில், பொதுப் பணிகளுக்கான செலவு முதலில் மூலதனக் கணக்கில் பதிவு செய்யப்பட்டு, பிறகு, அது முழுவதுமோ அல்லது அதன் ஒரு பகுதி மட்டுமோ, ரெவின்யூ கணக்குக்கு மாற்றப்படுவது உண்டு. சாதாரணமாக, மத்திய அரசாங்கத்திடமிருந்து இம்மாதிரி வேலைகளுக்குத் தனி மானியம் கிடைக்கும்போது, இம்முறை பின்பற்றப்படும்; அப்போது மானியங்களுக்குச் சமமான ஒரு தொகை, மூலதனச் செலவில் கழிக்கப்படும்.

போக்குவரத்து வசதிகள் சம்பந்தமான மூலவேலைகள் என்பதில், அரசாங்க நெடுஞ்சாலைத் துறை நிர்வாகத்தில் உள்ள பணிகள் அடங்கும்; ஸ்தலஸ்தாபனங்கள் சம்பந்தமான சில சாலை வேலைகளுக்கு அரசாங்கத் துறையே பொறுப்பு ஏற்றால், அச்செலவும் இங்குக் காட்டப்படும். சாலைகள், பாலங்கள், தோணித் துறைகள், சுரங்கப் பாதைகள், ஆற்று நடைபாதைகள், மதகுகள் இன்னும் பல போக்குவரத்து வசதிகள் – இவைகளை நிர்மாணிப்பதற்கும், பிறகு மாற்றி அமைப்பதற்கும், பெரும் அளவில் அபிவிருத்தி செய்வதற்கும் ஆகும் செலவு மூலவேலைச் செலவில் சேர்க்கப்படும். இதுபோல், மேற்சொன்ன வேலைகளின் தொடர்பாக, கட்டடங்கள், கிணறுகள், சுற்றுப் பிரயாணிகளுக்கு விடுதிகள், மைல் கற்கள், வேலிகள், சாலை மரங்கள், மேற்பார்வையாளர் தங்கு சாவடிகள் முதலியவை நிறுவப்பட்டால், அச்செலவும், மூல வேலைச் செலவு வகையில் பதிவாகும். சாலைகளின் மேற்பரப்பு சம்பந்தமாகச் செய்யப்படும் சோதனைச் செலவுக்கும் இம்முறை பொருந்தும்.

கடல் ஓரங்களில் உள்ள நிலப்பகுதியின் அரிப்பைத் தடுப்பதற்காக ஏற்கப்படும் வேலைகளும், பாசனத் திட்டங்களோடு சம்பந்தம் இல்லாமல் செய்யப்படும் கரை உயர்த்து வேலையும், ‘பலவகை மூல வேலைகள்’ என்ற தலைப்பில் பதிவு செய்யப்படும்.

**மராமத்து வேலைகள்**

‘பொதுப் பணிகள் – மூல வேலைகள்’ என்ற தலைப்பில் சேர்க்கப்பட்ட கட்டடங்கள், போக்குவரத்து வசதிகள் இவைகளைப் பராமரிப்

பதற்கு ஏற்கப்படும் செலவு எல்லாம் 'மராமத்து' என்ற தலைப்பில் எழுதப்படும். ஸ்தலஸ்தாபனங்களுக்கு அரசாங்கப் பொதுப் பணித் துறையினர் கொடுக்கும் வரிகள், தீர்வைகள் முதலியனவும், காலியாக இருக்கும் கட்டடங்களைக் காவல் செய்வதற்காக நியமிக்கப்படும் பணியாளர்களின் படி முதலியவைகளும், தனியார் கட்டடங்களை வாடகைக்கு எடுத்துக் கொண்டால் அவ்விதத்தில் ஆகும் செலவும், நெடுஞ்சாலைத் துறை, கிராமப் பணித் துறை – இவைகளின் சார்பில், சாலைகளின் ஓரங்களில் வைக்கப்படும் சோலைகளைப் பராமரிப்பதற்கான செலவும், இத்தலைப்பிலே சேர்க்கப்படுகின்றன.

**பணியாளர்கள், கருவிகள், மற்ற சாதனங்கள்**

ஏற்கெனவே குறிப்பிட்டபடி, தமிழ்நாடு போன்ற சில மாநிலங்களில் பாசனம், பொதுப் பணி – இவைகள் சம்பந்தமான வேலைகள் எல்லாவற்றையும் செய்வதற்கு, பணியாளர்களும், கருவிகளும், சாதனங்களும் பொதுவாகவே இருக்கும்; ஆகவே, அச்செலவுகள் முதலில் பொதுப் பணித்துறை என்ற தலைப்பில் பதிவு செய்யப்படுகின்றன; ஆண்டு இறுதியில், அச்செலவுத் தொகை ஒவ்வொரு பெருந் தலைப்பின் கீழும் பதிவு செய்யப்பட்டுள்ள மூல வேலைச் செலவுத் தொகையின் அளவுக்கேற்பப் பிரிக்கப்பட்டு, அந்தந்தத் தலைப்பில் சேர்க்கப்படுகின்றது. ஒரு வேலைக்கெனவே, பணியாளர்கள் தனியாக நியமிக்கப்பட்டால், அவர்களுக்கான செலவு அந்த வேலைக்குரிய செலவாகவே எழுதப்படுகிறது; அதாவது, அச்செலவு, விகிதாசாரப் பிரிவுக் கணக்கில் சேர்க்கப்படுவதில்லை. இதே முறை, கருவிகள், மற்ற சாதனங்கள் சம்பந்தமாகவும் பின்பற்றப்படும். நாட்டாண்மைக் கழகப் பொறியியல் அதிகாரிகள் சம்பந்தமான செலவு, 'பொதுப் பணித் துறை' என்பதில் சேர்க்கப்படாது, 'பொதுச் சுகாதாரம்' என்ற தலைப்பில் சேர்க்கப்படுகிறது.

**மானியங்கள்**

மாநிலங்களில், முக்கியமான சாலைகள் சம்பந்தமான செலவுகளுக்குப் பெரும்பாலும் அரசாங்கமே பொறுப்பு வகிக்கின்றது. ஆயினும், சில நாட்டாண்மைக் கழகங்களுக்கும், ஸ்தலஸ்தாபனங்களுக்கும் குறிப்பிட்ட சில சாலைகளின் பராமரிப்புக்காக, ஆண்டுதோறும் அரசாங்கம் மானியங்களை அளிக்கின்றது. மழையில்லாத காரணத்தினாலோ, அல்லது வேறு காரணத்தினாலோ, நாட்டின் ஒரு பகுதியில் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகமாக இருக்கும்போது, அதற்கு ஓர் அளவு பரிகாரம் செய்யும் வகையில் சில சாலை வேலைகளைத் தொடங்கும்படி அரசாங்கம் ஸ்தலஸ்தாபனங்களுக்குச் சொல்லுவது உண்டு; இப்படித் தொடங்கப்படும் வேலைகளுக்காக அரசாங்கம், சம்பந்

தப்பட்ட ஸ்தலஸ்தாபனங்களுக்கு மானியங்களை அளிக்கும். இந்த வகைச் செலவை அரசாங்கத்தின் நிர்வாகத்தில் உள்ள பஞ்ச நிவாரண நிதியிலிருந்து ஏற்கலாம்; அப்படி நிதியிலிருந்து எடுத்த தொகை இத் தலைப்பில் முதலில் பதிவு செய்யப்பட்ட செலவின் கழிப்பாகக் காட்டப் படும். சேரி ஒழிப்புத் திட்டங்களுக்கும், வீட்டு வசதிகளைப் பெருக்கு வதற்காக உள்ள நிறுவனங்களுக்கும், அரசாங்கம் மானியங்களை அளிக் கின்றது; அச்செலவும், இத்தலைப்பில் பதிவு செய்யப்படுகிறது. இந்த வேலைகளுக்கு மத்திய அரசாங்கம் மாநில அரசாங்கங்களுக்கு உதவித் தொகை அளிப்பது உண்டு; மாநிலக் கணக்கில் அந்தத் தொகை 'மத்திய அரசினரிடமிருந்து பெறப்படும் உதவித்தொகைகள்' என்ற வருவாய்த் தலைப்பில் சேர்க்கப்படும். ஸ்தல ஸ்தாபனங்களின் நீர் வழங்கும் திட்டங்கள், வடிகால் திட்டங்கள் – இவை சம்பந்தமான மூல தனச் செலவுக்கும் மாநில அரசாங்கங்கள் மானியம் அளிப்பது உண்டு; குறிப்பிட்ட வேலைகளை, ஸ்தலஸ்தாபனங்களே தங்களுடைய பணி யாளர்களைக் கொண்டு செய்தால், அவை சம்பந்தமான மானி யங்கள், 'பொதுச் சுகாதாரம்' என்ற தலைப்பில் காட்டப்படும்; ஆனால், அவ்வித வேலையை, பொதுப் பணித் துறைப் பொறி யியல் வல்லுநர் மூலம் செய்தால், அதற்கான மானியத் தொகை, பொதுப் பணித் துறைக் கணக்கிலேயே எழுதப்படுகின்றது.

## போக்குவரத்து (சாலைகள் நீங்கலாக) – செலவு

பாசன வேலைகள், மின்சாரத் திட்டங்கள் ஆகியவைகளின் விஷயத்தில் இருந்தது போலவே, மோட்டார், நீர்வழிப் போக்கு வரத்து ஏற்பாடுகளுக்கான நடைமுதல் செலவு அரசாங்கக் கணக்கில் முன்னர் மொத்த வருவாயில் கழித்துக் காட்டப்பட்டு வந்தது. தற்காலத்தில், இது தனிச் செலவாகவே ஒரு பெருந் தலைப்பின் கீழ்க் காட்டப்படுகிறது. அரசாங்கம் ஏற்று நடத்தும் பலவகையான போக்குவரத்துக்கான நடைமுதல் செலவுகள் (பஸ்கள், விமானங்கள், கப்பல்கள், படகுகள் இவை சம்பந்தமானவை) இந்தத் தலைப்பில் சேர்க்கப்படுகின்றன. கலங்கரை விளக்கங்கள், வெளிநாட்டுத் தொடர்பு சாதனங்கள், இவைகளுக்கான செலவும் இத் தலைப்பில் பதிவு செய்யப்படுகின்றது. போக்குவரத்து ஏற்பாடு களும், வாணிபத் துறை என்ற வகையில் சேரும்; ஆகவே, அவை களின் மூலதனச் செலவின் மீது குறிப்பிட்ட வகையில் வட்டித் தொகை செலுத்த வேண்டும்; அந்தத் தொகையும், இவ்வினச் செலவாகக் காட்டப்படுகின்றது.

## செலாவணி – நாணயத் துறை – செலவு

மத்திய அரசாங்கம், நாடு முழுவதற்குமான செலாவணி நாணய ஏற்பாடுகளுக்குப் பொறுப்பு வகிக்கிறது; இதற்காக, 'நோட்டு அடிக்

கும் அச்சகங்களையும்', 'நாணயச் சாலைகளையும்' வைத்து இருக்கிறது. இவைகளுக்கான செலவுகளும், தங்கச் சுரங்கங்களுக்கான நடைமுதல் செலவுகளும், இப்பகுதியில் தனித்தனித் தலைப்புகளில் காட்டப்படு கின்றன.

## பலவகைச் செலவு

### பஞ்ச நிவாரணம்

'பஞ்சம்' என்ற சொல்லில், வறட்சி காரணமாக, அல்லது வெள்ளம், புயல், தீ, கொள்ளை நோய், பூகம்பம்—இவை போன்ற இயற்கை உற்பாதங்களின் விளைவாக உண்டாகும் இன்னல்கள் அடங் கும். பஞ்சநிலை ஏற்பட்டு இருக்கிறதா என்று சோதனை செய்யும் போதும், அந்நிலை வந்துள்ளது என்று தீர்மானித்த பின், நிவாரண வேலைகளைச் செய்யும்போதும், அரசாங்கம் ஏற்கும் எல்லாச் செலவு களும், 'பஞ்ச நிவாரணம்' என்ற பெருந் தலைப்பின் கீழ், சிறு தலைப்புகளில் பற்று எழுதப்படுகின்றன. ஆனால், மறைமுகமாக ஏற்கப்படும் செலவுகள் இத்தலைப்பில் சேர்க்கப்படுவதில்லை; உதாரண மாக, பஞ்சகாலத்தில் போலீஸ் படையை அதிகப்படுத்துவதற்காகவும், மருத்துவ உதவிக்காகவும், அரசாங்க ஊழியர்களுக்குத் தனி உதவி அளிப்பதற்காகவும், ஸ்தலஸ்தாபனங்களின் நிவாரண வேலைகளுக் கான மானியங்களுக்காகவும், ஏற்கப்படும் செலவுகள் அந்தந்தப் பணி களுக்குப் பொருத்தமான வெவ்வேறு தலைப்புகளில் சேர்க்கப்படு கின்றன. பஞ்ச நிவாரண வேலைக்காக, அனுபவம் பெற்ற ஊழியர்கள் நியமிக்கப்பட்டால், அவர்களுக்குப் பதிலாக சம்பந்தப்பட்ட அலுவ லகங்களில் வேறுஊழியர்கள் வேலைக்கு வைத்துக்கொள்ளப்படுவார்கள்; அவர்களுக்கான செலவும், நிவாரண வேலைக்காகத் தனியே அமர்த்தப் பட்ட பணியாளர்களின் செலவும், மேற்பார்வை செய்யும் பொதுத்துறை ஊழியர்கள், அதிகாரிகள் – இவர்களுக்கான செலவுகளில் ஒரு குறிப் பிட்ட பகுதியும், 'பஞ்ச நிவாரணம்' என்ற பெருந் தலைப்பில் சேர்க்கப் படும். பஞ்ச நிவாரணம் சம்பந்தமாக ஏற்கப்படும் சில வேலைகள் சாதாரண காலத்திலும் செய்யக்கூடியவையாக இருக்கலாம்; அவ்வேலை களால் தனியான பயனும் விளையலாம்; அம்மாதிரியான வேலைகள், சாதாரண வேலைகளாகவே கருதப்பட்டு, அவைகளுக்குரிய செலவு வேறு தலைப்புகளில் காட்டப்படும்; ஆனால், பஞ்ச நிலையை உத்தேசித்து எந்த விதத்திலாவது அதிகப்படியான செலவு ஏற்க நேர்ந்தால், அந்த அதிகத் தொகை மட்டும், 'பஞ்ச நிவாரணம்' என்ற தலைப்பின் கீழ், பற்றாக எழுதப்படும். நிவாரண வேலைகளைச் செய்வது தவிர, அரசாங் கம், கஷ்டப்படும் மக்களுக்குச் சில பொருள்களையும் தொகைகளையும் கூட, நேரிடையாகக் கொடுக்கலாம்; இந்த வகைச் செலவும் இத் தலைப்பின் கீழ் எழுதப்படும்.

ஒவ்வொரு மாநிலத்திலும் சட்டப்படி, ஒரு பஞ்ச நிவாரண நிதி ஏற்படுத்தப்பட்டு உள்ளது. அதற்கு, ஆண்டுதோறும் அரசாங்க வருவாயிலிருந்து ஒரு குறிப்பிட்ட தொகை சேர்க்கப்படலாம்; அந்த நிதியில் ஓர் அளவுக்கு மேல் கையிருப்பு இருந்தால், மேலும் ஆண்டுதோறும் சேர்க்கப்படுவது நிறுத்தப்படலாம். இவ்வகையில் நிதிக்குக் கொடுக்கப்படும் தொகையும் 'பஞ்ச நிவாரணம்' என்ற தலைப்பில், தனியே பதிவு செய்யப்படுகிறது.

**ஓய்வு உதவித் தொகைகள்**

ஓய்வு பெற்ற அரசாங்கப் பணியாளர்களுக்கு அளிக்கப்படும் பலவகை உதவித் தொகைகள், ஒரு தனிச் செலவுத் தலைப்பில் சேர்க்கப்படுகின்றன. ஓர் அரசாங்கம், மற்றைய அரசாங்கங்களோடு செய்து கொண்டுள்ள ஏற்பாடுகளின்படி ஓய்வு உதவித் தொகைகள் விஷயமாக சில தொகைகளை ஆண்டுதோறும் வசூலிக்கலாம்; இதுபோலவே, வாணிபத் துறைகள் சம்பந்தமாக, ஓய்வு உதவித் தொகைச் செலவு அந்தந்தத் துறைக்கு மாற்றப்படலாம்; இவ்வகைகளில் பெறப்படும் தொகைகள் செலவுக் கணக்கில் கழிக்கப்படும்.

அரசாங்க ஊழியர்களுக்கு அல்லாது, அரசியல் காரணமாக, பிற வகையினருக்குக் கொடுக்கப்படும் உதவித் தொகைகளும், முன்னர் இந்திய சமஸ்தானங்களுக்கு மன்னராய் இருந்தவர்களுக்குக் கொடுக்கப்படுகிற படிகளும், வேறு தனிப் பெருந் தலைப்புகளில் காட்டப்படுகின்றன.

குறிப்பு :—ஓய்வு உதவித் தொகைகளை, மொத்தத் தொகையாக மாற்றுவதற்கு அரசாங்கங்கள் வசதி செய்துள்ளன. கொடுக்கப்படும் தொகை, முதலில் மூலதனக் கணக்கில் பதிவு செய்யப்படுகின்றது. ஆனால், பொதுவாக ஓய்வு உதவித் தொகைகளை ரெவின்யூ கணக்கில் சேர்ப்பதே முறையென்று மொத்தமாகக் கொடுத்த தொகையை, சிறிது சிறிதாக, ரெவின்யூ கணக்குக்கு மாற்றும் வழி பின்பற்றப்படுகிறது; இப்படி ஆண்டுதோறும் ரெவின்யூ கணக்குக்கு மாற்றப்படும் தொகை, இதற்கான ஒரு தனிப் பெருந் தலைப்பில் பதிவு செய்யப்படுகிறது.

**எழுது பொருள்—அச்சுத் துறை**

ஒவ்வோர் அரசாங்கமும், தேவையான எழுது பொருள்களைத் தங்கள் அலுவலகங்களுக்கு வழங்குவதற்காக ஏற்பாடு செய்யும். இதற்காக, ஒரு தனித் துறையும் இருக்கலாம்; இதுபோலவே, தனி அச்சுத் துறையும் நிறுவப்படலாம். சில மாநிலங்களில், இரு துறையும் ஒரே

நிர்வாகத்தின் கீழ் இருக்கும். இந்தச் செலவுகள் எல்லாம், ஒரு தனிப் பெருந் தலைப்பில் சேர்க்கப்படுகின்றன. ஒரு மாநிலத்திலுள்ள எழுது பொருள் துறையும், அச்சுத் துறையும், சில சமயங்களில் வேறு அரசாங் கங்களுக்காகப் பொருள்களை வழங்கலாம்; அல்லது பணிகளை ஏற்க கலாம்; இவைகளுக்காகப் பெறப்படும் தொகைகள், சம்பந்தப்பட்ட துறைகளின் செலவுக் கணக்கில் கழிக்கப்படும். சில சமயங்களில், வேலை அதிகமாக இருப்பது காரணமாகவோ, அல்லது வேறு தனிக் காரணங்களுக்காகவோ, அரசாங்க அச்சுவேலைகளை, தனியார் துறையி லுள்ள அச்சகங்களுக்கு ஒப்படைக்கலாம்; இவ்வேலைகளுக்காகக் கொடுக்கப்படும் தொகையும், இந்தப் பெருந்தலைப்பில் தனிச் செலவாகப் பதிவு செய்யப்படும்.

### அபினி

மத்திய அரசாங்கம், மருத்துவம் போன்ற உபயோகத்திற்காக, அபினித் துறையை நிர்வகிக்கிறது; அதன் நிர்வாகத்திற்குட்பட்டு, மத்தியப் பிரதேசம், உத்தரப் பிரதேசம், ராஜஸ்தான் ஆகிய மாநிலங் களில் குடியானவர்கள் அபினிச் செடிகளைப் பயிர் செய்கின்றனர்; அவர்களிடம் இருந்து பெறும் அபினிக்கு விலையாகக் கொடுக்கப்படும் தொகையும் "அபினி" என்ற மத்திய அரசாங்கக் கணக்குத் தலைப்பின் கீழ்ப் பதிவு செய்யப்படுகின்றது.

### காட்டு வளம்

அரசாங்கத் துறைகளில் காட்டுவளத் துறை முக்கியமானது. இத் துறையினால் ஏற்கப்படும் செலவு, நடைமுதல் செலவுகள் என்றும் மூலதனச் செலவுகள் என்றும் பகுக்கப்பட்டு, வெவ்வேறு தலைப்புகளில் பதிவு செய்யப்படுகின்றது. முன்கூறியபடி, ஒவ்வோர் அரசாங்கத்தை யும் சேர்ந்த காட்டுவளத் துறையினர், தங்கள் பிரதேசங்களிலுள்ள காடுகளிலிருந்து, மரங்களையும், மற்ற விளைபொருள்களையும் சேகரித்து, விற்பனைக்கு ஏற்பாடு செய்கின்றனர். விளைபொருள்களில், சந்தன மரம், அரக்கு, மெழுகு, தேன் முதலியவைகள் சில மாநிலங்களில் மிக வும் முக்கியமானவை. வெட்டப்பட்ட மரங்களுக்குப் பதிலாக, புது மரங்களை வளர்க்கச் செய்தும், மற்ற வகையிலும் காடுகளைப் பராமரிக் கிறார்கள். சில மாநிலங்களில், யானைகள் போன்ற உபயோகமான விலங்கினங்களைப் பிடித்து 'விற்பனை செய்கின்றனர். முன்னர் கூறிய படி, இத்துறையினர் தங்களுக்கு வேண்டிய சாலைகள், பாலங்கள், கட்டடங்கள்—இவைகளை நிறுவுவதற்கும், பழுதுபார்த்துப் பராமரிப்ப தற்கும், வரைபடங்களைப் பெறுவதற்கும், தனி வசதி செய்துகொண்டு உள்ளனர். காடுகள் சம்பந்தமாக, சில முக்கியமான ஆராய்ச்சிகளும் செய்யப்படுகின்றன. இத்துறையின் நிர்வாகம் சம்பந்தமாக, இன்னும்

பலவகையிலும் செலவு ஏற்கப்படுகின்றது. இவைகள் எல்லாம், காட்டு வளத் துறையின் ரெவின்யூ கணக்கில், 'காட்டுவளம்' என்ற தலைப் பின்கீழ்ப் பதிவு செய்யப்படுகின்றன. சில மாநிலங்களில், காடுகளை அமைத்தல், அபிவிருத்தி செய்தல், விஸ்தரித்தல் என்ற வகையில் ஏற்கப்படும் மூலதனச் செலவும், ரெவின்யூ கணக்கிலேயே சேர்க்கப்படும்.

**பலவகை**

அரசாங்கக் கணக்குகளில் முன் குறிக்கப்பட்ட பெருந்தலைப்புகளில் சேர்க்கப்படாத மற்றச் செலவுகளைக் காட்டுவதற்காக, 'பலவகை' என்ற ஒரு தனித் தலைப்பும் உண்டு. மத்திய அரசாங்கக் கணக்குகளில் குடிபெயர்க்கப்பட்ட மக்களுக்கான பலவகைச் செலவுகளும், வேறு நாட்டினர்க்கு அளிக்கும் உதவித் தொகைகளும், மத்திய சமூக நல நிறுவனத்திற்கு அளிக்கும் மானியங்களும், முன்னர் மூலதனக் கணக்கில் பற்று எழுதப்பட்டு, பின்னர் ரெவின்யூ கணக்குக்கு மாற்றப்படும் செலவினங்களும், திட்டக் கமிஷன் சம்பந்தமான செலவும், அரசாங்கச் சார்பில் நடத்தப்படும் எண்ணெய் வியாபாரத்திற்கு அளிக்கும் உதவித் தொகையும், சர்க்கரை உற்பத்தி சம்பந்தமான உதவித் தொகையும், நிலக்கரிப் பொருள்களுக்காக அளிக்கப்படும் ஆயத் தீர்வைப் பகுதியும், பின்.தங்கிய மக்களின் நலத்துக்காகக் கொடுக்கப்படும் மானியங்களும், இத்தலைப்பில் பதிவு செய்யப்படுகின்றன. மாநிலக் கணக்குகளில், இத் தலைப்பில் சேர்க்கப்படும் சில செலவினங்கள் பின்வருமாறு :—அரசாங்கக் கைதிகள், அரசியல் கைதிகள் – இவர்களின் காரணமான செலவு; புத்தகங்கள், பத்திரிகைகள் – இவைகளை வாங்குவதற்கான செலவு; பண்டைக்கால ஏற்பாடுகளின்படி இன்னும் கொடுக்கவேண்டிய சில தரும நன்கொடைகள்; வசூலிக்க முடியாது போன கடன்களும் முன்பணங்களும்; பொதுவாகக் கொடுக்க வேண்டிய வரிகள், தீர்வைகள், மானியங்கள் முதலிய செலவுகள்; பலவகை நஷ்ட ஈடுகள், சில சமயங்களில் வெளிநாடுகளிலிருந்து இடம் பெயர்ந்து வசிப்பவர்களுக்காக, அரசாங்கம் செலவு ஏற்கலாம்; அதுவும், இத்தலைப்பின் கீழ்ச் சேர்க்கப்படும்.

## உதவித் தொகைகள் முதலியன

முன்னர் விளக்கியபடி, மத்திய அரசாங்கம், அதன் நிர்வாகத்திற்கு உட்பட்ட பிரதேசங்களுக்கும், மாநில அரசாங்கங்களுக்கும், யூனியன் ஆயத் தீர்வை வருவாயின் பகுதியாகவும், பல விதப் பணிகளுக்கு உதவி மானியங்களாகவும் பெருந்தொகைகளை அளிக்கின்றது. (இதன் விவரப் பட்டியல் 12ஆம் அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டது.)இவ்வகைச் செலவுகளையெல்லாம், மத்திய அரசாங்கக் கணக்கில், தனித் தலைப்புகளில்

காட்டும் முறை சமீப காலத்தில் வழக்கில் வந்துள்ளது என்பதும், ஏற்கெனவே சொல்லப்பட்டது. மாநில அரசாங்கங்கள் பெறும் தொகைகள், அவைகளின் வருவாய்க் கணக்கில் பெருந் தலைப்புகளில் பதிவு செய்யப்படுகின்றன என்பதையும் முன்னரே கண்டோம். எல்லா அரசாங்கங்களின் கணக்குகளிலும், வெவ்வேறு அரசாங்கங்களோடு செய்து கொண்ட ஏற்பாடுகளின்படி ஏற்கப்படும் செலவுகளும், தனிப் பெருந் தலைப்புகளில் காட்டப்படுகின்றன.

## சிறப்பு இனங்கள்

'அசாதாரணச் செலவுகள்' என்று, எல்லா அரசாங்கக் கணக்குகளிலும் ஒரு பெருந் தலைப்பு உண்டு, இவைகள், வழக்கமாக ஆண்டு தோறும் ஏற்கப்படாமல், சில காலங்களில், சில நிலைகளில் ஏற்கப்படும் செலவுகளாகும். தேசீய நெருக்கடி சம்பந்தமாகவும் அல்லது சில உடன்படிக்கைகளுக்கு இணங்கவும், மத்திய அரசாங்கம் ஏற்கும் செலவுகள் இவ்வகையைச் சேர்ந்தவை. மாநில அரசாங்கங்களில், விலைக் கட்டுப்பாடு செய்வதற்காக நியமிக்கப்பட்ட பணியாளர்களுக்கான செலவும், நெருக்கடியான நிலைமைகளில் உணவுப் பொருள்களைக் கையிருப்பாக வைத்துக்கொள்வதற்கான ஏற்பாடுகளின் செலவும், இது சம்பந்தமான அரசாங்க வாணிகத் திட்டங்களின் செலவும், 'சிறப்புச் செலவுகள்' என்று பதிவு செய்யப்படும்.

## ரெவின்யூ கணக்கில் சேராத பற்று வரவுகள்

இந்த அத்தியாயத்தில், இதுவரையிலும், ரெவின்யூ கணக்கில் சேரும் வரவு செலவுத் தலைப்புகளின் தனி இயல்புகளைக் கண்டோம். ரெவின்யூ கணக்குக்குப் புறம்பான கணக்குகளின் விவரம் நான்காம் அத்தியாயத்தில் பொதுவாகக் குறிக்கப்பட்டது. அவைகளில் ஒன்றான மூலதனக் கணக்கைச் சார்ந்த பெருந் தலைப்புகளின் பட்டியல் ஒன்றும் ஐந்தாம் அத்தியாயத்தின் 'அனுபந்தத்தில் கொடுக்கப்பட்டது. மற்றப் பிரிவுகளான கடன் கணக்கு – இவைகளில் பதிவாகும் பற்று வரவுகளின் விவரக் குறிப்புகள், தமிழ்நாட்டு மாதிரி நிதி நிலை அறிக்கைகளின் விளக்கமாக ஆறும் அத்தியாயத்தில் தரப்பட்டன. ஆகவே, இந்தக் கணக்குகளைப் பற்றிய சில தனி விளக்கங்கள் மட்டும் இப்போது கொடுக்கப்படும்.

## மூலதனக் கணக்கு

இந்தக் கணக்கில் சேரும் செலவினங்களை, ரெவின்யூ கணக்கைப் போல், பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

(1) சமூக அபிவிருத்திப் பணிகள் – (அ) தொழில் அபிவிருத்திக்காகவும், பொருளாதார அபிவிருத்திக்காகவும் முதலீடு செய்தல் (அரசியல்

துறையிலும் தனியார் துறையிலும்) ; (ஆ) மற்ற இனங்கள் – பொதுச் சுகாதார அபிவிருத்தி, வேளாண்மை அபிவிருத்தி, கூட்டுறவுச் சங்கங்கள், ஒலிபரப்பு முதலியன ; (2) பல நோக்கு நதித் திட்டங்கள், பாசனத் திட்டங்கள், மின்சாரத் திட்டங்கள் ; (3) பொதுப் பணிகள் (சாலைகள் உட்பட) பலவித பொது அபிவிருத்தி வேலைகள் ; (4) போக்கு வரத்து (சாலைகள் நீங்கலாக) ; (5) செலாவணியும் நாணயமும் ; (6) பலவகை.

இவைகளுக்கான செலவுகள், முன்னர் குறிக்கப்பட்ட தனிப் பெரும் தலைப்புகளில் பதிவு செய்யப்படுகின்றன. சில சமயங்களில், மூலதனச் செலவுக்காக, தனி நிதிகளிலிருந்தோ, அல்லது வேறு சிறப்பான வகையிலோ, உதவித் தொகைகளைப் பெறலாம். இந்த உதவித் தொகைகள், மூலதனச் செலவின் **குறைப்பாகக் காட்டப்படும்.**

**குறிப்பு** :—இரண்டாம் உலகப் போர் நடந்த சமயத்தில் அமெரிக்க ஐக்கிய நாட்டு அரசாங்கம் நம் நாட்டுக்கு 'குத்தகை-கடன் முறை' என்ற தனி ஏற்பாட்டின்படி பலசாதனங்களை அளித்தது. அவைகளில் உபரியானவை முடிந்தபோது விற்கப்படுகின்றன; விற்பனைத் தொகையில் ஒரு பங்கை இந்திய அரசாங்கமே தனதாக வைத்துக் கொள்ளலாம். இப்படிக் கிடைக்கும் வருவாய் மட்டும் அவ்வப்போது, மூலதனக்கணக்கில் ஒரு தனி வருவாய்த் தலைப்பின் (LXX-அமெரிக்க உதவி—குத்தகை-கடன் முறை உபரித் தொகைகள்) கீழ்ப் பதிவு செய்யப்படுகிறது.

(1) **சமூக அபிவிருத்திப் பணிகள்** :—தொழில் முதலீடு சம்பந்தமான மூலதனச் செலவுகள் மத்திய அரசாங்கத்திற்கும், மாநில அரசாங்கங்களுக்கும் மிகவும் முக்கியமானவை. இவைகளின் விவரங்களை அந்தந்த அரசாங்க பட்ஜெட் வெளியீடுகளில் காணலாம்.

(2), (3) **பல நோக்கு நதித் திட்டங்கள், பொதுப் பணிகள் முதலியன** :—இத்திட்டங்கள் சம்பந்தமான செலவுகளில், எவைகளை மூலதனச் செலவாகக் கொள்ளலாம் என்பது பற்றிய பொது நியதிகள் மேலே, இவ்வத்தியாத்தில் கூறப்பட்டுள்ளன. இவ்வினச் செலவும், மத்திய, மாநில அரசாங்கங்களுக்கு மிகவும் முக்கியமானது. பட்ஜெட் வெளியீடுகளில் முழு விவரமும் கொடுக்கப்பட்டிருக்கும். இச்சந்தர்ப்பத்தில் 'மூலவேலைகள்' (Original Works) என்பதற்கும், 'மூலதனச் செலவு வேலைகள்' (Captial Works) என்பதற்கும் உள்ள வித்தியாசத்தை நன்கு கவனிக்கவேண்டும்).

**(4) போக்கு வரத்து (சாலைகள் நீங்கலாக)** :—மேலே, ரெவின்யூ கணக்கு சம்பந்தமான இதே தலைப்பில், எந்தெந்தத் துறைகள் இவ்

358—16

வகையில் சேருகின்றன என்பது குறிக்கப்பட்டது. இவ்வினங்களைச் சேர்ந்த மூலதனச் செலவுகள் தனித்தனிப் பெருந் தலைப்புகளில் பதிவு செய்யப்படுகின்றன.

(5) **செலவாணியும் நாணயமும் :**—இவ்வகைச் செலவுகள் மத்திய அரசாங்கத்தைச் சேர்ந்தவை. தங்கக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின் கீழ்ப் பெறும் தங்கத்துக்குப் பதிலாக, அரசாங்கம் கொடுக்க வேண்டிய தொகையும், நாணயச் சாலைகள், கோலார் தங்கச் சுரங்கம், பழைய நாணயங்களை அழித்துப் புது நாணயங்களை வழங்குதல், நோட்டு அச்சடிப்பதற்கான தனிக் காகிதங்களை உற்பத்தி செய்யும் சாலைகள்—இவைகள் சம்பந்தமான மூலதனச் செலவுகளும் இந்த இனத்தில் சேருகின்றன. அரசாங்கம் தன் கையிருப்புத் தங்கத்தை ரிசர்வ் பாங்கு முதலிய நிறுவனங்களுக்கு விற்கும்போது பெறப்படும் தொகை, மூலதனச் செலவின் குறைப்பாகப் பதிவு செய்யப்படும்.

(6) **பலவகை :**—பத்திரத்தாள்கள் போன்றவைகளைத் தயாரிப்பதற்காக மத்திய அரசாங்கம் நிறுவியுள்ள தனி அச்சகம் (ஸெக்யூரிடி அச்சகம்) சம்பந்தமான செலவு இவ்வகையில் அடங்கும். ஜமீன் ஒழிப்புக்கான நஷ்ட ஈடு, காட்டுவளத்துறை, அரசாங்க வாணிபத் திட்டங்கள், ஓய்வு உதவித் தொகையை மொத்தமாக மாற்றிக்கொள்ளுதல்—இவை போன்ற மூலதனச் செலவுகளும், மத்திய, மாநில அரசாங்கங்களின் கணக்குகளில் இவ்வகையில் சேர்க்கப்படும். நான்காம் அத்தியாயத்தில் குறித்தபடி, "எதிர்பாராச் செலவு நிதி"க்குச் சேரும்படி, யாதேனும் தனி நிதி ஒதுக்கம் செய்தால், அதுவும் இவ்வினச் செலவில் காட்டப்படும். மத்திய அரசாங்கத்தால், அபிவிருத்தித் திட்டங்களுக்குக் கொடுக்கப்படும் மூலதன மானியங்களும் இவ்வகையில் முக்கியமானவை. அமெரிக்க ஐக்கிய நாட்டிலிருந்து அபிவிருத்தித் திட்டங்களுக்குப் பெற்ற தொகையும், அதற்கான ஏற்பாட்டின்படி, ஒரு தனிப் பெருந் தலைப்பில் பற்றுக மாற்றி எழுதப்படுகின்றது. அரசாங்க வாணிபத் திட்டங்களின் விவரங்கள், உரிய பட்ஜெட் வெளியீடுகளில் கொடுக்கப்பட்டிருக்கும். உணவுப் பொருள்கள், உரப் பொருள்கள்—இவைகளை வாங்கி விற்பது சம்பந்தமான பற்று வரவுகளே அரசாங்க வாணிபத் துறையில் மிகவும் முக்கியம் வாய்ந்தவை.

## தபால்—தந்தித் துறை

ரேடியோக்கள், தொலைபேசி இவைகள் சம்பந்தமான மூலதனச் செலவுகளும், இத்துறைச் செலவில் சேர்க்கப்படும்.

## காப்புத் துறை, ரெயில்வேத் துறை

இத்துறைகளின் மூலதனச் செலவு விவரங்கள், அவைகளுக்கான தனிப் பட்ஜெட்டுகளில் கொடுக்கப்பட்டிருக்கும்.

## கடன் கணக்கு

### பொதுக் கடன்

மத்திய அரசாங்கமும் மாநில அரசாங்கங்களும் பொது மக்களிட மிருந்தும் பிற வகையிலும் பெறும் கடன்கள், எவ்வகையில் பாகுபாடு செய்யப்படுகின்றன என்கிற விவரம், 12ஆம் அத்தியாயத்தில் அரசாங்கக் கடன் நிலையைப் பொதுவாக நோக்கும்போதும், இந்த அத்தியாயத்தில் ரெவின்யூ கணக்கைச் சார்ந்த 'வட்டி முதலிய செலவுகள்' என்ற தலைப்பின் கீழும் விளக்கப்பட்டது. அரசாங்கக் கணக்குகளில், 'பொதுக் கடன்' என்ற ஒரு பெரும் இனத்தின் கீழ், வெவ்வேறு தலைப்புகளில், அரசாங்கக் கடன் சம்பந்தமான பற்றும் வரவும் எழுதப்படுகின்றன என்பது 6ஆம் அத்தியாயத்தில் சேர்க்கப்பட்டுள்ள மாதிரி பட்ஜெட் அறிக்கைகளால் தெளிவாகும். ஒவ்வொரு கடன் விஷயத்திலும் அது எப்போது வாங்கப்பட்டது, எப்போது திருப்பித் தர வேண்டியது, நடுவில் விசேஷமாகத் திருப்பிக் கொடுத்த தொகை, அவ்வப்போது எஞ்சியிருக்கும் தொகை முதலிய விவரங்கள் அரசாங்கப் பொதுக் கடன் கணக்குகளிலும், ஆண்டு பட்ஜெட் வெளியீடுகளிலும் விவரிக்கப்பட்டிருக்கும். ஏற்கெனவே கூறியபடி, ஒவ்வொரு கடனுக்கும் கொடுக்கும் வட்டித் தொகை ரெவின்யூ கணக்கில் சேர்க்கப்படுகிறது; அது 'பொதுக் கடன்' என்ற தலைப்பில் காட்டப்படாது. வாங்கிய கடன்களை, குறித்த காலத்தில் திருப்பிக் கொடுப்பதற்காக, ஆண்டு தோறும் சாதாரண வருவாயிலிருந்து ஒதுக்கப்படும் தொகையும், ரெவின்யூ கணக்கில் ஒரு தனித் தலைப்பில் காட்டப்படுகின்றது என்பதையும் கண்டோம். அப்படி ஒதுக்கப்பட்ட தொகை, 'பொதுக் கணக்கு–வைப்புத் தொகைகளும் முன்பணங்களும்' என்று வகைப் படுத்தப்பட்டு, 'கடன் குறைப்பு அல்லது தவிர்ப்பு' என்ற ஒரு தலைப்பின் கீழ், வரவு வைக்கப்படும்; பின்னர், அந்த தொகையை கடன் குறைப்புக்காக உபயோகப்படுத்தும்போது, அதே தலைப்பில் பற்று எழுதப்பட்டு, 'பொதுக் கடன்' என்ற இனத் தலைப்பின் கீழ், கடனைக் குறைக்கும் வகையில் காட்டப்படும்.

### அரசாங்கம் கொடுக்கும் கடன்களும் முன்பணங்களும்

மத்திய அரசாங்கம், தன் நிர்வாகத்திலுள்ள பிரதேசங்கள், மாநில அரசாங்கங்கள், அரசாங்க ஊழியர்கள், மற்ற நிறுவனங்கள்—இவை களுக்கும், இன்னும் வேறு விதத்திலும், கடன்களும் முன்பணங்களும் கொடுக்கும் என்று முன்னரே கூறப்பட்டது. அதுபோல், மாநில அரசாங்கங்களும், ஸ்தலஸ்தாபனங்கள், கூட்டுறவு நிறுவனங்கள், வேளாண்மைக்காரர்கள், தங்கள் ஊழியர்கள்—இவர்களுக்கும் இன்னும் பல வகையிலும், கடன்கள் கொடுக்கின்றன என்றும், முன்னர் விளக்கப்பட்டது. இப்படிக் கொடுக்கப்பட்ட ஒவ்வொரு கடனைப்

பற்றிய முழு விவரங்களும் அரசாங்கக் கடன் கணக்குகளில் ஒரு தனிப் பகுதியில் எழுதப்படும்; அதாவது, ஒவ்வொரு கடன் விஷயமாகவும், எப்பொழுது எவ்வளவு தொகை முதலில் கொடுக்கப்பட்டது, அதில் ஒவ்வொரு குறித்த காலத்திலும் எவ்வளவு அசலுக்காக வசூல் செய்யப்பட்டது, பின் எஞ்சியிருக்கும் தொகை எவ்வளவு—இவைகள் எல்லாம் காட்டப்படும். முன்னர் கூறியபடி கடன்களுக்கு வட்டி என்ற வகையில் பெறப்படும் தொகைகள் அரசாங்க ரெவின்யூ கணக்கில் வரவாகச் சேர்க்கப்படுகின்றன; இவைகள் அரசாங்கக் கணக்குகளில் கடன் பகுதியில் காட்டப்படுவதில்லை; ஆனல், எல்லா விவரங்களும் தனிப்பேரேடுகளில் தொகுக்கப்பட்டிருக்கும்.

**மாநிலங்களுக்கிடையே கடன் தீர்ப்பு ஏற்பாடுகள்**

இதுவும் கடன் கணக்கில் ஒரு பகுதியாகும்.

குறிப்பு:—மேலே சொல்லப்பட்ட விவரங்களோடு அரசாங்கத் தொகு நிதிக்கான தலைப்புகளின் விஷயம் முடிந்துவிட்டது. இனி எஞ்சியிருக்கும் பகுதிகள், 'எதிர்பாராச் செலவு நிதி', 'பொதுக் கணக்கு' என்பவையே.

## எதிர்பாரச் செலவு நிதி

4 ஆம் அத்தியாயத்தில், அரசாங்கங்களின் 'எதிர்பாராச் செலவு நிதி'யைப் பற்றிய பொது விவரம் தரப்பட்டது. சாதாரணமாக ஒவ்வோர் ஆண்டிலும், செலவுகளுக்காக இந்த நிதியிலிருந்து எடுக்கப்படும் தொகை அந்த ஆண்டின் இறுதியில் திருப்பிக் கொடுத்து விடப்படுகிற படியால், இறுதிக் கணக்குகளில் இந்தத் தலைப்பில் பற்று வரவு ஒன்றும் காட்டப்பட்டு இருக்காது. ஆனல் முன் சொன்னபடி, ஓர் அரசாங்கம் இந்த நிதிக்குச் சேரும்படி, தனியாக ஒரு தொகையை ஒதுக்கினல், அது மூலதனக் கணக்கில் 'எதிர்பாரச் செலவு நிதிக்கு ஒதுக்கம்' என்ற பெருந் தலைப்பின் கீழ்ச் செலவாக எழுதப்பட்டு, பின்னர் இந்த நிதிக் கணக்குக்கு மாற்றப்படும்.

## பொதுக் கணக்கு

6 ஆம்அத்தியாயத்தில் சேர்க்கப்பட்ட மாதிரி நிதி நிலை அறிக்கையில், இந்தக் கணக்கில் சேரும் பற்று வரவுத் தலைப்புகளின் விவரங்களும் அடங்கியுள்ளன. அவைகளிலிருந்து இக்கணக்கின் முக்கியப் பாகுபாடுகள், 'நிதியிடப்படாக் கடன்', 'வைப்புத் தொகைகளும் முன் பணங்களும்', 'செலுத்திய தொகைகள்' என்பவையேயெனவிளங்கும்.

'நிதியிடப்படாக் கடன்' என்பதில் அடங்கும் வைப்புத் தொகைகளைப் பற்றி இந்த அத்தியாயத்தில் 'வட்டி முதலிய செலவுகள்'

என்ற தலைப்பின் கீழ்க் குறிக்கப்பட்டது. இவைகளில் முக்கியமானது அரசாங்க ஊழியர்களின் வருங்கால சேமிப்பு நிதித் தொகைகள்; மத்திய அரசாங்கக் கணக்கில், சேமிப்பு பாங்கு வைப்புத் தொகைகளும் தனி முக்கியத்துவம் உள்ளவை.

இவைகள் சம்பந்தமாக, ஆண்டுதோறும் வரவும் செலவும் ஏற்பட்டுக்கொண்டே இருப்பதால், உரியவர்களுக்குத் தொகைகளை அவ்வப்போது அரசாங்கம் கொடுப்பதற்காக, தனி நிதி ஒன்றையும் நிறுவுவதில்லை. இதனுல் தான், இவைகளுக்கு 'நிதியிடப்படாக் கடன்' என்று பெயர்.

'வைப்புத் தொகைகளும் முன்பணங்களும்' என்ற பகுதியில் வட்டி பெறும் வைப்புத் தொகைகளும், வட்டியற்ற வைப்புத் தொகைகளுமென இரண்டு பிரிவுகள் உண்டு. அரசாங்க வர்த்தகத் துறைகள், மின்சார போர்டு, வீட்டு வசதி போர்டு இவைகள் போன்ற நிறுவனங்களின் தேய்மான சேம நிதி உள்ளிட்ட வைப்புத் தொகைகள் வட்டி பெறும் இனத்தில் முக்கியமானவை. அரசாங்கம் இந்த வைப்புத் தொகைகளுக்காகக் கொடுக்கும் வட்டித் தொகை, ரெவின்யூ கணக்கில் வட்டி என்ற தலைப்பில் செலவாக எழுதப்படுவதைக் கண்டோம். அந்தத் தொகை பொதுக் கணக்கில் இந்தத் தலைப்பில் வரவாகச் சேர்க்கப்படும். உரிய நிறுவனங்கள் வைப்புத் தொகைகளிலிருந்து அவ்வப்போது திருப்பிப் பெறும் தொகைகள், பொதுக் கணக்கில் செலவாகக் காட்டப்படும். வட்டியற்ற வைப்புத் தொகைகளில் 'கடன் கரைப்பு நிதி', 'சாலை நிதிகள்' 'இதர வைப்புத் தொகைகள்' என்பவை அடங்கும். முன்னரே கூறியபடி, ஒவ்வோர் அரசாங்கமும் கடன் குறைப்பு அல்லது தவிர்ப்பாக, அவ்வப்போது ஒதுக்கும் தொகைகள் இந்தக் கணக்கில் வரவாக வைக்கப்படும்; அத்தொகையைப் பயன்படுத்தும்போது, இதே கணக்கில் செலவினமாக எழுதப்படும். இப்படி ஒதுக்கிய தொகை, அவ்வப்போதைய தேவைக்கு அதிகமாக இருந்தால், ஒரு பகுதியை முதலீடு செய்வதும் உண்டு; இதற்கான பற்று வரவுகளும் இக்கணக்கில் எழுதப்படும். பஞ்ச நிவாரண நிதி, ஜமீன் முறை ஒழிப்பு நிதி, அரசாங்க அச்சகங்கள்—மோட்டார் போக்குவரத்து இவைகள் சம்பந்தமான தேய்மான நிதிகள், ஹிந்து சமய அறநெறிப் பாதுகாப்பு நிதி போன்றவைகளும் இவ்வினத்தில் சேருகின்றன. அதற்கதற்குரிய தலைப்புகளில், ரெவின்யூ கணக்கிலிருந்து இந்த நிதிகளுக்கு மாற்றம் செய்யப்படும் தொகையும், முதலீட்டுக் கணக்குகளும் சேர்க்கப்படும். இந்த நிதிகளில் சேர்ந்த தொகைகளிலிருந்து வேண்டும்போது தொகைகள் எடுக்கப்பட்டால், அவை கணக்குகளில் செலவினமாக எழுதப்படும். பஞ்ச நிவாரண நிதி, ஜமீன் முறை ஒழிப்பு நிதி இவைகளைப் பற்றிய சில குறிப்புகள் கீழே தரப்படுகின்றன.

**பஞ்ச நிவாரண நிதி**

ஒவ்வோர் அரசாங்கமும் தனித்தனியே பஞ்ச நிவாரண நிதி ஒன்றை நிறுவி, அதனைப் பராமரிப்பதற்குச் சட்டங்கள் இயற்றியுள்ளன என்பது மேலே சொல்லப்பட்டது. தமிழ்நாட்டுக்குரிய நிதியைப் பற்றி, சில தனிக்குறிப்புகள் இப்பொழுது தரப்படுகின்றன. இந்த நிதியை (i) கடும் பஞ்ச நிலை இருக்கும்போது நிவாரணம் அளிப்பதற்கும், (ii) பஞ்ச நிலை என்ற அளவுக்கு மோசமாக இல்லாது போனாலும், கடும் வறட்சி, வெள்ளம் அல்லது இதர இயற்கை உற்பாதங்கள் நேரும் போது நிவாரணம் அளிப்பதற்கும், (iii) இந்த நிலையின் கையிருப்புத் தொகை 40 இலட்சம் ரூபாய்க்கு மேற்பட்டால், அந்த அதிகத் தொகையை, பாசன வேலைக்காகவும், பஞ்சத்தைத் தடுக்கத்தக்க இதர வேலைகளுக்கும் உபயோகித்துக் கொள்ளலாம். இந்த நிதியைச் சார்ந்த கணக்குகள் ஒவ்வோர் ஆண்டின் இறுதியிலும் சரிக்கட்டப் படும்; அதாவது, ஒவ்வொரு மார்ச் 31 ஆம் தேதி அன்றும், இந்த நிதிக்குச் சொந்தமான முதலீடுகளை அந்தத் தேதியன்று உள்ள பங்கு மார்க்கெட் நிலவரப்படி மதிப்புப் போடவேண்டும். எந்த ஆண்டி லாவது இப்படி மதிப்புப் போட்ட தொகையும் வேறு ரொக்கமும் சேர்ந்து, இருப்புத் தொகை 60 இலட்சம் ரூபாய்க்குக் குறைவாகப் போனால், அந்தக் குறையைச் சரிகட்ட மாநிலத் தொகு நிதியிலிருந்து உதவித் தொகை கொடுக்க வேண்டும்; நேர்ந்த குறைவு 5 இலட்சம் ரூபாய்க்கு அதிகமானால், அதை ஒரே தடவையில் அல்லாது பல ஆண்டுத் தவணையில் நிதிக்குச் சரிக்கட்டலாம்; ஆனால், கடைசித் தவணை தவிர மற்ற ஒவ்வொரு தவணையும் 5 இலட்சம் ரூபாய்க்குக் குறைவாக இருக்கக்கூடாது; இந்த நிதிக்கு அரசாங்க வருவாயிலிருந்து ஒதுக்கமாகக் கொடுக்கப்படும் தொகை தவிர, பஞ்ச காலத்தில் வாங்கிய கருவிகள், பயன்படுத்தாத மற்றப் பொருள்கள்—இவைகளை விற்பனை செய்வதால் கிடைக்கும் தொகையும், இந்த நிதிக் கணக்கில் வரவு வைக்கப்படும். இதுபோல முதலீடுகளிலிருந்து பெறப்படும் வட்டியும் இந்நிதிக்கு ஒரு வருவாய் இனம் ஆகும்.

**ஜமீன் முறை ஒழிப்பு நிதி**

ஜமீன் நில உடைமைகளை நேரிடையாக அரசாங்கத்தின் நிர்வாகத் திற்கு மாற்றியபோது, சொந்தக்காரருக்குக் கொடுக்க வேண்டிய நஷ்ட ஈடுகளைச் செலுத்துவதற்காக, சில மாநிலங்களில் ஒரு தனி நிதி ஏற்படுத்தபட்டு, அதற்காக, ஒரு தனிக் கணக்கும் வைக்கப்பட்டது. தமிழ்நாட்டில், முதலில் ஆண்டு ஒன்றுக்கு இந்த நிதிக்கு 10 லட்சம் ரூபாய் சேர்க்கப்பட்டு வந்தது. பிறகு, பழைய ஜமின்தாரி நில உடை மைகளிலிருந்து கிடைக்கும் வருமானத்தைப் பரிசீலனை செய்ததன் விளைவாக, ஆண்டு உதவித் தொகை 75 இலட்சம் ரூபாயாக உயர்த்தப்

பட்டது. 1960–61 ஆண்டின் இறுதியில், இந்த நிதியில் சேர்ந்திருந்த தொகை, நிலச் சொந்தக்காரர்களுக்கு வருங்காலத்தில் நஷ்ட ஈடு கொடுக்கப் போதுமானது என்று கருதப்பட்டு, அதற்குப் பிறகு இந்நிதியில் புதிதாக உதவித் தொகை சேர்க்கப்படவில்லை. 1965–66 ஆண்டிலிருந்து ஜமீன் கணக்குகள் சரிபார்க்கப்பட்டு, இந்த நிநியிலிருந்து, சொந்தக்காரர்களுக்கு நஷ்ட ஈட்டுத் தொகை கொடுக்கப்படுகிறது.

இதர வைப்புத் தொகைகள் சம்பந்தமான கணக்குகள் கீழ்க் கண்ட முறையில் வகைப்படுத்தப்படுகின்றன :—(1) நாட்டாண்மை நிதி வைப்புத் தொகைகள்—(2) துறை வாரியான வைப்புத் தொகைகள், நீதித் துறை வைப்புத் தொகைகள்—சிவில் வைப்புத் தொகைகள், (3) இதர கணக்குகள்.

**நாட்டாண்மை நிதி வைப்புத் தொகைகள்**

ஏற்கெனவே கூறியபடி இந்த இன வைப்புத் தொகைகள் விஷயத்தில் அரசாங்கம் ஒரு பாங்கு போல்தான் தொழிற்படுகிறது. இவைகளில், மாவட்ட நிதிகள், நகராட்சி நிதிகள், இதர நிதிகள் (கடல் துறைமுக நிதிகள், கல்வி நிதிகள், கிராமப் பஞ்சாயத்து நிதிகள், மார்க்கெட் குழு நிதிகள், நூல் நிலைய நிதிகள், கதர்—கிராமத் தொழில் போர்டு நிதிகள் முதலியன) அடங்கும்.

**சிவில் வைப்புத் தொகைகள்**

பொது மக்கள் அல்லது அவர்கள் சார்பில், அன்றுடம் பொது அலுவல் காரணமாக, அரசாங்கத்திடம் வைப்பீடு செய்துள்ள தொகைகள், இந்தத் தலைப்பில் சேர்க்கப்படுகின்றன. அரசாங்கத்திடம் தொகைகள் கொடுக்கும்போது, இந்தக் கணக்குகளில் வருவாயாகவும், உரியவர்களுக்குத் தொகைகள் திருப்பிக் கொடுக்கப்படும்போது செலவினமாகவும் எழுதப்படும். இந்த இன வைப்புத் தொகைகளில் பின் வருபவை அடங்கும் :—

ரெவின்யூ வைப்புத் தொகைகள், சிவில் நீதிமன்ற வைப்புத் தொகைகள், குற்ற இயல் நீதிமன்ற வைப்புத் தொகைகள், தனி முறையில் வைக்கப்படும் தொகைகள், பொதுப் பணி வைப்புத் தொகைகள், டிரஸ்டு வட்டித் தொகைகள், பொது நிறுவனங்களுக்கு அல்லது தனிப்பட்ட நபர்களுக்குச் செய்த வேலை சம்பந்தமான வைப்புத் தொகைகள், தனிப்பட்ட நிறுவனங்களுக்கு அரசாங்க ஊழியர்கள் செய்த வேலைக்காக அவர்கள் பெற்றுக்கொண்ட கட்டண வைப்புத் தொகைகள், பொது வருங்காலச் சேமிப்பிலும், மற்ற உதவித் தொகை சேமிப்பிலும், உரிமை கோரப்படாத வைப்புத் தொகைகள், அரசாங்கக் கடன் சம்பந்தமான வைப்புத்தொகைகள், தேர்தல் சம்பந்தமான வைப்புத் தொகைகள், ஹரிஜன அபிவிருத்தி நிதி குறித்த வைப்புத் தொகைகள், கல்வி நிதிக்கான வைப்புத் தொகைகள்.

### இதர கணக்குகள்

சில குறிப்பிட்ட காரியங்களுக்காக, மற்ற நிறுவனங்கள் வழங்கும் நன்கொடைகளும், மத்திய அரசாங்கம் தரும் மானியங்களும், அவைகளிலிருந்து கிடைக்கும் வருமானங்களும் இந்தத் தலைப்பின் கீழ்ச் சேர்க்கப்படுகின்றன.

### வட்டியில்லாத முன்பணத் தொகைகள்

மேலே கூறப்பட்ட வைப்புத் தொகைகள் தவிர, சில முன்பணங்களும் அரசாங்கத்தினிடம் வைக்கப்படுகின்றன. அவைகளை அரசாங்கம் உரியவர்கள் வேண்டும்போது திருப்பிக் கொடுக்கும்; அதுவரையில், அரசாங்கத்திடம் இருக்கும் தொகைகளுக்கு வட்டி கொடுக்கப்படுவதில்லை. இவைகளில் சில, நிலையான முன்பணத் தொகைகளாக இருக்கும். பாகிஸ்தான், பர்மா முதலிய வெளிநாட்டு அரசாங்கங்கள் சம்பந்தமாகவும், ரிசர்வ் பாங்கு சம்பந்தமாகவும், இவ்விதக் கணக்குகள் உண்டு.

### அனுமத்துக் கணக்கு

இந்தக் கணக்கில், சரியான முறையில் உரிய கணக்குகளில் பதிவு செய்யப்படுவதற்குமுன் சில தொகைகளைப் பற்றாகவோ, வரவாகவோ எழுதுவதற்கு இந்தத் தலைப்பு பயன்படுகிறது. அரசாங்கம் தன் கையிலுள்ள ரொக்கத் தொகைகளைத் தாற்காலிகமாக முதலீடு செய்யும் போது, அதற்கான விவரங்களை இந்தக் கணக்குகளில் ஒரு தனித் தலைப்பில் பதிவு செய்யலாம். அரசாங்கம் வழங்கும் உண்டியல்கள், பில்கள் இவை சம்பந்தமான விவரங்களும் இக்கணக்குகளில் பதிவு செய்யப்படும். வேறு துறைவாரியான கணக்குகளும் இதில் உண்டு.

## செலுத்திய தொகைகள்

ரிசர்வ் பாங்குக்குத் தொகை அனுப்புதல், மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கத்திற்கும் இடையில் கணக்குகளைச் சரிக்கட்டுதல், ரெயில்வே கணக்குகளைச் சரிக்கட்டுதல், மாநிலங்களுக்கிடையே உள்ள அனுமத்துக் கணக்கு, ஒரே தலைமைக் கணக்கு அதிகாரிக்குக் கணக்குகளை அனுப்பித் தொகை செலுத்துவது அல்லது சரிக்கட்டுவது போன்ற விவரங்கள், இந்தத் தலைப்பில் சேர்க்கப்படும். ஒரே தலைமைக் கணக்கு அதிகாரிக்கு அனுப்பும் கணக்குகள் முதலியவை என்பதில், அரசாங்க வர்த்தக ஸ்தாபனங்கள், காட்டுவளத் துறையினர், பொதுப் பணித் துறையினர்—இவர்கள் அனுப்பும் தொகைகளும், இன்னும் பலவகையான காரணங்களுக்காக செலுத்தப்படும் தொகைகளும் சேரும். தொகைகள் அனுப்பப்படாமலேயே, கணக்குகளில் மட்டும் பதிவு செய்யப்படும் மாற்றங்களும் இதில் அடங்கும். மற்ற விதமான கணக்குகளுக்கு அதிக விளக்கம் இங்குத் தேவையில்லை.

# 14. முடிவுரை

1. கல்வி கரையில......... —(நாலடியார்)
2. தாம் கற்றநூலளவே ஆகுமாம் நுண்ணறிவு —(வாக்குண்டாம்)
3. குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல் —(குறள்)

அரசாங்கங்களால் ஆண்டுதோறும் வெளியிடப்படும் "பட்ஜெட்" என்னும் ஆண்டு நிதி நிலை விவரணத்தையும், அது சம்பந்தமான வெளியீடுகளையும், அக்கறையுள்ளவர்கள் நன்கு புரிந்து கொள்வதற்கான விளக்கம் தருவதே இந்நூலின் நோக்கமானதால், வரவுசெலவு (பற்று வரவு) சம்பந்தமான அரசாங்கக் கணக்குகளை ஆராயும்போது, எந்தெந்த விஷயங்களை மனத்தில் தெளிவாகக் கொள்ளவேண்டும் என்பதே முக்கியமாகக் கூறப்பட்டது.

இந்த நூலின் முதல் பகுதியான முதல் 6 அத்தியாயங்களிலும் பொது விவரங்கள் எல்லாம் சொல்லப்பட்டன. பிறகு, இவைகளோடு தொடர்புடைய நிதித் துறையின் செயல் முறையும் மற்றைய அரசாங்க முறைகளும், இந்நூலின் இரண்டாவது பகுதியில், (7ஆம் அத்தியாயம் முதல் 11ஆம் அத்தியாயம் வரையில்) விளக்கப்பட்டன. இவ்விரு பகுதிகளையும் பயின்றவர்களுக்கு நம்நாட்டின் அரசாங்கங்கள் சம்பந்தமான வரவு செலவுப் போக்கை ஆராய்ந்து, முடிவான கருத்துக்களை உருவாக்க வேண்டும் என்னும் ஆர்வம் உண்டாவது இயல்பு; இதற்கு, அவர்கள் அரசாங்கங்கள் சம்பந்தமான பல வெளியீடுகளைச் சேகரித்து ஆராய வேண்டும்; இது எல்லோருக்கும் எளிதாகாது; ஆகவே, நம் நாடு ஒரு குடியரசாகி, அதன் அபிவிருத்திக்காக ஐந்தாண்டுத் திட்டங்கள் தொடங்கப்பட்ட 1951–52 ஆண்டிலிருந்து அரசாங்க வரவு, செலவு, கடன்நிலை—இவைகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை, ஒரு பொது நோக்காகப் பார்ப்பது பயனுடையதாகுமென்று கருதப்பட்டு, அந்த விவரங்கள் இந்த நூலின் மூன்றுவது பகுதியான 12ஆம் அத்தியாயத்தில் சேர்க்கப்பட்டன; அந்த அத்தியாயம் எழுதப்பட்டபோது, எல்லா

அரசாங்கங்களுக்கும் பொதுவாக 1964–65 ஆண்டுக்கு உரிய வெளியீடுகளே கிடைத்தன; அவைகள் எல்லாவற்றிலும் 1962–63 ஆண்டு வரையிலும் தான் 'கணக்கு' என்ற முறையில் விவரங்கள் இருந்தன; அதற்கு அடுத்த இரண்டு ஆண்டுகளுக்கு மதிப்பீடுகள் மட்டும் கொடுக்கப்பட்டிருந்தன; ஆகவே, 1951–52 ஆண்டிலிருந்து 1962–63 ஆண்டு முடிய உள்ள 12 ஆண்டுகளின் புள்ளிகள் மட்டும், முந்திய ஆண்டுப் (1950–51) புள்ளிகளுடன் ஒப்பிட்டு ஆராயப்பட்டன. ஆயினும், 1965–66 ஆண்டோடு மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவு அடைவதால், அவ்வாண்டு வரைக்கும் புள்ளிகள் சேர்க்கப் பட்டால், ஒருவகையில் ஆராய்ச்சி நிறைவு எய்தும் என்று தோன்றிய தால், பின்னர் கிடைத்த 1963–64 ஆண்டுக் கணக்கும், அதற்கு அடுத்த இரண்டு ஆண்டுகளுக்கான மதிப்பீடுகளும், இந்த நூலில் தனி இணைப்புகளாக நான்காம் பகுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. (தமிழ் நாட்டின் 1965–66ஆம் ஆண்டு நிதி நிலை அறிக்கை உரையில் இணைப்பு கள் முழுவதும் இறுதியாகச் சேர்க்கப்பட்டுள்ளன. இவைகளால், தமிழ் நாட்டின் நிதி நிலை நன்கு தெளிவாகும்). இந்நூல், அரசாங்க நிதி (பொது நிதி) இயல் நூல் வகையில் சேராதாயினும், அரசாங்க வரவு செலவினங்களில் இயல்பைப் பற்றிய விவரம், பட்ஜெட் வெளியீடுகளில் கொடுக்கப்படுவதால், ஓர் அளவுக்கு அவ்விவரத்தை இந்நூலில் தொகுத்துச் சேர்ப்பதும் பயன்தரும் என்ற எண்ணத்தில், 13ஆம் அத்தியாயம் எழுதப்பட்டது. அரசாங்கக் கணக்குத் தலைப்புகளின் விளக்கமாக இது அமைந்துள்ளது.

எல்லா அரசாங்கங்களின் பொருளாதார நிலையையும், கொள்கை களையும் நடைமுறை நிர்வாகத்தையும், நன்கு தெரிந்துகொள்ள விரும்பு பவர்கள், இந்த விளக்க நூலோடு, வேறு பல நூல்களையும் பயில வேண்டும். சிலரேனும், இவ்விதம் பயின்று, நாட்டில் பொது அறிவு வளரத் துணை செய்வார்கள் என்பது நம்பப்படுகிறது.

பகுதி IV

# இணைப்புகள்

## இணைப்பு-1

### மத்திய அரசாங்கம்

ரெவின்யூ கணக்கு—வருவாய்

| விவரம் (1) | 1963-64 (கணக்கு) (2) | 1964-65 (திருத்த மதிப்பீடு) (3) | 19656-6 (திட்ட மதிப்பீடு) (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் 'கணக்கில்) | | |
| I. வருமானத்தின் மீதும் செலவின் மீதும் விதிக்கப்படும் வரிகள் (வருமான வரி, கார்ப்பரேஷன் வரி, செலவு வரி)— மொத்த வருவாய் ... | 533 | 611 | 667 |
| கழிக்கவும் | | | |
| வருமான வரியில் மாநில அரசாங்கங்களின் பங்கு ... | −119 | −124 | −123 |
| நிகர வருவாய் ... | 414 | 487 | 544 |
| II. சொத்து மீதும் மூலதன இனங்களின் மீதும் விதிக்கப்படும் வரிகள் (சொத்து வரி, செல்வ வரி, கொடை வரி, முத்திரைத் தாள்கள், பத்திரப் பதிவுக் கட்டணம், நிலவரி)— மொத்த வருவாய் ... | 21 | 26 | 29 |

| விவரம் (1) | 1963-64 (கணக்கு) (2) | 1964-65 (திருத்த மதிப்பிடு) (3) | 1965-66 (திட்ட மதிப்பிடு) (4) |
|---|---|---|---|
| **கழிக்கவும்** | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| சொத்து வரியில் மாநில அரசாங்கங்களின் பங்கு ... | –4 | –7 | –7 |
| நிகர வருவாய் ... | 17 | 19 | 22 |
| III. பொருள்கள் மீதும் சேவைகள் மீதும் விதிக்கப்படும் வரிகள், தீர்வைகள் (சுங்கம், ஆயத் தீர்வைகள், ரெயில்வே பிரயாண வரி, வேறு வரிகள், தீர்வைகள்)—மொத்த வருவாய் | 1,079 | 1,175 | 1,253 |
| **கழிக்கவும்** | | | |
| ஆயத் தீர்வையில் மாநில அரசாங்கங்களின் பங்கு ... | –136 | –127 | –136 |
| நிகர வருவாய் ... | 943 | 1,048 | 1,117 |
| IV. நிகர வரி வருவாய் (I + II + III) ... | 1,374 | 1,554 | 1,683* |
| V. அரசாங்கத் தொழில் நிறுவனங்களிலிருந்து நிகர வருவாய் (ரெயில்வே, தபால்–தந்தி செலாவணி, நாணயம், முதலிய துறைகள்) ... | 70 | 69 | 79 |
| VI. நிர்வாகத் துறை வருவாயும், இதர வருவாயும் ... | 402 | 456 | 421 |
| VII. மொத்த வருவாய் (IV + V + VII) ... | 1,846 | 2,079 | 2,183 |
| (வரி வசூலிக்கும் செலவு) ... | (24) | (26) | (29) |

* பார்லிமென்டில் முதலில் பிரேரேபிக்கப்பட்ட வரி விகிதப்படி; பிறகு செய்யப்பட்ட மாற்றங்கள் இங்கு கருதப்படவில்லை.

# இணைப்பு-2

## மத்திய அரசாங்கம்

### ரெவின்யூ கணக்கு—செலவினங்கள்

| விவரம் (1) | 1963–64 (கணக்கு) (2) | 1964–65 (திருத்த மதிப்பீடு) (3) | 1965–66 (திட்ட மதிப்பீடு) (1) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| I. நாட்டுக் காப்புத் துறை (நிகரம்) ... | 704 | 717 | 749 |
| II. சமூகத் துறை—அபிவிருத்தி சேவைகள் ... | 173 | 197 | 220 |
| III. கடனுக்கான செலவுகள் ... | 278 | 318 | 356 |
| IV. மத்திய அரசாங்கத்துக்கும், மாநில அரசாங்கங்களுக்கும் உள்ள ஏற்பாடுகள்—(மானியம் முதலியன; ஆயத் தீர்வையின் பங்கு சேராமல்) | 233 | 293 | 332 |
| V. நிர்வாகச் செலவு (பென்ஷன் போன்ற செலவுகள் உட்பட) | 88 | 93 | 102 |
| VI. அசாதாரணச் செலவுகள் ... | 82 | 128 | 66 |
| VII. வரி, தீர்வை முதலியவைகளின் வசூல் செலவு ... | 24 | 26 | 29 |
| VIII. இதர இனச் செலவுகள் ... | 76 | 78 | 99 |
| IX. மொத்தச் செலவு ... | 1,658 | 1,850 | 1,953 |
| X. உபரி வருவாய் (+) ... | +188 | +229 | +230 |

## இணைப்பு-3

### மத்திய அரசாங்கம்

### ரெவின்யூ கணக்கு அல்லாத மூலதனக் கணக்கு (Capital Budget)

| விவரம் (1) | 1963-64 (கணக்கு) (2) | 1964-65 (திருத்த மதிப்பீடு) (3) | 1965-66 (திட்ட மதிப்பீடு) (4) |
|---|---|---|---|
| வரவு | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| I. கடன் மூலமாகப் பெற்றது ... | 755 | 953 | 939 |
| II. பரிசுப் பத்திரங்களும் தங்கப் பத்திரமும் ... | 9 | 2 | (–) 15 |
| III. சிறு சேமிப்புத் திட்டம் (நிகரம்) ... | 127 | 135 | 135 |
| IV. மற்றைய நிதியிடாக் கடன் (நிகரம்) § ... | 82 | 114 | 118 |
| V. அமெரிக்க உதவி சம்பந்தமான வைப்புத் தொகைகள் முதலீடு ... | 88 | 11 | 191 |
| VI. கடன் குறைப்பு அல்லது தீர்வுக்கான நிதி ஒதுக்கு ... | 5 | 5 | 5 |
| VII. மாநில அரசாங்கங்கள் கடன் திருப்பிக் கொடுத்த வகையில் ... | 179 | 231 | 274 |
| VIII. சிறப்பு அபிவிருத்தி நிதி ... | 151 | 320 | 158 |
| IX. இதர இனங்கள் (நிகரம்) ... | –15 | 20 | 124 |
| X. மொத்த வருவாய் (கஜானா உண்டியல்கள் மூலம் பெற்ற தொகை நீங்கலாக) ... | 1,381 | 1,791 | 1,929 |

§ கட்டாய வைப்புத் தொகைகள், வருமானவரி சம்பந்தமான 'ஆன்யுடி' வைப்புத் தொகைகள் உட்பட.

| விவரம் (1) | 1963–64 (கணக்கு) (2) | 1964–65 (திருத்த மதிப்பீடு) (3) | 1965–66 (திட்ட மதிப்பீடு) (4) |
|---|---|---|---|
| பற்று | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 1. மூலதனச் செலவு—அபிவிருத்தித் திட்டங்களில் சேராதது (காப்புத் துறை, அரசாங்க வாணிபத் திட்டங்கள் செலாவணி, நாணயத் துறை முதலியவை) ... | 190 | 289 | 251 |
| 2. அபிவிருத்தித் திட்டங்கள் (மாநில அரசாங்கங்களுக்கு அளித்த உதவி உட்பட) ... | 624 | 623 | 591 |
| 3. மொத்தம்—மூலதனச் செலவு (1+2) ... | 814 | 912 | 842 |
| 4. கடன் திருப்பிக் கொடுத்தது ... | 240 | 280 | 256 |
| 5. மாநிலங்களுக்குக் கடன் கொடுத்தது (சிறப்பு அபிவிருத்தி நிதியிலிருந்து கொடுத்தது உட்பட) ... | 584 | 708 | 712 |
| 6. வேறு வகையில் கொடுத்த கடன் முதலியன ... | 122 | 180 | 290 |
| 7. மொத்தப் பற்று (3 to 6) ... | 1,760 | 2,080 | 2,100 |
| மூலதனக் கணக்கில் உபரி (+) அல்லது பற்றுக்குறை (−) [(X)−(7)] ... | −379 | −289 | −171 |
| பல இனங்கள் (நிகரம்) ... | + 24 | − 20 | − 55 |
| ரெவின்யூ கணக்கில் கண்ட உபரி வருவாய் (+) ... | +188 | +229 | +230 |
| எல்லாக் கணக்கிலும் நிகர உபரித் தொகை (+) அல்லது பற்றுக்குறை (−) ... | −167 | − 80 | + 4 |

## இணைப்பு–4

### ரெயில்வே நிதிக் கணக்கு

| விவரம் (1) | 1963–64 (கணக்கு) (2) | 1964–65 (திருத்த மதிப்பீடு) (3) | 1965–66 (திட்ட மதிப்பீடு (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| I. மூலதனக் கணக்கில் கூடிய தொகை ... | 2,160 | 2,412 | 2,652 |
| II. மொத்தமான போக்குவரத்து வருவாய் | | | |
| (a) பிரயாணிகள் ... | 185 | 200 | 222 |
| (b) சாமான்கள் ... | 395 | 408 | 444 |
| (c) இதர இனங்கள் ... | 52 | 52 | 52 |
| | 632 | 660 | 716 |
| III. செலவுகள் | | | |
| (1) சாதாரண பராமரிப்புச் செலவு ... | 392 | 433 | 458 |
| (2) தேய்மானம் (Depreciation) ... | 80 | 83 | 85 |
| (3) பலவகைச் செலவுகள் ... | 15 | 27 | 28 |
| | 487 | 543 | 571 |
| IV. நிகர வருவானம் (II–III)... | 145 | 117 | 145 |
| V. அரசாங்கப் பொது வருமானத்துக்கு மாற்றப்பட்ட தொகை (ஈவு) ... | 83 | 92 | 103 |
| VI. ரெயில்வே பிரயாண வரிக்குப் பதிலாக அரசாங்கப் பொது வருமானத்துக்குச் செலுத்திய தொகை ... | 13 | 13 | 13 |
| VII. மொத்த மாற்றம் (V+VI) ... | 96 | 105 | 116 |
| VIII. உபரி வருமானம் (IV–VII) (அபிவிருத்தி நிதியில் சேர்க்கப்பட்டது) ... | 49 | 12 | 29 |

# இணைப்பு-5

## மாநில அரசாங்கங்களின் நிதி நிலை

### ரெவின்யூ கணக்கு—தொகுப்பு வருவாய்

| விவரம் (1) | 1963–64 (கணக்கு) (2) | 1964–65 (திருத்த மதிப்பீடு) (3) | 1965–66 (திட்ட மதிப்பீடு) (4) |
|---|---|---|---|
| **வரி வருவாய்** | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| I. வருமானத்தின் மீது வரி (வருமான வரி; விவசாய வரி; தொழில் வரி) ... | 128 | 135 | 134 |
| II. சொத்துக்களின்மீதும், மூலதனங்களின் மீதும் வரி (சொத்து வரி; நிலவரி; பத்திரப் பதிவுக் கட்டணங்கள்; நகர ஸ்தாவர சொத்துவரி) ... | 191 | 186 | 192 |
| III. பொருள்கள், சேவைகள்—இவை மீது வரி, (யூனியன் ஆயத் தீர்வையில் பகுதி; மாநில ஆயத் தீர்வை; பொது விற்பனை வரி; மோட்டார் எண்ணெய் விற்பனை வரி; மோட்டார் வண்டிகள் வரி; ரெயில்வே பிரயாணிகள் வரி; கேளிக்கை வரி; மின்சாரத் தீர்வைகள்; இதர வரிகளும் தீர்வைகளும்) ... | 620 | 663 | 710 |
| IV. மொத்த வரி வருமானம் (I + II + III) ... | 939 | 984 | 1,036 |
| **வரி அல்லாத வருமானம்** | | | |
| V. நிர்வாக வருமானம் ... | 109 | 113 | 118 |
| VI. அரசாங்கத் தொழில் நிறுவனங்களிலிருந்து வருமானம் (நிகரம்) (காட்டுவளம், பாசனம், மின்சாரத் திட்டங்கள்; சாலைத் திட்டங்கள், தொழில்கள் முதலியன) ... | 63 | 62 | 62 |

| விவரம் (1) | 1963–64 (கணக்கு) (2) | 1964–65 (திருத்த மதிப்பீடு) (4) | 1965–66 (திட்ட மதிப்பீடு) (5) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| VII. மானியங்களும் வேறு உதவி களும் ... | 229 | 295 | 354 |
| VIII. இதர இனங்கள் ... | 150 | 160 | 185 |
| IX. வரி அல்லாத மொத்த வரு மானம் (V, VI, VII & VIII) | 551 | 630 | 719 |
| மொத்த வருவாய் (IV+IX) | 1,490 | 1,614 | 1,755 |

## இணைப்பு–6

### மாநில அரசாங்கங்கள் (தொகுப்பு)

### ரெவின்யூ கணக்கு—செலவு

| விவரம் (1) | 1963–64 (கணக்கு) (2) | 1964–65 (திருத்த மதிப்பீடு) (3) | 1965–66 (திட்ட மதிப்பீடு) (4) |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| I. சமூக—அபிவிருத்தி சேவை கள் ... | 798 | 941 | 1,081 |
| II. அபிவிருத்தி வகையில் சேராத செலவு : | | | |
| வரி, தீர்வை—இவைகளை வசூலிக்க ஏற்ற செலவு ... | 64 | 74 | 79 |
| கடன் சம்பந்தமான செலவு கள் ... | 198 | 222 | 256 |
| இதர செலவினங்கள் ... | 352 | 404 | 424 |
| மொத்தம் (II) ... | 614 | 700 | 759 |
| மொத்தச் செலவு (I+II) ... | 1,412 | 1,641 | 1,840 |
| உபரி வருமானம் (+) பற்றுக்குறை (–) ... | +78 | –27 | –85 |

# இணைப்பு–7

## மாநில அரசாங்கங்கள் (தொகுப்பு)

### ரெவின்யூ கணக்கு அல்லாத மற்றைய கணக்குகள் (Capital Budget)

| விவரம் (1) | 1963–64 (கணக்கு) (2) | 1964–65 (திருத்த மதிப்பீடு) (3) | 1965–66 (திட்ட மதிப்பீடு) (4) |
|---|---|---|---|
| வரவு | (ரூபாய் கோடிக் கணக்கில்) | | |
| 1. மத்திய அரசாங்கத்திலிருந்து பெற்ற கடன் ... | 623 | 726 | 753 |
| 2. மற்றைய கடன்கள் ... | 80 | 141 | 131 |
| 3. நிதியிடாக் கடன் ... | 21 | 22 | 27 |
| 4. மாநில அரசாங்கங்களுக்குள் கடன் தீர்க்கும் வகையில் வந்த வரவு ... | 87 | 98 | 120 |
| 5. வைப்புத் தொகைகள், முன் பணங்கள் போன்றவை (நிகரம்) ... | 54 | 100 | 103 |
| மொத்த வருவாய் (1 to 5) ... | 865 | 1,087 | 1,134 |
| பற்று | | | |
| 1. மூலதனச் செலவு—அபிவிருத்தித் திட்டங்கள் ... | 350 | 429 | 406 |
| 2. வேறு இனச் செலவு (அரசாங்க வாணிபம்; ஜமீந்தாரி ஒழிப்பு சம்பந்தமான செலவு முதலியன (நிகரம்) ... | 13 | 51 | 31 |
| 3. மொத்த மூலதனச் செலவு (1+2). | 363 | 480 | 437 |
| 4. மத்திய அரசாங்கத்திற்குத் திருப்பிக் கொடுத்த கடன் ... | 188 | 209 | 249 |
| 5. மற்றைய கடன்களைத் திருப்பிக் கொடுத்தது ... | 50 | 41 | 22 |
| 6. மாநில அரசாங்கங்கள் பல இனங்களில் கடன் கொடுத்த வகையில் பற்று ... | 314 | 368 | 416 |
| மொத்தப் பற்று (3 to 6) ... | 915 | 1,098 | 1,124 |
| உபரி (+) அல்லது பற்றுக் குறை (−) ... | −50 | −11 | +10 |

## இணைப்பு–8

### மாநில அரசாங்கங்கள் (தொகுப்பு)

**கடன் நிலை**

| ஆண்டு (இறுதி) | நெடுங் காலக் கடன் | குறுகிய காலக் கடன் | மத்திய அரசாங்கத் திலிருந்து பெற்ற கடன் | வேறு இனக் கடன் | நிதி யிடாக் கடன் | மொத் தக் கடன் |
|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) |
| | எஞ்சி நிற்கும் பகுதி–ரூபாய் கோடிக்கணக்கில் | | | | | |
| 1963–64 (மார்ச்சு 1964) | 648 | 43 | 3,112 | 95 | 184 | 4,082 |
| 1964–65 (மார்ச்சு 1965) | 723 | 40 | 3,623 | 120 | 206 | 4,712 |

# இணைப்பு 9

# தமிழ்நாடு 1965–66-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கை உரையின் இணைப்புகள்

## இணைப்பு I.

[1956–57 முதல் உள்ள கணக்குகள் 1956 நவம்பர் 1-ம் தேதி முதல் அமலுக்கு வந்த மாநிலங்களின் சீரமைப்பு அடிப்படையில் அமைந்தவை.]

### தமிழ்நாடு ரெவின்யூ கணக்கில் வருவாயும், செலவினமும்

#### அ. வருவாய்.

| பெருந் தலைப்புகள். (1) | 1938–39. (2) | 1956–57. (3) | 1957–58. (4) | 1958–59. (5) | 1959–60. (6) | 1960–61. (7) |
|---|---|---|---|---|---|---|
| | | | (ரூபாய் லட்சத்தில்) | | | |
| மத்திய ஆயத் தீர்வைகள். | ... | 1,75·14 | 3,14·43 | 5,88·53 | 6,02·51 | 6,09·04 |
| கார்ப்பொரேஷன் வரி நீங்கலாக இதர வருமான வரிகள்— | | | | | | |
| வருமான வரியில் பங்கு ... ... | 22·50 | 5,23·85 | 6,16·07 | 6,36·72 | 6,66·29 | 7,34·11 |
| வேளாண்மை வருமான வரி ... | ... | 1,12·51 | 1,29·67 | 86·55 | 1,53·49 | 1,34·48 |
| சொத்து வரி ... ... ... ... | ... | 22·35 | 28·41 | 25·18 | 30·26 | 29·32 |
| ரெயில்வே கட்டண வரி ... ... | ... | ... | 31·07 | 70·37 | 84·43 | 89·77 |
| நில வரி— | | | | | | |
| பாசன வருவாய் உட்பட மொத்த வருவாய். | 7,00·78 | 6,19·86 | 6,91·52 | 6,67·34 | 7,04·62 | 7,40·21 |
| ஆயத் தீர்வைகள் ... ... ... | 3,72·23 | 30·29 | 27·97 | 22·63 | 22·94 | 24·68 |
| வண்டி வரி ... ... ... ... | 81·22 | 4,37·73 | 4,54·29 | 4,99·58 | 5,49·51 | 6,05·10 |
| விற்பனை வரி ... ... ... ... | ... | ... | ... | 14,76·11 | 16,74·53 | 19,11·53 |

# தமிழ்நாடு ரெவின்யூ கணக்கில் வருவாயும், செலவினமும்—தொடர்ச்சி

## அ. வருவாய்—தொடர்ச்சி

| பெருந் தலைப்புகள். | 1961–62. (8) | 1962–63. (9) | 1963–64. (10) | 1964–65. திட்ட மதிப்பீடு. (11) | 1964–65. திருத்த மதிப்பீடு. (12) | திட்ட மதிப்பீடு 1965–66. (13) |
|---|---|---|---|---|---|---|
| | | | (ரூபாய் லட்சத்தில்) | | | |
| மத்திய ஆயத் தீர்வைகள். | † | † | † | † | † | † |
| கார்ப்பொரேஷன் வரி நீங்கலாக இதர வருமான வரிகள்— | | | | | | |
| வருமான வரியில் பங்கு ... ... | 7,87·20 | 7,74·49 | 9,72·44 | 8,80·00 | 10,05·00 | 9,98·00 |
| வேளாண்மை வருமான வரி ... | 1,41·51 | 1,16·21 | 1,35·15 | 1,16·00 | 1,30·00 | 1,30·00 |
| சொத்து வரி ... ... ... ... | 40·49 | 37·33 | 38·47 | 37·00 | 63·00 | 63·00 |
| ரெயில்வே கட்டண வரி ... ... | ‡ | ‡ | ‡ | ‡ | ‡ | ‡ |
| நிலவரி— | | | | | | |
| பாசன வருவாய் உட்பட மொத்த வருவாய் | 6,83·32 | 7,13·38 | 8,92·37 | 8,40·51 | 8,69·02 | 8,69·87 |
| ஆயத் தீர்வைகள் ... ... ... | 33·09 | 38·30 | 40·71 | 35·09 | 40·12 | 40·12 |
| வண்டி வரி ... ... ... ... | 7,02·73 | 10,19·06 | 12,33·59 | 12,00·00 | 12,50·00 | 13,00·50 |
| விற்பனை வரி ... ... ... ... | 21,25·61 | 24,80·09 | 27,01·73 | 30,05·00 | 31,36·27 | 34,81·29 |

† "மத்திய ஆயத் தீர்வையில் மாநிலங்களின் பங்கு" என்பதன்கீழ்க் காட்டப்பட்டுள்ளன.

‡ "LVI. மத்திய உதவி மானியங்கள்" என்பதன்கீழ்க் காட்டப்பட்டுள்ளது.

## தமிழ்நாடு ரெவின்யூ கணக்கில் வருவாயும், செலவினமும்—தொடர்ச்சி.

### அ. வருவாய்—தொடர்ச்சி.

| பெருந் தலைப்புகள். (1) | 1938–39. (2) | 1956–57. (3) | 1957–58. (4) | 1958–59. (5) | 1959–60. (6) | 1960–61 (7) |
|---|---|---|---|---|---|---|
| | | | (ரூபாய் லட்சத்தில்) | | | |
| இதர வரிகளும் தீர்வைகளும்— | | | | | | |
| பொது விற்பனை வரி ... ... | ... | 11,16·77 | 11,78·05 | † | † | † |
| இதர இனங்கள் ... ... ... | 3·19 | 2,75·61 | 3,84·67 | 2,07·50 | 2,22·20 | 2,45·64 |
| மொத்தம் ... | 3·19 | 13,92·38 | 15,62·72 | 2,07·50 | 2,22·20 | 2,45·64 |
| முத்திரைத் தாள் ... ... ... | 1,73·37 | 3,62·76 | 3,50·00 | 3,91·81 | 4,77·80 | 4,52·97 |
| பத்திரப் பதிவு ... ... ... ... | 32·70 | 78·85 | 79·42 | 86·26 | 1,04·51 | 1,06·90 |
| வட்டி ... ... ... ... ... | 19·73 | 59·68 | 3,78·97 | 4,94·96 | 6,07·48 | 7,08·82 |
| நீதி நிர்வாகம் ... ... ... ... | 15·39 | 62·05 | 67·63 | 56·07 | 52·39 | 60·36 |
| சிறைச்சாலைகள் ... ... ... | 5·98 | 26·20 | 26·32 | 24·08 | 30·99 | 35·59 |
| போலீஸ் ... ... ... ... ... | 5·66 | 21·81 | 19·14 | 22·58 | 23·82 | 29·51 |
| பலவகைத் துறைகள் ‖ ... ... | 7·62 | 99·48 | 90·06 | 1,19·07 | 1,56·57 | *** |
| துறைமுகங்களும் கப்பல்வழி காட்டலும். | 44·67 | ... | ... | ... | ... | ... |
| கல்வி ‖ ... ... ... ... ... | 8·35 | 93·71 | 1,34·64 | 1,79·59 | 2,02·65 | 2,68·82 |
| மருத்துவம் ‖ ... ... ... ... | 10·25 | 31·14 | 61·04 | 73·90 | 83·84 | 85·60 |
| பொதுச் சுகாதாரம் ‖ ... ... ... | 2·59 | 7·17 | 19·40 | 68·05 | 1,18·50 | 1,85·78 |

† "விற்பனை வரி" என்பதன்கீழ்க் காட்டப்பட்டுள்ளது.

*** "பலவகை சமூக, அபிவிருத்தி ஸ்தாபனங்கள்" என்பதன்கீழ்க் சேர்க்கப்பட்டுள்ளது.

‖ இத் துறைகள் சம்பந்தமான அபிவிருத்தித் திட்டங்களுக்காக மத்திய அரசினர் உதவித்தொகை, "மத்திய அரசினர் உதவி மானியம்" என்பதன்கீழ்க் காட்டப்பட்டுள்ளது.

# தமிழ்நாடு ரெவின்யூ கணக்கில் வருவாயும், செலவினமும்—தொடர்ச்சி.

## அ. வருவாய்—தொடர்ச்சி.

| பெருந் தலைப்புகள். | 1961–62. (8) | 1962–63. (9) | 1963–64. (10) | 1964–65. திட்ட மதிப்பீடு. (11) | 1964–65. திருத்த மதிப்பீடு. (12) | திட்ட மதிப்பீடு 1965–66. (13) |
|---|---|---|---|---|---|---|
| | | | (ரூபாய் லட்சத்தில்) | | | |
| இதர வரிகளும் தீர்வைகளும்— | | | | | | |
| பொது விற்பனை வரி ... ... | † | † | † | † | † | † |
| இதர இனங்கள் ... ... ... | 2,78·93 | 4,58·40 | 6,73·16 | 7,10·14 | 8,02·52 | 9,12·66 |
| மொத்தம் ... | 2,78·93 | 4,48·40 | 6,73·16 | 7,10·14 | 8,02·52 | 9,12·66 |
| முத்திரைத்தாள் ... ... ... | 5,21·74 | 5,48·21 | 6,68·21 | 6,44·41 | 6,45·63 | 7,05·63 |
| பத்திரப்பதிவு ... ... ... ... | 1,13·14 | 1,24·16 | 1,51·43 | 1,40·22 | 1,61·30 | 1,75·30 |
| வட்டி ... ... ... ... ... | 8,29·59 | 11,64·84 | 11,21·65 | 13,78·75 | 13,38·48 | 15,41·99 |
| நீதி நிர்வாகம் ... ... ... ... | 72·07 | 85·32 | 87·03 | 85·46 | 87·61 | 88·51 |
| சிறைச்சாலைகள் ... ... ... | 30·92 | 42·87 | 41·19 | 41·77 | 41·42 | 41·95 |
| போலீஸ் ... ... ... ... ... | 39·37 | 37·06 | 31·39 | 39·37 | 32·38 | 32·38 |
| பலவகைத் துறைகள் ‖ ... ... | 59·50 | 36·07 | 38·51 | 36·97 | 40·03 | 41·98 |
| துறைமுகங்களும் கப்பல் வழிகாட்டலும். | ... | ... | ... | ... | ... | ... |
| கல்வி ‖ ... ... ... ... ... | 48·50 | 48·27 | 1,54·72 | 83·79 | 84·12 | 1,08·74 |
| மருத்துவம் ‖ ... ... ... ... | 79·77 | 78·58 | 94·60 | 84·94 | 98·80 | 1,02·61 |
| பொதுச் சுகாதாரம் ‖ ... ... ... | 16·66 | 12·26 | 13·97 | 15·72 | 29·65 | 15·21 |

† "விற்பனை வரி" என்பதன்கீழ்க் காட்டப்பட்டுள்ளது.

‖ இத் துறைகள் சம்பந்தமான அபிவிருத்தித் திட்டங்களுக்காக மத்திய அரசினர் உதவித்தொகை, "மத்திய அரசினர் உதவி மானியம்" என்பதன்கீழ்க் காட்டப்பட்டுள்ளது.

